ஸ்ரீராமஜெயம்

# கம்பர்

## கவியும் கருத்தும்

கோவைக் கம்பன்

P. G. கருத்திருமன் B. Sc., M. P




தமிழ்ப் புத்தகாலயம்

576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

RASHTRAPATI BHAVAN,
NEW DELHI-4.
राष्ट्रपति भवन,
नई दिल्ली-4।

September 23, 1963

Dear Sri Karuthiruman,

I am glad you have written this book and I hope it will be read widely. It is bound to be of value to those who are interested in the spread of moral and spiritual enlightenment in our country.

Yours sincerely,

(S. RADHAKRISHNAN)

Sri P.G.Karuthiruman, MP.,
42 North Avenue,
NEW DELHI.

# தலைவர் காமராஜரின்
# அணிந்துரை

கம்பனுடைய கவி நயத்தை பல பேரறிஞர்கள் தமிழ் மக்களுக்கு எளிதாகப் புரியுமாறு விளக்கியிருக்கிறார்கள். எனது நண்பர் ஸ்ரீமான் கருத்திருமன் அவர்கள் நீண்ட நாளாக கம்பன் கவியை ஆராய்ச்சி செய்து கொண்டு வந்திருக்கிறார். அதன் காரணமாகவே **"கோவைக் கம்பன்"** என்ற சிறப்புப் பெயரும் பெற்றிருக்கிறார். அவர் நீண்ட ஆராய்ச்சியின் பயனாக **"கம்பர் கவியும் கருத்தும்"** என்ற இந்நூலை வெளியிட முன் வந்திருக்கிறார். இந்நூலில் கவி நயத்தின் சிறப்பை எளிமையான முறையிலும், சிறந்த முறையிலும் தமிழ் மக்களின் உள்ளத்தில் புகுத்துவதற்கு முயற்சி செய்திருக்கிறார். இந் நூலின் மூலம் எல்லோரும் சுலபமாக நல்ல முறையில் கம்ப ராமாயணத்தைக் கற்றுக் கொள்ளும் வாய்ப்பை அளித்திருக்கிறார். இதைத் தமிழ் மக்கள் நன்முறையில் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்வார்களென நம்புகிறேன்.

சென்னை

DR. C. P. RAMASWAMI AIYAR,
VICE-CHANCELLOR

ANNAMALAINAGAR P.O.
(SOUTH INDIA)

Dear Sri Karuthiruman,

I have received and perused with interest your Introduction to the excellent edition of Kamba Ramayanam with your commentaries.

Premising your introduction with a general appraisal of Kambar in the hierarchy of world literature, you have rightly stressed the importance of the environment and background of every creative artist and you have demonstrated with what meticulous exactitude Kambar has reacted to his environmental atmosphere. You have specially emphasised the contribution of Kambar to the polity and government of our country and his conviction that a government is efficient only in so far as it works in harmony with the people at large and for their welfare and creates opportunities for consultation with the citizens.

You have specially pointed out that Kambar fully realised the importance of democratic ideals and that he insisted on the right position to be awarded to women in all aspects of life. You have illustrated by examples the deep conviction of Kambar that brotherhood and comradeship amongst the people at large without distinction of class or creed, are indispensable for national prosperity.

I was specially interested in the elucidation of Kambar's mastery of metaphor and simile which are quite on a par with the achievment of Kalidasa.

The relations between Rama and Kaikeyi are very acutely discussed and you have re-emphasised what some earlier commentators have also adverted to that perhaps the most characteristic contribution of Kambar is his delineation of Sita; and you have drawn attention to Kambar's suggestion, through the mouth of Vali, that perhaps the absence of Sita was responsible for the occasional departure by Rama from his fundamental philosophy of life.

You have, in your carefully designed Introduction, underlined that the basic principle of the story of Kamba Ramayanam is the insistence on brotherhood and service and rectitude of conduct.

Your brief elucidations and transalations are illuminating, though compressed.

I congratulate you on your fine effort and wish you all success.

Yours sincerely,

C P Ramaswami Aiyar

திரு. கி. வா. ஜகந்நாதன்

## வாழ்த்து

செந்தமிழ்த் தேவி திருமகன் கம்பன்
சீரிய கூரிய தீஞ்சொல்
சந்தமோ டமைத்துத் தேனொடும் அமுதும்
சார்தர இயற்றியே தந்த
விந்தையார் இராம காதையின் சுவையை
விரும்புவார் நனியறி தரவே
சிந்தையில் தேக்கும் படிபல பாடல்
திரட்டிநல் உரையுடன் ஈந்தான்.

திருத்தகு குலமும் பொருளுமேல் ஓங்கச்
செந்தமிழ்ப் பாநயம் தேர்ந்து
கருத்தொரு மித்துக் கம்பன்றன் கவியில்
கரைந்தின்பம நுகர்ந்துயர் செம்மல்
கருத்திரு மப்பேர் படைத்தவன் நாடு
கவினுறத் தொண்டுசெய் மனத்தோன்
மருத்துள வணிந்தோன் திருவரு ளாதலைல்
வாழிய வாழிய வாழி!

---

## வாழியவே

—பெ. தூரன்—

கம்பனெனும் தேனமுதைச் சுவைத்தெடுத்து வழங்கிடவே
கருத்திருமன் இங்குள்ளான் கவலையினி இல்லையென்றே
அம்புவியின் மக்களெலாம் அகமகிழ்ந்து போற்றிடவே
அரியதொரு தொகுப்பளித்தான் அரியஉரை கண்டதுடன்
வம்புலவும் அறிமுகத்தால் கவிப்பண்பும் குணப்பண்பும்
வடித்தெடுத்துச் சிந்தனைக்கோர் விருந்தே செய்தான்
கும்பமுனி வளர்த்த தமிழ் நாள்தோறும் கீர்த்தியுடன்
கொழுந்திட்டுச் செழிக்கச்செய் அறிஞர்குழாம் வாழியவே.

திருச்சிற்றம்பலம்.

இலக்கண நிறைகடல்
**பேரூர் - பண்டித அ. கந்தசாமி பிள்ளை**
# அணிந்துரை
## கோவைக் கம்பன் கருத்திருமக் காவலர்
## வாழ்த்து

**கட்டளைக் கலித்துறை**
ஊரும் பேரும்

நண்ணிய மண்ணியல் நன்செய்ப் பதியில், தமிழணங்கு
பண்ணிய புண்ணியத் நால்வந் துதித்திந்தப் பார்புரக்கும்
கண்ணியம் நண்ணும் கருத்திரு மன்கம்ப நாடன்கவித்
திண்ணிய நுண்ணிய பன்மாண் வளமெலாந் தேர்ந்தவனே.

**வெண்பா**
பதவி

செங்கோற் குடியரசு சீர்த்தி யுடன்நடத்தும்
எங்கோன் கருத்திரும ஏந்தலைப்போல்—நன்கோர்ந்து
கம்பன் கவியின் கவின், திட்பம், நுட்பமெலாம்
இம்பர் அறிந்தார்வே றியார்?

**ஒன்பான் சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**
கம்பன் கவி, ஆராய்ச்சி

ஒருதொடர், அது தருவது பலபொருள் உரையடுக்கிய
தொன்றினென் றேற்றம், உவமையும் அடைகளும் ஆழம்
ஒருதொடர், அது பலகவி கடந்துபோய் ஒருபொருளுறும்
ஊமன் சாடையும், உள்ளுறை, யிறைச்சியும் ஒளிரும்;
ஒருதொடர், அது இசைவுடன் மறுப்புமாய் ஒன்றிடும்இரு
வகைகளும்அங்ஙன், உறுபுகழ், பழிப்பும் அங்கெதிரும்
கருதருகலை கம்பன கவிவளம கருத்திருமநன்
நாமக் காவல னலதெவர் கருதவல் லவரே?

## வெண்பா

### சிறப்புப் பெயர்

கோவைமா வட்டம் குயின்றதவத் தால்வந்த
கோவைக் கருத்திருமக் கொற்றவனைப்—பாவமிழ்தம்
கம்பனென வேகனிந் தூட்டலாற் கோவைக்
கம்பனெனல் நன்கியையும் காண்.

## வாழ்த்து

வாழி தமிழுலகம், வாழி தமிழன்னை,
வாழிகம்ப நாடன்செய் மாபெருநூல்,—வாழியதன்
ஆழி யனைகலை,அஃ(து) ஆராய் கருத்திருமன்
வாழிநீ டூழி மகிழ்ந்து



# பாராட்டுப் பா

—நாமக்கல் கவிஞர்—

கம்பன் படைத்த இராமன் காதை
ஒப்பரி தாகிய அற்புத இலக்கியம்.
படிக்குந் தோறும் புதுமை பயந்து,
கேட்குந் தோறும் உணர்வைக் கிளர்ந்து,
ஆயுந் தோறும் அறிவைத் துலக்கி,
எண்ணுந் தோறும் இன்பம் கொடுத்து,
வாழ்க்கைக்கு நல்ல வழிகாட்டி யாவது.
கற்பனைச் சிறப்பும் ஒப்புமை அழகும்
ஆழ்ந்த கருத்தும் அறந்தரு நோக்கும்
குறிக்கோள் தவறுக் குணசித்திரமும்
எப்படித் தானே இப்படிக் கவிகளை
இயற்றினன் என்றே எவரும் வியக்கும்
மாண்புள தாகிய மாபெரும் வித்தகம்.
ஆயுள் முழுவதும் ஆராய்ந் தாலும்
கம்பன் கவிகளில் கலந்துள நயங்கள்
அனைத்தையும் அறிவது அரிதே எனலாம்.
மானிட வர்க்கம் மகிழ்வுடன் வாழ்ந்திட
உலகுள யாவரும் உணர்ந்திட வேண்டிய
அறங்களுக் கெல்லாம் அகராதி யான
தெய்வப் புலவன் திருக்குறள் அறிவை
நடத்திக் காட்டும் நாடகமேதான்
கம்பன் பாடிய அரும்பெருங் காவியம்,
கம்பன் பாட்டில் காதலே மிகுந்து,
இளமையி லிருந்து இதுநாள் வரைக்கும்
அல்லும் பகலும் அதிலே பழகிய
மனத்தொடு குலவி மகிழ்தரும் ரசிகன்
இனிய குணவான் எனதொரு நண்பன்
**பி. ஜி. கருத்திரு** மன்என னும் பெயரோன்

எம். பி. பதவியில் இருக்கிற நல்லோன்
தண்ணிழல் கொடுத்துத் தாபம் தீர்த்துப்
புதுமணம் பரப்பிப் புத்துணர் வூட்டும்
மலரும் கனியும் மதுவும் செறிந்து
களிதரும் கம்பன் காவியச் சோலையுள்
புகுந்து திளைத்துப் புளகாங் கிதனாய்
மரத்தொரு கனியும் செடிக்கொரு மலரும்
சேகரம் செய்து சேர்த்துக் கோணர்ந்து
தான்பெற்ற இன்பம் தரணியோர் பெறுகெனக்
**'கம்பன் ஓர்-அறிமுகம்'** எனும் பெயர் காட்டும்
கவிகளின் தொகுப்பைக் கருத்துரை யோடும்
ஆர்வம் நிறைந்த ஆராய்ச்சி யோடும்
தந்துளான், படித்துச் சிந்தை மகிழ்ந்தேன்.
கருத்திருமனின் கல்விச் சிறப்பும்
அறிவின் திறனும் ஆராய்ச்சி நயமும்
மேலும் வளர்ந்து மேன்மையுண் டாக்கி
சீரும் புகழும் செல்வமும் செழிக்கப்
பல்லாண்டு வாழப் பரமனைப் பணிந்து
மனமார வாழ்த்தி மங்களம் பாடுவோம்.



# நன்றியுரை

கம்பரின் மாபெருங் காப்பியத்திற்குக் கருத்துரை நான் எழுதப் புகுந்தது, கம்பரின் மேல் எனக்கு உள்ள ஆழ்ந்த பக்தியினால் மட்டும் அல்ல; கம்பர் கவியைப்பற்றி பல முதுபெரும் புலவர்களின் சொற்பொழிவுகள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஏற்கனவே வெளியிட்ட நூல்கள்தான் எனக்குப் பயன் அளித்தன. ஆகவே இந்நூலில் உள்ள பெருமைகள் எல்லாம் அவர்களையே சார்ந்தது. குறைகள் இருப்பின், அவை என் அறிவுக் குறையே.

"**கம்பர் கவியும்—கருத்தும்**" என்ற இந்நூலைப் பதிப்பிப்பதற்கு ஏற்றபடி தகுதி பெற அமைப்பதற்குச் சலியாது உழைத்த என் மகள் குமாரி **பி. கே. சாந்தாதேவி** (B.Sc.)க்கு ஸ்ரீராமன் அருள் பெருகுவதாக.

இந்நூல் பதிப்பிப்பதற்குக் கருத்துரைகளைத் தொகுப்பதில், மிகவும் ஆர்வத்துடன் பெரும் பணிசெய்து, அருமையான அணிந்துரையை அன்புடன் அளித்தவரும் காலஞ்சென்ற புலவர் ஏறு அ. வரதநஞ்சைய பிள்ளை அவர்களின் அருமைச் சகோதரருமான பண்டித, இலக்கண நிறைகடல் திரு. **அ. கந்தசாமிப் பிள்ளை** அவர்களுக்கு என் வணக்கங்கள்.

இந்த மாபெரும் பணியில், எனக்குத் துணையாக இருந்து பணிசெய்த என் மாணுக்கன் வித்துவான் **கே. என். கோபாலன்** (B.O.L)க்கு என் ஆசி. மேலும் இந்த நூலை இவ்வளவு சிறப்பாக வெளியிடுவதற்கு எல்லாப் பொறுப்புகளையும் ஏற்று ஒத்துழைத்த என் நண்பர் திரு. **கு. அழகிரிசாமி** (துணை ஆசிரியர்: "நவசக்தி") அவர்களுக்கு என் நன்றி.

இந்நூல் வெளியிடுவதற்கு எல்லா வகைகளிலும், ஊக்கமும் உதவியும் அளித்தவர்கள் என் அருமருந்தன்ன நண்பர்கள். அவர்களுக்கு ஸ்ரீராமன் அருள் பெருகுக. மற்றும் இந்நூலுக்கும், அடியேனுக்கும், பாராட்டுரைகள் வழங்கின தமிழகம் போற்றும் கவி மணிகளான, திரு. **நாமக்கல் வெ. ராமலிங்கம்** அவர்களுக்கும்,

திரு. **கி. வா. ஜகந்நாதன்,** திரு. **பெரியசாமித்தூரன்** அவர்களுக்கும் என் இதயங் கனிந்த நன்றி.

இந்நூலை வெளியிட முன்வந்த தமிழ்ப் புத்தகாலய அதிபர் திரு. **கண. முத்தையா** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி. நன்முறையில் அச்சிட்டுத் தந்த **மாணிக்கம் அச்சகத்தின்** உரிமை யாளர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் என் பாராட்டுகள்.

நம் பாரத **ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன்** அவர்கள் இக் **காவியத்திற்கு** அளித்த **பாராட்டுரை** தமிழ்த் தாயின் மணி முடியில் அமைத்த மாணிக்கம் போன்ற தன்மை யுடைத்தெனப் பெருமை அளிக்கிறது.

நம் தமிழகம் தந்த தலைப்புதல்வர் திரு. **கு. காமராஜ்** அவர் களின் பாராட்டுரை இந்நூலின் அழகுக்கு அழகு செய்யும் மாண்புடைத்து.

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் **டாக்டர் C P. இராமசாமி ஐயரவர்களின் ஆராய்ச்சிக் கருத்துரை** எனக்கு மிக்க ஊக்கமூட்டுவதாக அமைந்துள்ளது.

இப்பெருமக்கள் அனைவருக்கும் கடமைப்பட்டிருக்கிறேன்.

**பி. ஜி. கருத்திருமன்,**
B. Sc., M.P.

# பதிப்புரை

எங்கள் நிறுவனத்தின் பதினேழு வருட வரலாற்றிலே இந் நூல் வெளியீடு ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். 1919-ஆம் ஆண்டு பேராசிரியர் **எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களின்** நூல்களை நாங் கள் வெளியிடத் தொடங்கியதற்குப் பிறகு ஏற்பட்டுள்ள இரண் டாவது முக்கிய நிகழ்ச்சி இது. பேராசிரியவர்கள் உயிரோ டிருந்த காலத்திலேயே கவிச்சக்கரவர்த்தி கம்பரின் "**இராம காதை**"க்கு ஒரு நல்ல பதிப்பு வெளியிட வேண்டுமென நாங்கள் முயன்றோம். பல சூழ்நிலைகளினால் அவ்விருப்பம் நிறைவேற வில்லை, ஆயினும் ஆசை என்னவோ இருந்துகொண்டே இருந் தது. அவ்விருப்பம் ஓரளவு இந்நூல் வெளியீட்டின் மூலம் பூர்த்தி யடைகிறது. இந்த மகிழ்ச்சிகரமான வாய்ப்பினை எங்களுக் களித்த ஆசிரியர் **கோவைக் கம்பன் P. G. கருத்திருமன்** B.Sc. M.P. அவர்கட்கு எங்கள் மனப்பூர்வமான நன்றியறிதலை முதலில் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் கம்பர் பெருமானது இராம காதையின் கதைத் தொடர்பு விட்டுப் போகாதபடி 935 பாடல்களில் சுருக்கப் பெற் றுள்ள கம்ப ராமாயணச் சுருக்கம். 12,000 பாடல்களிலிருந்து கதைத் தொடர்பு கெடாதபடியும் சுவைமிக்க கவிதைகள் விரவி வரும்படியும் 935 பாட்டுகளில் சுருக்குவது சுலபமான வேலையல்ல. இக்கடினமான வேலையைத் திறம்படச் செய்துள் ளார் ஆசிரியர். இந்நூலிலுள்ள முக்கிய அம்சம் உரை எழுதி யுள்ள முறையாகும். அந்தந்தப் பாட்டுக்கு நேரே இடதுபுறத்தில் வரும்படியாக உரை அமைக்கப் பெற்றுள்ளது. கருத்துரையும் கதை விளக்கமும் கொடுக்கப் பெற்றிருப்பதுடன் அரும்பதங் களுக்கு உரையும் அவசியமான இடங்களில் குறிப்பும் தரப்பெற் றுள்ளன. ஓரளவு தமிழ் அறிவு பெற்றுள்ள சாதாரண மனிதர் களும் கம்பர் பெருமானின் கவிதா சக்தியையும் இராம காதை யின் நயத்தையும் கற்று அனுபவிக்கப் பெரிதும் உதவக்கூடிய முறையில் அமைந்துள்ளது இந்த உரை.

மூன்றாவதும் மிக முக்கியமானதுமான அம்சம் "**கம்பர்-ஓர் அறிமுகம்**" என்ற பகுதி. இப்பகுதியில் கம்பர் பெருமானின் பாத்திரப் படைப்பு, உவமை நயங்கள், அவரது அரசியல், பொரு ளாதார, சமுதாயக் கொள்கைகள் யாவும் விரிவாகக் கூறப்பெற் றுள்ளன. இப்பகுதியின் சிறப்பைப்பற்றி தமிழகத்தின் சிறந்த

அறிஞரான **டாக்டர் சி. பி. ராமசாமி ஐயரவர்கள்** தமது பாராட்டுரையில் கூறி யிருப்பதற்குமேல் வேறு என்ன சொல்ல முடியும்?

ஆசிரியர் P. G. **கருத்திருமன்** அவர்கள எழுத்தைத் தொழிலாகக் கொண்டவருமல்ல; பண்டிதருமல்ல. அவருக்குத் தொழில் விவசாய உற்பத்தியைப் பெருக்குதலும் நாட்டிற்குழைத்தலும். அவர் உள்ளத்தைக் கவர்ந்தவை இலக்கியமும், அரசியலும். பொதுவாக அரசியல்வாதிகளுக்கு வெற்றிதான் தர்மம். தங்களுக்கு வெற்றி தருவது எதுவோ அதுவே உண்மை, அதுவே நியாயம் என்று கருதுவதுதான் அரசியல்வாதிகளின் தன்மை. மகாத்மா காந்தியடிகள் அரசியல் வானிலே தோன்றிய பிறகுதான் அரசியலில் சத்தியமும் தர்மமும் முக்கியத்துவம் பெற்றன. காந்தியடிகளின் வழிநிற்கும் நியாயமும் நேர்மையுமுள்ள அரசியல்வாதி திரு. **கருத்திருமன்** அவர்கள். அவர் தமது 21-ம் வயதில் அரசினர் மாநிலக் கல்லூரியில் B. Sc, பட்டம் பெற்றதும், "இந்தியா கிராமத்தில்தான் வாழ்கிறது" என்ற காந்தியடிகளின் வாசகம் அவரை அழைத்தது. பட்டம் பெற்றவுடன் கிராமத்திற்குச் சென்று விவசாய உற்பத்தியிலும் கிராம மக்களின் சேவையிலும் தீவிரமாக ஈடுபட்டார். அவருடைய விஞ்ஞான அறிவு விவசாய உற்பத்தியைப் பல மடங்கு பெருக்குவதற்குத் துணைபுரிந்தது. காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்திலே நம்பிக்கை வைத்துக் கிராம மக்களிடையே உழைத்த அவருக்கு கம்பர் பெருமானின் அரசியல் கருத்துக்களும், சமுதாய அமைப்பு, மக்கட் பண்பு முதலிய கருத்துக்களும், மிக உயர்ந்ததாகத் தோன்றியதில் ஆச்சரியமில்லை. காந்தியடிகள் கூறிய "ராம ராஜ்யத்"தைக் கம்பரின் கவிதைக் கடலிலே கண்டு களித்தார். கம்பர் பெருமானின் கவிநயத்திலும், அறிவுப் பெருக்கிலும் உள்ளத்தைப் பறிகொடுத்து 20 ஆண்டுகளுக்குமேல் கம்பரைக் கற்பதிலே செலவிட்டார். சென்னைச் சட்டசபைக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்று 10 ஆண்டுக் காலம் சேவை செய்த காலத்தும், கட்சிக் கொரடாவாக வேலை பார்த்த காலத்திலும்கூட அவர் பேச்சில் எல்லாம் கம்பரின் கருத்துக்களே நிறைந்திருந்தன. அவர் உள்ளமெங்கும் கம்பர் பெருமானே ஆட்சி செலுத்தினர். இவ்வாறு அரசியல், விவசாய வளர்ச்சி வேலைகளுக்கிடையே இடைவிடாது கம்பரைக் கற்றுத் தெளிந்ததின் பலனே இந்நூல். இவ்வரிய நூலைத் தமிழ்த்தாயின் திருவடிகளிலே சமர்ப்பிக்கும் பெருமையையும் உரிமையையும் எங்களுக்களித்த ஆசிரியருக்கு மீண்டும் ஒருமுறை நன்றி கூறுகின்றோம்.

இந்நூலுக்கு பாராட்டுரைகள் வழங்கியுள்ள இந்தியத் தாயின் தவப்புதல்வர் பாரதத்தின் ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனவர்கட்கும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சி. பி. ராமசாமி ஐயரவர்கட்கும், மூன்றரைக்கோடி தமிழ் மக்களின் உள்ளத்திலும் உணர்விலும் நிறைந்துள்ள தலைவர் கு. காமராஜ் அவர்கட்கும், கவிஞர் பெரு மக்களான நாமக்கல் திரு ராமலிங்கம் பிள்ளை, பண்டித அ. கந்த சாமிப் பிள்ளை, திரு. கி. வா. ஜ., திரு. பெரியசாமித்தூரன் ஆகி யோருக்கும் எங்கள் உளம் நிறைந்த நன்றி.

இந்நூலை வெளியிடுவதற்குப் பலவிதத்திலும் துணைபுரிந்த சிறந்த சிறுகதை ஆசிரியரும், கம்பராமாயணப் பதிப்பாசிரியரு மான நண்பர் கு. அழகிரிசாமி அவர்கட்கும், அச்சுத் தாள்களை ஒப்பு நோக்கியும் பிழைதிருத்தியும் உதவிய நண்பர் வித்வான் அ. வைத்தியநாதனவர்கட்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

குறித்த காலத்தில் மிக நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த மாணிக்கம் அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி.

தமிழ்ப் பெருமக்கள் இந்நூலை வரவேற்பார்களென நம்பு கிறோம். பதிப்பித்ததிலே குறைகளோ, அச்சுப் பிழைகளோ காணப்பெறின் அறிஞர் பெருமக்கள் அதைத் தெரிவித்தால் நன்றியுடன் அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்ள வாய்ப்பிருக்கு மென்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னை,
22-10-63

கண. முத்தையா,
தமிழ்ப் புத்தகாலயம்.

# பொருளடக்கம்



கோவைக்கம்பன்

**P. G. கருத்திருமன், B.Sc.**

மக்கள்சபை அங்கத்தினர்

*பிறப்பு*: 29-9-1919

# கம்பர் - ஓர் அறிமுகம்

(பி. ஜி. கருத்திருமன்)

உலகில் விளங்கும் மகா காவியங்களில் கம்பராமாயணமும் ஒன்று. தமிழ்மொழிக்கண் பல்லோராலும் போற்றப்படும் காவியமும் இதுவேயாகும். இவ்விதிகாசம் எளிமையும் இனிமையும் நிறைந்தது. பல்வகைச் சிறபபினையும், அழகினையும் தன்னகத்தே கொண்டுள்ள தாதலால் பல்லோராலும் போற்றப்பட்டு வருகிறது. இக் காவியம் இயற்றிய கம்பர் உலக மகா கவிகளில் ஒருவர். தமிழகத்தின் ஈடு இணையற்ற கவிஞரும் இவரே. "கல்வியில் பெரியவர் கம்பர்" என்பதை யாவரும் அறிவர். கம்பர் தம் காவியத்தை இயற்ற வான்மீகியின் இராம காதையை முதனூலாகக் கொண்டார். வான்மீகியின் அடிப்படைத் தத்துவத்தை மாற்றுமல் தம் காவியத்தைக் கம்பர் வடிததுள்ளார். ஆனல் தமிழகத்தின் பண்பாடு, கலாசாரம் ஆகியவற்றுக் கேற்ப ஓரளவு மாற்றமும் செய்துள்ளார்.

கம்பர் உயர்ந்த உள்ளமும், பரந்த மனப்பான்மையும் கொண்டவர். வான்மீகியின் கவித்திறனையும், சிறப்பையும் வெகுவாகக் கம்பர் புகழ்ந்துள்ளார். சாதாரணமாக ஒரு புலவரை மற்ருெரு புலவர் பாராட்டுவது அரிது. இதை இன்றையத் தமிழ்ப் புலவர்கள் சிலரிடையேயும காணலாம். கம்பர் வான்மீகியைத் தன் கவியில் பாராட்டி யிருப்பது, அவருடைய சிறப்பியல்பையே எடுத்துக்காட்டுகிறது. கமபர் தம்மை எளியவனைக் கருதி, வான்மீகியைத் தெய்வக் கவிஞராக மதிக்கின்ருர். அவர் பாராட்டிய பாடல்கள் படிக்குந்தோறும் இன்பம் பயப்பனவாகும். அப் பாடல்கள்:—

வையம் என்னை இகழவும், மாசு எனக்கு
எய்தவும், இது இயமபுவது யாதுஎனின்
பொய்இல் கேள்விப் புலமை யினேர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே.

வாங்கஅரும் பாதம் நான்கும் வகுத்தவான் மீகி என்பான்
தீம்கவி, செவிகள ஆரத் தேவரும பருகச் செய்தான்
ஆங்கு, அவன் புகழ்ந்த நாட்டை, அன்பு எனும் நறவம் மாந்தி,
மூங்கையான் பேச லுற்ருன் என்ன. யான் மொழிய லுற்றேன்.

இந்த மாபெரும் கம்பருடைய காவியத்திற்கு நான் கருத்துரை எழுதப் புகுந்தது, அவரைக் கவிதைத் தெய்வமாக நான் போற்றுவது மட்டுமன்றி, 'இந்நிலவுலக மக்கள் எல்லோரும் அவரைப்போற்ற வேண்டும்; இக்காவியப் பண்புகளை, நெறிகளை எல்லோரும் உணர்ந்து கடைப்பிடித்தல் வேண்டும்; சுவர்க்கம் என்று சொல்லப் படுவதில் அடைகின்ற பேரின்பத்திற்கு நிகரான பேரின்பத்தைக் கம்பர் கவிச்சுவையால் இங்கேயே எல்லோரும் அடையவேண்டும்' என்ற நோக்கத்துடனேயாகும். மற்றும் கம்பர கவிதைகளுக்கு நான் தரும் கருத்துரைகளும், விளக்கங்களும், மேற்கோள்களும் முடிவானவைகளோ முழுமையானவைகளோ அல்ல. சிறிய படகில் ஏறிக்கொண்டு பெருங்கடலில் திசை தெரியாமல் பிரயாணம் செய்யும்படியான தன்மையை ஒத்தததுதான் என்னுடைய முயற்சி. கம்பருடைய மொழியிலேயே சொல்ல வேண்டுமானால், நான் இதற்குக் கருத்துரை வழங்குவதென்பது ஊமையன் பகற்கனவு காண்பது போன்றதே ஆகும்.

ஒரு நாட்டில் தோன்றிய மகா கவிகளைப் பொறுத்துத்தான் அந்நாட்டில் உயர் பண்புகள் வளரும். மக்களும் அவர்கள் இயற்றிய நூல்களைப் படித்துப் பண்பு தவருமல் நடப்பர். கம்பரைப் பெற்றதால் நமது தமிழன்னை உலகத்திற்கு மாபெருங் காப்பியத்தை அளிக்கும் சக்தியைப் பெற்ருள். தமிழ் மக்களும் மாபெரும் பேற்றையடைந்தனர். கம்பராமாயணத்தால் நம் நாட்டில் பக்தி நெறியோடு கூடிய ஒழுக்க நெறி எவ்வளவு தூரம் வளர்ந்துள்ளதென்பதை எண்ணிப்பார்த்தல் நலம்.

இக் காப்பியத்தினுடைய குறிக்கோள்கள் பல. கம்பர் காலத்திற்கு முன்பே தமிழ்ப பூங்காவில் காவியங்களாகிய பல மலர்கள் பூத்துக் குலுங்கின. அவற்றையெல்லாம கற்றுணர்ந்து, கம்பர் தம் காவியத்தில் வடித்துள்ளார், அவற்றின் சிறப்புக்களையெல்லாம் தம் கவிதைகளில் புனைந்துள்ளார். திருக்குறட் கருத்துக்கள் அனைத்தையும் தம் காவியத்தில் புனைந்த கம்பர், குறளின் விரிவுரையாளராகவே திகழ்கிருர். ஐம்பெருங் காப்பியங்களின் கருத்துக்களைக் கம்பர் ஆங்காங்கே கையாண்டிருக்கின்ருர். சுருக்கமாகக் கூறிஞல் தமிழ்ப் பூங்காவின் மலர்களாகிய நூல்களில் காணப்படும் கருத்துக்கள் அனைத்தையும் கம்பருடைய காவியத்தில் காணலாம்.

> 'நிலத்திற் கிடந்தமை கால்காட்டும், காட்டும்
> குலத்திற் பிறந்தார் வாய்ச் சொல்'

என்பது குறள். ஒரு பூமியினுடைய வளத்தை அப்பூமியில் தோன்றிய பயிர்களின் வளமையைக் கண்டும் வலிமையைக் கண்டும் அறிதல்போலக் கம்பர் கவிதைகளிலுள்ள உயிர்நாடியான சொற்களைக்கொண்டு, அவருடைய உயர்ந்த மனப்பாங்கையும், தூய

எண்ணத்தையும் அறியலாம். இக் காவியத்தின் முக்கிய குறிக்கோள்கள் 'தேசமக்கள் எப்படி ஒழுக்கத்துடன் இருக்கவேண்டும்? தேச மக்களின் ஒருமைப்பாட்டு உணர்ச்சி எந்த முறையில் எவ்வாறு ஓங்கவேண்டும்? எல்லோரையும் சாதிமத பேதமில்லாமல் சகோதரத்துவ முறையில் பழகச்செய்வது எப்படி? அதனுல் விளையும் மேன்மையின் அளவென்ன? மக்களினுடைய கல்வி, பொருளாதார நிலை இவைகள் சிறப்புற அமைவதற்கு ஆட்சிமுறைகள் எவ்வாறு இயங்கவேண்டும்? தன்னலமற்ற சேவை உணர்ச்சியினுல் மக்களுக்கு ஆற்றப்படும் சீரிய சேவை எவ்வளவு உயர்ந்தது?' என்பன போன்ற பலவகைக் கருத்துக்களை நன்கு விளக்குவதேயாகும். கம்பர் தம் பாத்திரங்களைக் கொண்டு மேற்கூறிய செயல்களை நடாத்தக் கற்றுக் கொடுக்கின்ருர். கம்பருடைய பாத்திரங்கள் நம் வாழ்க்கையின் வழிகாட்டிகள். இராம பிரானைத் தெய்வ நாயகனுகப் படைத்த கம்பர் தம் காவியத்தை பக்திச்சுவை நிரம்பியதாக ஆக்கியுள்ளார். ஆகவே கமபர் கவிதைகளை பக்தி நெறியில் சென்று கண்டால்தான் அவைகளை ஓரளவு உணர முடியும். பக்தியுணர்ச்சி மேலோங்கக் கவிசுவையும் நனிமிகும் தரம்குறைந்த செயற்கை வைரத்தை எளிதாக மதிப்பிட்டுவிடலாம. ஆனுல் தரமமிகுந்த இயற்கை வைரத்தை எளிதாக மதிப்பிட முடியாது. அவ்வைரத்தின் தரத்தையுணர்ந்த பரிசோதகரால்தான் அதன் மதிப்பையும் தரத்தையும் உணர முடியும். கம்பர் கவிகளோ வைரச்சுரங்கத்திலிருந்து தோண்டியெடுக்கப்பட்ட இயற்கை வைரமாமணிகளைப் போன்றவை. ஆகவே கம்பர் கவிகளின் திறத்தையுணர்ந்து மகிழ்வதற்குப் போதிய பயிற்சியும் தகுதியும தேவை. பக்தி மார்க்கமே அதற்குரிய வழியாகும். பக்திச்சுவை நிரம்பிய காவியத்தையுணர்ந்து மகிழ்வதற்கு பக்தி யுணர்ச்சியே தேவை. அவ்வுணர்ச்சியைக் கம்பர் கவிகளை மீண்டும் மீண்டும் படிப்பதால் அடையலாம. நம தமிழக மக்களுக்கு மட்டுமல்லாமல் இந்தப் பாரதநாட்டு மக்கள் அனைவருக்கும் கம்பர் கவிதையின்பால் பக்தியுண்டாவதற்கு இச்சிறுநூல் பயன்படுவதாகுக. எல்லோரும் எளிதில் கற்கவே இந்நூல் எழுதப்பெற்றதாகும். மாணவர் உலகிற்கும், மற்றும் இராமாயணத்தின்மேல் ஈடுபாடு கொண்ட பெரியோர்களுக்கும் இந்நூல் பயன்படுமென்று நம்புகிறேன்.

> 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
> தெய்வத்துள் வைக்கப் படும'

என்பது குறள். உலகில் வாழவேண்டிய ஒழுக்க முறையில் தவருது சிறப்பாக யார் வாழ்கின்ருர்களோ, அவர்கள் வானிலே உறையும் தேவர்களுக்கு இணையாவர். இப்பொய்யா மொழிக்கேற்ப வாழ்ந்தவனே இராமபிரான் ஆவன்.

பல ஆயிரம் வருடங்களுக்குமுன், "உலகில் எல்லா நற்குணங்களையும் உடைய புருடோத்தமன் யார்?" என்று வான்மீகியின்

வினாவிற்கு விடையளிக்கும் வகையில் நாரதமுனிவர், "இவ்வுலகில் அச்சரிய குணங்களும் பண்புகளும் உள்ள ஒரு புருடோத்தமன் யாரும் இல்லை, ஆதிப் பிரம்மமான மகா விஷ்ணு பூவுலகில் இராமாவதாரமாக அவதரிக்குங்காலை அத்தகைய புருடோத்தம குணங்களுடன் திகழுவான்" என்று கூறிய உபதேசமே இந்த இராம காதையின் அடிப்படையாகும்.

இராம காதை ஒரு இதிகாசம். இதிகாசம் என்பது யாதெனில், கர்ணபரம்பரையாகச் சொல்லி வந்த கதையைக் காப்பிய வடிவமாக மாற்றித் திகழச்செய்வது ஆகும். இராம காதை பல மொழிகளில் பலவிதமான கருத்துக்களுடன் தோன்றியிருந்தாலும் வான்மீகி இராமாயணத்தையே கம்பர் முதல் நூலாகக் கொண்டார். வான்மீகியிடம் பெரும் மதிப்பும் ஈடுபாடும் கம்பருக்கு உண்டு. கம்பர் வடமொழியை நன்கு பயின்றவர்; தென்னாட்டு மொழிகளான கன்னடமும், களி தெலுங்கும் கற்றவர்.

## கம்பர் காலம்

சோழவளநாட்டில் மாயூரத்திற்கு அருகேயுள்ள திருவழுந்தூர் (தேரழுந்தூர்) என்னும் ஊரில் பிறந்தவர் கம்பர். இளம் வயதிலேயே கவிபாடும் திறன்படைத்த கம்பர், 'சரஸ்வதி அந்தாதி' போன்ற சிறு நூல்களையும் இயற்றியுள்ளார். கவிச்சக்கரவர்த்தி கம்பரின் கவிபாடும் திறனை, "விருத்தமெனும் ஒண்பாவில் உயர் கம்பன்", "கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்" என்பன போன்ற மரபு மொழிகளால் நன்கு உணரலாம். சோழநாட்டுத் திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த சடையப்பவள்ளல் அவரை மிகவும் ஆதரித்தார். "நன்றி மறப்பது நன்றன்று" என்பதற்கேற்ப கம்பர், தமக்குச் சடையப்பவள்ளல் செய்த நன்றியை நினைவு கூரும் பொருட்டு அவர் இயற்றிய இராம காதையில் இன்றியமையாத பல இடங்களில் சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து சிறப்பித்துள்ளார். குறிப்பாக, இராமபிரானுக்கு இறுதியில் மணிமகுடம் சூட்டுங்காலை, "விரைசெறி கமலத் தாள்சேர் வெண்ணெய் மன் சடையன் தங்கள், மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி" என்று பாராட்டியது, கம்பர் சடையப்ப வள்ளல்பால் கொண்டுள்ள பெருமையையும், பெருமதிப்பையும் நன்கு காட்டுகிறது.

கம்பருடைய காலம் ஒன்பதாவது நூற்றுண்டா? அல்லது பன்னிரண்டாவது நூற்றுண்டா? என்ற இரு வேறு கருத்துகள் நாட்டில் நிலவி வந்தன. ஆனால் தற்பொழுது பேரறிஞர்களால் கம்பரது காலம் பன்னிரண்டாம் நூற்றுண்டே என்று தெளிவாக்கப் பட்டுள்ளது.

கம்பரது காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்று கூறுவோர்,

"எண்ணிய சகாப்தம் எண்ணூற் றேழின்மேல் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய இராம காதை பங்குனி உத்த ரத்தில்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே."

என்ற பாடலை அடிப்படையாகக் கொண்டு இராமாயணம் கி. பி. 885-ல் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்றும், ஆதலின் கம்பரது காலம் ஒன்பதாம் நூற்றாண்டு எனவும் கருதுகின்றனர். ஆனால், கம்பரது காலம் 12-ஆவது நூற்றாண்டு எனக் கூறுவோர் மேற் சொன்ன பாட்டிலுள்ள "எண்ணூற்று ஏழு" என்பதற்கு, எண்ணப் பட்ட நூற்று ஏழு எனப் பொருள் கொண்டு, அதாவது சாலிவாகன சகாப்தம் 1107 (கி. பி 1185) என்பர். ஆகவே, கம்பரது காலம் 12-ஆம நூற்றாண்டே யென்பது இவர்கள் துணிபு. மேற்சொன்ன பாடலைத் தவிர கம்பர் தமது காவியத்தில் மேற்கோள்களாக ஆண் டுள்ள சில நூல்களைக் கொண்டும் அவரது காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டே யென்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

கம்பர் தமது காவியத்தில் பல இடங்களில் சீவகசிந்தாமணியின் அடிகளைக் கையாண்டுள்ளார். சீவகசிந்தாமணியின் காலம் பத்தாம் நூற்றாண்டு என்பது ஆராய்ச்சியாளரின் முடிபு. ஆதலின் கம்ப ராமாயணம் பத்தாம நூற்றாண்டுக்குப் பிற்பட்டதென்பது நிச்சயம். தவிரவும், கம்ப ராமாயண யுத்த காண்டத்திலுள்ள "தியாக வினோ தன் தெய்வப் பொன்னி நாடு" என்ற பாட்டில் கூறப்பட்டுள்ள மன்னன் மூன்றாங் குலோத்துங்கனே என்பது தெள்ளத்தெளிவு. ஆதலின், அவ்வரசன் காலமாகிய கி. பி. 1178—1216-ல் கம்ப ராமாயணம் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது. இதுவும் தவிரக் கம்பர் சோழ மன்னனோடு மாறுபட்டு ஆந்திரநாடு சென்றார் எனவும், அங்கு அந்தச் சமயத்தில் ஆண்டு வந்த ஆந்திர அரசர் பிரதாபருத்திரனைத் தம் கவியால் ஆட்கொண்டார் எனவும் சரித்திர வாயிலாக அறிகிறோம். ஆதலின் பிரதாபருத்திரன் காலமான (1162—1197) பன்னிரண்டாம் நூற்றாண்டே கம்பரது காலமாகவும் இருத்தல் வேண்டுமென்று நிச்சயிக்க முடிகிறது. ஆகவே, பல்வகைச் சான்றுகளைக் கொண்டும் நோக்குமிடத்துக் கம்பரது காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டே யென்பது தெளிவு.

## கம்பரது சமயம்

கம்பர் சிறந்த வைணவ பக்தர். ஒவ்வொரு சமயமும் மற்றொரு சமயத்தை அடக்கியாள வேண்டுமென்று எண்ணப்பட்டுக் கொண் டிருந்த காலம் கம்பருடையதாகும். புத்தமதம், சமணமதம் முத லியன இந்து மதத்தின் குறைபாடுகளைக் கூறிக் கொண்டிருந்தன வாயினும், அவையும் ஒன்றுக்கொன்று மற்றதை அடக்கியாள வேண்டுமென்ற எண்ணத்துடனேயே இருந்திருக்கின்றன. எவ்வளவு

எதிர்ப்புகள், இடையூறுகள் தோன்றியபோதிலும், இந்து மதம் எதற்கும் அசையாமல் என்றும், இன்றுபோல் நிமிர்ந்து நின்று சிறப்புடன் வாழ்ந்து வந்திருக்கிறது. இந்து மதத்தின் இரு பெரும் பிரிவுகளான சைவமும் வைணவமும் ஒன்றோடொன்று மாறுபட்டு இருந்தபோதிலும், கம்பர் அவ்விரண்டும் இணைந்து வாழவேண்டும் என்பதையே வலியுறுத்திக் கூறுவாராயினர். அவரது அப் பெரும் விருப்பத்தைத் தெள்ளத்தெளிய எடுத்துரைக்கும்,

''அரன்அதிகன் உலகளந்த அரிஅதிகன்,
என்றுரைக்கும் அறிவி லோர்க்குப்
பரகதிசென்று அடைவரிய பரிசேபோல்,
புகல்அரிய பண்பிற்று ஆமால்,
சுரநதியின் அயலது,வான் தோய்குடுமிச
சுடர்த்தொகைய தொழுதோர்க் கெல்லாம
வரன்அதிகம் தரும் தகைய, அருந்ததிஆம்
நெடுமலையை வணங்கி, அப்பால்.''

என்ற பாடல் இரு சாராராலும் மிகவும் போற்றப்படுகிறது.

## அரசியல்

**உலக வல்லரசும், கம்பர் காட்டிய நல்லரசும்:—**

வீரத்தை அடிப்படையாகக் கொண்டது வல்லரசு. அறத்தை அடிப்படையாகக் கொண்டது நல்லரசு. கம்பரது காலம் உலகெங்கும் முடியாட்சி வேரூன்றியிருந்த காலம்; 'மன்னன் தெய்வத்தின் பிரதிநிதி' என்ற வகையில் போற்றப்பட்டு வந்த காலம்; 'மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்' என்ற கருத்து நிலவிய காலம். நற்பண்புகள் கொண்ட அரசர் காலங்களில் மக்கள் சிறப்பாக வாழ்ந்தனர். நற்பண்புகள் குறைந்த அரசர் காலங்களில் ஒழுங்கீனங்களால் மக்கள் அவதியுற்றனர். மதவெறி தாண்டவமாடிய காலங்களிலும், அரசியல் கொந்தளிப்புக் காலங்களிலும் மக்கள் அவதியுற்றனர்.

இவ்வேளையில் உலக அரசியல் நடந்த தன்மையைச் சிறிது நோக்குவோம். முதலில் இங்கிலாந்து சரித்திரத்தைப் பார்ப்போம். இங்கிலாந்தை இரண்டாம் ஹென்றி (1154-1189), சிம்ம மனத்து முதலாம் ரிச்சார்டு Richard Ist, the Lion heart- (1189 – 1199), ஜான் லாக் லண்ட் (1199—1216) ஆகிய முடிமன்னர்கள் ஆண்டு வந்தனர். மத்திய ஐரோப்பாவில் கிறித்துவ மதத்திற்கும், இஸ்லாமிய மதத்திற்கும் ஏற்பட்ட பூசலின் காரணமாக முஸ்லீம் மன்னர்கள் இயேசுநாதர் பிறந்த புண்ணிய பூமியை ஆக்கிரமிக்கத் தொடங்கினர். அதன் விளைவாகச் சிலுவைப்போர்கள் (Crusades) நடைபெற்றன. பிரான்ஸை இரண்டாவது பிலிப்பும் (1165—1223) ஜெர்மனியை, ரோமச் சக்ரவர்த்தி யென்று முடிசூட்டிக்கொண்ட

முதலாம் பிரடெரிக் (1152—1190) என்பவரும் ஆண்டு வந்தனர்; நம் பரத கண்டத்தில், வட இந்தியாவில் ரஜபுத்திர அரசர்களே சிறப்பாக ஆண்டு வந்தனர்; ரஜபுத்திர அரசர்களில் முக்கியமானவர் பிருதிவிராஜ் என்ற அரசராவர். மத்திய இந்தியாவில் ஹொய்சல அரசர்கள் ஆண்டுவந்தனர். இவர்களில் இரண்டாம் பெல்லாளன் (1173–1220) குறிப்பிடத் தகுந்தவன்.

தென்னிந்தியாவிலோ சேர சோழ பாண்டியர்கள் ஒருவருக்கொருவர் மாறுபட்ட எண்ணத்துடனும், சினத்துடனும் பகைமை கொண்டு ஒற்றுமைக் குறைவுடன் ஆண்டுவந்தனர். இக்காலத்தே மதங்களும், போட்டியிட்டு வாழ்ந்தன. இவற்றையெல்லாம் கம்பர் கண்டார். உலக சூழ்நிலையில் அரசியலிலும், மதத்திலும், சமரச நோக்குடன் மறுமலர்ச்சி காண விழைந்தார். மறுமலர்ச்சிக் கருத்துக்களை கம்பர் தம் காவியத்தில் சிறப்புற அமைத்திருக்கிறார். மக்கள் ஆட்சிதான் நல்லாட்சியாக அமைய முடியும் என்னும் அரிய கருத்தைக் கம்பர் அற்புதமாகக் காட்டியிருக்கிறார்.

''வயிரவாள் பூண்அணி மடங்கல மொய்ம்பினன்
உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினன்.''

இக்கவியின் வாயிலாகக் குடியாட்சிதான் உலகில் சிறப்புற்று ஓங்கமுடியும் என்ற கருத்துக்கு வித்திட்டவர் கம்பர். 'மக்களின் உயிரெல்லாம் உறையும் உடல் போன்ற மன்னவன்' என்ற புரட்சிக் கருத்தைக் கம்பர் புகுத்தியிருப்பது போற்றுதற் குரியதாகும்.

வீரத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட வல்லரசுகள் உலகம் முழுவதும் ஆண்டுவந்த காலத்தில் கம்பர் வாழ்ந்தார். ஆனால் அவர் குடியாட்சியையே வேண்டினர். அறத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு நல்லரசைத் தம் கற்பனையில் கண்டு, அதை உலக மக்களுக்குக் காவியவடிவத்தில் காட்டியிருக்கின்றார். நல்லரசாகிய குடியாட்சியில் மக்களுக்குக் கொடுக்கப்படும் சிறப்புக்கள், உரிமைகள் ஆகியவற்றைக் கம்பர் தொகுத்துத் தந்திருக்கின்றார். கம்பர் காட்டும் அயோத்தி, ஒரு குடியாட்சி முறை மலர்ந்து வளர்ந்த நாடு என்பதைத் தெளிவாக அக்காவியத்தில் அறியலாம். மன்னன், இராமபிரானைக் காட்டுக்கு அனுப்பியது தவறு என்று அயோத்தி மக்கள் பேசியதாகக் கம்பர் கூறியுள்ளார். மற்றோரிடத்து, மன்னன் தவறு இழைத்த காலத்து, அம் மன்னனைக் கண்டிக்கும் உரிமை மக்களுக்கு இருந்தது என்பதை எடுத்துக் காட்டுகிறார்.

**ஆதி அரசன் அரும்கே கயன்மகள்மேல்**
**காதல் முதிரக் கருத்தழிந்தா னும்என்பார்;**
**சீதை மணவாளன் தன்னோடும் தீக்கானம்**
**போதும்; அதுவன்றேல் புகுதும் எரிஎன்பார்.**

இப்பாடலால் தசரதன் கருத்தழிந்ததை மக்கள் வெளிப்படையாகக் கூறிக்கொள்வதை அறியலாம். இத்தன்மை குடியாட்சியின் மரபாகும். குடியாட்சியில் மக்கள்தான் சிறப்பான அங்கம் வகிப்பவர்கள். ஆதலின் மக்களே அரசின் உயிர் என்பதைத் தெளிவாக்க வந்த கம்பர் 'வையம் மன்னுயிராக, அம் மன்னுயிர் உய்யத் தாங்கும் உடலன்ன மன்னவன'' என்று கூறுகிறார். இதே கருத்தை, மேற்கண்ட கவியில் காணும ''உயிரெல்லாம் உறைவதோர் உடம்பும் ஆயினன்'' என்ற அடியாலும் அறியலாம்.

'சகல நற்குணங்களும் பொருந்திய அமைச்சர்களின் ஆலோசனைப்படிதான் தசரதன் தன் நல்லாட்சியை நடத்தி வந்தான்' எனக் கூறுவதன் மூலம், நீதிவழுவாத அரசாட்சியைக் கம்பர் நன்கு எடுத்துக் காட்டுகிறார்.

வீரத்தை அடிப்படையாகக் கொண்ட வல்லரசிலே, கம்பர் இலங்கைவாழ் இராவணனை எடுத்துக்காட்டாக அமைத்திருக்கிறார். இலங்கை அரசு, அறநனை நீககி மறத்தையே அடிப்படையாகக் கொண்டது. இராவணனைச் சர்வாதிகாரப் போக்குடையவனாகத்தான் கம்பர் சித்திரிததிருக்கின்றார். இராவணனது ஆட்சியின் குறைகளை எடுத்துக்காட்ட எந்தக் குடிமகனுக்கும் உரிமையில்லை. அரசனுடைய முடிவே இறுதியான முடிவு. அந்த வல்லரசிலே மக்களின் மனநிலைக்கும், எண்ணத்திற்கும், உரிமைக்கும் இடமேயில்லை. அரசியலில் ஆதரவாக இருந்தவர்களுடைய நற்போதனைகள் கூடச் சிறப்புப் பெறவில்லையென்றால் மக்கள் எப்படித் தங்கள் கருத்துக்களை வெளியிட முடியும்? தாய்மாமனை மாரீசன இராவணனிடம, சீதாபிராட்டியைக் கள்ள வழியில் கவர்வது அவனுடைய வீரத்துக்கு இழுக்கு எனபதைப் பலமுறை எடுத்துக் கூறினான். அச சொற்கள், இராவணனுக்குச் செவிடன் காதில் ஊதிய சங்குபோல்தான் ஆயின. இலங்கை அரசியலில் பெரும்பங்கு வகிக்கும் தம்பி கும்பகர்ணன் அரிய பெரிய யோசனைகளை இராவணனுக்கு எடுத்துக் கூறுகிறான்:

''ஆசில்,பர தாரம்அவை அம்சிறை அடைப்பேம்!
மாசில்புகழ் காதல்உறு வேம்!வளமை கூரப்
பேசுவது மானம்!இடை பேணுவது காமம்;
கூசுவது மானுடரை! நன்றுநம கொற்றம்!''

என்று முதலில் இராவணன் செய்கையைக் கடிந்து கூறுகிறான். பின்பு யுத்த சன்னத்தனைப் போர்க்களம் புகுமுன் இராவணனிடம் வருந்திக் கூறுகிறான்·

**''வென்றுஇவண் வருவன்என் றுரைக்கி லேன்;விதி
ஒன்றது; பிடர்பிடித் துந்த நின்றது;
பொன்றுவன்; பொன்றினுற் பொலன்கொள் தோளியை
நன்றென நாயக விடுதி நன்று அரோ.''**

என்று இறுதியில் யாவரும் கரைந்துருகும் வண்ணம் கும்பகர்ணன் கூறியதையும் இராவணன் ஏற்கவில்லை. கடைசியில் அவனுடைய வீரமைந்தன் இந்திரசித்து கூறிய அறிவுரையும் விழலுக்கு இறைத்த நீர்போல்தான் ஆயிற்று.

வல்லரசில் மக்களின் உரிமை எதேச்சாதிகாரத்தால் அடக்கப்பட்டு விடுகிறது. ஆனால் அவ்வாறு உள்ள அகங்கார ஆட்சி நிலைக்காது என்பதைக் கம்பர், இந்த இலங்கை அரசின் மூலம் நன்கு விளக்கிக்காட்டுகிறார். நல்லரசுக்கும், வல்லரசுக்கும் இடையே நிகழும் போரில் அறமே வெல்லும் என்பதை இந்தக் காவியத்தின் மூலம் கம்பர் அற்புதமாக எடுத்துக்காட்டுகிறார்.

## கம்பரது அரசியல் தத்துவம்

குடிமக்களின் ஆட்சி (Democracy) என்றும் நிலைத்து நிற்கும் என்பது கம்பரது சித்தாந்தம். மக்கள் சமநிலையுடன் பொருளாதார சமூக வாழ்வில் சுதந்திரமாக வாழ்வதுதான் நல்ல அரசியல் முறை என்பதை எடுத்துக்காட்டிய கம்பர், அவ்வரசியலை எவ்வாறு அமைக்க முடியும் என்பதையும் விளக்குகின்றார். ஆண்பெண் இருபாலரும் கல்வி கேள்விகளில் சிறப்புற்று விளங்கவேண்டும், பெருஞ்செல்வத்தை நன்முறையில் ஈட்டவேண்டும், இவை இரண்டும் இயங்கினால் விருந்தோம்பலும் நன்கு அமையும். மக்கள் நன்னெறியில் நடக்க, எல்லோரும் நல்லவர்களாகவே திகழ்வர். இவ்வின்ப வாழ்வைப்பற்றிக் கம்பர் இரண்டு கவிகளில் நன்கு விளக்குகிறார்:

> "கல்லாது நிறைவார் பிறர் இன்மையின் கல்வி முற்ற
> வல்லாரும் இலலை, அவைவல்லார் அல் லாரும் இல்லை;
> எல்லாரும் எல்லாப பெருஞ்செல்வமும் எய்த லாலே
> இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை! மாதோ."

> 'பெரும் தடங்கண் பிறைநுத லார்க்கெலாம்
> பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால
> வருந்தி வந்தவர்க்கு ஈதலும், வைகலும்
> விருந்தும் அன்றி விளைவன யாவையே"

இவ்விரு பாட்டுக்களும் நல்லரசாட்சியில் திகழும் நல்வாழ்வினைப் புலப்படுத்தும் அச்சாரங்களாக விளங்குகின்றன. மற்றும், நாடு எப்படிப் பூரணத் தற்காப்புடன் இருக்கவேண்டுமென்பதையும், வெளிநாடுகளுடனும் அண்டை நாடுகளுடனும் எத்தகைய உறவுகளுடன் இருக்கவேண்டுமென்பதையும் மிகச் சிறப்பாகக் கம்பர் எடுத்துக் காட்டுகிறார். "புயத்துறை வலிய ரேனும் பொறையுடன் பொருந்தி வாழ்தல், சயத்துறை; அறனுமஃதே" என்று கூறி அறத்தோடு கூடிய வெற்றிக்குக் கம்பர் வழிகாண்கிறார். மற்றும்,

"யாரொடும் பகை கொள்ளலன் என்றபின்
போர் ஒடுங்கும்; புகழ்ஒடுங் காது;தன்
தார் ஒடுங்கல்செல் லாது;அது தந்தபின்
வேரொடும் கெடல் வேண்டல்உண் டாகுமோ?"

என்ற பாட்டால் நிலையான ஆட்சிக்கு வழி காண்கிறார். அண்டை நாடுகளுடன் பகை வளராமல் ஒருவருடனும் கூட்டுச் சேராக் கொள்கையுடன் வாழ்வதே சிறந்த முறையென்று கம்பர் இப்பாட்டால் கண்டவழி, தறபொழுது நம் பாரத நாட்டிற்கு எவ்வளவு பொருத்தமான தென்பதை உணர்ந்து அறியலாம். ஒரு நாடு தன்னுடைய சக்தியைத்தான் பூரணமாக நம்பியிருக்க வேண்டும் என்ற கருத்தைக் கம்பர்,

"முன்னையோா இறந்தோ ரெல்லாம் இபபகை முடிப்ப ரென்றும்
பின்னையோர் நின்றோ ரெல்லாம் வென்றவாப் பெயர்வ ரென்றும்
உன்னை நீ யவரை வென்று தருதியென் றுணாந்து மன்றல்
என்னையே நோக்கி யான்இந் நெடும்பகை தேடிக் கொண்டேன்."

என்ற பாடலின் வாயிலாகக் காட்டுகிறார். இப்பாடலை நம் பரத கண்டத்து மக்கள் அனைவரும் உணர்தல் நலம். அரசியலில் மன்னனோ, மந்திரியோ அல்லது மக்களோ, மற்றவரிடம் எவ்வாறு அணுக வேண்டும் என்பதைக் கம்பர்,

"எதிர்வரும் அவாகளை, எமையுடை இறைவன்,
முதிர்தரு கருணையின் முகமலா ஒளிர,
எதுவினை? இடர்இலை? இனிதுநும் மனையும்,
மதிதரு குமரரும வலியாகொல எனவே."

என்னும் கவியில் அழகுறச் சித்திரிக்கின்றார். தேசிய ஒழுக்கம்தான் ஒரு நாட்டின் உயிர் நாடி. இதைக் கம்பர்,

"கலம் சுரக்கும் நிதியம, கணக்கிலா
நிலம் சுரக்கும் நிறைவளம்; நன்மணி
பிலம் சுரக்கும், பெறுதற்கு அரியதம்
குலம் சுரக்கும் ஒழுககம் குடிக்கெலாம்."

என்ற கவியில் விளக்குகின்றார். இப்பாட்டில் முறையே நெய்தல், முல்லை, குறிஞ்சி, மருதம் என்ற நிலங்களின் வளத்தைக் கம்பர் இணைத்துக் கூறியிருக்கின்றார். ஆகவே ஒரு நாட்டின் பல்நில வளங்களும் ஒன்று சேர்ந்திருத்தல் போல, பல் இன மக்களும் ஒன்று சேர்ந்திருத்தலையே கம்பர் குலமுறை யொத்த தேசிய ஒழுக்கமாகக் காண்கிறார்.

சாதிமத பேதத்தை நீக்கிச் சகோதரத்துவத்தை நிலைநாட்டுவதே கம்பரின் சீரிய கொள்கையாகும். இதை,

"குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு;பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்; எம்உழை அன்பின் வந்த
அகன்அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகல்அரும் கானம் தநது புதல்வரால் பொலிந்தான் நுந்தை."

என்னும் கவியில் சிறப்புற விளக்குகின்றார் கம்பர் காட்டும் நெறிகளும், ஒழுக்கங்களும், பரந்த எண்ணங்களும் எண்ணிறந்தன. உயர்ந்த உள்ளங்கள் உள்ளுவது ஒன்றே. கம்பர் சிறந்த கவிக்கு ஓர் அறுதியிடுகிறார். உயர்ந்த பண்புகள் உடைய உள்ளத்தில் தான் சிறந்த கவிதை தோன்ற முடியும். சாதாரண கவிதைகள் எவ்வளவு வேண்டுமானாலும் புனையலாம். அவைகள் நீடு நிலைப்பன வல்ல. ஒரு கவிதையின் சிறந்த கருத்துக்கள், சிறந்த நெறிகள் ஆகியவற்றைப் பொறுத்தே அவைகள் நிலைத்து நிற்கின்றன.

கம்பர், சான்றோருடைய கவிதைகள் எவ்வாறு அமைய வேண்டுமென்பதை,

> "புவியினுக்கு அணியாய, ஆன்ற பொருள்தந்து, புலத்திற்று ஆகி
> அவியகத் துறைகள் தாங்கி, ஐந்திணை நெறி அளாவிச,
> சவிஉறத் தெளிந்து, தண்என ஒழுக்கமும் தழுவிச் சான்றோர
> கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரா கண்டார்."

என்னும் பாட்டில் அறுதியிடுகிறார். உயர்ந்த கவிதைகளை வழங்கின கவிஞர்கள் எச்சமயத்தினராயிருந்தாலும் சரியே, எக்காலத்தவராக இருந்தாலும் சரியே, எத்தேசத்தவராக இருந்தாலும் சரியே, அவர்கள் உள்ள உணர்ச்சிகள் ஒன்றே என்பதை நாம் பல சான்றுகளால் அறியலாம். அவர்கள் உயர்ந்த எண்ணங்களையே சிந்திப்பதால், அவை ஒருமித்தனவாக இருக்கின்றன.

மில்டன் என்னும் மாபெரும் கவி அண்மையில் இங்கிலாந்து தேசத்தில் தோன்றியவர். அவர் ஒரு பிறவிக் கவிஞர். அவர் ஆங்கிலத்தில் ஒரு அற்புதமான அரும்பெருங் காவியத்தை அருளியிருக்கிறார். மில்டனின் காப்பியம், உலக மாபெருங் காப்பியங்களில் போற்றுதற்குரிய ஒன்றாகும். அவருடைய காவியங்கள் சுவர்க்க நீக்கம் (Paradise Lost), மீண்ட சுவர்க்கம் (Paradise Regained) என்பவைகள் ஆகும். மில்டனுடைய காலம், கம்பர் காலத்திற்கு ஏறக்குறைய ஐந்து நூற்றாண்டுகள் பிற்பட்டதாகும். ஆனால் காவியப் படைப்புக்கள், கருத்துக்கள் எல்லாம் ஒன்றாகவே திகழ்கின்றன. கம்பர் தம் காப்பியத்தில் அமைத்த இராவண பாத்திரமும், சுவர்க்க நீக்கத்தில் மில்டனர் அமைத்த சாத்தான (Satan) பாத்திரமும் ஒன்றே. சுவர்கக நீக்கத்தில் கடவுளுடைய தன்மையை மில்டன் குறிப்பிடுகையில்,

> "These are thy glorious works, parent of good
> All mighty! Thine this universal frame
> Thus wonderous fair, Thyself hous wonderous then."

என்று கூறுகிறார். இக்கருத்திற்கேற்பக் கம்பர், 'வேதங்கள் அறைகின்ற உலகெங்கும் விரிந்தன உன், பாதங்கள் இவையென்னில் படிவங்கள் எப்படியோ" என்று கூறியுள்ளது மில்டனர் கருத்துடன் ஒப்பு நோக்கத்தக்கது.

ஷேக்ஸ்பியர் நாடகங்கள் ஆங்கில நாட்டிலே மிகவும் தலைசிறந்தவை. அவர் நாடகங்களில் வரும் சிறப்பியல்புகள், உரையாடல்கள், நாடக அமைப்புக்கள், பாத்திரப் படைப்புக்கள் எல்லாம் கம்பர் கவிகளிலும் அமையப் பெற்றிருத்தலை நாம் பார்க்கலாம். ஷேக்ஸ்பியர் நாடகமான "ஹேம்லெத்"தில் (Hamlet). டென்மார்க் இளவரசன் ஹேம்லெத், (Hamlet the prince of Denmark) தனக்குள் பேசிக் கொள்ளும் பேச்சில் (Soliloquy) தன்னுடைய அன்னை, தன் தகப்பனுக்குச் செய்த துரோகத்தை உணரும் வகையில், "Too too solid flesh wouldmelt" என்று கூறுகிறான். தன்னுடைய தாயின் கொடுமையை அவன் எண்ணியது போலவே, கம்பரும், கைகேயியின் கொடுமையை "கொன்றுழல் கூற்றம் என்னும் கொடுமையில் கொடுமை பூண்டாள்" என்று சித்திரிக்கின்றார். மேற் கூறிய ஷேக்ஸ்பியர் கருத்துடன், கம்பரின் கருத்தும் ஒப்புமையுடைத்தென்பதை உணரலாம். கவி பைரன் கவிதைகளில் காணும் கருத்துக்களும் கம்பர் கவியில் காணலாம். பைரன், வாட்டர் லூ (Water loo) என்னும் கவியில், ஆங்கில ஆடவரும் பெண்டிரும் பிரான்ஸ் சக்கரவர்த்தி நெப்போலியனை முதன் முதலாக முறியடித்த சமயம் ஆடல்பாடல்களில் மதுவுண்டு மகிழ்வதைச் சித்திரித்திருக்கின்றான். அவ்வடிகள்,

"No sleep till morn when youth and pleasure meet
To chase the glowing hours with the flying feet."

என்பனவாகும். கம்பர், சூர்ப்பணகை மூக்கறுபட்ட அவமானத்தையும் கருதாது, இராமனை நினைந்துருகி, 'அவன் இல்லாமல் வீணாக இந்த இளமையும் இன்பமும் பொருந்திய இரவு கழிகின்றதே' என்று காமவேட்கையால் வருந்துவதைச் சித்திரிக்கின்றார். பைரன் கவிக்கும், கம்பன் கவிக்கும் உள்ள ஒற்றுமை, அறிந்து மகிழற்பாலதாகும்.

அடுத்து நம்மிடையே வாழ்ந்த நம் தேசபிதா மகாத்மா காந்தி அவர்கள் கருத்துக்களும் கம்பன் கவிகளில் பிரதிபலிப்பதைப் பார்க்கலாம். 1939-ஆம் வருடம் ஹிட்லர் இரண்டாம் உலக மகா யுத்தத்தைத் தொடங்கினார். அச்சமயம் அஹிம்ஸை, சத்தியம் ஆகியவற்றை நெறியாகக் கொண்ட காந்திஜி, ஹிட்லருக்கு ஒரு கடிதம் எழுதினார். அக்கடிதத்தில், மனிதனை, மனித சமுதாயத்தை அழிக்கும்படியான யுத்தத்தை ஹிட்லர் ஆரம்பித்து விட்டதாகவும், அப்போரை நிறுத்துவதற்குப் போதிய சக்தி தன் கடிதத்திற்கு இல்லாவிடினும், பல நண்பர்களின் வேண்டுகோளுக்காகவே அக்கடிதத்தை எழுதுவதாகவும் காந்திஜி குறிப்பிட்டுள்ளார்: "இங்கிலாந்து தேசத்திலேயுள்ள அழகான மத ஆலயங்கள், மத குருக்கள், நன்றாக அழகுடன் வளர்க்கப்பட்ட சிறு குழந்தைகள், கலைகளுக்கு இருப்பிடமான அரும்பெருங் கோட்டைகள், அழகான பாராளுமன்றக் கட்டி

டங்கள், யுத்தத்தில் நேரடியாக ஈடுபடாத ஆங்கிலேய மக்கள் ஆகியவர்கள் நாசமடைவதைத் தடுப்பதற்காகவாவது இந்த யுத்தத்தை நிறுத்தக் கூடாதா?" என்று காந்திஜி எழுதினர். காந்திஜியின் இக்கடிதக் கருத்துக்களைக் கம்பர் கவியிலும் காணலாம். கம்பர் இக்கருத்துக்களை,

புத்திரர் குருக்கள், நின் பொருஇல் கேண்மையர்
மித்திரர், அடைந்துளோர் மெலியர், வன்மையோா
இத்தனை பேரையும் இராமன் வெம்சரம்
சித்திர வதைசெயக் கண்டு தீர்தியோ?

என்று வீடணன் வாயிலாக விளக்குகின்றார். ஆகவே, இவ்வாறு இன்னும் பல ஒப்புமைகளை நோக்கினால் உயர்ந்த உள்ளங்கள் உள்ளுவதெல்லாம் ஒன்றே என்பது புலனாகும்.

## கம்பர் உவமைகள்

கவிஞர்கள் தங்கள் கவிதைகளிலும் காவியங்களிலும் பல உவமைகளைப் புகுத்தியிருக்கின்றனர். தங்கள் கருத்துக்களை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளவே உவமைகளைக் கையாளுகின்றனர். கம்பர் தம் காவியத்தில் நூற்றுக்கணக்கான உவமைகளைக் கையாண்டிருக்கிறார். மிகச் சிறந்த ஒப்புவமைகள், சிறப்புவமைகள், இல்பொருளுவமைகள் முதலியவற்றைக் கம்பர் காவியத்தில் நாம் காணலாம். எண்ணற்ற வாழ்க்கைத் தத்துவங்களைக் கம்பர் தம் காவியத்தில் விளக்க எண்ணினார். அவைகளை எளிதில் விளங்கச் செய்ய உவமைகளைக் கருவியாகக் கொண்டார். அவர் எடுத்தாண்ட பல நூறு உவமைகளில் சிலவற்றைப் பார்ப்போம். நான் காட்டும் உவமைகளை விடச் சிறப்புவமைகள் பல இருக்கலாம். கம்பர் உவமைகளைக் கற்று வாழ்க்கைக்கு வேண்டிய நற்குணங்களையும் பண்பாடுகளையும் அடைவதற்கு இவைகள் சிறியபடிகளாக அமையுமென்று நம்புகிறேன். இவைகளை மாதிரியாகத்தான் வைத்துக் கொள்ள வேண்டும்.

மனித வாழ்க்கை ஒரு குறித்த உயரிய லட்சியத்துடன் அமைய வேண்டுமானால், அதற்குக் கல்வி, கேள்வி, ஈகை ஆகியவை இன்றியமையாதனவாகும். கல்வி கேள்விகளில் தேர்ந்து ஈகைத் தன்மையையும் ஒருவன் அடையும் பொழுது முழு மனிதனாக அவன் உருப்பெறுகிறான். இவைகளில் இரண்டை எய்தப் பெற்றவன் மனிதத் தன்மையுடன் மட்டும் வாழ முடியும். ஒன்றை மட்டும் உடையவன் மக்களுள் ஒருவனாக மட்டும் மதிக்கப்பெறுவான். இதைக் கம்பர் உவமையின் மூலம் விளக்குவதைப் பார்ப்போம்.

கல்வியினால் ஏற்படும் சிறப்பையும், புகழையும் விளக்கும் கம்பர், கல்லாமையினால் ஏற்படும் தீங்கையும் அற்புதமாகக் காட்டுகிறார். கல்போன்ற கரிய நிறத்தினையுடைய தாடகையின்மீது இராமபிரான் அம்பெய்கிறார். இராமபாணம் தாடகையின் மார்பை ஊடுருவிச் சென்ற விதத்தைக் கம்பர் அழகாக விளக்குகிறார். அவர் காட்

டும் உவமை, கல்லாதவனைப் பற்றித் தெற்றென விளக்குகின்றது. கல்லாத ஒருவனின் மனமும் கல்லையொத்ததுதான். மற்றும் கல்லாதவனுக்குத் தாடகை உவமை கூறப்படுவதால், அவள் அஞ்ஞானத்தால் அறிவற்றவளாக விளங்குகிறாள் என்பதும் தெரிகிறது. கல்வி ஞானம் இல்லாதவர்க்கு எந்த நற்போதனையும் பயன் தராது. அது அவன் மனத்தில் தங்காது. நல்லோர்களுடைய சொற்களை மனதில் கொள்வதற்கும் ஓரளவு கல்வியறிவு அத்தியாவசியம். சிறிதளவு கல்வியறிவும் இல்லாதவனுடைய மனத்தில் ஒன்றுமே தங்காது. ஆகவே கல்வியறிவினால் தான் நற்பண்புகளை மனததில் கொண்டு, அவைகளை அடைய முடியும். இத்தத்துவத்தைக் கம்பர்,

> 'கல்லொக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று, கல்லாப்
> புல்லாக்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று'

என்னும் உவமை மூலம் அழகாகச் சித்திரித்திருக்கிறார். கல்லாதவர் நெஞ்சில் நல்லோர் அறிவுரை தங்காது கழிவதைப போல இராம பிரான் அம்பும் ஊடுருவிச் சென்றது என்று கூறியிருக்கிறார். இன்னும் கல்லாமையைப் பற்றிக் கம்பர் பல இடங்களில் குறிபபிடுகிறார்.

சூர்ப்பணகையின் வாயிலாகச் சீதையின் அழகை இராவணன் கேள்விப்படுகிறான், உடனே காம உணர்ச்சியால் மனதைச் சீதையின்பால் பறிகொடுத்து மதிமயங்குகிறான். அவனுடைய காமநோய் வளர்வதைக் கமபர், கல்வி கல்லாத அறிவு கெட்டவன் செய்த தீமை வளர்வதற்கு ஒப்பிடுகிறார். "கல்வி நோக்கா மதியிலி மறைந்து செய்த தீமைபோல் வளர்ந்த தன்றே" என்று கம்பர் காட்டும் உவமை, கல்வி கேள்வி இரண்டிலும் குறைந்த அறிவற்றவன் செய்யும் காரியம் எத்துணை தீமையுடைத்து என்பதை விளக்குவதாகும். கல்விகல்லாத ஒருவன் கேள்வியினால் ஓரளவு பொது அறிவைப் பெறலாம். அதுவும் இல்லாதவன் எல்லாக் காரியங்களிலும் தீமையையே நாடுவான்; எச்செயலிலும் இறுதியில் இன்னலைத்தான் எய்தப் பெறுவான். ஆகவே கல்வி கேள்வி இரண்டும் அற்றவனைக் கம்பர், "கல்வி நோக்கா மதியிலி" என்று கூறினார். இம்மதியிலியின் தீமைக்கு, இராவணனுடைய காம வேட்கை உவமையாகக் கூறப்பட்டது.

ஈகையும் கல்வியும் மனிதப் பண்புகளில் எவ்வளவு உயர்ந்தது என்பதைக் காட்ட எண்ணிய கம்பர் இவ்விரண்டின் சிறப்பையும் முதலில் கூறுகிறார். பின் இவை இரண்டும் குறைந்திருப்பதனால் விளையும் பெரும் தீங்கையும் அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். கல்வியற்றவன் மனம் இருண்டுதான் இருக்கும். அவனிடத்தில் கண்ணோட்டத்தையோ அருட்குணத்தையோ முழுதும் காணமுடியாது. ஈகையென்னும் நற்குணத்தையும் அவனிடம் காணமுடியாது. கல்வி கேள்விகளில் குறைந்த ஒருவனும் ஈகையென்னும் நற்பண்பு பூண்டு நல்லவிதமாக மக்களுடன் வாழமுடியுமானால் அந்த அருட்சிந்தை

யானது மற்றும் பல நற்பண்புகளை உருவாக்கும். ஈகையில்லாதவனிடத்து இருக்கும் கல்வி கேள்விகள் பிறருக்குப் பூரணமாகப் பயன் படாது. அருட்சிந்தனையற்றவன் தன் கல்விகேள்விகளை விரித்துரைக்க இயலாதவனாகிறான். அவனுடைய அறிவுத்திறம் குடத்திலிட்ட விளக்கைப் போன்றது தான். இராவணன் தன் தங்கை சூர்ப்பணகையின் மூலம் சீதையைப் பற்றிக் கேள்விப்படுகிறான்; காம நோயால் வேதனையுறுகிறான். அவன் மனம் இருண்டிருப்பதால், அவனும் இருட்டினையே விரும்புகிறான். அங்கு அந்தகாரத்தைக் கம்பர், கல்வி கேள்வியும் அருட்சிந்தனையும் அற்றவன் மனத்திற்கு உவமித்திருப்பது அற்புதமாக உள்ளது.

''முருடுஈர்ந்து உருடடற்கு எளிதென்பதுஎன் முற்றும் முற்றிப்
பொருளதீங்குஇல கேள்விச் சுடாபுக்கு வழங்கல் இன்றிக்
குருடுஈங்கு இதுஎன்னக் குறிகொண்டு கண்ணோட்டம் குன்றி
அருள்தீர்ந்த நெஞ்சிறகு அரிதுஎனபது அவ்வந்த காரம்.''

இப்படிப்பட்ட இருட்டினை இராவணன் விரும்பினான். தன் தங்கை சூர்ப்பணகையின் மூக்கினை அரிந்த பழியையும் மறந்தான்; தன் தம்பி கரன் இறந்துபட்டதை மறந்தான். இவ்வாறு தனக்கு நேர்ந்த பழியை மறந்தவன் சூர்ப்பணகை சொல்லக் கேட்ட மங்கையை மட்டும் மறக்கவில்லை. சூர்ப்பணகையின் தீய உரை, இராவணனின் தூய சிந்தனையைத் தீய சிந்தனையாக மாற்றிவிட்டது. சீதையைப பலவாறு புகழ்ந்த சூர்ப்பணகை, இராவணனிடம், ''நான் என்ன சொல்வதற்கு இருக்கிறது. நேரில் நீ காண்டி ஐய'' என்று கூறுகிறாள். உடனே சீதையைக் கவரும் கெட்ட எண்ணம் இராவணன் மனத்தில் உண்டாகிறது மனம் இருண்டு மதிமயக்கமுறுகிறான். அடுத்த நாளே சீதையிடம் செல்லத் தீர்மானித்து விடுகிறான்.

மற்றும ஓர் இடத்தில் மிகவும அழகாகக் கம்பர் கல்வியைப் பற்றிக் கூறியிருக்கிறார். அயோத்தி நகரில் எல்லோரும் கற்றவர்கள்; கல்லாதவர்கள் ஒருவரும் இலர். கற்றவர்கள் நிறைந்த அந்த நகரத்தை வருணிக்க வந்த கம்பர், 'அந்நகரம் இன்பமாகிய பழம் ஒன்று பழுத்தது போல் காணப்பட்டது' என்று கூறுகிறார். இங்கே கல்வி கேள்விகளை ஒரு மரமாகக் கம்பர் உருவகிக்கிறார். கல்விக்கு இணை வேறொன்றும் கிடையாது. ஆகவே, 'ஒப்பற்ற முதன்மையான கல்வியாகிய விதை முளைத்துச் செழித்து வளர்ந்து, அளவற்ற கேள்விகளாகிய சிறந்த வலிமையுள்ள கிளைகளைப் பரப்பி, மிக்க தவமாகிய இலைகள் தழைத்து, அன்பாகிய அரும்பு அரும்பி, தருமமாகிய மலர் மலர்ந்து, இன்பமாகிய பழம் ஒன்றைப் பழுத்து வைத்துக் கொண்டிருந்ததை ஒத்தது அயோத்தி நகரம்' என்று கம்பர் வருணிக்கிறார். அவர் பாடலால் கேள்வி, தவம், அன்பு, தருமம், இன்பம் (போகம்) ஆகியவற்றிற்குக் கல்வியே மூல காரணமென்று தெரிகிறது. பயன்

மரம் பழுத்து எல்லோருக்கும் பயன்டையச் செய்வதைப் போல, அயோத்தி நகரத்தில் கல்வியாகிய விதையிலிருந்து முளைத்த போகக் கனிகள் பழுத்துப் பயன்பட்டன.

ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்து, எண்ணில் கேள்வி
ஆகும் முதல்திண் பணைபோக்கி, அரும் தவத்தின்
சாகம் தழைதது அன்புஅரும்பித் தருமம் மலர்ந்து
போகம் கனிஒன்று பழுத்தது போலும் அன்றே

இப்பாடலால் கல்வி கேள்விகளின் சிறப்பைக் கமபர் நன்கு விவரிக்கிறார்.

மற்றும் தன் அரிய முயற்சியினால் ஒருவன் கல்வி கேள்விகளில் சிறப்புறலாம். அவன் எந்தக் காரியத்தையும் சாதித்து வெற்றி பெற முடியுமென்று கம்பர் கூறுகிறார். கல்வி கேள்விகளிற் சிறந்தவன் அரிய பெரிய ஞானத்தையும் அடைகிறான். அவன் முற்பிறப்பில் செய்த தவப் பயனாலேயே அந்த ஞானத்தை அடைகிறான்; அத்தகைய ஞானத்தையும், கல்வியையும் பெற்றவன், தான் உயரிய லட்சியத்தோடு வாழ்வதல்லாமல் பிறருடைய குறைகளையும் போக்குகிறான். ஆகவே மனித வாழ்க்கையின் உயரிய லட்சியம் நிறைவேற, தவததையும், கல்வியையும் கம்பர் மற்றோரிடத்தில் இணைத்துக் கூறியிருப்பது பொருத்த முடையதாகும். இராம சுக்கிரீவர்கள் ஒருசேர அமர்ந்திருந்த காட்சியைச் சித்திரிக்க வந்த கமபர், இராமனுக்குத் தவத்தையும், கல்வியையும் சுக்ரீவனுக்கு முயற்சியையும், ஞானத்தையும் உவமையாகக் கூறுகிறார்.

கூட்டம்ஒத் திருந்த வீரர், குறித்ததுஓர் பொருட்கு முன்னாள்
ஈட்டிய தவமும, பின்னர் முயற்சியும், இயைந்த(து) ஒத்தார்;
மீட்டும்வாள் அரக்கர் என்னும் தீவினை வேரின் வாங்கக்
கேட்(டு)உணர் கல்வி யோடு ஞானமும் கிடைத்தது ஒத்தார்.

வாழ்க்கையை நன்னெறியில் செலுத்த, வாழ்க்கையில் வெற்றி யடைய தவம், முயற்சி, கல்வி, ஞானம் ஆகியவை இன்றியமை யாதவை என்பது போந்த பொருள்.

கம்பர் உவமைகளைப் பலமுறையில் கையாளுகிறார். தம் கதா பாத்திரங்களையே சில இடங்களில் உவமையாகக் கூறுகிறார். சில இடங்களில் அவர்களின் தன்மைகளை உவமையாக எடுத்துக் கூறு கிறார். இறுதியில் அறத்தை நிலைநாட்டுவதே அவருடைய குறிக்கோ ளாகும். தருமத்திற்கும் அதருமத்திற்கும் இடையில் போராட்டத்தை நிகழ்த்திக் காட்டுகிறார். தருமமே இறுதியில் வெற்றியடைகிறது. உலகில் நல்லவர்கள் வாழவேண்டும். நல்லவர்கள் வாழ்க்கைக்கு இடையூறாகநிற்கும் கொடுநெறியாளர்கள் ஒழிக்கப்படல்வேண்டும். கொடியவர்களிடம் சில நற்குணங்கள் இருக்கலாம். ஆனல் ஒரு சிறிய கெட்டகுணம் மனித வாழ்க்கையையே பாழ்படுத்திவிடுகிறது.

தூய்மையான பால் நிறைந்த குடத்தில் ஒருதுளி பிரை விழுந்தால் எப்படி அந்தப் பாலின் தன்மை மாறிவிடுகிறதோ, அதைப்போல நற்குணங்களை உடையவர்கள் சிறிய கெட்டகுணத்தினால் தங்கள் மனம் திரிந்து விடுகின்றனர். அரக்கர்கள் பெருஞ்செல்வம், தவம் முதலிய பல நற்குணங்களைப் பெற்றிருக்கின்றனர். ஆனால் இரக்கம் என்ற அருட்குணம் மட்டும் அவர்களிடம் இல்லை. ஆகவே அவர்கள் அதருமத்தின் சின்னங்களாக விளங்குகின்றனர். இதைக் கம்பர் "இரக்கம் என்ற ஒரு பொருள் இலாத" அரக்கர் என்று குறிப்பிடுகிறார். அறத்தின் வெற்றிக்காக, எல்லோரும் இன்புற்று வாழ்வதற்காக இராவணாதியர் கூட்டத்தை ஒறுத்தலே கம்பரின் உயர்லட்சியம். கொடியவர்களுக்குக் கொடியவர்களையே உவமையாகக் கூறுதல் கம்பரின் தனிச்சிறப்பு. கூனியாகிய மந்தரை இராமபிரானுக்கு மகுடம் சூட்டுவதையறிந்து மனம் வெதும்புகிறாள். அவள் தோன்றிய காட்சியை விளக்க வந்த கம்பர், இராவணனின் தீமைபோல் தோன்றினாள் என்று கூறுகிறார். கூனியின் கொடிய மனத்திற்கு, இராவணன் தீமை உவமை கூறப்பட்டது மிகவும் பொருத்தமுடையதாகும். கூனி, இராம கதையில் முக்கிய இடம் பெற்றுள்ளாள். அரக்கர்கள் அழிக்கப்படுவதற்குக் கூனியே முதற்காரணமாவாள். இப்படிப்பட்டவளுக்கு இராவணன் தீமை உவமை கூறப்பட்டது சிறப்பாகும்.

> "இன்னலசெய் இராவணனை இழைத்த தீமைபோல்
> துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினாள்"

இக் கொடுங் கூனியினால்தான் தூயமடமாதாகிய கைகேயியின் தூய சிந்தனையும் திரிகிறது. கேகயர்கோன் மகள் தசரதனிடமிருந்து பெற்ற வரத்தினால் இராமனைக் காட்டிற்குப் போக்குகிறாள். இராமன் சீதை இலக்குவனுடன் வனத்தில் பலவிடங்களில் தங்குகிறான். பின்பு பஞ்சவடியை அடைகிறான். அங்கு சூர்ப்பணகை இராமனைக் கண்ணுறுகிறாள்; காமங்கொள்கிறாள்; காமவல்லியாக வேடங்கொண்டு இராமனிடம் வருகிறாள். அவள் செய்த முயற்சிகள் யாவும் வீணாகின்றன. இலக்குவனால் மூக்கறுபட்டு மானபங்கமும் அடைகிறாள். அக்காட்சி, இராவணனின் தலையைத் துமித்தற்கு ஒருநாள் குறித்தது போலிருந்தது என்று கம்பர் அழகாக வருணிக்கிறார்.

> "கொலை துமித்(து),உயர் கொடும்கதிர் வாளின்,அக் கொடியாள்
> முலை துமித்(து),உயர் மூக்கினை நீக்கிய முறைமை
> மலை துமித்தென இராவணன் மணியுடை மகுடத்
> தலை துமித்தற்கு நாள்கொண்டது ஒத்ததோர் தன்மை."

பின் நிகழ்ச்சிகளை முன்னரேயே வருணித்து அல்லது உவமித்துச் சுட்டிக்காட்டுதல் கம்பரின் தனிச் சிறப்புக்களில் ஒன்றாகும். மற்றும் பல அற்புதமான காட்சிகளை உவமைகளின்மூலம் கம்பர் சித்திரிக்கிறார். கங்கைக்கரையில் இராமனும் சீதையும் துயில்கின்றனர்.

கதிரவன் உதிக்கின்றான். கதிரவனைக் கண்ட தாமரை மலர்கள் மலர்கின்றன. அப்பொழுது இராமனது கதிரவனையொத்த வதனத்தைக் கண்டு சீதையின் தாமரையை யொத்த வதனம் மலர்கிறது. இராமனது முகத்தைக் கதிரவனுக்கும், சீதையின் முகத்தைத் தாமரைக்கும் உவமித்துக் கம்பர் அற்புதமாகச் சித்திரிக்கிறார்.

செஞ்செவேசேற்றில் தோன்றும் தாமரை தேரில் தோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கிய விரிந்த வேறோர்
அஞ்சன ஞாயிறன்ன ஐயனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதனம் என்னும் தாமரை மலர்ந்த தன்றே.

வனத்தில் வதிந்துவரும் இராமனும் சீதையும் ஓர் அற்புதமான காட்சியைக் காண்கிறார்கள். மாலைநேரம்; அவர்களைச் சுற்றிப் பறவைகள் பறக்கின்றன; விலங்கினங்கள் திரிகின்றன; சிறு ஓடைகளில் தண்ணீர் சலசலக்கிறது. தழைத்தோங்கிய பெரும் மரங்களும், பூத்துக்குலுங்கும். செடி கொடிகளும் அடர்ந்து காணப்படுகின்றன. அன்னப் பட்சிகள் விளையாடுகின்றன. இயற்கைக்காட்சிகள் நிறைந்த அக்காட்டில் யானைகள் ஓர் ஓடையில் நீருண்டு திரும்பிச் செல்கின்றன. கம்பர் இவற்றை உவமையாக்கி அழகாகச் சித்திரிக்கிறார். அன்னப்பறவை அசைந்து செல்வதைக் கண்ட இராமன், சீதையின் நடையோடு அதை ஒப்பிட்டுப்பார்த்து புன்முறுவல் பூக்கிறான். நீருண்டு செல்லும் ஆண் யானையின் நடையை நோக்கி, அதை இராமனின் நடையுடன் ஒப்பிட்டுச் சீதையும் புன்முறுவல் பூக்கிறாள்.

ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழையள் ஆகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர முறுவல் செய்தான்;
மாதவள் தானும், ஆண்டு வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்.

இவ்வாறு எண்ணற்ற காட்சிகளைக் கம்பர் வருணித்திருக்கிறார்.

கம்பர் தம்மை ஆதரித்த வள்ளல் சடையப்பரைப் பலவிடங்களில் சிறப்பித்து உவமித்திருப்பது குறிப்பிடத்தக்கது. கம்பர் உவமைகளை மேற்கொண்ட வகைகளில் இதுவும் ஒன்றாகும். சடையப்ப வள்ளலைப் பல இடங்களில் போற்றிப் புகழ்கின்றார். அவற்றில் ஒரு இடத்தை மட்டும் எடுத்துக்காட்ட முயல்கிறேன். கம்பர் காவியத்தில் உள்ள இன்றியமையாத கட்டங்களில் வாராவதி கட்டுவதும் ஒன்றாகும். அனுமான் சீதாபிராட்டியாரைக் கண்டு வந்தபின் இராமபிரான் பிராட்டியாரை மீட்க முயல்கிறார். கடல் கடந்து இலங்கையை அடைவதற்காக அணைகட்டுகிறார். நளன் என்னும் வானர மகாசிற்பியின் உதவியால் அந்தப் பாலம் கட்டப்படுகிறது. பெரிய மலைகளையும் மரங்களையும் பாலம் கட்டப் பயன்படுத்துகின்றனர். அவைகளைச் சீருடனும் சிறப்புடனும்

அமைப்பதற்கு ஒரு தகுதியாளன் தேவை. அணையைச் சீரிய முறையில் அமைத்தால்தான் வானரப்படைகள் கடல் கடந்து அரக்க சேனையை அழிக்கமுடியும். வானரவீரர்கள் பெரிய மலைகளை வீசி எறிகின்றனர். அவைகளைத் தாங்கிப்பிடித்து நளன் பாலத்தை அமைக்கிறான். அவன் மலைகளையும், மரங்களையும் தாங்குதவற்கு, சடையப்ப வள்ளல் தம்மைத் தஞ்சம் என்றடைந்தவரைத் தாங்கும் தன்மை உவமிக்கப்பட்டுள்ளது. இவ்விடம் கம்பர், தம்மை வளர்த்த சடையப்ப வள்ளலைப்போற்றிப் புகழ்கின்றார். தம்மை அடைந்த வறியோர்களின் ஏழ்மை நிலையைப் போக்கி அவர்களின் துயரம் நீக்கும் தகைமையாளர் சடையப்பவள்ளல் என்பதைக் கம்பர் எடுத்துக் காட்டுகிறார்.

''மஞ்சினில் திகழ்தரும் மலையை, மாக்குரங்கு
எஞ்சுறக் கடிதுஎடுத்து எறிய வே, நளன்
விஞ்சையில தாங்கினன்; சடையன் வெண்ணெயில்
தஞ்சமென் றோர்களைத் தாங்கும் தன்மைபோல்.

இவ்வாறு கம்பர் செய்நன்றி மறவாமல் சடையப்ப வள்ளலைப் போற்றிப் புகழ்கின்றார்.

உவமைகள் எவ்வளவு வேண்டுமானாலும் கூறலாம். ஆனால் அவைகள் பொருத்தமுடையனவாக இருத்தல் வேண்டும். கம்பர் காட்டும் உவமைகள் மிகப் பொருத்தமாக அமைந்திருக்கின்றன, கைகேயியினுடைய இரக்கமற்ற தன்மையினால்தான் இப்பூவுலகில் இராமாயணம் என்னும் அமுதம் பருகக் கிடைத்ததாகக் கம்பர் தனிக்கவியில் கூறுகிறார் தசரதன் இறப்பதற்குக் கைகேயி ஏது வாக அமைகிறாள் கைகேயி கேட்ட வரமாகிய வேல் தசரதன் மார்பில் தைத்து வதைக்கிறது. இறந்த பின்பும் அவனிடமிருந்து அது நீங்கவில்லை இராமபிரான் இராவணனை வதைத்ததும் எல்லாத் தேவர்களும் பூமாரி பொழிகின்றனர். அப்பொழுது தசரதனும் இராமபிரானைக்காண வானத்திலிருந்து இறங்கி வருகிறான். இராமபிரானைக் கண்டு மார்போடு தழுவிக்கொள் கிறான். இராமபிரானின் ஆபரணமணிந்த மணம் பொருந்திய மார்பாகிய காந்தமாமணி, தசரதனுடைய மார்பில் தைத்திருந்த கைகேயியின் வரமாகிய வேலை இழுத்துவிடுகிறது. இராமபிரானின் மார்பிற்கு காந்தமணியையும், கைகேயியின் வரத்திற்கு வேலையும் உவமித்தது மிகவும் பொருத்தமுடையதாகும்.

'அன்று,கேகயன் மகள்கொண்ட வரம்எனும் அயில்வேல்
இன்று காறும்என் இதயத்தின் இடைநின்றது; என்னைக்
கொன்று நீங்கிலது; இப்பொழுது அகன்றது:உன் குலப்பூண்
மன்றல் ஆகமாம் காந்தமா மணியின்று வாங்க'.

காவியத்தின் முதலில் தசரதனுக்கு ஏற்பட்ட மனக் குறைபாட்டை இறுதியில் கம்பர் இப்பாட்டால் நிறைவேற்றிக் காட்டுகிறார்.

இவ்வாறு கம்பரின் உவமைத்திறங்களை ஆராயப்புகின் கணக்கிலடங்கா. கம்பரின் காவியத்தில் நாம் பலதிறப்பட்ட உவமைகளைக் கற்றுக் களிப்படைகிறோம்.

## கம்பர் தரும் காட்சிகள்

கவிகள் பல காவியங்களைப் படைக்கிறார்கள்; இலக்கிய நூல்களை எழுதுகிறார்கள். அக் காவியங்களையோ இலக்கியங்களையோ எழுதுவதற்கு முன் அந்நூல்களில் பல முக்கிய காட்சிகளை மனத்தினுள் பதியவைத்துக்கொள்ளுகிறார்கள். அவர்கள் தீட்டும் காவியங்களுக்கு மனத்தினுள் கண்ட காட்சிகள்தான் மையமாக உதவுகின்றன. நாம் ஊன்றிப்பார்த்தால் எந்நூலிலும் பற்பல காட்சிகளைக் காணலாம். சில காட்சிகள் கதைப்போக்கினை மாற்றும் திருப்பு முனைகளாக அமைந்திருக்கும். சில நற்காட்சிகள் உரையாடல்களாக அமைந்திருக்கும். உரையாடல்கள் மூலம் காவியங்களின் உயிர் நாடியான செவ்விய பண்புகளையும், இயல்புகளையும் அறியலாம். சில காட்சிகள் கவிஞர்களின் குறிக்கோள்களைப் புகட்டுவனவாக அமைந்திருக்கும். சில நீதிகளைப் புகட்டும். சில முக்கிய காட்சிகளினால் பாத்திரங்களின் தன்மைகளை அறியலாம்; பல நற்பண்புகளைப் பாத்திரங்களின் வாயிலாகக் கவிஞர் அமைத்திருப்பதை அறியலாம்.

இவ்வாறு முக்கிய காட்சிகள் அமைந்துள்ள இடங்களில்தான் கவிதைகள் சொற்சுவை பொருட்சுவை நிரம்பியும் உயிரோட்டம் உள்ளனவாகவும் அமைந்திருக்கும். கம்பர் தம் காவியத்தில் பல அச்சாணி போன்ற காட்சிகளை அமைத்திருக்கிறார். அவற்றில் சிலவற்றை இங்குக் காண்போம்.

## இராமனும் கைகேயியும்

அயோத்திமாநகர மக்கள் இராமனுடைய முடிசூட்டு விழா நடக்கும் நன்னாளை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இராமன் சூடும் மணிமகுட விழாவினைக் காண வேந்தரும் வேதியரும் மாந்தரும் மகளிரும் நகருக்குள் வருகின்றனர். நகரம் முழுவதும் அலங்கரிக்கப் பட்டு, விழாக்கோலம் பூண்டு காணப்படுகிறது நகர்ப்புறத்திலும் மக்கள் குழாம் குழுமியிருக்கிறது. இந்நிலையில் தசரதச் சக்கரவர்த்தி தன் காதல் கிழத்தியான கைகேயியிடம் இராமன் முடிசூட்டு விழாவினை அறிவிக்கச் செல்கிறான். அவன் அங்குக் கண்டது அலங்கோலக் காட்சி. கூனியின் துர்ப்போதனை யென்னும் விடம் தலைக்கேறிக் கைகேயி படுத்திருப்பதைத் தசரதன் அறியான். ஆகவே அவள் அலங்கோலத்தைக் கண்டு திடுக்கிடுகிறான். அவள் கேட்பதை நிறைவேற்றுவதாக இராமன்மேல் ஆணையிட்டுக் கூறுகிறான். உடனே தன் மகன் நாடாளவும், சீதைகேள்வன் பதினான்கு ஆண்டு காடாளவும் வரம் கேட்கிறாள் கைகேயி.

நினைக்கவொண்ணுச் சொற்களைக் கேட்ட தசரதன் நிலைகலங்கு கிருன்; மயக்கமுற்று விழுகிருன். பின்பு, கண்ணனைய இராமனைக் காடேகக் கேட்கும் வரத்தினையேனும் விடுக என்று மன்ருடிக் கேட் கிருன். இராமனைக் காட்டுக்கு அனுப்பினுல் தன் ஆவி விண்ணேகும் என்று இரந்து சொல்லியும் கைகேயியின் மனம் இளகுவதில்லை. நீ எனக்கு மனைவியில்லை என்று கூறி வரமளிக்கத் தசரதன் சம்மதித் தவனுய் மயக்கமுற்று விழுகிருன். இராமனை அழைத்து வரும்படி கைகேயி சுமந்திரனை ஏவுகிருள் இராமன் கைகேயியின் மாளிகையை நோக்கி வருகிருன். இதைக் கண்ணுற்ற மக்கள் இராமன் "கைகேயி யினுல்தான் வளர்க்கபபட்டான். அரசளித்து மகிழ்ந்தவளும் அவளே. அவள் உவகை சொல்லலரிது" எனக் கூறுகின்றனர்.

'தாயகையில் வளாந்திலன், வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தை;கிளர் ஞாலம்இவன் ஆள
ஈகையில் உவந்தவள். இயற்கைஇது என்ருல்
தோகைஅவள் போ உவகை சொல்லல் அரிது!'

என்பார்.

பின்பு அந்திக் காலததில் தாயைக் கண்ட ஆன் கன்றினையொப்ப இராமன் கைகேயியைக் காண்கிருன். தாய்என நினைபவன் முன்னே கூற்றினைப் போன்று கைகேயியும் இராமன் முன் தோன்று கிருள். கல்நெஞ்சங் கொண்ட கைகேயி சற்றும் இரக்கமின்றித் தந்தையுரைத்த உரையொன்று உனக்கு உண்டு என்று உரைத்து, 'பரதன் நாடு ஆள, இராமன் பதினன்கு வருடங்கள் காட்டுக்குச் சென்று புண்ணியப் புனல்கள் ஆடிவரவேண்டும்' என்று கூறுகிருள். இதைக் கேட்ட இராமன் சற்றும் கலக்கமுருமல் நிற்கிருன். இவ் விடத்தில் கம்பர் இராமன் மனநிலையைச் சித்திரிக்கும் கவிகள் அற்புதமானவை.

இப்பொழுது எமம னேரால இயம்புதற்கு எளிதோ? யாரும்
செபபரும குணத(து) இராமனை திருமுகச் செவ்வி நோக்கின்,
ஒப்பதே முனபு; பின்புஅவ் வாசகம் உணரக கேட்ட
அபபொழுது அலர்ந்த செந்தா மரையினை வென்றது; அம்மா!'

இதில் கம்பர், முன்பும் பின்பும் இராமன் செந்தாமரையினை ஒதது மலர்ந்து காணப்பட்டான் என்று கூறுகிருர். அடுத்த கவியில் முன்பிருந்ததைவிடப் பின்பு மகிழ்ந்து காணப்பட்டான் என்னும் கருத்துத் தோன்ற, "உருள் உடைச் சகடம பூண்ட உடையவன் உய்த்த கார்ஏறு, அருள் உடை ஒருவன் நீக்க, அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்" என்று பாடியுள்ளார். எத்தகைய நிலையிலும் எவ்வகைப் பொறுப்பேற்றலும் இன்முகத்துடன் செயல்படுவதே சிறந்தது என்னும் கருத்தைக் கம்பர் தம் கவியில் விளக்கியுள்ளார். இராம னின் உயரிய பண்பைக் கம்பர், தன் சிற்றன்னைக்கு இராமன் இறுத்த பதிலில் அற்புதமாகக் காட்டுகிருர். அப்பாட்டால் இராமன், பரதன்

மேல்கொண்ட பேரன்பையும், கைகேயியின்பால் கொண்ட பெரு மதிப்பையும் நாம் நன்கு உணர முடிகிறது.

'மன்னவன் பணிஅன் ருகில் நும்பணி மறுப்ப னோ?என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ?
என் இனி உறுதி அப்பால்; இப்பணி தலைமேல் கொண்டேன்.,
மின்ஒளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்'.

தன் சிற்றன்னையின் பணியையும் ஏற்று நடப்பது தனக்குக் கடமையாகும் என்று இராமன் இயம்புகிறான்.

எத்தகைய நிலையிலும் முகமலர்ச்சியுடன் மனதாரப் பணிபுரிய வேண்டும் என்ற உயரிய தத்துவத்தைக் கம்பர் இராமன் வாயிலாக எடுத்துக் கூறுகிறார். இராமனின் இப்பண்பைக் கம்பர் இத்துடன் நிறுத்திவிடவில்லை. பின்பும் உணர்த்துகிறார். சீதை அசோகவனத்தில் சிறைப்படுத்தப்படுகிறாள். சீதையின் கற்பு மனம் இராமனையே நினைந்துருகுகின்றது. இராமனின் செயல்களையே மனக்கண்முன் காண்கிறாள். இதைக் கமபர் அழகாகச் சித்திரித்திருக்கிறார்.

மெய்த்தி ருப்பதம் மே(வு)என்ற போதினும்
இத்தி ருத்துறந்து ஏ(கு)என்ற போதினும்
சித்தி ரத்தின் அலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருக்கும் முகத்தினை உன்னுவாள்.

இராமன் இன்பத்துள் இன்பம் விழைய வில்லை. ஆகவே துன்பத்துள் துன்பமும் உறவில்லை. மனித இனம் முழுவதும் இக்கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதே கம்பரின் உயர் லட்சியமாகும். இதையே நடையின் நின்று உயர் நாயகனாகிய இராமன் வாயிலாக உலகிற்கு அறிவிக்கின்றார்.

## வாலி வதைக் காட்சி

இராமனுடைய நட்பைப்பெற்ற சுக்கிரீவன் தன்னுடைய குறைகளை இராமன் உதவிகொண்டு போக்க நினைக்கிறான். தன் அருமைச் சகோதரனை வாலியை வதைப்பதன் மூலம்தான் தன் மானத்தைக் காப்பாற்ற முடியுமென நினைக்கிறான். இராமனும் இதற்கு இசைகிறான். வாலியைப் போருக்கு வலிய அழைக்கும்படி இராமன் சுக்கிரீவனுக்குக் கட்டளையிடுகிறான். சுக்கிரீவனும் போர்முரசு கொட்டிப் போருக்கு எழுகிறான். அதைக் கேட்ட வாலியும் கனன்றெழுகிறான். வாலியினுடைய போர் முரசு எட்டுத்திக்குகளுக்கும் எட்டின. போருக்குப் புறப்படும் வாலியை அமிழ்தினும் இனிய அவன் மனைவி தாரை தடுக்கிறாள். வாலியோ அவள் சொல்லைக் கேட்காமல் அவளைத் தேற்றிப் போருக்குச் செல்ல ஆயத்தமாகிறான். நெடுந்துணை பெற்ற வலிமையினால்தான் சுக்கிரீவன் மீண்டும் போரிட வந்திருக்கிறான் என்று தாரை கூறுகிறாள். ஆனால் வாலியோ, தன் வரவலிமையை எடுத்துக் கூறுகிறான். பகைவரின் பலத்தில் பாதி

தன்னை வந்தடையும் என்ற வரத்தை சுட்டிக்காட்டுகிறான். சுக்கிரீவன், இராமனின் நட்பைப்பெற்று, தன்னைக்கொல்ல வந்திருக்கிறான் என்று தாரையின் வாயிலாகக் கேட்ட வாலி தாரையைக் கடிந்துரைக்கிறான். அறமே உருவாகியவனும் தருமத்தைத் தழைக்கச் செய்பவனுமாகிய இராமனை இகழ்தல் பேதைமை யென்கிறான். மற்றும் இராமனுடைய அரும்பெருங் குணங்களை யெல்லாம் தாரைக்குக் கூறுகிறான். 'மாற்றாந் தாயினுடைய சொல்லை யேற்று அவள் மைந்தனுக்கு அன்பினால் தனக்குக் கிடைத்த அரும்பெருஞ் செல்வத்தை ஈந்தவன் இராமன். அவனைப் போற்றுதற்குப் பதிலாக மாசு கற்பிப்பது நன்றாகுமா?' என்று கேட்கிறான். 'இராமனுடைய கோதண்டம் இந்த உலகமே எதிர்த்தாலும் அதை வென்று வாகை சூடக்கூடிய ஆற்றல் பெற்றது. அத்தகைய கோதண்டத்தையுடையவன் இந்தக் குரங்கின் நட்பைப் பெறுவானா' இந்த உலகத்தில் தம்பியர்களைத் தன்னுயிராகக் கருதி மதிப்பவன் இராமன். அப்படிப்பட்டவன் எனக்கும் என் தம்பிக்கும் நிகழப்போகும் போரில் அம்பு தொடுத்து என்னைக் கொல்வானா?

> தம்பியர் அலலது, தனக்கு வே(று)உயிா
> இம்பரின் இல(து)என எண்ணி ஏய்நதவன்
> எம்பியும் யானும்உற்(று) எதிர்நத போரிடை
> அம்பிடைத் தொடுக்குமோ அருளின் ஆழியான்?

கருணைக் கடலாகிய இராமன் தனக்கு ஒன்றும் செய்யமாட்டான்' என்று தக்க காரணங்களைக் காட்டிக் கூறிவிட்டு வாலி போருக்குப் புறப்படுகிறான். இலக்குவன் தன் அண்ணன் இராமனிடம் வாலி–சுக்கிரீவப் போரில் தலையிடுவது தகாது!என்று இயம்புகிறான். ஆனால் இராமன் விலங்குகளின் ஒழுக்கங்கள் தமமைக் கட்டுப்படுத்தா என்று கூறி மறைந்திருநது வாலியின்மேல் அம்பு தொடுக்கிறான். தன் நெஞ்சில் பாய்ந்த அம்பைக் கையினால் பற்றிய வாலி அதில் இராம நாமம் பொறித்திருப்பதைக் காண்கிறான். இராமன்மேல் கொண்டிருந்த பெருமதிப்பெல்லாம் தாழ்வடையத் துயர் உழந்து அழிந்து சோர்கிறான். இரவி குலத்தின் அறநீதி இராகவனால் தவறிவிட்டது என்று கூறி நகைக்கிறான். இராமன்மேல் சினமுற்று 'என் உற்றாய்! என் செய்தாய்'' எனப் பலவாறு ஏசத் தொடங்குகிறான். 'சூரியகுலத் தோன்றலாகிய தசரதன் வாய்மையையும், மரபையும் நிலைநிறுத்த உயிரையேவிட்டான். பரதன் தன் தாயின் வரத்தால் கிடைத்த அரசுச்செல்வம் முறையற்றது என்று கூறி அதை உரியவரிடமே சேர்ப்பிக்க முயல்கிறான். அன்னவர்க்கு மைந்தனும், அண்ணனுமாக நீ பிறந்தனையோ ?'' என்று வாலி இகழ்வதைக் கூறும் கவி அழகானது.

> வாய்மையும் மரபும் காத்து மன்உயிர் துறந்த வள்ளல்
> தூயவன் மைந்த னே!நீ! பரதன்முன் தோன்றி னாயே?

தீமைதான் பிறரைக் காத்துத் தான்செய்தால் தீங்கன் ருமோ?
தாய்மையும் அன்றி, நட்பும் தருமமும் தழுவி நின்ருய்.

பிறருக்கு நேரும் இடையூற்றைக் காத்துத் தான்மட்டும் இன்னல் இழைத்தால் அது அறநெறியாகுமா?' என்று வாலி கேட்கின்ருன். மற்றும் பலவாறு வருந்திக் கூறிய வாலி 'சீதையைப் பிரிந்ததினுல் உன் சிந்தனை மாறிற்ருே? ஆகையினுல் செய்கையில் திகைத் தனையோ!' என்று கேட்பது மனத்தை உருகச் செய்வதாய் உள்ளது.

'ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னர் திகைத்தனை போலும் செய்கை?'

என்று வாலி கூறுவது, இராமன் மேல் வாலி கொண்ட அன்பையும் அனுதாபத்தையும் தெரிவிக்கின்றது. சீதையைப் பிரிந்ததனுல் தான் இராமன் இத்தீங்கை இழைக்க நேரிட்டது எனக் குறிப்பாகக் கம்பர் காட்டுகிருர். ஆவியைப் பிரிந்ததால் சடலமாகிய இராமன் இத்தீக் காரியம் செய்தான். அன்னம், பாலையும் தண்ணீரையும் கலந்து வைத்தால் தண்ணீரை நீக்கிப் பாலை மட்டும் குடிப்பது அதன் இயல்பு. சீதை பிரிந்ததால் பாலாகிய தூய்மைக்குணம் அவனை விட்டு நீங்குகிறது. நிலையற்ற நீர்க்குமிழிப்பண்பே அவனிடம் நிலைத்து நிற்கின்றது. திருப்பாற் கடலில் அமுதமும் விடமும் வருகின்றன அமுதத்தின் முனைத்த திருமகள் இராமனைப் பிரி கிருள்; விடத்தன்மையே அவனிடம் எஞ்சி நிற்கின்றது. இவ்வாறு இராமன் செய்த தீமைகளுக்குக் கம்பர் பற்பல காரணங்களைக் காட்டிச் செல்வது பாராட்டுதற்குரியது. 'அரக்கர் அழிவு செய்ததற்குக் குரக் கினத்து அரசைக் கொல்வது முறையாகுமா?' என்று வாலி கேட் கிருன். இதற்கு இராமன் இறுத்த விடைகள் வாலிக்குச் சமாதானம் அளிப்பதில்லை. இலக்குவன் வாயிலாக வாலி சமாதானமடைகிருன். பின்பு, 'உன்னுடைய நெறியின் தன்மையை நவையற என்னுல் உணர இயலாது. ஆகவே யான் செய்த தீயனவற்றைப் பொறுத் தருள்வாய்' எனச் சிறியனவற்றைச் சிந்தியாதவனுகிய வாலி கூறு கிருன். பிறந்தவர் இறப்பது உறுதி. அப்படி இறக்கும்போது ஒரு உயரிய லட்சியத்திற்காக உயிரை விடுதலே உயர்ந்த நிலையாகும் என்பதை வாலி உணருகிருன். கடைசியில் தன் தம்பி சுக்கிரீவனுக் காக வாலி இராமனிடம் ஒரு வரம் கேட்கிருன். 'சுக்கிரீவன் ஏதாவது தீங்கிழைத்தால் அவன் மேல் இராம பாணம் எய்யாமல் அவனைப் பொறுத்தருளுவாயாக' என வேண்டுகிருன். மற்றுமோர் வேண்டு கோள் விடுகிருன். 'இராமன் அயோத்திக்குத் திரும்பிய பின் அவனு டைய தம்பியர் சுக்கிரீவன் வாலிக்கு இழைத்த தீங்கைக் கூறிப் பரி கசிக்கலாம். அப்பொழுது, சுக்கிரீவனுக்கு முன்பே அளித்த வரத்தா லும், விதியின் வலிமையாலும் அத்தீங்கு நடந்து விட்டதென்று கூறித் தடுத்தாட்கொள்' என்று வாலி கூறுகிருன். இத்தகைய வேண்டு கோளினுல் வாலியின் பெருந்தகைமையைக் கம்பர் உயர்த்திக் காட்

டுகிறார். தம்பிக்காக வாலி கேட்கும் வரமும் வாலியின் பெருந்தகைமையைக் காட்டுகிறது.

'ஓவிய உருவ! நாயேன் உள(து) ஒன்று பெறுவ(து) உன்பால்,
பூவியல் நறவம் மாந்திப் புந்திவேறு உற்ற போழ்தில்
தீவினை இயற்று மேனும் எம்பிமேல் சீறி, என்மேல
ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்' என்றான்.

இன்னம் ஒன்று இரப்பது உன்பால், எம்பியை உம்பி மார்கள்
தம்முனைக் கொல்வித தான்என்று இகழ்வரேல் தடுத்தி தக்கோய்!
முன்முனே மொழிந்தாய் அன்றே இவன்குறை முடிப்பது ஐயா!
பின்இவன் வினையின் செய்கை! அதனையும் பிழைக்க லாமோ?'

இப்பாடல்கள் விளங்குமளவும் வாலியின் புகழும், பெருந்தகைமையும் விளங்கும்.

## அனுமனும் சீதையும்

கடல் தாண்டி இலங்கையை அடைந்த அனுமன் இலங்கையைக் கண்டு திகைக்கிறான். இலங்கையின் அழகைக் கண்டு இறும்பூது எய்துகிறான்.

பொன்கொண(டு) இழைத்தமணி யைக்கொடு பொதிந்த?
மின்கொண்(டு) அமைத்த?வெயி லைக்கொடு சமைத்த?
என்கொண்(டு) இயற்றிய எனத்தெரி(வு) இலாத,
வன்கொண்டல் விட்டு.மதி முட்டுவன மாடம்.

இவ்வாறு எழிற காட்சிகளைக் கண்ட அனுமான் அரக்கர்களின் போக வாழ்க்கையையும் மற்றுமுள்ள சிறப்புகளையும் கண்ணுறுகிறான். ஆனால் சீதையை மட்டும் கண்ணுறவில்லை. எங்குத் தேடியும் காணாத அனுமான் இறுதியில் அசோகவனத்தை அடைகிறான். காணமுடியவில்லையே என்று மிகவும் வருந்துகிறான். அப்பொழுது இராம சுக்கிரீவர் நிலையையும எண்ணிப் பார்க்கிறான். "கண்டு வரும் என இருக்கும தாகுதன். கவிக்குலக்கோன் கொண்டுவரும் என இருக்கும" என உன்னுகிறான். இவ்வாறு நிலைகலங்கி யிருந்த அனுமான் அங்குக கண்ணீருடன் வாடி வதங்கிக் காணப்படும் கற்பரசியைக் கண்ணுறுகிறான். அச்சமயத்தில் இராவணன் அங்கு வருவதை நோக்குகிறான். இந்நிலையில், மரத்தின் மேலுள்ள அனுமன் மனநிலை, ஆசை வேகத்தோடு அவதியுறும் இராவணனின் வஞ்சக மனநிலை, மறுவில்லாத கற்பையுடைய சீதாபிராட்டியின் ஆவிநிலை ஆகியவற்றை ஒரு பாட்டில் கம்பர் சித்திரித்துக் காட்டுகிறார்.

'கூசி ஆவி குலைவுறு வாளையும்,
ஆசை யால்உயிர் ஆ(சு)அழி வானையும்,
காசுஇல் கண்இணை சான்றுஎனக் கண்டனன்
ஊசல் ஆடி உளையும் உளத்தினன்.

இலங்கேசுவரன் சீதையின் திருவடிகளிலே விழுகிறான். அவன் இரப்புரை சீதைக்கு நெருப்புரையாக இருக்கின்றது. சினமுற்ற சீதை சீறுகிறாள். இராமனின் கோதண்டத்தின் வலிமையை எடுத்துக் கூறுகிறாள். இராவணனின் வஞ்சகத் தன்மையையும், வீரன் என்ற பெயருக்கே அவன் இழுக்குத் தேடியிருப்பதையும் இடித்துரைக்கிறாள். இடித்துரைப்பார் இல்லாததனால்தான் இராவணன் இத்தன்மையை அடைந்தான் என்று கூறுகிறாள்.

'கடிக்கும்வல் அரவும், கேட்கும் மந்திரம்; களிக்கின் றோயை,
அடுக்கும்ஈது, அடாது,என்று ஆன்ற ஏதுவோடு அறிவு காட்டி
இடிக்குநர் இல்லை; உள்ளார், எண்ணியது எண்ணி, உன்னை
முடிக்குநா என்ற போது, முடிவுஅன்றி முடிவது உண்டோ?'

இவ்விடித்துரைகளைக் கேட்ட இராவணன் சினமுற்று ஒன்றும் செய்ய இயலாதவனாய் 'பின்னால் வருவோம்' என்று திரும்பிப் போகிறான். மரத்தின் மேலிருந்த அனுமான் சீதையிடம் செல்வதற்கு இதுவே தருணமென்றுன்னுகிறான். அப்பொழுது சீதையின் மனநிலையைக் கம்பர் இரண்டு கவிகளில் நன்கு விளக்கிக் காட்டுகிறார்.

'வஞ்சனை மானின்பின் மன்னனைப் போக்கி, என்
மஞ்சனை வைதுபின வழிக்கொள் வாய், என
நஞ்சுஅனை யான்அகம் புகுந்த நங்கையான்
உஞ்சனென் இருததலும் உலகம் கொள்ளுமே?

அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
விலபணி கொண்டுஅரும் சிறையின மீடடநாள
'இல்புகத் தக்கலை' என்னின், யானஉடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காடடுவேன்.'

சீதாபிராட்டியார் இராமன் மேல் கொண்டுள்ள அசையாத நம்பிக்கையைத் தெளிவுறக் கம்பர் காட்டுகிறார். 'அற்புதனாகிய இராமன் அரக்கர் குலத்தை வேருடன் பறிப்பான். பின் பிறன் மனையில் புகுந்த யான் என் கற்பின் தன்மையை எவ்விதம் இராமனுக்குக் காட்டுவேன்' எனத் துயருறுகிறாள். ஆதலால் இறந்துபோதலே அறநெறி என்று நினைத்து மாதவிப் பொதும்பர் உள்ளே உயிர்விடச் செல்கிறாள். இனி விட்டால் ஆபத்து என நினைத்த அனுமான், அண்டர் நாயகனின் அருள்தூதன் யான் எனச் சீதையைத் தொழுது தோன்றுகிறான். தன் கணவனின் நாமத்தைக் கேட்ட சீதையின் உள்ளம் கரைந்துருகுகிறது. இராமநாமம் சீதையின் உயிரைக் காக்கின்றது. அனுமன் மூலம் இராமனுக்கு ஏற்பட்ட இன்னல்களையும், அவன் சொல்லியனுப்பிய செய்திகளையும் சீதை அறிகிறாள். கணையாழியைக் கண்ட சீதையின் மனம் நிறைவுறுவதாகக் கம்பர் அழகாகச் சித்திரித்திருக்கிறார்.

இருந்து,பசி யால்இடர் உழந்தவர்கள் எய்தும்
அருந்தும் அமுதுஆகியது; அறத்தவரை அண்மும்

**விருந்தும்எனல் ஆகியது; வீயும்உயிர் மீளும்**
**மருந்தும்எனல் ஆகியது; வாழி!மணி ஆழி!**

பின் சொல்லின் செல்வனாகிய அனுமானைச் சீதை போற்றிப் புகழ்கிறாள்; சிரஞ்சீவியாக வாழுமாறும் வரம் அளிக்கிறாள்.

'ஊழிஓர் பகலாய் ஓதும் யாண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றுஎன இருத்தி' என்றாள்.

என்று சிரஞ்சீவி வரம அளித்ததைக் கம்பர் கூறுகிறார். கடலைக் கடந்தது எவ்விதம்? எனச் சீதை கேட்கிறாள். அனுமான் தன் பேருருவைக் காட்டிக் கடந்த விதத்தைக் கூறுகிறான். சீதை பலவாறு அனுமனைப் புகழ்கிறாள். இராமனுக்குத் தன்னைப போல் எண்ணற்ற வானரப்படைகள் உதவிக்கு உண்டு எனவும் அனுமான் உரைக்கிறான். இவ்வாறு உரைத்துப் பிராட்டியாரைத் துயர் நீங்கும்படி கூறி, தன் முதுகில் அமர்ந்தால் இராமபிரானிடம கொண்டு போய்ச் சேர்ப்பதாகக் கூறுகிறான். கணவன் வில்லிற்கு மாசாகும் என்று கருதித் தன் சொல்லினால் இலங்கையைச் சுடவில்லை. ஆகவே வர இயலாது என்று அனுமனிடம் கூறுகிறாள். கற்புடைய பெண்கள் தன் நாயகனின் மேனியையன்றிப் பிறிதொரு மேனியைத் தீண்டக் கூடாது. ஐம்பொறிகளையும் அடக்கியாண்ட பிரம்மசாரியாகிய அனுமனையும ஒரு ஆண்மகனாக உலகம் கூறும் எனச் சொல்கிறாள். பின்பு இராமன் தன் வீரத்தைக் காப்பாற்றுவதற்காவது தன்னைக் காக்க வர வேண்டும் என்கிறாள், இலக்குவனுக்கும் அதில் பங்குண்டு என்பதையும் விளக்குகிறாள். ஒரு மாதத்தில் தன்னை மீட்க வராவிட்டால் தனக்குச் செய்ய வேண்டிய நீர்க்கடன்களைச் செய்து விடலாமென்று கூறுகிறாள். அடுத்த பிறவியிலாவது இராமன் மேனியைத் தீண்டும பாக்கியத்தை அருளுமாறு வரம் வேண்டி இராமனிடம் சொல்லியனுப்புகிறாள். தன்னை அனுமான் சந்தித்ததற்கு ஆதாரமாகச் சிலவற்றைச் சீதை கூறியனுப்புகிறாள். திருமணம் முடிந்த நாள் இராமன், 'பிறமாதரைச சிந்தையாலும் தொடேன்' என்று கூறியதை நினைவுபடுத்துமாறு கூறுகிறாள்.

வநது எனைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிற விக்குஇரு மாதரைச்
சிந்தை யாலும் தொடேன்; என்ற, செவ்வரம
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.

என்று இதைக் கம்பர் அழகாகத் தன் கவியில் சித்திரிததுள்ளார். சீதையின் சொற்களைக் கேட்டு உருகின அனுமான், இராமன் சீதையை மீட்காவிடில் இராவணனே ஆவன் என்று கூறுகிறான். கடைசியில் இராமனிடம் கொடுக்குமாறு சூளாமணியைச் சீதை அனுமனிடம் தருகிறாள். அனுமன் பெற்றுச் சென்ற வகையைக் கம்பர் நன்கு அமைத்துள்ளார்.

தொழுது வாங்கினன். சுற்றிய தூசினில் முற்றப்
பழுது உருவகை பந்தனை செய்தனன்! வந்தித்து
அழுது மும்மை வலம்கொடு இறைஞ்சினன்; அன்போடு
எழுது பாவையும் ஏத்தினள்; ஏகினன் இப்பால்.

சூளாமணியைத் தொழுது வாங்கி, பத்திரப்படுத்தி, சீதையை மும்முறை வலம் வந்து இறைஞ்சி அனுமான் சென்றான். இதனால் அனுமன் எத்துணையளவு சீதையையும், இராமனையும் போற்றி வாழ்ந்தனன் என்பது புலப்படுகின்றது.

## அங்கதன் தூது

இராமன் வானர சேனையுடன் கடல்கடந்து இலங்கையின் வடக்குவாசலை அடைகிறான். எல்லோரும் எவ்வாறு இராவணனை அணுகுவதென்று சிந்திக்கின்றனர். இறுதியில் இராமன் தூதனுப்புதலே முறையென்று கூறுகிறான். ஆனால் இலக்குவன் முதலில் தூதனுப்பும் கருத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கிறான் போர் தொடங்குதலே தக்கது என்கிறான், இக்கருத்தை மாற்ற இராமன் கூறும் அறவுரை நன்கு அமைந்துள்ளது. இறுதியில் நடப்பது போர் தான். ஆனால் பொறுமை மிகவும் அவசியம் அப்பொறையே வெற்றிக்கு அறிகுறியாகும் என்று இராமன் கூறுகிறான். இதைக் கம்பர், 'புயத்துறை வலியரேனும, பொறையொடும் பொருந்தி வாழ்தல் சயத்துறை; அறனும் அஃதே' என்னும் அடிகளில் அழகுற அமைத்துள்ளார். பின்பு யாரைத் தூதனுப்புதல் வேண்டும் என ஆராய்கின்றனர். அனுமன் மீண்டும் செல்லல் நல்லதல்ல; ஆகவே அங்கதன் தான் ஏற்றவன் என்று இறுதியில் முடிவு செய்கிறார்கள். அரக்கர்கள் எதிர்த்தாலும் அவர்களை வென்றுவரும் திறமை அங்கதனுக்குஉண்டு. 'சீதையை விடுக. அல்லது செருக்களத்துச் சந்திக்க' என்று இராவணனிடம் கூறிவருமாறு அங்கதனை இராமன் அனுப்புகிறான். அங்கதன் உவகையுடன் ஒரு சிங்கம் விண்மிசைப் படர்ந்து செல்வது போலவும், வீரன் வெம் சிலையில் கோத்த அம்பின் விசையில் சென்று இராவணன் இருக்குமிடத்தை அணுகினான். சிறுவனாகிய அங்கதன் இராவணன் பேருருவைக் கண்டு வியக்கிறான்; அவன் கண்ட பெருமலைகளும், மரங்களும், தாண்டிய கடலும் இராவணன் முன் சிறு துரும்பு போல்தான் பட்டன. பின்பு இராவணனுடைய உருவத்தைக் கொல்வதற்கு ஏற்ற ஒரு கூற்றின் உருவத்தைத் தன் மனத்துள் நினைக்கிறான்.

''கல்லுண்டு மரமுண்(டு) ஏழைக் கடலைக் கடந்தோமென்னும்
சொல்லுண்டே இவனைவெல்லும் தோற்றத்திற்கோர் கூற்றமுண்டோ''

என அங்கதன் சிந்திப்பதாகக் கம்பர் சித்தரித்திருக்கிறார். அங்கதனைப் பார்த்த இராவணன், இவண் வந்த நீயார்? எய்திய கருமம் என்ன? என்று கேட்கிறான். இதற்கு அங்கதன் இறுக்கும் விடை மிக

வும் நயமானது. 'வேதநாயகனுன இராமன் அனுப்பிய தூது யான். அவன் பணித்த சொற்களை உன்னிடம் கூறுவதற்காக வந்தேன்' என்கிறுன். இதைக் கம்பர்,

''பூதநா யகன்,நீர் சூழ்ந்த புவிக்குநா யகன்இப பூமேல
சீதைநா யகன்,வே றுள்ள தெய்வநா யகன், நீசெப்பும்
வேதநா யகன்மேல் நின்ற விதிக்குநா யகன்தான் விட்ட
தூதன்யான், பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன்; என்றுன்"

என்று பாடியுள்ளார். இதைக் கேட்ட இராவணன் நகைத்து, 'முக் கடவுளரும் என்னையஞுக அஞ்சுவரே; ஒரு மனிதனுக்காகத் தூது வந்த நீ யாவன்!' எனக் கேட்கின்றுன். இதற்கு அங்கதன் கூறும் விடை நயமாகவும் இராவணனை நடுங்கச் செய்வதாகவும அமைந்துள்ளது. இதைக் கம்பர்,

'இநதிரன் செமமல, பண்(டு)ஓர் இராவணன என்பான் தன்னைச்
சுநதரத் தோள்க ளோடும வாலிடைத் தூங்கச் சுறறிக
சிநதுரக் கிரிகள் தாவித திரிநதனன; தேவா உணண
மநதிரப் பொருப்பால வேலை கலககினுன; மைந்தன்' என்றுன்.

என்ற கவியில் அங்கதன் விடையிறுக்கும் திறனை அற்புதமாகக் கூறியுள்ளார். வாலிடை இராவணனைச் சுற்றியவன் ஆகையாலும், அமுது கடைய மந்திரமலையால் கடலைக் கலககியவன் ஆகையாலும், நானும் உன்னை வென்றுவிடுவேன் என்ற கருதது தோன்ற அங்கதன் விடையளிக்கிறுன். வாலியைப பற்றிக் கேட்ட இராவணனுக்குப் பழமை நினைவுக்கு வருகின்றது. உடனே, ''உந்தை என் துணைவனும, நண்பனுமாவன், நீ என்னுடைய மைந்தன், சீதையைப் பெற்றேன்; உன்னையும் சிறுவனுகப பெற்றேன், ஆகவே எனக்கு உலகத்தில் அரிய பொருள் ஒன்றுமில்லை; கிட்கிந்தையை உனக்குப் பெற்றுத் தருகிறேன். மன்னனுக மகுடம சூடிமகிழ்வுடன் ஆள்வாயாக!' என்று அங்கதனிடம் கூறுகிறுன். இதைக் கேட்ட அங்கதன் இலங்கையே அதிரும்படி நகைககிறுன. இங்கு வாழ்பவர்ககு இறுதி நெருங்கிவிட்டது என நினைத்தே வீடணன் எங்கள் பக்கல் வந்துள்ளான் என்று அங்கதன் கூறுகிறுன். மற்றும் நாய் ஓர் அரசைத் தர, சிங்கம் அதை ஏற்றுக் கொள்ளுமோ' என்று இராவணனை நாயாக மதிதது இகழ்ந்துரைக்கிறுன். இதைக் கேட்ட இராவணன் சீறியெழுநது 'அழிவதை எண்ணினுய்; வந்த காரியத்தைக் கூறுவாயாக' என்று கேட்கிறுன். அருட்பண்பாளனுகிய இராமபிரான் என்னையழைதது, தன் குலம் முழுவதையும் அழிக்க வந்தவனும், போருக்கு அஞ்சிக் கோட்டைக்குள்புகுந்து பதுங்கியவனும் ஆகிய பாவியிடம் சென்று, தேவியை விடுக; அன்றேல் செருக்களம் எதிர்ந்து ஆவியை விடுக' என்று கூறி வருமாறு அனுப்பியதாக அங்கதன் கூறுகிறுன். இதைக் கம்பர்,

'கூவியின்று என்னை 'நீபோய்த் தன்குலம் முழுதும் கொல்லும்
பாவியை அமருக்கு, அஞ்சி அரண்புக்குப் பதுங்கி னுனைத்

**தேவியை விடுக! அன்றேல் செருக்களத்து எதிர்ந்து தன்கண்**
**ஆவியை விடுக!' என்ருன், அருள்இனம் விடுகி லாதான்!**

என்ற கவியில் அழகுற அமைத்திருக்கிருர். மற்றும் அங்கதன், இராவணன் செயல்பட வேண்டிய இடங்களில் செயலற்றுக் கிடந்த நிலையை எடுத்துக் கூறுகிருன். ஆகவே இனி இராவணனல் வெல்ல முடியாது என்பதையும் விளம்புகிருன். அவன் செயலற்றுக் கிடந்த இடங்களாகத் தாடகை வதையையும், மாரீசன் மடிந்ததையும், சூர்ப்பணகைக்கு மானபங்கம் ஏற்பட்டதையும் அங்கதன் குறிப்பிடுகிருன். இதைக் கம்பர்,

'பருந்துணப் பாடி யாக்கை படுத்தநாள், படைஞ ரோடும்
மருந்தினும் இனிய மாமன் மடிந்தநாள், வனத்துள் வைகி
இருந்துழி வந்த தங்கை மூக்கும்வெம் முலையும் எம்பி
அரிந்தநாள், வந்தி லாதான் இனிச்செய்யும் ஆண்மை உண்டோ?'

என்ற கவியில் நன்கு இயம்பியுள்ளார்.

இறுதியில் இராவணன் கடுஞ்சினங்கொண்டு, கடிதில் பற்றி அங்கதனைக் கொன்று பூமியில் வீழ்த்தும்படி ஏவலாட்கள் நால்வரை ஏவுகிருன். ஆனல் அங்கதன், வாலியின் சேய் அல்லவா? புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? ஏவலாளிகளைக் கொன்று இராமபிரானை வந்தடைகிருன்.

அங்கதன் தூதுக் காட்சியில் நாம் நகைச்சுவை, வீரச்சுவை, அச்சச்சுவை முதலியவற்றை அறிந்து சுவைக்கிருேம். வீரச்சுவையே மிகுந்து காணப்படுகின்றது. கம்பன் காவியத்தில் எண் சுவையும் எண்ணிலவாய் நிறைந்துள்ளன. கம்பன் அமைத்த காட்சிகளும் பற்பல. அவற்றில் சிலவற்றினையே இங்கு நோக்கினேம். பல்சுவையும் நிரம்பினவாய் இக்காட்சிகள் இருக்கின்றன. கதைக்குத் திருப்புமுனையாகவும் சில காட்சிகள் விளங்குவதைக் கண்டோம். இக்காட்சிகளைப் படித்துச் சுவைத்தலே நல்லது. நவில் தொறும் நயம் பயக்கும் இக் காட்சிகள் நம் நல்வாழ்விற்கு நனி விருந்துகளாய் அமைந்துள்ளன.

## கம்பர் காட்டும் பாத்திரங்கள்

காவியங்களில் நாம் பற்பல நீதிகளையும் நெறிமுறைகளையும் காண்கிருேம். அந்நீதிகளையும், நெறிகளையும் கவிகள், பாத்திரங்களின் வாயிலாகவே வெளிப்படுத்துகின்றனர். கவிகளது எண்ணக் கிடக்கைகளின் இருப்பிடங்களாகவே பாத்திரங்கள் திகழ்கின்றனர். கம்பர் தம் ஒப்பற்ற காவியத்தில் பலதிறப்பட்ட பாத்திரங்களைப் படைத்துள்ளார். ஆனல் எல்லாப் பாத்திரங்களையும் நிறைவுடன் சித்திரித்துள்ளார். எப்பாத்திரத்தையும் குறைவுடன் முடிக்கவில்லை. சாதாரண மந்தரையென்னும் கூனிப் பாத்திரத்திலிருந்து குற்ற

மற்ற கற்புடைய சீதாபிராட்டியார் பாத்திரம் வரை எல்லாப் பெண் பாத்திரங்களையும் இனிதே அமைத்துள்ளார். தேரோட்டும் சுமந்திரனிலிருந்து அறத்தின் மூர்த்தியாகிய இராமபிரான் வரை ஆண் பாத்திரங்களையும் அன்பு, ஆண்மை, வீரம் போன்ற நற்பண்புகள் செறிந்த பாத்திரங்களாகவே படைத்துள்ளார். பாத்திரங்களின் உயரிய லட்சியங்களாக சகோதரத்துவம், சேவை உணர்ச்சி, கற்புடைமை ஆகியவைகள் கம்பர் காவியத்தில் மிளிர்கின்றன. காவியங் காட்டும் பெண்டிர் அனைவரும் கற்புடைப் பெண்களாகவே விளங்குகின்றனர். சகோதரத்துவத்தில் பெரும் பாத்திரங்கள் அனைவரும் அடங்குகின்றனர் சேவையுணர்ச்சியே பெரிதெனக் கொண்டு திகழும் அனுமான், கும்பகர்ணன் போன்றவரையும் காவியத்தில் கண்ணுறலாம். இம்மூன்று வகையில் பெரும்பான்மையான பாத்திரங்கள் அடங்குகின்றனர். சகோதரத்துவத்தைப் பற்றிச் சிறிது பார்ப்போம்.

கம்பர் காட்டும் சகோதரத்துவம அற்புதமானது. 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற கொள்கையுடையவர் கம்பர். இதைத்தன் குறிக்கோளாகக் கொண்டு பாத்திரங்களின் வாயிலாகச் சித்திரிக்கிறார் எந்த இனத்து மக்களாக இருந்தாலும் சரியே, எத் தேசத்தவர்களாக இருந்தாலும் சரியே, எந்நிலையில் இருப்பவர்களாக இருந்தாலும் சரியே அவர்களையெல்லாம் ஒருமையில் ஈடுபடுத்திக் கம்பர் காட்டுகிறார். அவர்களெல்லாம் அறத்தின் மூர்த்தியாகிய இராமபிரானைத் தலைவனாகக்கொண்டு, அன்பு எனும் பாசத்தால் பிணித்து நல்லிணக்கத்துடன் வாழ்ந்ததாகக் கம்பர் சித்திரிக்கின்றார். காவியத்தின் கதாநாயகனை இராமனைப்பற்றிப் பார்ப்போம். முதலில் இராமனை அழகுத தெய்வமாகக் கம்பர் காட்டுகிறார். அக அழகு, புற அழகு என்ற இவற்றில் மட்டும் இராமனைச் சிறந்தவனாகக் காட்டவில்லை. உருவ அழகு, குணவழகு, வீர அழகு என்ற மூவகை அழகும் இராமன் பாத்திரத்தில் மிளிர்வதை நாம் காண்கிறோம கம்பர் உருவ அழகைப்பற்றிப் பல இடங்களில் சித்திரித்துள்ளார் 'ஓவியத்து எழுதவொண்ணாத உருவத்தான்' என்று காட்டுகிறார். ''கண்ணில் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவும் தோளின''னை மற்றோரிடத்தில் காட்டுகிறார். மற்றும் இராமன் அழகில் வியப்புற்று ''மையோ மரகதமோ மழைமுகிலோ மறிகடலோ" எனத் திகைக்கின்றார். அழியாத அழகுடையவனை இராமனைச் சித்திரித்த கம்பர், அவன் நாமத்தின் மகிமையையும் நன்கு சிறப்பித்திருக்கின்றார். இராமநாமம் மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரமாகும். தன்னையடைந்தவர்களுக்குத் தனிப்பெரும் பதத்தை நல்கக்கூடியது. இம்மை நோய்க்கு மருந்தும் ஆகக் கூடியது. இராமனுடைய உருவ அழகை மிதிலைக் காட்சிப் படலத்தில் கம்பர் அழகுற எடுத்துக் காட்டுகிறார். மிதிலையில் தம்பியுடனும், முனிவருடனும் இராமன் வீதியின் வழியே

சென்று கொண்டிருக்கிறான். அப்பொழுது அவனுடைய உருவ அழகினை மிதிலை மக்கள் கண்ணுறுகின்றனர். முழு வடிவினையும் கண்ணுற்றவர் ஒருவரும் இலர். தோள் அழகினைக் கண்டவர் அதையே கண்டு கொண்டிருந்தனர். கால், கை முதலிய உறுப்புக்களையும் அவ்வாறே நோக்கியிருந்தனர். எல்லா உறுப்புகளையும் காண அவர்களால் இயலவில்லை. இதைக் கம்பர்,

> தோள்கண்டார் தோளே கண்டார், தொடுகழல் கமலம் அன்ன
> தாள் கண்டார் தாளே கண்டார்; தடக்கைகண் டாரும் அஃதே;
> வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?
> ஊழ்கொண்ட சமயத்து அன்னான் உருவுகண் டாரை ஒத்தார்.

என்னும் கவியால் அற்புதமாக வடித்திருக்கிறார்.

இராமனின் வில் திறத்தை நாம் ஆதியிலிருந்து அந்தம் வரை பார்க்கலாம். குணவழகையும் அயோத்தியிலிருந்து இராவணன் சடலத்தைக் கண்டு வியக்கும் வரை பார்க்கலாம். இராமன் கடவுளின் அவதாரமானாலும் பிறந்திருப்பது மனித உருவில்தான். மனிதன் குற்றங்கள் புரிவது இயற்கை. அவ்வாறே இராமனிடமும் குற்றங் குறைகள் இருந்ததாகக் கம்பர் காட்டுகிறார். மனித இனத்தில் இராமனை மிகச் சிறந்த பாத்திரமாக விளக்கியுள்ளார். ஒரு உயரிய லட்சியத்தை நிலைநிறுத்துவதற்கு உறுதியான மனமும், திடசித்தமும் தேவை. எல்லாவிதமான குற்றங்குறைகளையும் பெருந்தன்மையுடன் ஏற்றுக்கொள்ளும் உள்ளமும் தேவை. எல்லோரிடத்திலும் அன்புடன் வாழவேண்டுமானால் எதையும் தியாகம் செய்யும்படியான பரந்த மனப்பான்மை தேவை. எல்லோருடனும் நல்லிணக்கத்துடன் வாழவேண்டுமானால் எக்காரியத்தையும் சாதிக்கும்படியான திறமையும் தகுதியும் தேவை. இவைகளையெல்லாம் பெற்றவனாக இராமன் திகழ்கிறான். தசரதன் இராமனைப் பெற்ற பேற்றினைச் சிறப்பிக்க வந்த கம்பர், ''யாவரே இராமனைப் பெற்றார்'' என்று வசிட்டன் வாயிலாகப் பாராட்டுகிறார். வால்மீகி இராமனை 'லோகநாயகனாக'க் கொண்டார். ஆனால் கம்பர் இராமனைத் 'தெய்வநாயகனாக'க் கொண்டுள்ளார். இராமனை தெய்வத் தோன்றலாக இறுதிவரைக் கம்பர் சிறப்பித்துப் பாடியுள்ளார் ''வானின்று இழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும் ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறத்து உளன்'' இராமன் என்று பாடியுள்ளார். ''தேவர்க்கும் தானவர்க்கும் திசைமுகனே முதலாய தேவ தேவர் மூவர்க்கும் முடிப்பரிய காரியத்தை மூண்டு நின்று முற்றுவிப்பவன்'' இராமன் என்கிறார். ''மும்மையாம் உலகம் தந்த முதல்வர்க்கு முதல்வன்'' இராமன் என்றார். ''மூலமும் நடுவும் ஈறும் இல்லையாய் மும்மைத் தாய காலமும் கணக்கும் நீத்த காரண''னே கையில் வில்லையேந்தி அயோத்திக்கு வந்தவன் என்கிறார். அறத்தின் மூர்த்தியாக வந்து அவதரித்த இராமனைப் பற்பல இடங்களில் கம்பர் தெய்வ நாயகனாகச்

சிறப்பித்துள்ளார். மனிதப் பிறவியாக வந்து அவதரித்த இராமன், தமிழனுடைய தனிப் பண்பாட்டிற்கேற்ப ஒருவன் ஒருத்தி என்ற நியதிப்படி இல்லற வாழ்க்கையில் ஈடுபடுகிறான். 'கற்பு' எனப் படுவது இருபாலாருக்கும் பொதுமைத்தாகும். இராமன் இதைத் தன் வாழ்க்கையில் நிலை நிறுத்திக் காட்டுகிறான். இராமன், உலக மக்கள் எவ்வாறு ஒழுக வேண்டுமென்பதை வாழ்ந்து காட்டுகிறான். இதைக் கம்பர் 'நடையின் நின்றுயர் நாயகன்' என இராமனைச் சிறப் பித்துக் கூறுவதால் அறியலாம். ஏகபத்தினி விரதனாக வாழ்ந்த இராமன் தன் அறிவு, ஆற்றல், ஆண்மை, அழகு, வீரம் முதலிய அனைத்தையும் உயரிய லட்சியங்களுக்காகவே பயன்படுத்தி வாழ் கிறான். கைகேயி இராமன் பதினான்கு ஆண்டு காடாளவும், பரதன் நாடாளவும் தசரதன் கூறியதாக ஆணையிடுகிறாள். அவள் ஆணையை இராமன் மனமார ஏற்கிறான்.

## சகோதரர்கள்

அதைவிடப் பரதன் அண்ணனுடைய செல்வத்தைத் தான் அடைவது பொருத்தமற்றது என்று நினைக்கிறான். உரியவர்க ளிடத்தில் சேர்ப்பதுதான் சரியென்று எண்ணி அண்ணனாகிய இராமனைத் தேடிக் கானகம் நோக்கிச் செல்கிறான். பின்பு பாதுகை யைப் பெற்றுவந்து அரசாள்கிறான் அவ்வாறு செயலில் செய்து காட்டிய பரதன் பாத்திரம் கம்பரின் ஒரு அற்புதமான படைப் பாகும். சுமித்திரையின் மகனாகிய இலக்குவனே சிறு குழந்தை முதல் இராமனோடு இணைபிரியாமல் வாழ்கிறான். இராமன் வாழ்வே தன் வாழ்வெனக் கருதுகிறான். இராமனின் இன்ப துன்பங்கள் அனைத் திலும் பங்கேற்கிறான். தியாகத்தின் சின்னமாகத் திகழ்கிறான். இலக்குவனை ஒப்பற்ற சகோதரனாகக் கம்பர் சித்திரிக்கிறார். இலக்குவன் இராமன்மேல் கொண்ட அன்பும், பரதன் இராமன் மேல்கொண்ட அன்பும் இருவகையால் சிறப்புற்றது என்று கம்பர் காட்டுகிறார். இலக்குவன் இராமனின் கூடவே இருந்து ஒப்பற்ற சகோதரனாகத் திகழ்கிறான். பரதன் இராமனிடமிருந்து பிரிந்து ஒப்பற்ற சகோதரனாகத் திகழ்கிறான். சுருக்கமாகக்கூறினால் பரதன் இராமனைப் பிரிந்து வாழ்ந்ததால் ஏற்றம் பெறுகிறான், இலக்குவன் இராமனைச் சேர்ந்து வாழ்ந்ததால் ஏற்றம் பெறுகிறான். பரதன் இராமன்மேல் அழியாத அன்புடையவன். அறத்தையும் அன்பையும் ஒன்றாகச் சேர்த்து வார்த்த ஒரு தனிப்பிறவி பரதன் ஆவன். அண்ணனாகிய இராமன் இட்ட ஏவலைத் திட்டமாகச்செய்து முடிப்பவன் பரதன் ஆவன். இராமன் இட்டபணி தனக் காகப் பரதன் ஆட்சி புரிய வேண்டுமென்பதே. அயோத்தி அர சாட்சிப் பொறுப்பைப் பரதன் ஏற்றிருந்தாலும் அவனுடைய உள்ள மெல்லாம் அண்ணன் இராமன்பேரில்தான் இருந்தது. அவன் புரிந்த ஒவ்வொரு செயலும், அண்ணன் இராமனுக்கே அர்ப்பணித்

தவன் என்பதைக் காட்டின. தாயுரை கொண்டு தந்தை உதவிய தரணி தன்னைத் தீவினை என்ன நீத்துப் பரதன் கானகம் செல்கிறான். இவன் தன்மையைக் கண்ட நாவாய் வேடுவன் குகன், பரதனுக்கு ஆயிரம் இராமர்கள் சேர்ந்தாலும் ஈடாக முடியாது என்று கூறுகிறான். நந்திபுரத்தில் ஏறக்குறையப் பதினான்கு ஆண்டுகள் பரதன் பாதுகை துணைகொண்டு ஆட்சிபுரிகிறான். இராமன் உரிய நேரத்தில் திரும்பி வரவில்லை திரும்பாமை கண்ட பரதன் தீக்குளிக்க முற்படுகிறான் இதைக் கண்ட இராமனைப்பெற்ற கோசலை, பரதன் பக்திமேலீட்டைக் கண்டு வியப்புறுகிறாள். எண்ணில் கோடி இராமர்கள் என்றாலும் அண்ணலாகிய பரதனின் அருட்குணத்திற்கு ஈடாக மாட்டார்கள் எனப் போற்றிப் புகழ்கின்றார். பரதன் இராமனைப் பிரிந்திருந்தாலும் அவனுடைய சகோதர அன்பு எப்பொழுதும் மிளிர்கின்றது. இதனால் பரதன் ஏற்றம் பெறுகின்றான். பரதனுடன் கூட வாழ்ந்த சத்ருக்கனனும் சகோதர அன்பில் எவ்வகையிலும் குறைந்தவனில்லை. கடைசித் தம்பியாகிய சத்துருக்கனன் மூத்த அண்ணனாகிய இராமன்மேல் வைத்த அன்பு எல்லா வகையிலும் சிறந்தது. சாதாரணமாகச் செல்வமும் பதவியும் தேடிவரும்போது எத்தகைய சிறந்த உள்ளம் உடையவர்களும் மனமதிரிவார்கள். ஆனால் இதற்கு மாறாகப் பரதனும் சத்துருக்கனனும் இருக்கின்றனர். கைகேயி வரத்தால் பெற்ற அரசாட்சியைப் பரதன் ஏற்க மறுத்துவிடுகிறான். பின்பு இராமன் திரும்பி வாராமை கண்ட பரதன் சத்துருக்கனனுக்கு அரசினை நல்கி உயிர்விட எண்ணுகிறான். தன் எண்ணத்தைச் சத்துருக்கனனிடம வெளிப்படுத்துகிறான். இவ்விடத்தில்தான் நாம் சத்துருக்கனனின் தூயமனத்தைத் தெரிந்துகொள்ள முடிகின்றது. சகோதரபாசத்தில் மற்றவர்களுக்குச் சிறிதும் குறைந்தவனல்லன் சத்துருக்கனன் என்பதைக் கம்பர் அற்புதமாகத் தன் கவியில் சித்திரித்துள்ளார்.

'கான்ஆள, நிலமகளைக் கைவிட்டுப்
போவானைக் காத்துப் பின்பு
போனானும் ஒருதம்பி; போனவன்தான
வரும்அவதி, போயிற்று என்ன,
ஆனாத உயிர்விடஎன்று அமைவானும்
ஒருதம்பி; அயலே நாணாது,
யானும் இவ் அரசு ஆள்வென்? என்னே இவ்
வரசாட்சி? இனிதே! அம்மா!

அண்ணனைக் காப்பதற்கு ஒருதம்பி அவன் பின்சென்றான். அண்ணன் வரும் வேளை தாண்டியதென்று ஒருதம்பி உயிர்விடத் துணிந்தான். நான் சிறிதும் நாணாது அரசாள்வேன்' என்று சத்துருக்கனன் இரங்கிக் கூறுவது அவன் அண்ணன் இராமன்மேல் கொண்டிருந்த அளவற்ற அன்பினைத் தெற்றென விளக்குகின்றது.

## நட்பினால் அன்பு பூண்டோர்

உடன் பிறந்த சகோதரர்கள் கொண்ட அன்பினையும் பாசத்தையும் பார்த்தோம். இனி உடன் பிறவாமல், நட்பினால் இராமனிடம் அன்பு பூண்ட சகோதரர்களைப்பற்றிப் பார்ப்போம். இவர்களும் இராமன்மேல் கொண்ட அன்பில் சிறிதும் இளைத்தவர்களல்லர். கூடப் பிறந்து அதனால் ஏற்படும் சகோதரத்துவத்தை விடக் கூடப் பிறவாமல் நட்புமூலம் ஏற்பட்ட சகோதரத்துவம் மிக மிக உயர்ந்தது ஆகும். இப்படிப்பட்ட சகோதரத்துவத்தால் தான் மனித சமுதாயம் உயரிய லட்சியத்தை அடைந்து உயர்ச்சி பெறுகின்றது. இச் சகோதரத்துவத்தால் சாதிமதப்பூசல் களையப் படுகின்றது. உலகம் முழுவதும் ஒன்றே குலம் என்ற உயர்ந்த கோட்பாடு இச்சகோதரத்துவத்தால் ஏற்படுகின்றது. நாவாய் வேடுவன் குகன், வானர அரசன் சுக்கிரீவன், அரக்கர் கோன் தம்பி விபீடணன் ஆகிய பாத்திரங்களைப் படைத்து, இச் சகோதரத்துவத்தைக் கம்பர் ஒளிர வைக்கிறார் இராமன் விபீடணனிடம் எழுவர் சகோதரர் ஆனமை பற்றிக் கூறுகிறான். அப்பொழுது தசரதனை விபீடணன் தந்தையாகவே பாவித்து இராமன் "நுந்தை" எனக் குறிப்பிடுகிறான். சகோதரத்துவத்தின் சின்னமாக விளங்கும் இக் கம்பர் கவி மிகவும் போற்றற்குரியது

'குகனொடும் ஐவ ரானோம் முன்பு;பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவ ரானோம்; எம்முழை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய! நின்னொடும் எழுவ ரானோம்;
புகலருங் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை.'

## இராவணனின் சகோதரர்கள்

இனி இராவணனுடைய சகோதரர்களைப் பார்ப்போம். இலங்கையின் அண்ணலாகிய இராவணன் அன்பே உருவான தம்பி கும்பகர்ணனையும், அறமே உருவான தம்பி வீடணனையும் பெற்றிருக்கிறான். இராவணனையும் கம்பர் சிறந்த பாத்திரமாகவே சித்திரிக்கின்றார். இராவணனின் மாண்பையும், தகைமைகளையும் நன்றாகக் கம்பர் தம் கவிகளில் எடுத்துக் காட்டுகிறார். சிறந்த தவமும், தெய்வ சிந்தனையும் கொண்டவன் இராவணன் என்பதை அறிகிறோம். வீரமும் இராவணனிடம் விளையாடிற்று. ஆனால் இரக்கம் என்ற பண்பு மட்டும் அரக்கர் குலத்திலேயே காணப்படவில்லை. இதைக் கம்பர் "இரக்கம் என்ற ஒருபொருள் இலாத அரக்கர்கள்" என்று குறிப்பிடுகின்றார். அரக்கர் உலகிலேயும் அன்பையும், அறனையும், திறனையும் உடையவர் பலர் இருந்ததாகக் கம்பர் பின்னால் கூறுகிறார். இராவணனே இலங்கையின் அண்ணலாகத் திகழ்ந்தான். இராவணன் சிறப்பைக் கம்பர் பலவிடங்களில் குறிப்பிடுகிறார். இராவணன் முக்கோடி வாழ்நாள் உடையவன், முயன்றுடைய பெருந்தவமுடையவன், பிரமன், 'எக்கோடி யாராலும் வெல்லப்

படாய்' என்றளித்த வரமுடையவன்; உலகனைத்தையும் போரில் வென்ற புயவலியுடையவன், பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வன்; வாரணம் பொருத மார்பன்; வரையினை எடுத்த தோளன்; நாரத முனிவற்கேற்ப நயம்பட உரைத்த நாவன்; மறத தலைவன். இவ்வளவு சிறப்பினையும் பெற்ற இராவணனிடத்தில் பிறர்மனை நயத்தல் என்னும் பெருங்குறை ஏற்பட்டது. மாற்றான் மனைவியைத் தவறான வழியில் அடைய வேண்டுமென்ற தீய எண்ணமே இராவணன் பெற்ற வரங்களுக்கும், தவங்களுக்கும் கூற்றாக அமைந்தது. அவனுடன் பிறந்த சகோதரர்களாகிய கும்ப கர்ணனும், வீடணனும் கூறிய அறவுரைகளை இராவணன் ஏற்க வில்லை. இரு சகோதரர்களும் இராவணனை அரக்கர் குலத்திற்கே வந்த தெய்வமாகவும், தந்தையும் தாயும் போலவும் கருதிவந்தனர். இராவணனுடைய ஆட்சியின் அடித்தளமாக அன்புருவான கும்ப கர்ணன் அமைந்தான். இராவணனுடைய மாண்பை நிலைநாட்டு வதற்காக, அறத்தின் வழிகாட்டியாக வீடணன் இருந்தான். இராவணன் செய்த தீமையை இருவரும் உணர்ந்தனர், பல நல்லுரைகள் பகன்றனர். ஆனால் அவற்றை இராவணன் கேட்க வில்லை. வீடணன் அறத்தையே குறிக்கோளாகக் கொண்டவ னுகையால் அறத்துக்கு மாறுபட்ட அண்ணன் இராவணனைப் பிரிய வேண்டிய நிலை ஏற்பட்டது. அறத்திற்காக எதை யும் செய்யத் தயாராக இருந்த வீடணன் அறங்குறைந்த அண்ணன் இராவணனைப பிரிந்து அறததின் புர்த்தியாகிய இராமனைச் சென்றடைந்தான், பின்பு இராமன் சகோதரனுகவும் திகழ்ந்தான். தன் கூடப் பிறந்த அண்ணனைப் பிரிந்தாலும், அவனை விடச் சிறந்த உயரிய லட்சியத்தையுடைய இராமனைச் சகோதரனுக வரித்ததால் வீடணன் சிறப்புற்றான். ஆகவே, இராவணனைப் பிரிந்ததால் வீடணன் ஏற்றம் பெற்றான். ஆனால், கும்பகர்ணன் தன்மை வேறானது. அண்ணன் செய்தது தவறு என்று உணர்ந் திருந்தாலும், தன்னை வளர்த்த அண்ணனுக்காகத் தன்னையே தியாகம் செய்யக் கும்பகர்ணன் தயாராக இருந்தான். அண்ணன் மேல் ஆழ்ந்த பற்றுடையவன் கும்பகர்ணன். போருக்குப் புறப்படு முன் இறுதியாகக் கும்பகர்ணன் இராவணனுக்கு அறவுரை பகர் கின்றான். தான் போர்க்களத்தில் இறந்த பின்பாவது, சீதையை விட்டு விடுக என்று கூறிப் போருக்குச் செல்கிறான். இவ்விடம் நாம் கும்பகர்ணனின் தியாகப் பண்பை, அண்ணன் மேல் கொண்ட ஆழ்ந்த பற்றினை அறியலாம். இதைக் கம்பர்,

''வென்றுஇவண் வருவன்என்று உரைக்கி லேன்,விதி
ஒன்றது; பிடர்பிடித்து உந்த நின்றது;
பொன்றுவென்; பொன்றினல், பொலன்கொள் தோளியை
நன்றுஎன நாயக! விடுதி! நன்றுஅரோ".

என்னும் கவியில் அழகுறச் சித்திரித்திருக்கின்றார்.

தம்பி வீடணன் போர்க்களத்தில் அண்ணனாகிய கும்பகர்ணனிடம் வருகிறான்; அறத்தின் மூர்த்தியாகிய இராமனைச் சேர்தலே நலம் என்று கூறுகிறான். அப்பொழுது கும்பகர்ணன் இறுத்த பதில், அவன் பாத்திரத்தை ஏற்றம் பெறச் செய்கின்றது.

'அழியக் கூடிய வாழ்வை விரும்பி, வளர்த்த அண்ணனை விட்டு மாற்றிடம் சேரமாட்டேன்' என்று கும்பகர்ணன் பதிலளிக்கிறான். இதைக் கம்பர்,

> 'நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்துப் பின்னைப்
> போர்க்கோலம் செய்து விட்டாற்கு உயிர்கொடாது அங்குப் போகேன்;
> தார்க்கோல மேனி மைந்த! என் துயர் தவிர்த்தி ஆயின்,
> கார்க்கோல மேனி யானைக் கூடுதி கடிதின் ஏகி'

என்னும் கவியில் சித்திரிக்கிறார்.

மற்றும் கும்பகர்ணன் 'தான் இராவணனுடன் சேர்ந்திருந்து உயிர் விடுதலே தனக்குப் புகழைத் தருவதாகும்; அவ்வாறே அறத் தலைவனாகிய வீடணன் இராவணனைப் பிரிந்து செல்லலே அவனுக்குப் புகழாகும்' என்று வீடணனிடம் கூறுகிறான். இதைக் கம்பர்,

> 'தலைவன் நீ உலகுக்கு எல்லாம், உனக்கு அது தக்கதே, ஆல்,
> புலையுறு மரணம் எய்தல் எனக்கு இது புகழதே, ஆல்.

என்னும் அடிகளில் விளக்குகிறார். ஆகவே, கும்பகர்ணன் அண்ணன் இராவணனுடன் சேர்ந்திருந்து உயிரைத் தியாகம் செய்ததனால் பெருமை பெற்றான். வீடணன் பிரிந்து இராமனை அடைந்ததால் சிறப்புற்றான்.

## இராவணனின் புகழாசை

இராவணன் சிறப்பையும் வீரத்தையும் முன்பு பார்த்தோம். தன் ஆற்றலிலே பெரும் நம்பிக்கை கொண்டிருந்தவன் இராவணன். தன் மகன் இந்திரசித்து சீதாபிராட்டியின் மேல் இருக்கும் ஆசையை விட்டுவிடுவதே நல்லது என்று கூறியபொழுது இராவணன் சொன்ன சொற்கள் அவன் தன்னம்பிக்கையைத் தெற்றென விளக்குகின்றன. இதைக் கம்பர்,

> "முன்னையோர் இறந்தோர் எல்லாம் இப்பகை முடிப்பர் என்றும்
> பின்னையோர் நின்றோர் எல்லாம் வென்று அப்பால் பெயர்வர் என்றும்
> உன்னை,'நீ அவரை வென்று தருதி' என்று உணர்ந்தும் அன்றால்
> என்னையே நோக்கி யான் இந் நெடும்பகை தேடிக்கொண்டேன்.''

என்னும் கவியில் அற்புதமாக விளக்குகிறார். இராவணன், இந்திரசித்திடத்தில் யாரை நம்பியும் இல்லாமல் என்னையே நம்பி நான் இந்த நெடும் பகையைத் தேடிக் கொண்டேன் என்று கூறுவது அவன் தன்னம்பிக்கையைக் காட்டுகின்றது. தன் பெயர் நிலைத்து நிற்பதையே இராவணன் விரும்புகிறான். தான் இறந்தாலும், தன்

பெயர் இராமன் பெயர் நிலைத்து நிற்குமளவும் நிலைத்து நிற்கு மென்று கூறுகிறான். இராவணன் புகழையே விரும்பினான்; புக ழுக்காகத்தான் வாழ்ந்தான்; புகழை நிலை நிறுத்த மரணத்தையும் ஏற்கத் தயாராக இருந்தான். இதைக் கம்பர்,

"வென்றிலென் என்ற போதும், வேதம்உள் ளளவும் யானும்
நின்றுளன் அன்றோ, மற்று அவ் இராமன்பேர் நிற்கும் ஆயின் ?
பொன்றுதல் ஒருகாலத்துத் தவிருமோ? பொதுமைத் தன்றோ?
இன்றுளார் நாளை மாள்வார், புகழுக்கும் இறுதி யுண்டோ?

என்னும் அடிகளில் சிறப்பித்துக் கூறுகிறார்.

இராவணன் போர்க்களம் சென்று வீரமரணம் எய்துகிறான். அப்பொழுது இறந்த அவன் முகம் மும்மடங்கு பொலிந்து காணப் படுகின்றது. இத்துடன் இராவணன் பாத்திரம் நிறைவுறுகின்றது.

## சேவை உணர்ச்சி

கம்பர் சில பாத்திரங்களைத் தன் காப்பியத்தில் சேவை யுணர்ச்சி நிறைந்தவர்களாகப் படைத்துள்ளார். அச் சேவை யுணர்ச்சி நிரம்பியவர்களுள் அனுமன் முதலானவனாகக் காணப்படு கிறான். இராம இலக்குவர் சீதா பிராட்டியைத் தேடும்படியான சமயத்தில் அனுமனைச் சந்திக்க நேர்கிறது. அனுமன் "கவ்வை யின்றாக நுங்கள் வரவு" என்று கூறி வரவேற்கிறான் சொல்லா லேயே இராமனுடைய மனத்தை அனுமான் கவர்ந்து விடுகிறான். 'சொல்லின் செல்வன்' என்ற பட்டமும் இராமனிடம் பெறுகிறான். அனுமான் தன்னை அறிமுகப்படுத்தின முறையும், இராமன் அன் பைப் பெருகச் செய்கின்றது. அஞ்சனை வயிற்றில் பிறந்தவனென் றும், அனுமன் என்பது தன் பெயரென்றும், தன் முக்கிய பணி, அரசனாகிய சுக்கிரீவனுக்கு ஏவல் செய்வதே என்றும் அனுமன் அறி முகப் படுத்திக் கொள்கிறான் அனுமனின் சொற்களைக் கொண்டு அனுமன் இப்படிப்பட்டவன் என்று இராமன் தெள்ளத்தெளிவாக உணர்ந்து விடுகிறான். அனுமன் ஆற்றலும், நிறைகுணமும் உடைய வன்; சகல கலைகளிலும் வல்லவன்; வேதங்களை நன்கு உணர்ந்த வன். ஆகவே, சொல்லின் செல்வனென இராமன் இலக்குவனிடம் கூறி அவனை அறிமுகப்படுத்துகிறான் இலக்குவன் மூலம் இராமன் பெருமையை அனுமான உணர்கிறான். இராமனுக்குச் சேவை புரி வதுதான் தன் வாழ்க்கையின் லட்சியமென உறுதி பூணுகிறான். தன் பேருருவை இராமபிரானுக்குக் காட்டுகிறான். அவனுடைய புயங்களுக்குப் பொன்னுருக் கொண்ட மேருமலையும் உவமை போதாது. அவனுடைய பேருருவக் காட்சி தருமத்தின் தனிமை யைத் தீர்க்கும் தன்மையாகவே தோன்றிற்று. அந்த உருவத்தைக் கண்ட இராமனும், 'நாள்படா மறைகளாலும், நவைபடா ஞானத் தாலும் கோள்படாப் பதமே இந்தக் குழுக்கொண்ட'தென்று புகழ்

கிறான். அனுமன் நட்பைப் பெற்றது பெரும் பாக்கியமென இராமன் கருதுகிறான். இதனாலேயே இராமன் பெருமையை நாம் உணர முடிகின்றது. அனுமனுடைய சொற்களே காப்பியத்தின் பலவிடங்களிலும் சிறப்பாக அமைகின்றது. சுக்கிரீவனிடத்தில் இராம இலக்குவரை அறிமுகப்படுத்தும் போதும், அசோகவனத்தில் சீதா பிராட்டியாரைச் சந்தித்துப் பேசிய சமயத்திலும், இராமனை அனுமன் விளிக்கின்ற காலத்திலும், அனுமானுடைய சொல்லின் திறமையைக் கம்பர் அற்புதமாக விளக்கியிருக்கிறார். சொல்லில் மட்டுமல்லாமலும் செயல் புரிவதிலும அனுமான் வல்லவன் தன் னலமற்ற சேவை புரிவதையே தன் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டவன் இராமனுடைய பணியை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாக அனுமன் திகழ்கிறான். இராம இராவண யுத்தத்தில் அனுமன் பெரும பங்கு வகிக்கிறான். முதலில் சீதையிடம் நற்பெயர் பெற்றுச் சிரஞ்சீவிப் பட்டம் பெறுகிறான். இந்திரசித்தனின் பிரமாஸ்திரததால எல்லோரும கட்டுண்டு உயிர் விடுகின்றனர். இலக்குவனும மயககமுற்று உயிர்விடுகிறான். இராமனும் மூர்ச்சை யடைகிறான் சாமபவான் வேண்டுகோளின் பேரில் அனுமன் பறந்து சென்று மருந்து மலையுடன் திரும்புகிறான். அதனால் எல்லோரையும உயிர் பெறச் செய்கிறான். அனுமனின் இச்செயல் என்றும அழியாதது. அனுமனின் இசசெயலை இராமன் பலவாறு புகழ்ந்து கூறுகிறான். 'உயிர்காதத உன் உதவிக்கு எங்கள் உயிரைக கொடுததாலும ஈடாகாது. பழியையும், பகையையும, எம குலப பெருமையையும் காததனை'யென்று இராமன் அனுமனைப புகழ்கிறான். இதைக் கமபர்,

'அழியுங் கால்தரும் உதவிககு ஐயனே'
மொழியுங் காலதரும் உயிரும முற்றுமே?
பழியும காததது, அரும பகையும் காததது எமை
வழியும் காததுநம மரபும் காத்தனை.'

என்னும் கவியில் அற்புதமாக விளக்குகிறார். இதுபோன்ற சேவையுணர்ச்சி நிறைந்த பல பாத்திரங்களை நாம கமபன் காவியத்தில் காணலாம். அடுததுப பெண் பாத்திரங்களை நோக்குவோம்.

## கற்புடைமை

கம்ப ராமாயணமே கற்பின் பெருமையை நிலைநாட்டுவதற்காக எழுந்தது ஆகும். கம்பர் காட்டும் மகளிர் அனைவரும் கற்புடைய மகளிர்களாகவே திகழ்கின்றனர். எல்லாப் பெண்டிரும் நற்குணங்களை யுடையவர்களாகவும், மனத்திண்மை யுடையவர்களாகவும், உள்ளத்தூய்மை யுடையவர்களாகவும் விளங்குகின்றனர். ஒவ்வொரு பெண் பாத்திரத்தையும் அழகுத் தெய்வமாகக் கம்பர் ஆக்கியுள்ளார். சூர்ப்பணகை போன்ற அரக்கியர்கள்கூட நல்லுருப்பெறும் வாய்ப்

பிணைக் கம்பர் அளித்துள்ளார். பொதுவாகக் கம்பர் காலப் பெண்கள் புற அழகும் அக அழகும் பெற்று அன்பின் அடிப்படையிலே அற வாழ்க்கை நடத்தினர். அவர்கள் கற்பின் வழியே கால மாரியும் பெய்தது. கம்பர் காட்டும் பெண்கள் ஒருவன் ஒருத்தி என்ற கொள்கையில் நின்றனர்; ஒத்த அன்புடனும், ஒத்த இயல்புடனும் கணவருடன் வாழ்ந்தனர்; இன்பதுன்பங்கள் அனைத்திலும் பங்கெடுத்தனர். இவ்வாறு கற்புடன் திகழ்ந்த அம் மகளிர் ஆண்களோடு சரிநிகர் சமமாக வாழ்ந்து, வாழ்க்கையிலும் பாதிப் பொறுப்பை ஏற்று நடத்தினர். இராமனைப் பெற்றெடுத்த கோசலாதேவி அருட்குணங்களைக் கொண்டவள்; எல்லா மக்களையும் தன் மக்களாகப் பாவிக்கும் பரந்த உள்ளம் கொண்டவள். கேகயர் கோன் மகள் கைகேயி நல்ல கட்டழகி; தசரதச் சக்ரவர்த்தியின் அசுவமேத யாகத்தில் கிடைத்த நற்பரிசு. சம்பராசுர யுத்தத்தில் கைகேயி தசரதனுக்குத் தேரோட்டியாகச் சென்று அவன் உயிரைக் காப்பாற்றுகிறாள். இதிலிருந்து அக்காலப் பெண்களின் வீரம் நமக்குப் புலப்படுகின்றது. சுமித்திரை சாதாரண மனைவியாக முதலில் காட்சியளிக்கிறாள். ஆனால் சொல்லிலும் செயலிலும் மிக்க ஆற்றல் படைத்தவள். இராமனுடைய உயிர்ச் சகோதரனை இலக்குவனைப் பெற்றெடுத்தவள். இராமன் கைகேயியின் வரத்தால் கானகம் செல்கிறான். இலக்குவனும் உடன் செல்லச் சுமித்திரையிடம் அனுமதி கேட்கிறான் சுமித்திரை தான் பெற்ற மகனை இராமனுக்கு அளிப்பதில் பெருமை கொள்கிறாள். அவள் இலக்குவனை வழியனுப்பும்போது கூறும் அறவுரைகள் அவளுடைய பெரும் பண்பை நமக்குத் தெற்றென விளக்கிக்காட்டுகின்றன.

"ஆகாதது அன்றால் உனக்கு அவ்வனம் இவ்வயோத்தி;
மாகாதல் இராமன் அம்மன்னவன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த்தாயர் நம் பூங்குழல் சீதை; என்றே
ஏகாய்! இனிஇவ் வயின்நிற்றலும் ஏதம்" என்றாள்

பின்னும் பகர்வாள், "மகனே இவன் பின்செல, தம்பி
என்னும் படியன்று, அடியாரினும் ஏவல் செய்தி!
மன்னும் நகர்க்கே இவன்வந்திடில் வா! அதன்றேல்
முன்னம் முடி" என்றனள் வார்விழி சோர நின்றாள்."

இராமன் பின்சென்று அடியவனைப்போல் ஏவல் செய்வாயாக; மற்றும் 'இராமனுக்கு முன் இறந்துவிடு' என்று சுமித்திரை கூறுவது அவள் இராமன்மேல் கொண்ட அன்பினை, நன்கு தெரிவிக்கின்றது. இராவணன் மனைவியாகிய மண்டோதரி கற்பின் நிலைக்களமாகத் திகழ்கிறாள். இராவணன் இறந்த பின்பு மண்டோதரி புலம்புவது, அவள் பாத்திரத்தை நமக்கு நன்கு விளங்கச் செய்கிறது.

கற்பு இருக்கும் இடத்தில்தான் காதல் தூய்மை பெற்று விளங்கும். காதல் தூய்மையினால்தான் வீர உணர்ச்சியும் பிறந்து

சிறக்கின்றது. இக்கருத்திற்கு இலக்கணமாகத் திகழ்பவள் சீதை ஆவள். சனகன் தவத்தால் சீதையைப் பெறுகிறன். திருமகளே சீதையாக வந்து அவதரித்தவள் ஆவள். சீதையின் அழகைப் பற்றிச் சித்திரிக்க வேண்டியதில்லை. 'அழகு இவளைத் தவம் செய்து பெற்றது காண்' என்று கம்பர் கூறுகிறர். ஆகவே அழகே உருவானவள் சீதை. சீதையின் குணங்களைப் பற்றியும் கூறவேண்டுவதில்லை. நற்குணங்கள் சீதையை அடையப் போட்டியிட்டன. இதைக் கம்பர், 'குணங்களை என் கூறுவது கொம்பினைச் சேர்ந்து அவை உய்யப் பிணங்குவன' என்று அற்புதமாகக் கூறியுள்ளார். சாதாரணமாக ஒரு பெண்ணின் அழகை மற்றொரு பெண் கண்டு வியக்கமாட்டாள். ஆனல் சீதையின் அழகைக் கண்டு மற்ற பெண்களும் மயங்கினர். பஞ்சவடியில் சீதையின் அழகைக் கண்ட சூர்ப்பணகை மதி மயங்குகிறள். சீதையின் அழகுத் தன்மையை மிகவும் கூர்ந்து பார்த்து, 'மதிப்பிற்கும் மிகுந்த இவள் அழகிற்கு எல்லையில்லை' என்கிறள். பிறபொருளினை நோக்காமல் சீதையையே நோக்கியிருந்த சூர்ப்பணகை, 'எனக்கே இங்ஙிலை ஏற்பட்டால், பிற ஆடவர் கண்டால் எத்தன்மையுறுவர்!' என எண்ணிப் பார்க்கிறள். இதைக் கம்பர்,

> பணபுற நெடிது நோக்கிப் 'படைக்குநர் சிறுமை அல்லால்
> எண்பிறங்கு அழகிற்கு எல்லை இல்லையாம்' என்று நின்றாள்;
> கண்பிற பொருளில செல்லா, கருத்து எனின் அஃதே; கண்ட
> பெண்பிறந் தேனுக் கென்றால் எனபடும் பிறருக்கு' என்றாள்.

என்னும் கவியில் அழகாகச் சித்திரிக்கின்றார்.

> 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்.'

என்ற குறள்நெறிக் கேற்பச் சீதை வாழ்ந்து வருகின்றாள். கைகேயியின் வரத்தால் கணவன் கானகம் செல்ல நேர்கின்றது. விடை கொள்ளச் சீதையிடம் வருகிறன். கானகத்தின் கொடுமையைக் கூறி 'நீ வருந்தலை நீங்குவன்யான்' என்று கூறுகிறன். இதைக் கேட்ட சீதைக்கு, கானகத்தின் கொடுமையைவிட அவன் கூறிய சொற்கள் கொடுமையாகத் தெரிகின்றன. இதனல் சீதை, இராமன் பால் கொண்டிருந்த பேரன்பு வெளிபபடுகின்றது. சீதையின் கற்புத்திறத்தையும், வீரத்தையும் அனுமன் வாயிலாக நாம் அறிகிறோம். அனுமன் தூது சென்று மீண்டும் இராமனிடம் வருகிறன். 'கண்டனன் கற்பினுக்கு அணியை' என்று எடுத்த எடுப்பில் கூறுகிறன். சீதையின் கற்பினல் விண்ணுலக மாதரும் மிக்க சிறப்பினை எய்தினர் என்று கூறுகிறன். மற்றும்,

> 'இற்பிறப்பு என்பது ஒன்றும் இரும்பொறை யென்பது ஒன்றும்
> கற்பெனும் பெயரது ஒன்றும் களிநடம் புரியக் கண்டேன்.'

என்று கூறுகிறான். அனுமன் கூற்றினால் சீதையின் உயர்குடித் தன்மை, பொறுமை, கற்பு முதலியவற்றை நாம் அறிகிறோம். மற்றும் மாயாசனகப் படலத்தில் சீதை மாயாசனகனை நோக்கிக் கோபாவேசத்துடன், 'அறங்கெட வழக்கு நீங்க...' இனைய சொன்னாய்—சனகன்கொல், நீயும்...'என்று கூறுகிறாள். இதனால் சீதையின் வீரத்தன்மை நமக்குப் புலப்படுகிறது.

சீதை அறமே உருவானவள்; அறநெறி என்றும் தவறாதவள். இராமன் கூடச் சீதையுடன் இருந்தபொழுது அறநெறி தவறாமல் இருந்தான். சீதை பிரிந்திருந்த பொழுதே, அறநெறி கடந்தனன் என்று சிலர் வாதிக்கும் வாலிவதை, தாடகைவதை முதலியன நிகழ்கின்றன. இதை வாலியும் இராமனிடம் கூறும்பொழுது குறிப்பிடுகிறான். இதனால் சீதையின் சீர்மையை நாம் மேலும் கண்டு சிறக்க முடிகின்றது. வாலி இராமனிடம் சீதையின் சிறப்பைப் பற்றிக் கூறுவதைக் கம்பர்,

'ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலும் செய்கை.'

என்னும் அடிகளில் நன்கு அமைத்துள்ளார்.

கற்புத் தெய்வமாகக் காவியம் முழுவதும் சீதை விளங்குகிறாள். கம்பர் படைத்த பாத்திரங்களை முழுதும் அறிந்துணர்தல் முடியாததாகும். நான் ஓரளவு ஓதி உணர்ந்துள்ளேன். அவைகளையே மேற்கண்டவாறு எழுதி முடித்துள்ளேன். பொதுவாகக் கம்பராமாயணத்தில் சகோதரத்துவம், சேவையுணர்ச்சி, கற்புடைமை ஆகியவைகளே பெரும்பான்மையும் மிளிரக் காண்கிறோம்.



1. **கருத்துரை:** எல்லா உலகங்களும் உண்டாகுமாறு படைத்தலும் காத்தலும் அழித்தலும் ஆகிய முத்தொழிலையும் திருவிளையாட்டாகச் செய்பவரே அனைத்துலகிற்கும் தலைவர் ஆவர். அத்தலைவருக்கே நாங்கள் அடைக்கலப் பொருளாக இருக்கின்றோம்.

**(அரும்பத உரை):** அலகு இலா : அளவில்லாத, நிலைபெறுத்தல் : காத்தல்; உலக மென்பது பல நூல்களிலும் முதலாக வைத்து ஆண்ட மொழி; அவ்வாறு ஆண்டதைப பெரியபுராணம், மணிமேகலை, திருமுருகாற்றுப்படை முதலிய நூல்களில் காண்க.

2. **(க - ரை):** ஒருவன் செய்யும் காரியம் புகழும் நன்மையும் தரத்தக்கதாய் இருக்கவேண்டும். இராமன் கதையைக் கூறவந்த என்னை உலகம் இகழும்; எனக்குக் குற்றமே விளையும் என்பதை அறிந்திருந்தும் கூறுவது ஏதனால் என்றால், நல்ல கேள்வியறிவுடைய புலவர்கள் பாடிய தெய்வக் கவியின் உயர்வைத் தெரிவிப்பதற்காகவே ஆகும்.

**(அ—ரை)** மாசு : குற்றம், பொய் இல் கேள்வி : மெய்யான கேள்வியறிவு; மாட்சி : பெருமை.

'கேட்டினும் உண்டோர் உறுதி' என்ற திருக்குறளையும், 'வண்மையில்லை, ஓர் வறுமை இன்மையால்' என்ற இந்நூல் (நாட்டுப் படலம்-9) பாடலையும் இங்கு ஒப்பு நோக்குக.

3. **(க - ரை):** வடமொழியில் இராமன் கதையைச் செய்த வான்மீகி, வசிட்டர், போதாயனர் என்ற மூவர் நூல்களிலும் எந்த எந்த இடத்தில் எவர் கருத்துச் சிறக்கின்றதோ, அவர் கருத்தைத் தழுவி இக்கதையை நல்ல தமிழ்ச் செய்யுட்களால் நான் அமைத்துள்ளேன்.

**(அ—ரை):** இது கவிக்கூற்று. தேவபாடை : தேவர் பேசும் மொழி; அது வடமொழி (Sanskrit). முந்திய நாவினோர் : சிறந்த கருத்தை உரைத்தவர்.

4. **(க-ரை):** திருமாலின் பத்து அவதாரங்களினுள்ளும், இராமன் என வரும் மூன்று அவதாரங்களில், இடையில் தோன்றியதாகிய ஸ்ரீராமன் அவதாரம், இராமாவதாரம் என்னும் பெயரோடு, சடையப்ப முதலியாரது திருவெண்ணெய் நல்லூரில் பாடியதாகும்.

**(அ—ரை):** தோற்றம் : பிறப்பு, அவதாரம்; தொடை : பாடல்; தொன்மை : பழமை; மூன்று அவதாரங்கள்: பரசுராமன், ஸ்ரீ ராமன், பலராமன்.

குறிப்பு: நாயகன் தோற்றத்தின் இடைநிகழ்ந்த நடையின் நின்று உயர் இராமன் என்று பொருள் கொள்வதே முறை. ஏனெனில் நடையில் நின்று உயர் என்ற தொடர் மக்கள் நடக்கவேண்டிய முறைகளைத் தன் ஒழுக்கத்தால் நடந்து காட்டிய இராமன் என்ற முக்கியமான கருத்தைத் தெரிவிக்கின்றது.

அதனால் இராமன் ஒரு வழிகாட்டி (Ideal Man) என்பதும் குறித்தவாறும்.

# பால காண்டம்

## பாயிரம்

1. உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும் நீங்கலா
அல(கு)இ லாவிளை யாட்டுடை யார்அவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே.

2. வையம் என்னை இகழவும், மா(சு)எனக்(கு)
எய்த வும்,இ(து) இயம்புவ(து) யாதெனில்,
பொய்இல் கேள்விப் புலமையி னோர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே.

3. தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவர் ஆனவர் தம்முளும் முந்திய
நாவி னார்உரை யின்படி, நான்தமிழ்ப்
பாவி னால்இ(து) உணர்த்திய பண்(பு); அரோ.

4. நடையின் நின்(று)உயர் நாயகன் தோற்றத்தில்
இடைநி கழ்ந்த,இ ராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தொல்லைநன் மாக்கதை,
சடையன் வெண்ணெய்நல் லூர்வயின் தந்ததே.

5 (க - ரை): ஆடவரும் மக்களும் நெறிபிறழாத நேர்மை யின் ஒழுகும் அறத்தாறு உடைய கோசல நாட்டை அலங்கரிக்கும் சரயூநதியின் அழகிய இயல்பைக் கூறுகின்றேன்.

(அ—ரை): ஆசு : குற்றம்; அலம் : துன்பம; ஐம்பொறி : மெய், வாய், கண், மூக்கு, செவி; காசு : இரத்தின ஆபரணங்கள்; பூசல் : போர்.

விளக்கவுரை: ஐம்பொறிகளும் தீய வழியிற் சென்ருல் பிறருக்குத் துன்ப மும் தமக்குக் குற்றமும் விளையுமாதலால் அந்நாட்டு ஆடவர் அவற்றை நல்வழி யிலேயே செலுத்துகின்றனர். மகளிர் நெறியிற் பிறழாமையை அவர்கள் கண் களின்மேல் வைத்துக் கூறினர். அவ்வாறு கூறவே ஏனைய பொறிகளும அடங்கும். 'காசலம்பு முலையவர்' எனப் பிரித்துக் கூறியதால் 'ஆசலம்புரி-ஐம்பொறி' யென்றது ஆடவர் மேல் நிற்பதாகும்.

6. (க - ரை): சிவபெருமானது மாமனுராகிய இமயமலை சூரியனுல் வெப்பமடைந்தது. அதை நீக்க நீரினுல் நீராட்டுவோ மென்று கடல் எழுந்ததைப்போல் மேகங்கள் அம்மலையின்மேல் பரவிப் படிந்தன.

(அ—ரை): பம்பி : அடர்ந்து; பானு : சூரியன்; நம்பன் : சிவபெருமானுக்கு ஒரு பெயர்; மாதுலன் : மாமன்; அமு : தண்ணீர்; இமபர் : இவ்வுலகம், வாரி : கடல்.

இயல்பின் விளைவதற்கு வேறு காரணங் கூறியதால் இதைத் தற்குறிப் பேற்ற அணி என்பர்.

7. (க - ரை): மலையில் தோன்றி, இடையில் பலபலவாகப் பிரிந்து கடைசியில் கடலிற் கலக்கும் ஆற்றிற்குச் சமயநெறி உவ மானம் கூறப்படுகிறது. முதலில் ஒன்ருக இருந்த சமயம் பல திறப்பட்ட ஆன்மாக்களின் நிலைமைக்கும், இடம், சுற்றம் ஆகிய வற்றிற்கும் ஏற்றவாறு பல மதங்களாகப் பிரிந்து, கடைசியில் ஒரே முடிவை அடைகின்றது. எல்லா மதங்களுக்கும் தலைவ னுவான் ஒரே கடவுள்.

கடல் கடவுளுக்கும், நதி சமயங்களுக்கும் உவமானம்.

(அ—ரை): கல் : மலை; நீத்தம் : வெள்ளம,நதி; எல்லையில்: அளவில்லாத, தொல்லை : பழைமை, முதல்; சூழ்ச்சி : ஆராய்ச்சி.

8. (க - ரை): அவ்வாறு பரந்த நதி பூமியின் பல பாகங்க ளிலும் பாய்ந்து அவற்றைக் காத்து வருகிறது. உயிர் உடம்பைப பாதுகாத்து வருவதைப் போல் ஆறும், ஒவ்வோர் இடத்திலும பாய்ந்து அந்த இடங்களை எல்லாம் செழிப்பாக்கிக் காத்து வருகிறது. இறுதி அடியின் கருத்து, மேற்கூறியதே யாகும்.

(அ—ரை). தாது உகு : மகரந்தத்தைச் சொரிகின்ற; போது அவிழ்: பூ மலர்ந்த; மணற்றடங்கள் : மணல் திடல்கள்; மாதவி : ஒருவகைக்கொடி. பூகம் : கமுகு.

## ஆற்றுப் படலம்

5 ஆ(சு)அ லம்புரி ஐம்பொறி வாளியும்
கா(சு)அ லம்பு முலையவர் கண்எனும்
பூசல் அம்பும, நெறியின் புறம் செலாக்
கோச லம்புனை ஆற்றணி கூறுவாம்.

6. பம்பி மேகம பரந்தது 'பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்;
அம்பின் ஆற்றுதும்' என்(று)அகல் குன்றின்மேல்
இம்பர் வாரி எழுந்தது போன்றதே.

7. கல்இடைப் பிறந்து போந்து
கடல்இடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைகளாலும்
இயம்பரும் பொருள்ஈ(து) என்னத்
தொல்லையில் ஒன்றே ஆகித்,
துறைதொறும், பரந்த சூழ்ச்சிப்
பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும்போல் பரந்த(து); அன்றே.

8. தா(து)உகு சோலை தோறும்,
சண்பகக் காவு தோறும்
போ(து)அவிழ் பொய்கை தோறும்,
புதுமணற் றடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூக
வனந்தொறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும்
உயிர்என உலாய(து) அன்றே.

**9. (க - ரை): ஒரு சுலோகத்தின் ஓர் அடியை எடுத்துவிட்டு, வேறு சொற்களால் அவ்வடியை நிரப்பினும் அது சிறப்புடைய தாகாது என்று சொல்லும்படி வான்மீகி இனிய சுலோகங்களால் கோசல நாட்டு வளத்தைப் புகழ்ந்து பாடியிருக்கிறார். அவ்வாறு அவர் பாடியதை இராமனிடத்திலுள்ள அன்பாகிய கள்ளையுண்டு நான் மொழியத் தொடங்குகிறேன்.**

(அ—ரை): நறவம் : கள்; மாந்தி : குடித்து; மூங்கை : ஊமை.

10. மருதநில வளம்.

மருதம் : வயலும் வயல் சார்ந்த இடமும்.

(க - ரை): செழிப்போடு காணப்படும் மருத நிலத்தின் தோற்றம், ஓர் அரசன் கொலு வீற்றிருப்பதைப் போலும் என்பது இப்பாடலின் கருத்து.

தாமரைகள் விளக்குகளை ஏந்தவும், மேகங்கள் வாத்தியங்களை வாசிக்கவும், மகரயாழ் வாசிப்பது போல் வண்டுகள் பாடவும், அலைகள் திரைச் சீலைகள் போல் தோன்றவும் மயிலாகிய நாட்டிய மாது ஆட, குவளைகளாகிய கண்களால் அவையினர் விழித்துப் பார்க்கவும், மருதமாகிய அரசன் கொலுவீற்றிருக்கிறான்.

(அ—ரை): தண்டலை : சோலை; கொண்டல் : மேகம்; ஏங்க : ஒலிக்க; எழினி : திரைச்சீலை, தேம்பிழி : தேன் (பிழிந்தெடுக்கக் கூடியது).

11. (க - ரை): குளங்களில் தாமரை மலர்களும் அவற்றில் அன்னக் குஞ்சுகளும் இருக்கின்றன. அங்கு வந்த எருமைகள் பாலைச் சொரிந்ததால் அக்குளம் பாலொடு கலந்த நீருடையதாயிற்று. அப்பாலை, அன்னக்குஞ்சுகள் பிரித்து உண்கின்றன. தாம் தாலாட்ட அக்குஞ்சுகள் தாமரைத் தொட்டிலில் தூங்கும்படி தவளைகள் தம் ஒலியினால் அவற்றைத் தாலாட்டுகின்றன.

(அ—ரை): சேல் : மீன்; உண்ட : உவமவாசகம்; மாலுண்ட நளினம் : பெருமையுடைய தாமரை; பள்ளி : படுக்கை; மேதி : எருமை; உள்ளி : நினைத்து; சோர்ந்த : வடிந்த; தேரை : தவளை; பண்ணை : வயல்; மருதம்.

## நாட்டுப் படலம்

### கோசலநாட்டு வளம் கூறுவது

9. வாங்கரும் பாதம் நான்கும்
வகுத்தவான் மீகி என்பான்
தீங்கவி செவிகள் ஆரத்
தேவரும் பருகச் செய்தான்;
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை,
அன்பெனும் நறவம் மாந்தி
மூங்கையான் பேசல் உற்றான்
என்ன,யான் மொழியல் உற்றேன்.

10. தண்டலை மயில்கள் ஆடத்,
தாமரை விளக்கம் தாங்கக்,
கொண்டல்கள் முழவின் ஏங்கக்,
குவளைகண் விழித்து நோக்கத்,
தெண்திரை எழினி காட்டத்,
தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட,
மருதம்வீற்(று) இருக்கும் மாதோ.

11. சேல்உண்ட ஒண்க ணாரின்
திரிகின்ற செங்கால் அன்னம்,
மால்உண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை,
கால்உண்ட சேற்று மேதி
கன்றுஉள்ளிக் கனைப்பச், சோர்ந்த
பால்உண்டு துயிலப், பச்சைத்
தேரைதா லாட்டும் பண்ணை.

12. அந்நிலத்துள்ளார் செயல் கூறப்படுகிறது.

(க - ரை): தங்களுக்கு உரிய மகளிரோடு ஆடவர்கள் கலந்து மகிழ்கிறார்கள். பருந்து செல்லும் வழியில் நிழலும் தொடர்ந்து செல்வதைப்போல் இசையும் இயலும் (பொருளும்) இணைந்த பெரியோர்கள் செய்யும் பிரசங்கத்தைக் கேட்டு மகிழ்கிறார்கள்; திருவிழா முதலிய காலங்களில் வீட்டிற்கு வரும் விருந்தினர் முதலியவர்களை வரவேற்று உபசரிக்கிறார்கள்.

(அ—ரை) வதுவை : திருமணம்; இயல் இசை : இயலும் இசையும், மாந்துதல் : குடித்தல்; மருந்து : தேவாமிர்தம்; அன்ன : அப்படிப்பட்ட, மேலான.

13. முல்லைநில வளம்.

முல்லை : புன்செய் நிலமும், அதைச் சார்ந்த இடமும்; (காடும் காட்டைச் சார்ந்த இடமும்). இதில் முல்லைநில மகளிர் செயல் கூறப்படுகிறது.

(க - ரை): தோய்ந்த தயிரைக் கடையும்பொழுது மத்தின் ஓசை தெரியாதபடி கைவளையல் ஓசை அதிகரிக்கவும், மிகவும் சிறிய இடையானது வளைந்து அசையவும், இடையர் மகளிர் தயிர் கடைகின்றார்கள்.

(அ—ரை). வெள்வளை : வெள்ளிய சங்கு வளையல்; அரற்ற : ஒலிக்க.

குறிப்பு. அங்கை வருந்துதல் என்ற பொதுவினை, மேற்கூறியவற்றுள் தயிர் கடைதல் என்ற சிறப்புவினையைத் தழுவி நின்றது.

14. மாதர் இயல்பு கூறப்படுகிறது.

(க - ரை): கல்வியும் செல்வமும் ஒருங்கே பெற்றிருத்தலால் ஏழை எளியவர்களுக்கு உதவுதலும், பிரசங்கம் புரிதலும் கேட்டலும், இன்னிசை விருந்து அளித்தலும் ஆகியவற்றைத் தவிர அந்நாட்டு மகளிருக்கு வேறு வேலையே இல்லை.

(அ—ரை): பெருந்தடங்கண் : பெரிய விசாலமான கண், பிறைநுதல் : பிறை போன்ற நெற்றி; வைகலும் : நாடோறும்.

குறிப்பு : செல்வம் பெற்றதன் பயனை ஏழைகளுக்கு உதவுதலும், கல்வி கற்றதன் பயனை செவிக்கு விருந்தளித்தலும் ஆகும்.

15. அந்நாட்டின் வேறுபல வளங்கள்.

(க - ரை): கடல் வழியாகக் கப்பலிலிருந்து அளவற்ற நிதியங்கள் குவிகின்றன; விளை நிலங்களிலிருந்து வரும் வளங்கள் நிறைகின்றன; சுரங்கங்களிலிருந்து விலையுயர்ந்த இரத்தினங்கள் கிடைக்கின்றன; எல்லாக் குலத்தினரும் தேசீய ஒழுக்கப்படி நடக்கின்றனர்.

குறிப்பு : நல்லொழுக்கமுடைய மாந்தர் வசிப்பதால் நாட்டிற்குப் பெருமையென்பது கடைசி அடியில் கூறப்படுகிறது. அது புறநானூற்றின், 'நாடாகொன்றோ' என்னும் பாட்டின் கருத்தமைந்தது.

(அ—ரை): கலம் : கப்பல்; பிலம் : சுரங்கம்.

12. பொருந்திய மகளி ரோடு
வதுவையில் பொருந்து வாரும்;
பருந்தொடு நிழல்சென்(று) அன்ன
இயல்இசைப் பயன்துய்ப் பாரும்;
மருந்தினும் இனிய கேள்வி
செவிஉற மாந்து வாரும்;
விருந்தினர் முகங்கண்(டு) அன்ன
விழாஅணி விரும்பு வாரும்.

13. தோயும் வெண்தயிர் மத்(து)ஒலி துள்ளல்போய்
மாய, வெள்வளை வாய்விட்(டு) அரற்றவும்,
தேயும் நுண்இடை சென்று வணங்கவும்,
ஆயர் மங்கையர் அங்கை வருந்துவார்.

14. பெரும்த டங்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்(கு) ஈதலும், வைகலும்
விருந்தும் அன்றி, விளைவன யாவையே.

15. கலம்சு ரக்கும் நிதியம்; கணக்கிலா
நிலம்சு ரக்கும் நிறைவளம்; நன்மணி
பிலம்சு ரக்கும்; பெறுதற்(கு) அரியதம்
குலம்சு ரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்.

**16.** **(க - ரை) :** அந்நாட்டில் அனைவரும் அழகுடைமையால் எங்கும் பொலிவுடைமையே தோன்றுகிறது. மக்கள், போலி ஒழுக்கமில்லாத உண்மை ஒழுக்கமுடையவராக இருத்தலினால் நீதி நிலவுகின்றது. அந்நாட்டு மகளிர் அன்புடையவராய் இருத்தலால் பல அறங்களும் நிகழ்கின்றன. அவர்கள் கற்புடைமையினால் பருவ காலங்களில் தவறாது மழை பெய்கிறது.

**(அ—ரை):** பொற்பு : அழகு; பொலிவு : பிரகாசம்; நிற்றல் : ஒழுக்கம்; இப்பொருள்படுவதை, 'நிற்க அதற்குத் தக' என்னும் குறளிலும் காணலாம்; அற்பு : அன்பு (வலித்தல் விகாரம்).

**17.** **(க - ரை) :** அந்நாட்டில் பொய் பேசுவோர் இன்மையால் உண்மையென்று ஒன்று இல்லை. பகைஞரே இல்லாமையினால் வலிமையென்று ஒன்று இல்லை. ஏழைகள் ஒருவரும் இன்மையால் ஈகையென்று ஒன்று இல்லை. அனைவரும் கற்றிருத்தலால், 'அறிவுடைமை' யென்று ஒன்று இல்லை.

**(அ—ரை):** திண்மை:வலிமை; செறுநர் : போர்புரிவோர்; வண்மை . ஈகை; வெண்மை: மதிநுட்பம்.

**18.** அயோத்திமா நகரத்தின் சிறப்புக் கூறப்படுகிறது.

**(க - ரை) :** இந் நகரத்தைப் போல் ஒரு நகரம் தேவலோகத்திலும் இல்லை. நிலைபெற்ற அருளையும் தருமத்தையும் தங்களுக்குத் துணையாகக் கொண்டு பெருந்தவஞ் செய்த ஞானிகளாகிய மேலோர்கள் யாவரும் தங்களுக்குப் பற்றுக்கோடாக அடைதற்குரிய திருமாலே இந்நகரில் வந்து பிறந்து அளவற்ற காலம் வீற்றிருந்ததால், இதைப் போன்ற உயர்ந்த நகரம் தேவலோகத்திலும் இல்லை.

**19.** அந்நகர் மதிற்கோபுர வாயிலின் சிறப்பைக் கூறுவது.

**(க-ரை) :** மக்கள் அறிவினால் அளந்து அறிய முடியாத தன்மையுடைமையால் கோபுரம் வேதத்தை ஒக்கும். வானுலகிற் புகுதலால் அது தேவரை ஒக்கும். *பொறிகளை அடக்கிய தன்மையினால் முனிவர்களை ஒக்கும். யாவரும அடைதற்கரிய காவலையுடைமையால் கலைமானை வாகனமாகக் கொண்ட துர்க்கையை ஒக்கும்· உச்சியில் சூலம் நட்டிருப்பதால் காளியை ஒக்கும். எவரும் தன்னை அடைய முடியாத தன்மையால் கடவுளையும் ஒக்கும்.

*பொறியடக்குதல் : முனிவர்கள் ஐம்பொறிகளை அடக்குதலினாலும், மதில் பல யந்திரங்களைத் தன்னிடத்து அடக்கியுள்ளமையினாலும் மதிலுக்கு முனிவர் உவமை.

**(அ-ரை) : கலை ஊர்கன்னி: கலைமான் வாகனம் கொண்ட துர்க்கை.**

16. பொற்பின் நின்றன பொலிவு; பொய்இலா
நிற்பின் நின்றன நீதி; மாதரார்
அற்பின் நின்றன அறங்கள்; அன்னவர்
கற்பின் நின்றன கால மாரியே.

17. வண்மை இல்லை,ஓர் வறுமை இன்மையால்,
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லைபொய் யுரைஇ லாமையால்;
வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்.

## நகரப் படலம்

18. தங்குபேர் அருளும் தருமமும் துணையாத்
தம்பகைப் புலன்கள்ஐந்(து) அவிக்கும்
பொங்குமா தவமும் ஞானமும் புணர்ந்தோர்
யாவர்க்கும் புகலிடம் ஆன
செம்கண்மால் பிறந்(து)ஆண்(டு) அளப்பரும் காலம்
திருவின்வீற் றிருந்தமை தெளிந்தால்
அம்கண்மா ஞாலத்(து) இந்நகர் ஒக்கும்
பொன்னகர் அமரர்நாட(டு) யாதோ!

19. மேவரும் உணர்வின் முடி(வு)இலா மையினல்
வேதமும் ஒக்கும்;விண் புகலால்
தேவரும் ஒக்கும்; முனிவரும் ஒக்கும்
திண்பொறி அடக்கிய செயலால்;
காவலில் கலைஊர் கன்னியை ஒக்கும்;
சூலத்தால் காளியை ஒக்கும்;
யாவரும் தன்னை எய்துதற்(கு) அரிய
தன்மையால் ஈசனை ஒக்கும்.

20. அந்த நகரில் சில மண்டபங்கள்.

**(க - ரை) :** கப்பம் அளக்கும் மண்டபங்களும் நாட்டிய மாடும் மண்டபங்களும் வேதம் அத்தியயனம் செய்யும் மண்டபங்களும் கலைகளின் உண்மைக் கருத்துக்களைத் தெரிதற்குரிய பட்டிமண்டபங்களும் பிறவும் அங்குள்ளன.

**(அ—ரை):** திறை : கப்பம்; உன்னரும : நினைப்பதற்கருமையான; பன்னரும் : சொல்லுதற்கரிய; தெரிதல் : ஆராய்ந்தறிதல்.

குறிப்பு: இவ்வாறு பட்டி மண்டபம் தமிழ்நாட்டில் பண்டுதொட்டே இருந்தமையை, 'ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள்-பட்டிமண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்' என வரும் மணிமேகலையாலும அறியலாம். இலங்கையில் பட்டிமணடபம இருந்ததை, யுதகாண்டம 'ஊர்தேடு படலத்தில்' கம்பர் கூறுகிறார்.

21. **(க - ரை) :** மேகத்தின் ஒலியினும் கடல் ஒலியினும் மிக்கொலிக்கும் முரச வாத்தியத்தையுடைய அந் நகரில் கள்வர் யாரும் இல்லாமையினால் காவலே இல்லை. இரப்போர் இன்மையால் கொடையாளிகளும் இல்லை.

**குறிப்பு:** இப்பாட்டின் பின் இரண்டடிகளின் கருத்து, முன் கண்ட, 'வண்மை இல்லை, ஓர் வறுமை யின்மையால்' என்ற பாடலின் கருத்தோடு ஒப்பிடத்தக்கது.

**(அ—ரை):** தெள் : தெளிவான; வார் . நெடிய, வள்வார்முரசம் தோலால் இறுக்கிக் கட்டிய முரசம; கள்வார் திருடர்.

22. அந்நாட்டின் கல்வியும் செல்வமும்.

**(க - ரை) :** அந் நகரத்தில் ஆண் பெண் அனைவரும் கற்றறிந்தவர்களாக இருத்தலால், கற்றவரும் கல்லாதவரும் அங்கில்லை. எல்லாவிதச் செல்வங்களும் எல்லாருக்கும் பொருந்த இருத்தலால் அங்கு ஏழைகளும் இல்லை; பணக்காரர்களும் இல்லை.

**குறிப்பு:** இப்பாடலின் கருத்து முற்கூறிய (நாட்டுப்படலம் -17) பாடலோடு ஒக்குமேனும் சொல்லமைப்பில் வேறுயுள்ளது.

23. கல்வியின் சிறப்பு இப்பாடலில் கல்வியை ஒரு விருட்சமாக உருவகித்து, அதற்குரிய அங்கங்களையும் அமைத்திருப்பது போற்றற்குரியது.

**(க - ரை) :** ஒன்றாகிய அடிப்படையிலிருந்து கல்வியாகிய முளை கிளம்பி வளர்ந்து, கேட்டறிவதாகிய கிளைகள் பரப்பி, தவமாகிய இலைகள் தழைத்து, அன்பாகிய அரும்பு அரும்பித் தருமமாகிய பூவை உடையதாகிச் செல்வம்ஈட்டி நுகர்வதற்குரிய போகமாகிய பழம் கனிந்துள்ளது.

**விளக்கம் :** கல்வியானது பலரிடத்தில் கேட்டறிவதால் விரிவு பெறும். இதன் பயனாகத் தவமும் அன்பும் அறமும் உடையவராய் இருக்க வேண்டும். அறத்தாற்றில் பொருள் ஈட்டிச் செல்வத்தானாய பயனைத் துய்க்க வேண்டும் என்பதே கல்வியின் பயன் என முடித்துக் கூறியவாறு.

**(அ—ரை):** ஏகம் : ஒன்று; பணை : பெருங்கிளை (வாது); சாகம் : இலை.

20. மன்னவர் தருதிறை அளக்கும் மண்டபம்;
அன்னமென் நடையவர் ஆடும் மண்டபம்;
உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்;
பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்.

21. தெள்வார் மழையும் திரைஆழி யும்உட்க, நாளும்
வள்வார் முரசம் அதிர்மா நகர் வாழும் மாக்கள்
கள்வார் இலாமைப் பொருள்காவ லும்இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்க ளும்இல்லை; மாதோ.

22. கல்லாது நிற்பார் பிறர்இன்மையின், கல்வி முற்ற
வல்லாரும் இல்லை; அவைவல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெரும்செல்வமும் எய்த லாலே
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை; மாதோ.

23. ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்(து) எண்ணில் கேள்வி
ஆகும் முதல்திண் பணைபோக்கி, அரும் தவத்தின்
சாகம் தழைத்(து) அன்பரும்பித், தருமம் மலர்ந்து,
போகம் கனிஒன்று பழுத்தது போலும் அன்றே.

## தசரதனின் அரசாட்சி முறையைக் கூறுவது

**24.** **(க - ரை) :** *தசரதன் தன் குடிகளிடம் அன்பைச் செலுத்துவதால், அவர்களுக்குத் தாயை ஒப்பான்; நன்மைகளைச் செய்வதால் தவத்தை ஒப்பான்; சொர்க்காதிபோகம் நுகர்வித்தலால் புதல்வனை ஒப்பான்; அவர்களைத் துன்புறுத்துவது, நல்வழியிற் செலுத்துதற் பொருட்டே யாகும். தங்களைத் தாங்களே காத்துக்கொள்ளுமாறு செய்தலால் அரசன் அவர்களின் அறிவை ஒப்பான்.*

**விளக்கம் :** *'வேண்டிய வேண்டியாங்கு எய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப்படும்' என்பது திருக்குறளாகையால், நலம் பயக்கும் என்பதற்கு, 'வேண்டிய நன்மைகளை வேண்டியவாறே அடைகின்றனர்' என்று பொருள் கூறப்பட்டது.*

**(அ—ரை)** நலம் : நன்மை, சேய் . மகன்; நுணங்கு : நுட்பமான.

**25.** *தசரதன் அரசாட்சியின் பெருமை கூறப்படுகிறது.*

**(க - ரை) :** *மிக்க புகழையுடைய தசரதன் என்னும் பெயரோடு கூடிய அரசனுவான், நாள்தோறும பலவாருக ஓடித்திரியும் பின்கண்ட பொருள்கள் தன் ஆட்சி முறையால் ஒரே வழியில் செல்லுமாறு ஆட்சி புரிகின்ருன்.*

**வெள்ளம்:** *மும்மாரி பெய்தும் ஒரே வழியில் ஓடி நலம் பயந்ததே அன்றிப் பல வழியில் ஓடி நஷ்டம் விளைவிக்கவில்லை.*

**பறவைகள்:** *செழிப்புக்குக் குறைவின்மையால் இடம் விட்டு இடம் மாருமல் ஒரே இடத்தில் ஒரே போக்கில் வாழ்க்கையை நடத்தின.*

**விலங்குகள்:** *காட்டு வழியாகிய ஒரே வழியில் ஓடின. நாட்டு வழியில் புகுந்து தீமை புரியவில்லை.*

**வேசையர் உள்ளம்:** *அரச தண்டனைக்கஞ்சிக் காதற்பரத்தையராய் ஒருவனிடமே வாழ்ந்தனர்.*

**(அ—ரை):** வள் தோல்; உறை . கவசம; அயில் வேல்

**26** *இதுவும் அது.*

**(க - ரை):** *தசரதன் தன் குடிமக்களையெல்லாம் தன்னுயிராக எண்ணிப் பாதுகாத்து வந்தான். இரத்தினங்கள் பதித்த ஆபரணங்களை அணிந்த சிங்கம் போலும் வலிய தோளையுடைய தசரதன், உலக மக்களையெல்லாம் தன்னுயிராகக் கருதிப் பாதுகாத்ததனுலே, அவற்றிற்கு ஓர் உடம்புபோல் இருந்தான்.*

*புறநானூற்றின், 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்னும் கருத்தை மாற்றி, அரசனைவிடக் குடிகளுக்கே ஏற்றம் காட்டிக் கம்பர் அமைத்திருப்பது பாராட்டுதற்குரியது.*

**(அ—ரை): வயிரம் : ஒருமணி; வாள் : ஒளி; மடங்கல் : சிங்கம்; செயிர் இலா : குற்றமில்லாத.**

## அரசியல் படலம்

24. தாய்ஒக்கும் அன்பில்;
தவம்ஒக்கும் நலம்ப யப்பில்;
சேய்ஒக்கும் முன்னின்(று)ஒரு
செல்கதி உய்க்கும் நீரால்;
நோய்ஒக்கும் என்னின்
மருந்(து)ஒக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால்
அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்

25. வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர்
உள்ளமும் ஒருவழி ஓட நின்றவன்;
தள்ளரும் பெரும்புகழ்த் தயர தப்பெயர்
வள்ளல்;வள் உறைஅயில் மன்னர் மன்னனே.

26. வயிரவாள் பூண்அணி மடங்கல் மொய்ம்பினான்,
உயிர்எலாம் தன்உயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிர்இலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிர்எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்.

27. தசரதன் வீரமும் உலகைக் காக்கும் முறையும்.

(க - ரை): இவன் மேல் அம்புவிடு என்று சொல்லத்தக்க பகைவர் எங்கும் இல்லாமையினல், தசரதன் தினவுற்ற தோள்களை உடையவனுக இருக்கின்ருன். சிறிதளவு நிலத்தையுடைய ஓர் வறிஞன் தனக்கு அந்நிலத்தைத் தவிர வேறு பற்றுக்கோடு இல்லாமையால் இராப்பகலாக அதனைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வருவதுபோல் தசரதன் எல்லா உலகங்களையும் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வருகிருன்.

(அ—ரை): எய் அமபை விடு; பகை பகைவர்; மொய் : வலிமை; முழவு · மததளம்; செய் : நிலத்தின் அளவுப் பெயரில் ஒன்று; ஓமபும் : பாதுகாக்கும்.

28. இராமன் பிறந்த ஜாதகம் கூறுகிறது.

(க - ரை) : அரசியர்களுக்குக் கருப்பம் முற்றிப் பிரசவிக்க வேண்டிய பருவமும் வந்து இராமன் பிறந்தபோது அவனுடைய ஜாதகம் கூறப்படுகிறது. புனர்பூச நட்சத்திரத்தில், கடக லக்கினத்தில் இராமன் ஜனனம் ஆயினுன்.

(அ—ரை) ஆயிடை அந்தச் சமயததில், மாயிரும மிகப பெரிய.
சோதிட விளக்கம, வல்லார்வாய்க் கேட்டுணர்க.

29. இராமனின் பிறப்பு.

(க - ரை) : மகாப் பிரளய காலததில் எல்லா உலகங்களையும் தன் வயிற்றில் அடக்கிப் பிரளயம் நீங்கியதும் அவற்றை முன்பு போல் உமிழ்ந்து வெளிப்படுத்துகின்ற கடவுளாகிய திருமாலைக் கோசலை தன் வயிற்றிலிருந்து ஈன்ருள்.

(அ—ரை) உதரம் . வயிறு, ஒருபகல் : ஒருநாள், அஞ்சனம் . மை; திரு உற : செல்வம உண்டாகும்படியாக, திறம் கற்பின் மகிமை

30. பரதன் பிறப்பு.

(க - ரை) : தேவர்களெல்லாம் ஆகாயத்திலும் திசைகளிலும் இருந்து ஆரவாரிக்கவும் இந்திரன் முதலியோர் வணங்கி வாழ்த்தவும் பூச நட்சத்திரத்தில் மீன லக்கினத்தில் கைகேயி பரதனைப் பெற்ருள்.

(அ—ரை): ஆசை : திக்கு; விசும்பு : ஆகாயம்; வாசவன் : இந்திரன்; மாசறு : குற்றமற்ற.

27. எய்என எழுபகை எங்கும் இன்மையால்
மொய்பெருத் தினவுறு முழவுத் தோளினன்;
வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும்ஓர்
செய்எனக் காத்(து) இனி(து) அரசு செய்கின்றான்.

## திரு அவதாரப் படலம்

28. ஆயிடைப் பருவம்வந்(து) அடைந்த எல்லையின்
மாயிரும் புவிமகள் மகிழ்வின் ஓங்கிட,
வேய்புனர் பூசமும், விண்ணு ளோர்புகழ்
தூயகர்க் கடகமும் எழுந்து துள்ளவே.

29. ஒருபகல் உலகெலாம் உதரத் துள்பொதிந்(து)
அருமறைக்(கு) உணர்வரும் அவனை, அஞ்சனக்
கருமுகில் கொழுந்(து)எழில் காட்டும் சோதியைத்
திருஉறப் பயந்தனள் திறம்கொள் கோசலை.

30 ஆசையும் விசும்பும்நின்(று) அமரர் ஆர்த்தெழ,
வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துறப்,
பூசமும் மீனமும் பொலிய, நல்கினாள்,
மாசறு கேகயன் மாது மைந்தனை.

31. இலக்குமணன் பிறப்பு.

(க - ரை) : இந்திரன் தன் சுற்றத்தாரோடு வானில் ஆரவாரிக்கவும், ஆயிலிய நட்சத்திரமும் கர்க்கடக லக்கினமும் பொருந்தவும் இலக்குமணனைச் சுமித்திரை பெற்றாள்.

(அ—ரை): தளை அவிழ் : அரும்பு விரிந்த, தரு : கற்பகச்சோலை; சயிலம் : மலை, கோபன் : கோபித்தவன்; அளை : வளை; அலவன் : நண்டு.

32. சத்துருக்கன் பிறப்பு. (சுமித்திரையின் இரண்டாம் பிரசவம்.)

(க - ரை) : பூமிதேவி மகிழவும், வேதங்கள் நடனஞ் செய்யவும், சிம்ம லக்கினமும் மக நட்சத்திரமும் வாழ்வு பெறவும் விடத்தைப்போல் ஒளி விடுகின்ற கண்ணையுடைய சுமித்திரை சத்துருக்கனை ஈன்றாள்.

(அ—ரை): படமகிளர் : பல படங்கள் விளங்குகிற; பாந்தள் : ஆதிசேடன்; மடங்கல் : சிங்கம்.

33. இராமனும் இலக்குவனும் சேர்ந்து விளையாடுதல்.

(க - ரை) : இராமனும இலக்குவனும் ஒன்றாகச் சேர்ந்து விளையாடி வருவர். இவர்கள் பாதம் படப் பூமிதேவி தவம் செய்திருக்கிறாள் என்னும்படி பூமியில் நடந்து, ஆற்றின் பக்கங்களையும் சோலைகளையும் தடாகங்களையும் அடைந்து, ஆடை நெய்கின்ற குழல் செல்லும் வழி நூலும் பிரியாது செல்வது போல் இணைபிரியாது உலவுவர்.

34. பரதனும் சத்துருக்கனும் இணைபிரியாது சென்று வருகின்றனர்.

(க - ரை) : பரதனும் சத்துருக்கனும் உரை மாறுபடாது தேர் ஏற்றம், குதிரை ஏற்றம் ஏறுகின்ற பொழுதிலும் வேதம் பயிலும் பொழுதிலும் இராம இலக்குவர்களைப் போல் பிரியாது சென்று பயின்று வருவா ராயினர்.

(அ—ரை): இவுளி : குதிரை; பகிராது : பிளவுபடாமல்; ஒழிகிலர் : பிரியாதவராகி; வரதன் : வரத்தைத் தருபவன்; இராமன்: மருவினர் : ஒன்று சேர்ந்திருந்தனர்.

31. தளை அவிழ தருஉடைச் சயில கோபனும்,
கிளையும்,அந் தரமிசைக் கெழுமி ஆர்த்தெழ,
அளைபுகும் அரவினோ(டு), அலவன் வாழ்வுற,
இளையவன் பயந்தனள் இளைய மென்கொடி.

32. படம்கிளர் பல்தலைப் பாந்தள் ஏந்துபார்
நடம்கிளர் தர,மறை நனி மகிழ்ந்திட,
படங்கலும் மகமும் மே வாழ்வின் ஓங்கிட,
விடம்கிளர் விழியினள் மீட்டும் ஈன்றனள்.

33. ஐயனும் இளவலும் அணிநில மகள்தன்
செய்தவம் உடைமைகள் தெரிதர, நதியும்
மைதவழ் பொழில்களும், வாவியும் மருவி,
நெய்குழல் உறும் இழை என நிலை திரிவார்.

34. பரதனும் இளவலும் ஒருநொடி பகிரா(து)
இரதமும் இவுளியும் இவரினும், மறைநூல்
உரைதரு பொழுதினும் ஒழிகிலர்; எனை ஆள்
வரதனும் இளவலும் எனமரு வினரே.

**35.** விளையாடி வரும்பொழுது இராமன் நகரமாந்தரை உசாவுதல்.

**(க - ரை) :** சோலை முதலிய இடங்களுக்குச் சென்று அரண் மனைக்குத் திரும்பும்பொழுது தமக்கு எதிர்ப்பட்ட நகர மாந்தர் களைக் கண்டு, "என்ன தொழில் செய்துகொண் டிருக்கிறீர்கள்? நலமாக இருக்கிறீர்களா? மனைவியும் குமரரும் நலமாக இருக் கிறார்களா?" என்று விசாரித்து வருவான்.

**(அ—ரை):** எமையுடை இறைவன் : எம்மை ஆளாகவுடைய இறைவன்; முதிர்தரு கருணை : மிக்க கிருபை; ஒளிர : பிரகாசிக்க; எது வினை : என்ன தொழில்; இடர்இலை, வலியர்கொல் : நலமா?

**36.** அதற்கு அவர்கள் பதில் கூறுதல்.

**(க - ரை) :** "ஐயா! அப்படியே; உம்மை அரசராகப் பெற்ற எங்களுக்கு இவைகள் ஒரு பொருள் அல்ல, நீர் எங்கள் உயி ரோடு ஏழு உலகங்களையும் ஒரு பிரம்மகற்ப அளவும் பெற்று வாழ் வீராக" என்று பதில் கூறினார்கள்.

**(அ—ரை):** மகிதலம் : பூமி; உறுகுவை : அடைவாயாக; மலரோன் : பிரமன்; பிரம்மகற்பம் : மனிதருக்கு ஒரு வருடம், தேவருக்கு ஒரு நாள், தேவருக்கு ஒரு வருடம் பிரம்மாவிற்கு ஒரு நாள், பிரம்மாவிற்கு நூறாண்டாவது ஒரு பிரம்ம கற்பம்,

**37. (க - ரை) :** தசரத சக்கரவர்த்தியே! என் போன்ற முனிவர்களும் தேவர்களும் ஏதேனும் இடையூறு நேருமிடத்துப் பல மலைகளுக்கும் கைலாசகிரிக்கும் திருப்பாற்கடலுக்கும் பிரம்மலோகத்திற்கும் இவ்வயோத்திக்கும் வந்துதான் இடையூற் றைப் போக்கிக்கொள்வோமே தவிர எமக்கு வேறு புகலிடம் உண்டா?

**(அ—ரை).** பல இடங்களுக்குச் செல்லல் : முருகக் கடவுள், சிவ பெரு மான், திருமால், பிரமன், தசரதன் ஆகியோரிடம் செல்லல்; பல்நகம் : பலமலை; நகு : பிரகாசிக்கின்ற; பதுமம் : தாமரை; பொன்நகர் : அழகிய நகர்; புகல் : அடையும் இடம்; இகல் : பகை.

**38.** விசுவாமித்திரர் வேண்டுதல்.

**(க - ரை) :** "வனத்தில் நான் செய்யும் தவம், வேள்வி முத லியவற்றிற்கு இடையூறாக அடிக்கடி வந்து அரக்கர்கள் துன்புறுத் தாதபடி, காப்பாயாக. அதற்கு நின்புதல்வர் நால்வரினும் கரிய நிறத்தையுடைய இராமனைத் தருவாயாக" என்று கேட்டார்.

**உவமை:** தவம் செய்வோருக்குக் **காமம் வெகுளி** நேர்ந்து தவத்தைக் குலைப்பதுபோல் **அரக்கர்** வந்து இடையூறு செய்கின் றனர். போர் செய்து அரக்கரை வெல்லும்படி விசுவாமித்திரர் இராமனைக் கேட்டது, எமன் வந்து, 'உன் உயிரைக் கொடு' என்று கேட்பதைப் போல் தசரதனுக்குப் பட்டது.

**(அ—ரை):** வெருவர : அஞ்சும்படி; நிருதர் : அரக்கர்; செருமுகம் : யுத்தமுனை; செம்மல் : தலைவன்; உளைய : கலங்க.

35. எதிர்வரும் அவர்களை, எமையுடை இறைவன்,
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிர,
'எதுவினை? இடர்இலை? இனிதுநும் மனையும்,
மதிதரு குமரரும், வலியர்கொல்?' எனவே.

36. 'அஃ(து)ஐய நினைஎம(து) அரசென உடையேம்,
இஃ(து)ஒரு பொருள்அல, எம(து) உயிர் உடன்ஏழ்
மகிதலம் முழுதையும் உறுகுவை மலரோன்
உகுபகல் அள'வென உரைநனி புரிவார்.

## கையடைப் படலம்

37. "என்அனைய முனிவரரும் இமையவரும்
இடையூ(று) ஒன்று உடையர் ஆனல்
பல்நகமும் நகுவெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதும பீடத்(து)
அந்நகரும் கற்பகநாட்(டு) அணிநகரும்
மணிமாட அயோத்தி என்னும்
பொன்நகரும் அல்லாது புகல்உண்டோ
இகல்கடந்த புலவு வேலோய்.

38. தருவனத்துள் யான்இயற்றும் தவவேள்விக்(கு)
இடையூருத், தவம்செய் வோர்கள்
வெருவரச்சென்(று) அடைகாம வெகுளிஎன,
நிருதர்இடை விலக்கா வண்ணம்
'செருமுகத்துக் காத்தி'என நின்சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதிஎன, உயிர்இரக்கும்
கொடுங்கூற்றின் உளையச் சொன்னன்.

39. விசுவாமித்திரர் சொல்லைக் கேட்ட தசரதன் துன்பம் எய்திப் பின் ஒருவாறு தேறிக் கூறுதல்.

(க - ரை): "பெரியோய்! இராமன் சிறுவன்; அதோடு படைப் பயிற்சியும் இல்லாதவன். உமது கட்டளை இதுவேயானால், நானே வந்து சிவன், பிரமன், இந்திரன் ஆகிய இவர்களே எதிர்த்து வந்தாலும் அவர்களையெல்லாம் வென்று, உமது வேள்வியைக் காப்பேன். புறப்படுங்கள் போவோம்" என்றான்.

(அ—ரை). தொடை. மாலை; படை : ஆயுதம்; பணி : கட்டளை; புடை : பக்கம்; புரந்தரன் : இந்திரன்.

40. வசிட்டர் தசரதனுக்குக் கூறுதல்.

(க - ரை): "மழை பெய்து பல இடங்களிலிருந்தும் திரண்டு ஓடுகின்ற வெள்ளம் ஒரு கடலிற் சென்று சேர்வதைப்போல் பல வித்தைகளும் நின்மகனை வந்து அடையும் காலம் நேர்ந்துள்ளது. ஆதலால், இந்த நன்மையைக் கருதி விசுவாமித்திரருடன் இராமனை அனுப்புவாயாக" என்று வசிட்டர் கூறினார்.

(அ—ரை) மொய். வலிமை; வேலை கடல, முடுகு; விரைந்து செல்லுதல்; விஞ்சை : அம்பு தொடுக்குங்கால் ஓதும் சில மந்திரம் முதலியன.

41. இராமன் போர் உடையோடு புறப்படுதல்.

(க - ரை): உலகைக் காக்கும் கடவுளின் அவதாரமாகிய இராமன் உடைவாளைத் தன் இடுப்பில் கட்டி, அம்பறாத்தூணியை முதுகில் கட்டி, மலை போன்ற தோளில் தன் வில்லைத் தரித்தான். பிறகு தம்பி இலக்குவன் தொடரப் போருக்குப் புறப்பட்டான்.

(அ—ரை) வென்றி: வெற்றி, மெலிததல் விபரம, விசிதது : கட்டு; கொற்றம். வெற்றி, தேய்வுறாத தூணி : இராமன் எய்யும அம்பு எதிரிகளைக கொன்று மீண்டும் தூணியை அடைதலால் எனறும் தேய்வுறாத தூணி என்றார். அம்பறாததூணி குறையாதது என்பதற்கு, உண்மைக்கு ஒருகாலும குறையில்லை என்ற உவமை கூறப்பட்டுள்ளது.

## தாடகையென்னும் அரக்கியது வதையைப்பற்றிக் கூறுவது

42. தாடகை அரக்கியான வரலாறு.

(க - ரை): அகத்திய முனிவர் கோபாக்கினி எரியும் விழியோடு தாடகையையும் அவள் மக்களையும் நோக்கிக் கோபித்து, 'நீங்கள் கொடுந்தொழில் செய்வதால் உங்கள் யட்ச குலத்தினின்றும் அரக்கர்களாகித் தாழ்வீர்களாக' என்று சபித்தார்.

(அ—ரை): சலதி : கடல்; கனல் : நெருப்பு; அசனி : இடி: கம்பர் தமிழின் பெருமையைக் கூறிவரும் இடங்களில் இதுவும் ஒன்று.

39. தொடைஊற்றின் தேன்துளிக்கும் நறுந்தாரான்,
ஒருவண்ணம் துயரம் நீங்கிப்,
'படைஊற்றம் இலன்;சிறியன் இவன்பெரியோய்!
பணிஇதுவேல் பனிநீர்க் கங்கை
புடைஊற்றும் சடையானும் நான்முகனும்
புரந்தரனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக் கிடையூரு யான்காப்பன்;
பெருவேள்விக்(கு) எழுக என்ருன்.

40. 'பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல்,
ஐய நின்மகற்(கு) அளவில் விஞ்சைவந்(து)
எய்து காலம்இன்(று) எதிர்ந்த(து) என்னவே.

41. வென்றி வாள்,புடை விசித்து, மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுருத் தூணி யாத்(து), இரு
குன்று போன்றுயர் தோளில் கொற்றவில்
ஒன்று தாங்கினுன் உலகம் தாங்கினுன்.

## தாடகை வதைப் படலம்

42. தமிழ்எனும் அளப்பரும் சலதி தந்தவன்
உமிழ்கனல் விழிவழி ஒழுக, உங்கரித்(து)
'அழிவன செய்தலால் அரக்கர் ஆகியே
இழி'கென உரைத்தனன் அசனி எஞ்சவே.

43. விசுவாமித்திரர் இராமனுக்குத் தாடகையின் இயல்பைக் கூறுதல்.

(க - ரை): தாடகை விரும்புவாளேயானால் இப் பூமியையே பெயர்த்தெடுப்பாள்; கடல் நீரை வாரியெடுப்பாள்; ஆகாயத்தையும் இடிப்பாள்; பாவங்கள் எல்லாம் திரண்டு ஒரு பெண் வடிவம் கொண்டு திரிவது போல் திரிபவள்.

(அ—ரை): உருத்து : கோபித்து; வேண்டின் : விரும்புவாளேயானால்; ஈண்டி : ஒன்றாகச் சேர்ந்து; பெற்றி : தன்மை.

44. இதுவும் அது.

(க - ரை): 'பாம்பைக் கங்கணமாகக் கட்டிச் சூல மேந்திய கையை உடையவள்; காட்டிலே திரிபவள்; ஆண்களும் உன்னைக் கண்ட மாத்திரத்தில், தாங்கள் பெண்மையை விரும்பும்படியான அவ்வளவு கட்டழகுடைய இராமனே! அந்தக் கொடியவளின் பெயர் தாடகையென்பது.'

(அ—ரை): சூடகம் : கங்கணம்; அரவு . பாம்பு; சழக்கி : கொடியவள்.

குறிப்பு: முன்பு (இந்நூலுள் 26-ஆம் பாடல்) புறநானூற்றின் கருத்தை மாற்றி அமைத்ததுபோல் சிந்தாமணியில், 'ஆண் உறுப்புற்று நின்றார் அவ்வளைத் தோளினாரே' என்று வரும் கருத்தை இங்கு மாற்றியமைத்திருப்பது ஆராயத்தக்கது.

45. தாடகையின் கொடுமை.

(க - ரை): உலோப குணம் ஒன்றுமட்டுமே ஒருவரிடத்திலுள்ள ஏனைய நல்ல குணங்களை எல்லாம் அழித்துவிடுவதைப் போல், வாழை, கரும்பு முதலியவற்றால் செழித்திருந்த மருத நிலத்தை இவள் அழித்துப் பாலை நிலமாக மாற்றிவிட்டாள்.

(அ—ரை): பிணிப்பு : இறுகப் பிடித்தல்; வைப்பு : நிலம்.

46. இராமன் தாடகையை வதைக்கப் பின்வாங்குதல்.

(க - ரை): தாடகையை வதைக்க, முனிவர் கட்டளை உண்டு; அதோடு அவளும் உயிர்களையெல்லாம் வதைப்பவள்; ஆகையால் அவளைக் கொல்லுவது முறை என்றாலும், ஓர் ஆண்மகன் ஒரு பெண்ணைக் கொன்றான் என்பது பழியாகுமே என்று இராமன் நினைத்தான்.

(அ—ரை): அண்ணல் : தலைவன்; வடிக்கணை : கூர்மையான அம்பு; துண்ணெனும்: துடிக்கும்; பெருந்தகை : பெருங்குணத்தையுடையவன், இராமன்.

43. மண்உருத்(து) எடுப்பினும், கடலை வாரினும்
விண்உருத்(து) இடிப்பினும், வேண்டின் செய்கிற்பாள்;
எண்உருத் தெரிவரும் பாவம் ஈண்டிஓர்
பெண்உருக் கொண்டெனத் திரியும் பெற்றியாள்.

44. சூடக அர(வு)உழல் சூலக் கையினள்;
காடுறை வாழ்க்கையள்; கண்ணில் காண்பரேல்
ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!
தாடகை என்ப(து)அச் சழக்கி நாமமே.

45 உளப்பரும் பிணிப்(பு)உறு உலோபம் ஒன்றுமே
அளப்பருங் குணங்களை அழிக்கும் ஆறுபோல்,
கிளப்பரும் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பெரு மருதவைப்(பு) அழித்து மாற்றினாள்.

46. அண்ணல்முனி வற்(கு)அது கருத்(து)எனினும், ஆவி
உண்என வடிக்கணை தொடுக்கிலன், உயிர்க்கே
துண்எனும் வினைத்தொழில் தொடங்கியுளளேனும்
பெண்என மனத்திடை பெருந்தகை நினைந்தான்.

47. அதை அறிந்த விசுவாமித்திரர் இராமனைத் தூண்டுதல்.

(க - ரை): இரத்தின ஆபரணத்தை யணிந்த இராமனே! இவள் உலகத்தில் தீமையென்று சொல்லப்பட்டவைகள் எத்தனை உண்டோ அத்தனையையும் செய்தவள்; வற்றிய உடம்போடு இருத்தலால் எங்களைத் தின்னாமல் விட்டவள். இத்தகைய கொடியவளை என்னென்று நினைப்பது! இவளையும் பெண் தன்மை உடையவளென்று நினைக்கிறாயா?

(அ—ரை): எமை : என்போன்ற முனிவர்களை; கோது : சக்கை.

48. தாடகை வதம்.

(க - ரை): முனிவர் சபிக்கும் சாபத்தைப் போன்ற இராமனது அம்பு, தாடகையின் வயிரமலை போன்ற மார்பில் பட்டு உருவி, அற்பர்களுக்கு அறிஞர்கள் கூறும நல்ல கருத்துக்கள் அவர்கள் மனத்தில் தங்காது ஓடிவிடுவதுபோல் ஓடிவிட்டது.

(அ—ரை): சொல் சாபம், உடனே தாக்குதலால் இராம பாணத்திற்கு உவமை கூறப்பட்டது. செம்மல் : தலைவன். அல் : இருட்டு. புல்லர் : அற்பர்; இங்கு கூறிய உவமை போற்றத்தக்கது.

49. விசுவாமித்திரர் இராமனுக்கு ஆயுதங்கள் கொடுத்தல்.

(க - ரை) தாடகை வதத்தால் மகிழ்ந்த தேவர்கள் வந்து இராமனை வாழ்த்திப் பூமழை பொழிந்து போன பின்பு, விசுவாமித்திரர் இராமனுக்கு வெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் சொல்லை ஒத்த ஆயுதங்களை அருளினார்.

(அ—ரை): பின்றை . பின்பு, தண் : குளிர்ச்சி; அண்ணல் : தலைவன்; சொன்ன சொல் மாறாத தன்மையால் ஆயுதங்களுக்குச் சொல் உவமை ஆயிற்று

50. (க - ரை): முக்காலங்களிலும் வரும் செய்திகளை ஆராய்ந்தறிய வல்லவரான காசிப முனிவருக்குத் திருமால் குறள் வடிவமான ஒரு புதல்வனாகப் பிறந்தார்.

(அ—ரை): குறள் : குள்ளம்; நீல நிறத்து நெடுந்தகை : நீல நிறத்தைக் கொண்ட திருமால்; ஆலமர் வித்து : ஆலம் விதை; சின்னஞ் சிறியதாகிய இவ் விதை வானத்தை அளாவும் பெரிய மரமாகித் தோன்றுதலின், மூவுலகத்தையும் அளக்கும் ஆற்றல் அடங்கிய திருமாலின் குறள் வடிவிற்கு உவமையாயிற்று.

47. 'தீதென்(று) உள்ளவை யாவையும் செய்(து),எமைக்
கோதென்(று) உண்டிலள்; இத்தனை யேகுறை;
யாதென்(று) எண்ணுவ(து) இக்கொடி யாளையும்
மாதென்(று) எண்ணு(தி) யோ மணிப் பூணினாய்!

48. சொல்ஒக்கும் கடிய வேகச்
சுடுசரம், கரிய செம்மல்
அல்ஒக்கும் நிறத்தி னாள்மேல்
விடுத்தலும், வயிரக் குன்றக்
கல்ஒக்கும் நெஞ்சில் தங்கா(து)
அப்புறம் கழன்று; கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன
பொருள்எனப் போயிற்(று); அன்றே.

## வேள்விப் படலம்

49. விண்ணவர் போய பின்றை,
விரிந்தபூ மழையி னாலே
தண்எனும் கானம் நீங்கித்,
தாங்கரும் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு
மருந்தன சடையன், வெண்ணெய்
அண்ணல்தன், சொல்லே யன்ன
படைக்கலம் அருளி னானே.

50. காலம் நுனித்(து)உணர் காசிபன் என்னும்
வால்அறி வற்(கு)அதி திக்(கு)ஒரு மகவாய்
நீல நிறத்(து) நெடுந்தகை வந்(து), ஓர்
ஆல்அமர் வித்தின் அரும்குறள் ஆனான்.

51. அவர் மகாபலிச் சக்கரவர்த்தியிடம் மூவடி மண் வேண்டலும் சுக்கிரன் அதைத் தடுத்தலும்.

(க-ரை): வாமன வடிவத்தைக் கண்ட மகாபலிச் சக்கரவர்த்தி மகிழ்ந்து, "நான் செய்யவேண்டிய காரியம் என்ன?" என்று கேட்க, அந்தண வடிவத்திலிருந்த திருமால், "எனக்கு மூன்றடி மண் வேண்டும்" என்று சொல்லுவதற்கு முந்தியே, "தந்தனன்" என்று அவன் கூற, அருகிலிருந்த அவனது குல குருவாகிய சுக்கிரன், "இவருக்குக் கொடுக்கக் கூடாது. இதில் ஏதோ சூழ்ச்சி யிருக்கிறது" என்று தடுத்தான்.

(அ—ரை): திறல் : வலிமை; வெள்ளி : சுக்கிரன்.

52. மகாபலி ஈகையின் சிறப்பை வெள்ளிக்கு எடுத்துக் கூறுதல்.

(க - ரை): உலகத்தில் செத்த பிணம் என்று சொல்லத் தக்கவர், கையை ஏந்திப் பிச்சை எடுப்பவரே. கொடையாளி கள் இறந்தபோதிலும் புகழுடம்பால் சாவாது நிற்பவர் ஆவர்.

(அ—ரை). இரந்தவர் : பிச்சையெடுப்பவர்; வீந்தவர் : மாய்ந்தவர், இறந்தவர்.

53. பாற்கடல் கடைந்த வரலாறு.

(க - ரை): திருமாலானவர் பாற்கடலைக் கடைந்து, அதனின் றும் எழுந்த ஆலகால விடத்தைச் சிவபெருமானுக்குக் கொடுத்து, கற்பக விருட்சம், சிந்தாமணி, காமதேனு, வெள்ளை யானை, வெள்ளைக் குதிரை முதலியவற்றை இந்திரனுக்குக் கொடுத்து, ஏனைய பொருள்களை மற்றையோருக்குக் கொடுத்து, மகாலட்சுமி யையும் கவுத்துவ மணியையும் தாம் ஏற்றுக்கொண்டார்.

(அ—ரை): வெருவும் : அஞ்சத்தக்க; ஆலம் : விடம்; விடையவன் : சிவ பெருமான்; தரு : கற்பக விருட்சம்; சதமகன் : இந்திரன்; மகம் : வேள்வி; மருவு : பொருந்திய.

54. கங்கையின் வரலாறு.

(க - ரை): சகரர்கள் என்னும் தன் முன்னவர் பொருட்டால் பகீரதன் பூமிக்குக் கொண்டுவந்ததால் கங்கைக்குப் பாகீரதி என்று பெயர். பெருகிவந்த கங்கை, சந்நு என்னும் முனிவரின் குடிசையை அழிக்க வர, அவர் அதை எடுத்து உண்டு, பின் பகீரதன் வேண்டக் காதின் வழியாக விடுதலால் சாநவி யென் னும் பெயர் பெற்றது.

(அ—ரை): மகிதலம் : பூமி; தீர்த்தம் : ஆறு.

51. சிந்தை உவந்(து)எதிர் 'என்செய?' என்றான்;
அந்தணன் 'மூவடி மண்அருள், உண்டேல்
வெம்திற லாய்இது வேண்டும்' எனுமுன்
'தந்தனன்' என்றனன்; வெள்ளி தடுத்தான்.

52. மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள்; மாயா(து)
ஏந்திய கைகொ(டு)இ ரந்தவர் எந்தாய்
வீந்தவர் என்பவ(ர்); வீந்தவ ரேனும்
ஈந்தவர் அல்ல(து)இ ருந்தவர் யாரே?

## அகலிகைப் படலம்

53. வெருவும் ஆலமும் பிறையும்வெள் விடையவற்(கு) ஈந்து,
தருவும் வேறுள தகைமையும் சதமகற்கு அருளி,
மருவு பல்பெரும் வளங்களும் வே(று)உற வழங்கித்,
திருவும் ஆரமும் அணிந்தனன் சீதர முர்த்தி.

54. சகரர் தம்பொருட்(டு) அருந்தவம் பெரும்பகல் தள்ளிப்
பகிர தன்கொணர்ந் திடுதலால், பகிரதி ஆகி,
மகித லத்திடைச் சந்நுவின் செவிவழி வரலால்,
நிகர்இல் சாநவி எனப்பெயர் படைத்த(து)இந் நீத்தம்.

55. இந்திரன் அகலிகையிடம் போதல்.

(க - ரை): அகலிகையின் கண்ணாகிய வேலும் மன்மதன் அம்பும் தன்மேற் பாய்தலால் வருந்திய இந்திரன், ஒரு நாள் அறிவுகெட்டு நடு இரவில் கோழிபோல் கூவினான். விடிந்த தென்று கௌதம முனிவர் ஆற்றிற்கு நீராடச் செல்ல, அச்சமயம் பார்த்து அகலிகையிடம் அம்முனிவர் வேடத்தோடு சென்றான்.

(அ—ரை) தையல் : பெண்; நயனம் : கண்; சரம் : அம்பு; உழல்பவன் : சுற்றித் திரிபவன்; அற்றம : சமயம, பொய்யிலா உள்ளத்தான் : கௌதம முனிவர்.

56. இந்திரன் செய்கை.

(க - ரை) : அவ்வாறு சென்ற இந்திரன் அவளைக் கூடிக் கலந்திருக்கும்பொழுது, நீராடச் சென்ற முனிவர், 'இன்னும் விடிய வில்லை' என்பதை உணர்ந்து தம் இருக்கைக்கு விரைந்து வந்தார்.

(அ—ரை) தேறல் : தேன். முக்கணான் . சிவபெருமான்; அனைய : போன்ற, ஆற்றல் வலிமை.

57. அகலிகை சாபவிமோசனத்திற்குப் பிறகு விசுவாமித்திரர் இராமனைப் புகழ்தல்.

(க - ரை) 'கரிய நிறத்தையுடைய இராமனே! நின் பாதம் பட்டதால் அகலிகை பழைய உருவத்தை அடைந்தாள். நீ மனிதனாக அவதாரம் செய்தபடியால் இனி இந்த உலகிற்கு ஒரு குறையும் உண்டாகாது. உனது கையின் திறமையைத் தாடகை வதத்தில் கண்டேன். இங்கு (அகலிகை சாப விமோசனத்தால்) உன் காலின் திறத்தைக்கண்டேன்.'

(அ—ரை) மழை : மேகம், வண்ணம் : நிறம; அண்ணல் . தலைவன்; உய் வண்ணம் பிழைக்கும் வழி; மைவண்ணம . கரியநிறம.

58. மிதிலை நகரத்தின் நடன சாலையைக் கண்டனர் என்று கூறுவது.

(க - ரை): வீணை, முழவு முதலியவற்றோடு நாட்டிய மகளிர் நடனமாடுங்கால் நிகழும் அபிநயத்தில், கைக் குறிப்பின்மேல் கண்ணும், கண்ணின்வழி மனமும் செல்லுமாறு ஆடும் நடன சாலையைக் கண்டனர்.

(அ—ரை): தைவரல் : விரலால் தடவுதல்; தண்ணுமை : மத்தளம்; தூங்க : ஒத்திசைக்க; நயனம் : கண்; நுண்ணிடை: சிறிய இடுப்பு; ஐயம் : உண்டோ இல்லையோ என்னும் சந்தேகம்.

55. தையலாள் நயன வேலும், மன்மதன் சரமும் பாய
உய்யலாம் உறுதி நாடி, உழல்பவன் ஒருநாள் உற்ற
மையலால் அறிவு நீங்கி, மாமுனிக்(கு) அற்றம் செய்து,
பொய்யிலா உள்ளத் தான்தன் உருவமே கொண்டு புக்கான்.

56 புக்(கு) அவ ளோடும் காமப்
புதுமண மதுவின் தேறல்
ஒக்கஉண்(டு) இருந்த லோடும்
உணர்ந்தனள்: உணர்ந்த பின்னும்
தக்கதன்(று) என்ன ஓராள்;
தாழ்ந்தனள் இருப்பத், தாழா
முக்கணன் அனைய ஆற்றல்
முனிவனும் முடுகி வந்தான்.

57. இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்;
இனிஇந்த உலகுக் கெல்லாம்
உய்வண்ணம அன்றி மற்றோர்
துயர்வண்ணம் உறுவ(து) உண்டோ!
மைவண்ணத்(து) அரக்கி போரில்
மழைவண்ணத்(து) அண்ண லே,உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்;
கால்வண்ணம் இங்குக் கண்டேன்.

## மிதிலைக் காட்சிப் படலம்

58. நெய்திரள் நரம்பில் தந்த, மழலையின் நிறைந்த பாடல்
தைவரு மகரவீணை தண்ணுமை தழுவித் தூங்கக்,
கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல.
ஐயநுண் இடையார் ஆடும் நாடக அரங்கு கண்டார்.

59. மகளிர் ஊஞ்சலாடுவதைக் காணல்.

(க - ரை): பவளம்போலும் காய் காய்க்கின்ற பாக்குமரத்தில் பூட்டிய ஊஞ்சலில், மகளிர் ஊஞ்சல் ஆடுகிறார்கள். அவர்கள் கூந்தலில் அணிந்த பூவின்பொருட்டு வந்த வண்டுகள், 'மகளிர் இடையோ சிறியது; ஊஞ்சலாடுவதால் இடை ஒடிந்துவிடுமோ?' என்று இரங்குவதைப்போல் ஆரவாரிக்கின்றன. இதைக் காண வந்த வாலிபர் மனமும் ஊசலாடுகின்றது. அந்த ஊஞ்சல் போய் வந்து திரும்புவது, பிறந்து செத்து நிகழும் பிறவியை ஒத்துளது.

(அ—ரை): மாசுறு : குற்றம் மிகுந்த; காசு : குற்றம்; கமுகு : பாக்குமரம்; பூசல் : ஆரவாரம்.

60. சாளரத்தின் வழியாக மகளிர் முகம் தோன்றுவதைக் காணல்.

(க - ரை): ஒரு சந்திர உதயம், வேலாயுதங்களையும் மன்மதன் வில்லையும் வண்டுகள் மொய்க்கும் கரிய சுருளையும் சிவந்த பவளத் துண்டையும் உடையதாக இருக்கிறது. அத்தகைய சந்திர உதயம் ஒவ்வொரு மாளிகையின் சாளரங்கள்தோறும் தோன்றுவதைக் கண்டனர்.

குறிப்பு: வேல் என்பது கண்களையும் மன்மதன் வில் என்பது புருவத்தையும் கரிய சுருள் என்பது கூந்தலையும் பவளத்துண்டு என்பது வாயையும் குறிக்கும்.

(அ—ரை): அரம்பொருத : அரத்தால் அராவிய; கேள் :சுற்றம்.

61. இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் காணல்.

(க - ரை): இவ்வாறு மிதிலைநகரின் பல வளங்களையும் கண்டு சென்ற மூவரும் அரச வீதியில் சென்றபொழுது அரண்மனையின் மேல்நிலையில் இருந்த சீதையை, இராமன் நோக்க அவளும் இராமனை நோக்கினாள்.

(அ—ரை): எண் அரு நலம் : நினைத்தற்கரிய உயர்ந்த குணங்கள்; கவ்வி : பற்றி; உண்ணவும் : அழுந்திப் பாயவும்; நிலைபெறாது உணர்வும் ஒன்றிட : அறிவும் தத்தம் நிலைமை மாறி ஒன்றுபட்டு நிற்க.

62. இதுவும் அது.

(க - ரை): அவ்வாறு கண்ட இராமன் உள்ளத்தில் சீதையும் சீதையுள்ளத்தில் இராமனும் மாறிப் புகுந்து தங்கினர்.

(அ—ரை): பருகிய நோக்கு : குடிப்பது போன்ற பார்வை; பாசம் : கயிறு; ஈர்த்தல் : இழுத்தல்; வரிசிலை : கட்டமைந்த வில்; அண்ணல் : தலைவன்; வாள் கண் : வாள் போன்ற கண்; நங்கை : மகளிருள் சிறந்தவள், சீதை; எய்தினர் : அடைந்தனர்.

59\. பூசலின் எழுந்த வண்டு
மருங்கினுக்(கு) இரங்கிப் பொங்க
மாசுறு பிறவி போல
வருவது போவ தாகிக்,
காசறு பவளச் செங்காய்
மரகதக் கமுகு பூண்ட
ஊசலில், மகளிர் மைந்தர்
சிந்தையோ(டு) உலவக் கண்டார்.

60\. வாள்அரம் பொருத வேலும்
மன்மதன் சிலையும் வண்டின்
கேளொடும் கிடந்த நீலச்
சுருளும்,செங் கிடையும் கொண்டு
நீள்இரும் களங்கம் நீக்கி
நிரைமணி மாட நெற்றிச்
சாளரம் தோறும் தோன்றும்
சந்திர உதயம் கண்டார்.

61\. எண்அரு நலத்தினாள் இனையள் நின்றுழி,
கண்ணொடு கண்இணை கவ்வி ஒன்றைஒன்(று)
உண்ணவும், நிலைபெறு(து) உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்.

62\. பருகிய நோக்கெனும் பாசத் தால்பிணித்(து)
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்,
வரிசிலை அண்ணலும் வாள்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்(கு) இதயம் எய்தினார்.

**63.** *சீதை, இராமன் இவர்களின் அப்போதைய நிலை.*

**(க - ரை):** *சீதையும் இராமனும், உடம்பு இரண்டும் உயிர் ஒன்றுமாக நின்றனர். பாற்கடலில் கூடியிருந்தவர்கள் பூவுல கிற்கு வந்து நெடுநாளாகப் பிரிந்திருக்க நேர்ந்து இன்று ஒருவரை ஒருவர் சந்தித்ததால் அவர்கள் நிலை எப்படி இருக்குமென்று சொல்ல முடியுமா?*

**(அ—ரை)**· *மருங்கு இடை; வசை பழி; ஒருங்கிய ஒன்றுபட்ட.*

**64.** *காதலர் ஒருவரை ஒருவர் நினைந்து வருந்தினர். இவ்வாறு அவர்கள் வருந்திய இரவு நீங்கிச் சூரிய உதயம். தோன்றினமையைக் கூறுகிறது.*

**(க - ரை):** *மயலால் வருந்திய இராமனது துன்பம் நீங்கும் படியும் தாமரைகள் மலரும்படியும் சூரியன் உதித்தான்.*

**குறிப்பு :** *இருளால் மூடிய உதயகிரியில் சூரியன் உதித்தது, யானைத் தோலைப் போர்த்த சிவபெருமானின் நெற்றி விழியினின் றும் தோன்றிய நெருப்பை ஒத்தது.*

**(அ—ரை)** *ததை· நெருங்கிய, தார் மாலை; உழந்து வருந்தி, செய்ய வெய்யோன· செந்நிறத்தையுடைய சூரியன்; நுதல்· நெற்றி; புகர் புள்ளி கள்.*

**65.** *மிதிலையில் விசுவாமித்திரர், சனகனிடம், இராமனையும் இலக்குவனையும் பற்றியும் அவன் முன்னோர் செயல்களைப் பற்றி யும் கூறுதல்.*

**(க - ரை):** *சனக மகாராசனே! உலகின் உயிர்களுக்கு உயிராகி உலகத்தை ஆண்டுவந்த இச்சூரிய குலத்தரசனின் பெருமை எம்போல்வார் சொல்ல எளியதோ? ஒரு புறவின் பொருட்டாகத் தன் உயிரைக் கொடுத்தவன் இவர்களின் முன்னோரில் ஒருவன்.*

**(அ ரை)** *மின் உயிர்க்கும . மின்னலைபபோல் பிரகாசிக்கும; கழல் வீரகண்டை; பொன்னுயிர்க்கும் பொன்னால் செய்து ஒளி வீசுகிற.*

**66.** *இதுவும் அது.*

**(க - ரை):** *இவ்வாறு சூரியகுலத்தரசர் ஒவ்வொருவர் பெரு மையையும் கூறிவந்த விசுவாமித்திரர், 'அத்தகைய சூரிய குலத்தில் உதித்த அஜச் சக்கரவர்த்தியின் புதல்வனாகிய தசரதன் பெரு மையை அறியாதவர்கள் இல்லை; அவனுடைய புதல்வராகிய இவர்களின் தன்மையை எல்லாம் முடிவுபெற எடுத்துக் கூறுதல், நான்கு முகங்களையுடைய பிரம்மாவிற்கும் முடியாது என்றால், ஒரு முகத்தையுடைய என்னால் எங்ஙனம் முடியும்? எனினும் நான் அறிந்தவாறு கூறுகிறேன்; கேட்பாயாக' என்றார்.*

**(அ·ரை):** பயந்த : பெற்ற; பரிசு : தன்மை; கடை : வாயில்; பல் இயம் துவைத்த : பல வாத்தியங்கள் ஒலிக்கின்ற.

63. மருங்கிலா நங்கையும், வசைஇல் ஐயனும்
ஒருங்கிய இரண்(டு)உடற்(கு) உயிர்ஒன்(று) ஆயினார்;
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ?

64. ததையும்மலர்த் தார்அண்ணல் இவ்வண்ணம்
மயல்உழந்து தளரும் வேலை,
சிதையும்மனத்(து) இடர்உடைய, செங்கமலம்
முகம்மலரச் செய்ய வெய்யோன்,
புதைஇருளின் எழுகின்ற புகர்முகயா-
னையின்உரிவைப் போர்வை போர்த்த
உதையகிரி எனும்கடவுள் நுதல்கிழித்த
விழியேபோல் உதயம் செய்தான்.

குலமுறை கிளத்துப் படலம்

65. இன்உயிர்க்கும் இன்உயிராய்
இருநிலம்காத் தார்என்று
பொன்உயிர்க்கும் கழலவரை
யாம்போலும் புகழ்கிற்பாம்!
மின்உயிர்க்கும நெடுவேலாய்!
இவர்குலததோன் மென்புறவின்
மன்உயிர்க்குத் தன்உயிரை
மாறுக வழங்கினன்ஆல்.

66 'அயன்புதல்வன் தயரதனை
அறியாதார் இல்லை,அவன்
பயந்தகுலக் குமரர்; இவர்
தமக்குள்ள பரிசெல்லாம்
நயந்துரைத்துக் கரையேறல்
நான்முகற்கும் அரிதாம்; பல்
இயம்துவைத்த கடைத்தலையாய்!
யான்அறிந்த படிகேளாய்!

67. இராமனது பெருமையை விசுவாமித்திரர் சனகனிடம் கூறல்.

(க - ரை): கடல்போலும் கரிய நிறத்தையுடைய இவ் ஆண் மகனது புயவலியை நீ ஊன்றிப் பார்ப்பாயாக. இவன் எய்த அம்பு அக்கினிப்பொறி பறக்கும் கண்களையுடைய தாடகையின் நெஞ்சைப் பிளந்து அப்புறம் போய் அங்கிருந்த மலைகளிலும் மரங்களிலும் பாய்ந்து பூமியையும் துளைத்துச் சென்றது.

(அ-ரை): ஆண் தகை : ஆண்மைக குணமுடையவன், இராமன், நிலை உருவம் : நிலைபெற்ற வடிவம், உரம் : நெஞ்சு; புயவலி : வலிமையுடைய புயம என்று மாற்றியுரைக்க,

68. இதுவும் அது.

(க - ரை): கௌதம முனிவரின் பத்தினியாகிய அகலிகைக்குப் பழைய உருவத்தைக் கொடுத்தது இவன் காலில் எழுந்த புழுதி. என் உயிரைவிட இராமனிடம் நான் அதிக அன்பு பாராட்டுகிறேன். இவனுடைய வரலாறும் வீரமும் இவையே.

(அ-ரை): பன்னி : பத்தினி, மனைவி; போது . மலர்; பொலம் : பொன்; பொடி : புழுதி; ஈது : இது; நீட்டல் விகாரம்.

69. சனகன் இராமனிடம் கூறல்.

(க-ரை): சீதையை விரும்பிப் பல அரசர்கள் போர் புரிந்ததால் எங்கள் சேனையும் குறைந்தது; அவர்கள் சீதையின்மேல் வைத்த ஆசையும் பயனற்றதாயிற்று. வில்லை வளைப்பவனுக்குப் பெண்கொடுத்தல் அசுர மணமென்றும், போர்புரிந்து ஒருவன் மகளைக் கவர்வது இராக்கத மணமென்றும் கூறப்படுதலால், அசுர மணத்தில் தோற்ற அரசர்கள் இராக்கத மணத்திலும் தோற்றனர்.

குறிப்பு : சனகன் சேனை குறைந்ததற்குப் புகழைவேண்டிக் கொடை கொடுப்போன் செல்வம் குறைவது உவமையாயிற்று.

(அ-ரை): புகழ் வேட்ட : புகழை விரும்பிய; செமமன்னர் : நேர்மையான அரசர்; பொம்மென்றல் : வண்டுகள் ஒலிக்கும ஓசை, புரிகுழல் : சடை பின்னிய கூந்தலையுடைய சீதை: அன்மொழித் தொகை.

70. வில் இருக்கும் இடத்திற்கு இராமன் போதல்.

(க - ரை): அவ்வாறு இராமன் செல்வதைக் கண்ட அரண்மனை மகளிர் பலவாறு கூறவும் பெரியோர்கள் மகிழ்ச்சியுரை கூறவும் தேவர்கள் மகிழவும் கம்பீரமான நடையோடு இராமன் நடந்து சென்றான். அவ்வாறு நடந்த தோற்றமானது வானில் தாவவல்ல சிங்கத்தையும் பெரிய காளையையும் மகாமேரு மலையையும் யானையையும் ஒத்ததாக இருந்தது.

(அ-ரை): தோகையர் : மயில் போன்ற மாதர்; ஓகை : மகிழ்ச்சி; இன்னன : இவை போன்ற வார்த்தைகள்; உம்பர் : தேவர்; மாகம் : ஆகாயம்; மடங்கல் : சிங்கம்; மால் : பெரிய; விடை : காளை; நாகம் : மலை, யானை.

67. 'அலைஉருவக் கடல்உருவத்(து)
ஆண்தகைதன் நீண்டுயர்ந்த
நிலைஉருவப் புயவலியை
நீஉருவ நோக்கையா!
உலைஉருவக் கனல்உமிழ்கண்
தாடகைதன் உரமஉருவி,
மலைஉருவி, மரம்உருவி,
மண்உருவிற்(று) ஒருவாளி.'

68. 'கோதமன்தன் பன்னிக்கு
முன்னை உருக் கொடுத்த(து) இவன்
போதுவென்ற(து) எனப்பொலிந்த
பொலன்கழற்கால் பொடிகண்டாய்!
காதல்என்றன் உயிர்மேலும்
இக்கரியோன் பால்உண்டால்;
ஈ(து)இவன்தன் வரலாறும்
புயவலியும்' எனஉரைத்தான்.

கார்முகப் படலம்

69. 'இம்மன்னன் பெரும்சேனை, ஈவதனை மேற்கொண்ட
செம்மன்னர் புகழ்வேட்ட பொருளேபோல் தேய்ந்ததால்;
பொம்என்ன வண்டலம்பும் புரிகுழலைக் காதலித்த
அம்மன்னர் சேனை,தம(து) ஆசைபோல் ஆயிற்றால்.'

70 தோகையர் இன்னன சொல்லிட, நல்லோர்
ஓகை விளம்பிட, உம்பர் உவப்ப
மாகம டங்கலும், மால்விடை யும்,பொன்
நாகமும் நாகமும் நாண நடந்தான்.

71. இராமன் வில்லைக் கையில் எடுத்தல்.

(க - ரை): அவ்வில் ஒரு மலைபோலக் கிடந்தது. அதனை இராமன் எளிதாக மிக்க மகிழ்ச்சியோடு கையில் எடுத்தான்.

(அ-ரை). ஆடகம : பொன்; மால் : பெரிய; வரை : மலை; பொன் சூடகம் : பொன்னாலாகிய கங்கணம்; வால்வளை : வெள்ளிய சங்கு வளையல்கள்; ஏடு அவிழ் : இதழ் விரிந்த; சீதைக்குச் சூட்டும மணமாலையை எடுப்பது போல, வில்லையெடுத்தான் என்ற உவமை போற்றத்தக்கது.

72. வில் முறிதல்.

(க - ரை): இவன் வில்லை வளைப்பானே என்னவோ என்று கண் இமைப்பைத் தடுத்து, விடாமல் பார்த்துக்கொண் டிருந்த அத்தனை பேரும், இராமன் கையில் வில்லை எடுத்ததைக் கண்டார்கள். அடுத்த கணம் அவ்வில் ஒடிந்ததைக் கேட்டார்கள். மற்று எடுத்த வில்லைக் காலில் வைத்ததையும், நாண் பூட்டியதையும் கண்டிலர்.

(அ-ரை): தாள் கால், நாண் விற்கயிறு.

73. வில் ஒடிந்த பின் திரும்பிவரும் இராமனது அழகில் ஈடுபட்ட மகளிர் கூற்று.

(க - ரை): 'இவன் தசரதன் புதல்வன்; தாமரை போன்ற கண்களைக் கொண்டவன்; புயல் போன்ற மேனியை உடையவன்; காயாம்பூவைப் போலவும் மேனி இருக்கிறது; இவனைக் கண்ட உலகம் இவன்மேல் காதல் கொள்ளும்; இவன் மனிதன் அல்லன்; திருமாலே' என்பார்கள்.

(அ-ரை) புயல் . மேகம்; பூவை காயாம்பூ, (காயா மரம நீலநிறப் பூக்களைக் கொடுப்பது.) கயல் : மீன்.

74. மகளிர் பலவாறு கூறுதல்.

(க - ரை): இராமனின் அழகைப் பார்க்கச் சீதைக்கு ஆயிரம் கண்கள் வேண்டும் என்பர் சிலர். சிலர் இராமனுக்குத்தான் சீதையின் அழகைப் பார்க்க ஆயிரம் கண்கள் வேண்டும் என்பர். சிலர் அருகில் வருகிற தம்பியின் அழகைப் பாருங்கள் என்பார்கள். இத்தகைய அழகர்கள் பிறந்திருப்பதால் இவ்வுலகம் தவமுடைத்து என்பர் சிலர். சிலர், இராமனை அழைத்து வந்த முனிவரைக் கும்பிடுவோம் என்பர்.

(அ-ரை): நம்பி: ஆண்களில் சிறந்தவன்; நங்கை : பெணகளில சிறந்தவள், நயனம் : கண்; குரிசில் : தலைவன்; இம்பர் : இங்கே; இறைஞ்சுதல் : கும்பிடுதல்.

71. ஆடக மால்வரை அன்னது தன்னைத்,
தேடரும் மாமணி, சீதைஎ னும்பொன்
சூடக வால்வளை, சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலைஇ தென்ன எ( தான்.

72. தடுத்(து)இமை யாமல் இருந்தவர், தாளின்
மடுத்ததும் நாண்நுதி வைத்ததும் நோக்கார்;
கடுப்பினில் யாரும் அறிந்திலர்;கையில்
எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்.

73. தயரதன் புதல்வன் என்பார்;
தாமரைக் கண்ணன் என்பார்;
புயல்இவன் மேனி என்பார்;
பூவையும் பொருவும் என்பார்;
மயல்உடைத்(து) உலகம் என்பார்;
மானிடன் அல்லன் என்பார்;
கயல்பொரு கடலுள் வைகும்
கடவுளே காணும் என்பார்

74. நம்பியைக் காண நங்கைக்(கு)
ஆயிரம் நயனம் வேண்டும்;
கொம்பினைக் காணுந் தோறும்
குரிசிற்கும் அன்ன தேஆல்;
தம்பியைக் காணும் என்பார்;
தவம்உடைத்(து) உலகம் என்பார்;
இம்பர்இந் நகரில் தந்த
முனிவனை இறைஞ்சும் என்பார்.

**75.** சீதை இராமன்மீது காதல் கொள்ளுதல்.

**(க - ரை) :** 'ஆகாயத்திலிருந்து ஒரு மேகம் மார்பில் மின்னல் போன்ற பூணூலோடும் பூமியில் வந்தது என்னும்படியாக அங்கிருந்து வந்து சென்ற அரச குமரர், என் எண்ணத்தில் இருக்கிறார். அப்பொழுதும் அவர் யாரென்று தெரியவில்லை. என் கண்ணுள்ளே இருக்கின்றார்; இப்பொழுதும் நான் அவரைக் காண முடியவில்லை. என்ன வியப்பாக இருக்கின்றது!'

**(அ-ரை)** விண - ஆகாயம்; எண் எண்ணம்.

**76.** சீதையை இராமனுக்கு மணம் முடிக்க தசரதன் மிதிலைக்கு எழுதல். இராமன் திருமணம் குறித்து முரசு அறையக் கேட்டவர் மகிழ்ச்சி.

**(க - ரை) :** பறையைச் சாற்றிய ஓசையைக் கேட்ட மகளிர்களும் ஆடவர்களும் சேனை வீரர்களும் சிற்றரசர்களும் காற்றால் மோதப்பட்ட கடல் பொங்கி எழுவதைப்போல் ஆரவாரித்து மிக்க மகிழ்ச்சியடைந்தனர்.

**(அ-ரை):** கோல் - வளையலில் உள்ள புள்ளி, தொடி வளையல்; கோலம் - அழகு

**77.** திருமணத்திற்குச் செல்லும் சேனையின் பெருக்கம்.

**(க - ரை) :** சேனை, உழுந்துபோடவும இடம் இல்லை என்னும் படியாக உலகம் முழுவதும் பரந்தது. உலகத்து உயிர்களாகிய குடிகளுக்கெல்லாம கொழுகொம்பாகிய தசரதன் இன்னும் தன் ஆசனத்தை விட்டு எழவில்லை. அப்படியிருந்தும் படையின் முன்னணிச் சேனையானது மிதிலா நகரத்தின் மதிலை அடைந்து விட்டது.

**(அ-ரை)** சேனையின் கொழுந்து - முன்னணிச் சேனை.

**78.** அச் சேனையின் தோற்றம்.

**(க - ரை) :** மிதிலைக்குப் புறப்பட்ட அரசனது சேனை, வெண சாமரையோடும் வெண் கொற்றக் குடையோடும் அணியாகச் செல்வதால் அது வெண்மை நிறத்தோடு அலையடித்துக்கொண்டு செல்லும் கங்கையாற்றை ஒத்திருந்தது.

**(அ-ரை):** அங்கண் ஞாலம் : அழகிய இடத்தையுடைய பூமி; அரசு : அரசர்; மிடைந்து : நெருங்கி; கடுத்தது : ஒத்தது; கார் : மேகம.

75. விண்ணுளே எழுந்த மேகம்,
மார்பின் நூலின் மின்னொ(டு)இம்
மண்ணுளே இழிந்த தென்ன
வந்து போன மைந்தனார்,
எண்உளே இருந்த போதும்
யாவர் என்று தேர்கிலேன்;
கண்உளே இருந்த போதும்
என்கொல் காண்கி லாதவே!

## எழுச்சிப் படலம்

76. சாற்றிய முரசொலி செவியில் சாருமுன்
கோல்தொடி மகளிரும் கோல மைந்தரும்
வேல்தரு குமரரும் வென்றி வேந்தரும்
காற்(று)எரி கடல்எனக் களிப்பின் ஓங்கினார்.

77. உழுந்திட இடம்இலை உலகம் எங்கணும்;
அழுந்திய உயிர்க்கெலாம் அருட்கொம்(பு) ஆயினான்
எழுந்திலன், எழுந்திடைப் படரும் சேனையின்
கொழுந்துபோய்க் கோடிமதில் மிதிலை கூடிற்றே.

78. அம்கண் ஞாலத்(து) அரசு மிடைந்(து)அவர்
பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்,
கங்கை யாறு கடுத்தது; கார்எனச்
சங்கு பேரி முழங்கிய தானையே.

**79.** தசரதன் சேனை சந்திர சைலம் என்னும் இடத்தில் தங்கிச் சென்றது. தேர்களின் பெருமை கூறுவது.

(க - ரை): அங்கே செல்லும் இரதங்களின் சக்கரங்கள் தங்கத்தால் ஆனவை. பல தேர்கள் கருங்கற் பாறை வழியே செல்லுதலால் சக்கரத்தின் தங்கம் உறைந்து உறைந்து கருங் கல்லெல்லாம் பொன்மயமாயின. மேலோர் தங்களை அடுத்தவர் கீழ்மக்களேனும் தம்மோடு பழகுவதால் அவர்களையும் மேன் மைக்குணம் உடையவராக மாற்றிவிடுவது இயல்பே.

**குறிப்பு:** இப்பாடல் வேற்றுப் பொருள் வைப்பணி.

(அ-ரை) தெருண்ட : அறிவில் தெளிவடைந்த; மருண்ட : மயக்கமுற்ற; புன்மை : கீழ்மைக் குணம்; வழக்கு முறைமை, பொன் உருள் தங்கத்தாலாய சக்கரம்.

**80.** மலையின் அடியில் அவர்கள் தங்குதல்.

(க - ரை): அங்கங்கே திரைச்சீலைகள் கட்டப்பட்டன; மற் றோரிடத்தில் கடைவீதிகள் வைக்கப்பட்டன; சோலைகளில் யானைகளைக் கட்டினர், பிறிதோரிடத்தில் குதிரைகளைக் கட்டி னார்கள்.

(அ-ரை): நீர்நிரை நிரைத்ததென தண்ணீர் அலைகளை வரிசையாக வைத்ததைப்போல, திரை : திரைச்சீலை, ஆரகலி : கடல், ஆவணம் : கடை வீதி; கா சோலை, மாருதம், காற்று; வாசி குதிரை.

**81.** மலையடியில் மகளிர் விளையாட்டு.

(க - ரை): அக்கூட்டத்தில் வந்த மகளிரில் சிலர் புறப்படும் அவசரத்தில் சற்று முன்னே விழித்தெழுந்தவரும் கணவரோடு பிணங்கி யிருந்தவரும் ஆகியோர் அம்மலையின் பக்கங்களில் குயில்களோடு இனிது பேசியும் மலைகளோடு எதிர் பேசியும் மயிற்கூட்டம் திரிவதைப்போலத் திரிந்தனர்

(அ-ரை). துயில் உணர்தல் . விழித்தெழுதல்; செவ்வி : நிலைமை; துனி . பிணக்கு; முனிவு கோபம்; சிலம்பு மலை; மின் நிழல் : மகளிர் அணிந்த ஆபரணத்தின் ஒளி.

**82.** அம்மலையிலிருந்து அருவி ஓடிவரும் தோற்றம்.

(க - ரை): அம்மலைகளிலிருந்து ஓடிவரும் அருவி, பல முத்துக் களைச் சிதறுவது பூமிதேவிக்கு ஆபரணங்களைக் கொடுப்பது போல் இருந்தது. சிவபெருமானது சடையிலிருந்து பூமியிற் பாய்ந்து வரும் கங்கையையும் ஒத்திருந்தது; இன்னும் உலகை யளந்த திருமால் தன் மார்பில் அணிந்த மேலாடையையும் ஒத்திருந்தது.

(அ-ரை): அலகு இல் . அளவற்ற; நிலமகள் : பூமிதேவி; நிரை : வரிசை; கதிர் : ஒளி; மலைமகள் . பார்வதி; கொழுநன் : கணவன்; சென்னி : தலை; அலம்பி : ஒலித்து; ஆரம் . மாலை; உத்தரீயம் : மேலாடை.

## சந்திர சைலப் படலம்

79. தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும், அவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவர், எனும்இது வழக்கே;
உருண்ட வாய்தொறும் பொன்உருள் உரைத்துரைத்(து) ஓடி.
இருண்ட கல்லையும் தன்னிறம் ஆக்கிய(து) இரதம்.

80. நீர்திரை நிரைத்ததென நீள்திரை நிரைத்தார்;
ஆர்கலி நிரைத்ததென ஆவணம் நிரைத்தார்;
கார்நிரை எனக்களிறு காவிடை நிரைத்தார்;
மாருதம் நிரைத்தஎன வாசிகள் நிரைத்தார்.

81. வெயில்நிறம் குறையச்,சோதி
மின்னிழல் பரப்ப, முன்னம
துயில்உணர் செவ்வி யோரும,
துனியுறு முனிவி னோரும்
குயிலொடும் இனிது பேசிச்,
சிலம்பொடும் இனிது கூவி,
மயிலினம் திரிவ தென்னத்
திரிந்தனர் மகளிர் எல்லாம்

## வரைக் காட்சிப் படலம்

82. நிலமகட்(கு) அணிகள் என்ன நிரைகதிர் முத்தம சிந்தி
மலைமகள் கொழுநன் சென்னி வந(்து)இழி கங்கை மான
அலகில்பொன் அலம்பி ஓடி, ஆரம்சேர் அருவி மாலை
உலகளந் தவன்தன் மார்பின் உத்தரீ யத்தை ஒத்த.

**83.** மலையின் தோற்றம்.

**(க - ரை):** அம்மலையானது பார்ப்பதற்கு இனிய தோற்றத்தை உடையதாகி, பல சிகரங்களோடு கூடி, மார்பில் ஆரத்தை (சந்தனக்குழம்பை) அணிந்த திருமாலைப்போல் காணப்பட்டது.

**குறிப்பு :** மலையின் நடுப்பாகம் சந்தனம் பூசிய தோற்றத்தோடு இருந்தது; பல சிகரங்களைப் பெற்றது. ஆதலின் திருமாலுக்கு உவமை ஆயிற்று. திருமாலுக்கு ஆயிரம் தலைகள் உண்டு என்பதை, 'ஆகத்தாள், இப்போது ஐயன் **ஆயிரம்** மௌலி மேலாள்' என்ற சுந்தரகாண்டத்தாலும் அறியலாம்.

**(அ·ரை):** வண்ணம : நிறம்; சந்தனச்சேதகம்: சந்தனக் குழமபு; இலங்கு· விளஙகுகின்ற; சிரம : தலை, சிகரம; ஆசு : குற்றம்.

**84.** அக்கூட்டத்தில் மகளிர் பூக்கொய்து விளையாடல். பூக்கொய்யும் மகளிரின் அழகு.

**(க - ரை):** மகளிரின் முகத்தையும் கண்களையும் கண்ட வண்டுகள், 'இவை நதியிலும் குளத்திலும் மலரும் மலர்கள் அல்ல; பிறைச்சந்திரனைப் போன்ற நெற்றியையுடைய ஒரு பூங்கொடியில் பூத்துள்ளன; இவை புதுமையாக இருக்கின்றன' என்று அவர்கள் முகத்தில் மொய்த்தன. புதுமையான ஒரு பொருளைக் கண்டவர் அதை விட்டு இலேசில் விலகுவாரா ?

**(அ·ரை):** நளினம் : தாமரை; குவளை : நீலோற்பலம்; நுதல் நெற்றி ' வல்லி : பூங்கொடி; மழலைத் தும்பி : மழலைச் சொல்போலும் இனிய ஒலியையுடைய வண்டு. இபபாடல் வேறறுப பொருள் வைப்பணி யாகும.

**85.** **(க - ரை):** நீரில் விளையாடும் மகளிரில் சிலர் தங்கள் கை ஓய்ந்து தங்கள் கணவரைத் தழுவிக்கொள்கின்றனர். அது திருமாலின் மார்பில் வசிக்கும இலக்குமியைப்போல் இருக்கிறது. சிலர் தங்கள் கணவரின் தோள்களைப் பற்றிக்கொள்கின்றனர். அக்காட்சி திருமாலின் தோளிலுள்ள வெற்றி இலக்குமியைப்போல் இருக்கிறது. சிலர் கருவி கொண்டு நீர் இறைத்து விளையாடுகின்றனர். சிலர் வாளைமீன் புரள்வதைக் கண்டு பயந்து தங்கள் கணவரைத தழுவிக்கொள்கின்றனர்.

**(அ-ரை):** தாள் : தாமரைத்தண்டு; கமலத்தாள் · இலக்குமி; உகள : புரள, வெற்றித்திரு: வெற்றி இலக்குமி, எட்டுவகை இலக்குமிகளில் ஒருத்தி.

**86.** அக்கூட்டத்தினர் மதுவை அருந்தி விளையாடுதல். அவர்கள் தங்கிய அந்நாளில், இரவில் நிலாவின் தோற்றம் கூறப்படுகிறது.

**(க - ரை):** சந்திரன் ஒளியால் எங்கும் வெண்மையே காணப்படுவதால் எந்த நதியைப் பார்த்தாலும் கங்கையைப்போல் தோன்றுகிறது, எல்லா மலைகளும் கயிலையைப்போல் தோன்றுகின்றன. எல்லாக் கடல்களும் பாற்கடலைப்போல் காணப்படுகின்றன என்றால் அந்நிலவின் ஒளியைப்பற்றி வேறு யான் என்ன கூற முடியும். (இப்பாடல் கவிக்கூற்று.)

**(அ-ரை):** ஆழி : கடல்; ஆய : ஆயின; வீக்கம் : மிகுதி; கங்கை நதி வெண்மையுடைய தென்பது மேலேயும், 'அம்கண் ஞாலத்து, (இந்நூலுள் 78-ஆம் பாடல்) என வரும் பாடலிலும் வந்தவாறு காண்க.

83. கண்ணுக்(கு) இனிதாகி விளங்கிய காட்சி யாலும்
எண்ணற்(கு) அரிதாகி இலங்கு சிரங்க ளாலும்
வண்ணக் கொழும் சந்தனச் சேதகம் மார்பணிந்த
அண்ணல் கரியோன் தனை ஒத்த(து)அவ் ஆசில் குன்றம்.

## பூக்கொய் படலம்

84. நதியினும் குளத்தும் பூவா நளினங்கள், குவளை யோடு
மதிநுதல் வல்லி பூப்ப, நோக்கிய மழலைத் தும்பி
அதிசயம் எய்திப் புக்கு வீழ்ந்தன; அலைக்கப் போகா;
புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்.

## நீர் விளையாட்டுப் படலம்

85. தாளைரய் கமலத் தாளின் மார்புறத் தழுவு வாரும்,
தோளையே பற்றி வெற்றித் திருஎனத் தோன்று வாரும்,
பாளையே விரிந்த தென்னைப் பரந்தநீர் உந்து வாரும்,
வாளைமீன் உகள அஞ்சி மைந்தரைத் தழுவு வாரும்.

## உண்டாட்டுப் படலம்

86. ஆ(று)எலாம் கங்கையே ஆய; ஆழிதான்
கூறுபால் கடலையே ஒத்த; குன்றெலாம்
ஈறிலான் கயிலையே இயைந்த; என் இனி
வே(று)யாம் புகல்வது நிலவின் வீக்கமே.

**87.** தன் கணவன் வரவை நோக்கிய மதுவுண்ட மாதின் செயல்.

**(க - ரை):** ஒரு பெண் தன் கணவன் வருவானென்று வெளி வந்து எட்டிப்பார்ப்பாள்; வாரானென்று இருக்கை புகுவாள். இவ்வாறு அவள் வந்து திரும்புவது, உலகில் மனிதர் பிறந்து இறக்கும் தொழிலைப்போல் காணப்பட்டது.

**குறிப்பு:** இவ்வுவமை, மிதிலைக்காட்சிப்படலத்தில், 'மாசுறு பிறவிபோல வருவது போவதாகி' (இந்நூலுள் 59-ஆம் பாடல்) என்று வருவதையும் காண்க.

**(அ - ரை)** கொழுநன்: கணவன், துறப்பரு: நீக்கமுடியாத.

(மேற்கோள்) இக்கருத்து, கலிங்கத்துப்பரணியில், கடைதிறப்பில், 'வருவார் கொழுநர் எனத்திறந்தும்-வாரார் கொழுநர் எனஅடைத்தும்-திருகும் குடுமி விடியளவும்-தேயும் கபாடந் திறமினோ' என வருவதும் அறியத்தக்கது.

**88.** சந்திரன் மறைவும் சூரியன் தோற்றமும்.

**(க - ரை):** புண்ணியம் செய்யாதவர்க்கு இடைக்காலத்தில் கிடைத்த செல்வம் நீங்கிவிடுவதைப்போலச் சந்திரன் மறைந்தான். திருமாலின் மார்பில் அணிந்த கவுத்துவமணியைப்போலக் கருங்கடலின் நடுவில் செந்நிறத்தோடு சூரியன் உதித்தான்.

**(அ - ரை)** கடை உற முடிவுவரை, இந்து சந்திரன், நன்னெறி காணகிலாதவர் புண்ணியம் செய்யாதவர், பரமன் திருமால், இரவி: சூரியன், மணிக்கரசு சிறந்த இரத்தினம், கவுத்துவம் என்னும் மணி.

**89.** திருமணத்துக்கு வந்த தசரதச் சக்கரவர்த்தியை, சனக மகாராசன் எதிர்கொண்டு அழைத்துச்செல்ல வருதல். எதிர்கோள்: எதிர் கொள்ளுதல்.

**(க - ரை):** தசரதன் வந்தான் என்பதைத் தூதரால் அறிந்த சனகன் நால்வகைச் சேனைகளோடும் அவனை எதிர்கொண்டு அழைத்துச்செல்ல வந்தான்.

**(அ - ரை)** கந்து கட்டுத்தறி, அடு - முறிக்கின்ற; களிறு யானை; கலினம - கடிவாளம், மா - குதிரை; கடல் - காலாட்படையைக் குறிக்கின்றது; அது உவமையாகுபெயர். தசரதனை எதிர்கொள்ளவந்த சனகனின் தோற்றம், சூரியனை எதிர்கொள்ள வந்த சந்திரனைப்போன்றிருந்தது.

**90.** இராம இலக்குவர் தங்கள் தந்தையை எதிர்கொள்ள வருதல்.

**(க - ரை):** இராமன், இலக்குமணனோடு சனக மகாராசன் அளித்த தேரின்மேல் ஏறிக்கொண்டு குதிரைப்படை முதலியவை சூழத் தன் தகப்பனை எதிர்கொள்ள வந்தான்.

**(அ - ரை):** தானை: சேனை; பம்பு - நெருங்கிய; திண்: வலிய; புரவி: குதிரை. உம்பர்: தேவர்; இம்பர் - இவ்வுலகத்தார்; உரகம் - பாம்பு; உரகர் பாதாள லோக வாசிகள்.

87. மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்,
பிறப்பினோ(டு) இறப்பெனப் பெயரும் சிந்தையாள்;
துறப்பரு முகில்இடைத் தோன்றும் மின்னனப்
புறப்படும்; புகும்ஒரு பூத்த கொம்பனாள்.

88. கடையுற நன்னெறி காண்கி லாதவர்க்(கு)
இடையுறு திருஎன இந்து நந்தினன்;
படர்திரைக் கருங்கடல் பரமன் மார்பிடைச்
சுடர்மணிக்(கு) அரசென இரவி தோன்றினன்.

எதிர்கோள் படலம்

89. வந்தனன் அரசன் என்ன
மனத்தெழும உவகை பொஙகிக்,
கந்தடு களிறும், தேரும்,
கலினமாக் கடலும் சூழச்,
சந்திரன் இரவி தன்னைச்
சார்வ(து)ஓர் தன்மை தோன்ற,
இந்திர திருவன் தன்னை
எதிர்கொள்வான் எழுந்து வந்தான்.

90. தம்பியும், தானும்,அத் தானைமன் னவன்நகர்ப்
பம்புதிண் புரவியும் படைஞரும் புடைவரச்,
செம்பொனின் பசுமணித் தேரின்வந்(து) எய்தினன்,
உம்பரும் இம்பரும் உரகரும் தொழஉளான்.

**91.** *திருமணத்திற்கு முன்பு இராமன் ஊர்வலம் வருதல். இராமன் அழகைக் காண மகளிர் சூழ்ந்தமை.*

**(க - ரை):** அந்நகர மாதர் மான் வருவது போலவும் மயில் வருவதுபோலவும் மின்னல் கூட்டங்கள் நெருங்கி வருவது போலவும் இராமபிரான் உலாவரும் வீதியில் வந்து மொய்த்தனர்.

**(அ-ரை):** இனம் : கூட்டம்; மீன் : நட்சத்திரங்கள்; மிளிர : பிரகாசிக்க; மிடைவ : நெருங்குவன; தேன் : வண்டு; சிலம்பி · ஆரவாரித்து.

**92.** *இராமனுடைய அழகை மாதர் கண்டமை.*

**(க - ரை):** இராமனுடைய தோள்களையும் பாதங்களையும் கைகளையும் பிற அவயவங்களையும் கண்ட மகளிர், தாம் கண்ட அந்த ஓர் அவயவத்தைத் தவிர அடுத்த அவயவத்தின் அழகை அறிந்தாரில்லை. அக்கூட்டத்துள் வந்த பெண்களுள் அவனது முழுவடிவத்தின் அழகையும் கண்டவள் எவளும் இல்லை. இறைவனை அடைதற்குரிய பலவகை நெறிகளில் ஒன்றனையே மேற்கொண்ட சமயவாதிகளின் நிலையை ஒத்திருந்தது அம் மகளிரின் நிலை.

**(அ-ரை):** தொடுகழல் : வீரகண்டையை அணிந்த; கமலம் : தாமரை; ஊழ் கண்ட · ஒவ்வொரு முறையையும் ஏற்ற; சமயத்து அன்னன் : எல்லாச் சமயக் கடவுளும்தான் ஒருவனேயாகிய கடவுள்.

**93.** *சீதையின் அழகைப்பற்றிக் கூறுவது.*

**(க - ரை):** மேகம் போன்ற கூந்தலையுடைய தோழிமார்கள், சந்திரன் போன்ற தங்கள் முகத்தில் சீதையின் அழகைப் பார்த்து ஆசை மயக்கமுற்று நின்றார்கள். சீதையின் அவயவங்கள் ஒவ்வொன்றுமே யாவரும் விரும்பத்தக்க அழகையுடையன. ஆயின் அந்த அழகெல்லாம் ஒன்று திரண்ட சீதையின் அழகில் அத்தோழியரே அன்றி வேறெவர்தாம் ஆசைப்படாதவர் ஆவர்?

**(அ-ரை)** இழை : ஆபரணம்; இடை உலா : நடுவில் வைத்துச் சுற்றி உலவுகிற; மழைகுலாம : மேகங்களை போன்ற; ஓதி : கூந்தல்; நல்லார் : பெண்கள், உழை மான், நயனம் . கண்; மாட்டு : இடத்தில்.

**94.** *சீதையின் உருவத் தோற்றம் கூறுவது.*

**(க - ரை):** சீதை இராமனைப் போலவே காணப்பட்டாள். எங்ஙனமெனின் இராமனுக்கும் கையில் சங்கம் (திருமாலிடமுள்ள பாஞ்சசன்னியம் என்னும் சங்கம்) உண்டு. சீதைக்கும் சங்கம் (வளையல்கள்) உண்டு. இராமன் தாமரைக்கண்ணன்; பிராட்டியாரும் தாமரை போன்ற கண்ணைக் கொண்டவள். சீதையின் உருவைக் கண்டவர்கள் உள்ளத்தில் வேறு எதைப் பார்த்தாலும் சீதையின் உருவமே தோன்றுகிறது. இராமனும் எல்லாருடைய உள்ளத்திலும் தோன்றுபவன். இத்தன்மையினால் சீதை இராமனை ஒக்கின்றாள் என்பது கருத்து.

91. மான்இனம் வருவ போன்றும்,
மயில்இனம் திரிவ போன்றும்,
மீன்இனம் மிளிர வானில்,
மின்இனம் மிடைவ போன்றும்,
தேன்இனம் சிலம்பி ஆர்ப்பச்,
சிலம்பினம் புலம்ப, எங்கும்
பூநனை கூந்தல் மாதர்
பொம்எனப் புகுந்து மொய்த்தார்.

92. தோள்கண்டார் தோளே கண்டார்;
தொடுகழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்;
தடக்கைகண் டாரும் அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கொண்ட சமயத்(து) அன்னான்
உருவுகண் டாரை ஒத்தார்.

93. இழைகுலாம் முலையினாளை,
இடைஉவா மதியின் நோக்கி,
மழைகுலாம் ஓதி நல்லார்
களிமயக்(கு) உற்று நின்றார்;
உழைகுலாம் நயனத் தார்மாட்(டு)
ஒன்றொன்றே விரும்பற்கு ஒத்த(து)
அழகெலாம் ஒருங்கே கண்டால்
யாவரே ஆற்ற வல்லார்!

94. சங்கம்கை உடைமை யாலும்,
தாமரைக் கண்ண தாலும்,
எங்கெங்கும் பரந்து வெவ்வே(று)
உள்ளத்தின் எழுதிற்(று) என்ன
அங்கங்கே தோன்ற லாலும்,
அருந்ததி அனைய கற்பின்
நங்கையும் நம்பி ஒத்தாள;
நாம்இனிப் புகல்வ தென்னோ!

**95. சீதையின் அழகைக் கண்டு தசரதன் வியத்தல்.**

(**க-ரை**): மணவணி அணியப்பட்ட சீதை திருமணமேடையில் அமர்ந்திருந்தபொழுது அவள் அழகைக் கண்டு, தசரதன், 'நான் ஏகச்சக்கராதிபதியாகச் செங்கோல் செலுத்தி ஏழு உலகையும் ஆளும் செல்வம் பெற்றுள்ளேன். எனினும் உண்மையான லக்ஷ்மி கரம் (திரு) இன்றுதான் கிடைக்கப்பெற்றேன். இது என்ன வியப்பு!' என்றான்.

(**அ-ரை**): துன்று : நெருங்கிய; புரிகோதை : பின்னிய கூந்தல்.

**96. திருமணத்திற்கு வந்த மாந்தரின் செயல்.**

(**க - ரை**): அரசர்கள் வந்துகொண்டிருக்கின்றார்கள் ; அந்தணர்கள் அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருக்கிறார்கள் ; வீணை இசையையும் குரல் இசையையும் சிலர் கேட்டுக்கொண் டிருக்கிறார்கள்; பாணரும் விறலியரும் நெருங்கித் திரிந்துகொண் டிருக்கின்றனர்; திருமணம் நிகழும் நேரத்தையும நாழிகையையும் நாழிகை வட்டிலால் பிறர் பார்த்துக்கொண்டிருக்கின்றனர்.

(**அ-ரை**). சென்னியர் . பாணர்; விறலியர் · பாண் மடந்தையர்; **செறிதல்** : நெருங்குதல், கடிகை . நாழிகை; கன்னல் . நாழிகையை அளக்கும் **கருவி.**

**97. திருமணத்திற்கு வந்துகொண் டிருப்பவர்கள்:**

(**க - ரை**): சிலர் தேரில் வருகின்றார்கள்; சிலர் பல்லக்குகளில் வருகிறார்கள் ; சிலர் குதிரை வாகனங்களில் வருகிறார்கள் ; சிலர் யானையின்மேல் வருகிறார்கள் ; சில பெண்கள் பெண் யானைகளின்மேல் வருகிறார்கள் ; சிலர் காலால் நடந்து வருகிறார்கள் ; சிலர் வண்டிகளில் வருகிறார்கள்.

(**அ-ரை**). **சிவிகை** : பல்லக்கு; **ஊர்தி** : வாகனம, இங்கே குதிரை வாகனத்தைக் குறிக்கிறது; ஒளிர்மணி : பிரகாசிக்கின்ற இரத்தினங்கள் பதித்த; ஓடை : நெற்றிப்பட்டம், கார் : மேகம்; நெற்றிப்பட்டத்தை அணிந்த மேகம் என்றது யானையைக் குறிக்கும். இவ்வாறு குறிப்பதை இலக்கண நூலார் வெளிப்படை என்பர்; பார் : பூமி.

**98. தசரதன் சீதையின் திருமண மண்டபம் அடைதல்.**

(**க - ரை**): இதன் மதிப்பு இவ்வளவு என்று தெரிய முடியாததும் தங்கத்தால் மூடப்பட்டதும் ஒரு மலை என்னும்படியாகத் தோற்றப் பொலிவோடு உயர்ந்ததும், இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதும் ஆகிய சீதையின் திருமண மண்டபத்திற்குத் தசரதன் வந்தான்

(**அ-ரை**): **கரை** : எல்லை; **கனகம்** : பொன்; **வரை** : மலை; **மணி** : **இரத்தினம்: நிரைவளை** : வரிசையான வளையல்கள்.

95. துன்றுபுரி கோதைஎழில் கண்(டு),உலகு சூழ்வந்(து)
ஒன்றுபுரி கோலொடு தனித்திகிரி உய்ப்பான்,
'என்றும்உல கேழும்அர(சு) எய்திஉள னேனும்,
இன்றுதிரு எய்திய(து) இ(து) என்னவயம' என்ருன்.

96. மன்னவர் வருவாரும் மறையவர் நிறைவாரும்
இன்னிசை மணியாழின் இசைமது நுகர்வாரும்
சென்னியர் திரிவாரும் விறலியர் செறிவாரும்
கன்னலின் மணவேலைக் கடிகைகள் தெரிவாரும்.

97. தேர்மிசை வருவாரும் சிவிகையில் வருவாரும்
ஊர்தியில் வருவாரும் ஒளிர்மணி நிரையோடைக்
கார்மிசை வருவாரும் கரிணியில் வருவாரும்
பார்மிசை வருவாரும் பண்டியில் வருவாரும்.

98. கரைதெரி(வு) அரியது, கனகம் வேய்ந்தது,
வரைஎன உயர்ந்தது, மணியில் செய்தது,
நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்;
அரசர்தம் அரசனும் அணுகல் மேயினன்.

99. அம்மண்டபத்தின் பெருமை.

(க-ரை): தேவர் முதலிய அனைத்து உலகினரும் அடங்கும்படியான இடத்தை உடையதாகிய அம்மண்டபம், திருமாலின் வயிற்றை ஒத்திருந்தது.

(அ-ரை): எண் : மதிப்பு; இறைவர் : அரசர்; அண்டர் : தேவர்; உதரம் : வயிறு. பிரளய காலத்தில் திருமால் உலகு அனைத்தையும் உண்டு, பின்பு உலகம் தோன்றவேண்டிய காலத்தில் அதனை உமிழ்கின்றார் என்பது புராணமரபு.

100. இராமனின் மணக்கோலம் கூறுவது.

(க-ரை): இராமனுக்கு அங்கு அலங்கரித்த மணக்கோலத்தை எவ்வித உவமையாலும் கூறிக்காட்ட முடியாது.

(அ-ரை) முப்பரம பொருளுக்குள் முதலை : சிவன், விஷ்ணு, பிரமன் என்ற மும்மூர்த்திகளுக்கும் முதல்வனை; மூலம் : சர்வ உலகங்களுக்கும் மூல காரணமாக உள்ளவன்; இப்பரம துடைத்தவர் : இவ்வுலக பாசத்தை நீக்கியவர்; அபபு : தண்ணீர, அமுதம் · சுவை, தண்ணீரில் சுவை பரவிக் கலந்து நிற்றல்போல் உலக உயிர்களிடத்தில் கலந்து நிற்பவன். தன்னையே ஒப்பனை : தனக்குத்தானே நிகராயுள்ளவனை.

101. திருமணத்தில் சனகன் சீதையை இராமனுக்குத் தாரை வார்த்துக் கொடுத்தல்.

(க-ரை): சனகன் இராமனுக்கு முன்னால் வந்து சீதையின் கையை இராமன் கைமேல் வைத்து, 'இவளை உனக்கு மணவாட்டியாகக் கொடுத்தேன்; திருமாலும் மகாலக்ஷ்மியும்போல் நீ என் மகளோடு நிலைபெற்று வாழ்வாயாக' என்று வாழ்த்தி, அவனது கையில் தாரை வார்த்துக் கொடுத்தான்.

(அ-ரை): கோ : அரசன், இங்கே சக்கரவர்த்தி; பூமகள் : மகாலக்ஷ்மி; மன்னுதல் : நிலைபெறுதல்; அன்ன . போன்ற; தடக்கை : விசாலமான கை.

102. ஏனைய மணச்சடங்குகளும், இராமன் சீதையின் கையைப் பிடித்தலும்.

(க-ரை): இராமன் ஓமம் வளர்த்தல் முதலிய சடங்குகள் அனைத்தையும் செய்து சீதையின் கையைப் பிடித்தார்.

(அ-ரை): வெய்ய · வெப்பமான, கனல்தலை : அக்கினியினிடத்தில; வீரன்: இங்கே இராமனைக் குறிக்கிறது; மையறு : குற்றமற்ற; மும்மை : மூன்று தடவை; ஆவுதி : வளர்க்கும் ஓமத்தில் இடும் பொருள்கள்; தையல் : பெண், தடக்கை : விசாலமான கை.

99. எண்தவ முனிவரும் இறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக்(கு) அடங்கிற்(று) ஆதலின்,
மண்டபம், வையமும் வானும் வாய்மடுத்(து)
உண்டவன் மணிஅணி உதரம் ஒத்ததே.

100. முப்பரம் பொருளுக்குள் முதலை, மூலத்தை,
இப்பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை,
அப்பனை; அப்பினுள் அமுதை, தன்னையே
ஒப்பனை, ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ ?

101. கோமகன் முன்சனகன்குளிர் நன்னீர்,
'பூமக ளும்பொரு ளும்என நீஎன்
மாமகள் தன்னொடு மன்னுதி' என்னுத்
தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்.

102. வெய்ய கனல்தலை, வீரனும் அந்நாள்
மையறு மந்திரம் மும்மை வழங்கா,
நெய்அமை ஆவுதி யாவையும் நேர்ந்தே,
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்.

103. அக்கினியை வலம் வரும்பொழுது சீதையின் நிலை.

(க - ரை): தன்னைக் கைப்பற்றிய இராமனோடு அக்கினியை வலம் வரும்பொழுது சீதை, ஒரு பிறப்புப் பிறந்து மறு பிறவியில் அவ் வுயிரைத் தொடும் உடம்பைப் போன்றவளானாள்.

(அ-ரை): இடம்படு : விசாலமான: வெமகனல் : ஓமாககினி, மடம்படு சிந்தை : அறியாமை முதலிய நற்குணங்கள் நிறைந்த மனம்; சிந்தை : நினைப்பு; இங்கு உயிர் இராமனுக்கும் உடல் சீதைக்கும் உவமை.

104. ஏனைய மணச் சடங்குகள் கூறுதல்.

(க - ரை): ஓமாக்கினியை வலம் வந்து வணங்கி, நெற்பொரி இட்டுச் செய்யும் சடங்குகள் முதலியவற்றையும் செய்து, அம்மி மிதித்து அருந்ததி கண்டார்கள்.

(அ-ரை): வலம கொள் தீ : வலமாகச் சுற்றி எரியும் ஓமாக்கினி; பொலம பொரி : பொன்போன்ற நெல்லின் பொரி; இலங்கு ஒளி : பிரகாசிக்கின்ற ஒளி.

105. பரசுராமன் தசரதனைப் பொருட்படுத்தாமல் இராமனுக்கு எதிரே வந்து கூறுதல்.

(க - ரை): "இராமா! நீ ஒடித்தெறிந்தாயே, அந்தச் சொற்றை வில்லின் தன்மை எனக்குத் தெரியும். அதை ஒடித்துவிட்டமைக்கு நீ கர்வம் கொள்கிறாயா? நான் இங்கு வந்தது எதற்கு? என் வில்லை வளைக்கவும் உன்னால் ஆகுமா என்று உன் தோள் வலிமையை அளந்து பார்க்கவே வந்தேன். அதோடு, போர் இல்லாமையால் என் தோள் தினவெடுத்துள்ளது. அதைத் தீர்க்கவும் வந்தேன். இந்த இரண்டின் பொருட்டே வந்தேன்" என்று பரசுராமன் இராமனிடம் கூறினான்.

(அ-ரை): இற்று : ஒடிந்த; சிலை : வில், திறம் : தன்மை, நசை ஆசை; செற்று : பகைவர்களை அழித்து, ஓடிய : பருத்த, திரள் : திரண்ட.

106. பரசுராமன் இராமனைப் போருக்கு அழைத்தல்.

(க - ரை): "நான் யார் தெரியுமா? இந்த உலகங்களை யெல்லாம் வென்று காசிபமுனிவருக்குத் தத்தம் செய்தேன்; என் பகைவர்களாகிய சூரியகுலத்து அரசர்களையெல்லாம் அழித்து வந்தேன்; அளவற்ற தவம் செய்துகொண்டு ஒரு மலையில் தங்கியிருந்தேன்; அந்தச் சமயத்தில் நீ மிதிலையில் ஒடித்த வில்லின் ஓசை கேட்டு மிக்க கோபமுடையவன் ஆகி உன் எதிரே வந்துள்ளேன். இப்பொழுது உன்னுடன் நான் போர் செய்யப்போகிறேன். நீ என்னை அழிக்கும் வலிமை உடையவனானால் என் வில்லை வளைப்பாயாக" என்றான்.

(அ-ரை): அலகு இல் : அளவு இல்லாத; வரை : மலை; தனு : வில்; வல்லை ஆகின் : வலிமை உடையை ஆனால்; வாங்குதி : வளைப்பாய்.

103. இடம்படு தோள்அவ னோ(டு)இயை வேள்வி
தொடங்கிய வெம்கனல் சூழ்வரு போதில்,
மடம்படு சிந்தையள், மாறு பிறப்பில்
உடம்(பு)உயி ரைத்தொடர் கின்றதை ஒத்தாள்.

104. வலம்கொடு தீயை வணங்கினர் வந்து,
பொலம்பொரி செய்வன செய்பொருள் முற்றி,
இலங்கொளி அம்மி மிதித்(து),எதிர் நின்ற
கலங்கல்இல் கற்பின் அருந்ததி கண்டார்.

## பரசுராமப் படலம்

105. 'இற்றோடிய சிலையின்திறம்
அறிவென், இனி யான்உன்
பொற்றோள்வலி நிலைசோதனை
புரிவான்நசை உடையேன்,
செற்றோடிய திரள்தோள்உறு
தினவும்சிறி(து) உடையேனா,
மற்றோர்பொருள் இலை,இங்கி(து) என்
வர(வு)' என்றனன் உரவோன்.

106. 'உலகெலாம் முனிவற்(கு) ஈந்தேன்;
உறுபகை ஒடுக்கிப் போந்தேன்
அலகில்மா தவங்கள் செய்(து)ஓர்
அருவரை இருந்தேன்; ஆண்டைச்
சிலையைநீ இறுத்த ஓசை
செவியுறச் சீறி வந்தேன்;
மலைகுவன் வல்லை ஆகின்
வாங்குதி தனுவை' என்றான்.

107. பரசுராமன் தந்த வில்லை வளைத்து இராமன் அம்பு தொடுத்துக் கூறல்.

(க - ரை): 'முனிவரே! இதோ உம்முடைய வில்லை வளைத்தேன். அதில் அம்பையும் தொடுத்தேன்; தொடுத்த அம்பு வீணாகாது; நீர் பூமியிலுள்ள சூரியகுலத்தரசர்களையெல்லாம் கொன்றிருக்கின்றீர்; அதனால் உம்மீது அவ்வம்பைச் செலுத்த வேண்டும்; என்றாலும் நீர் ஒரு சிறந்த அந்தணரது புதல்வர்; அதோடு துறவியாகவும் உள்ளீர்; ஆதலால் உம்மைக் கொல்லலாகாது. எனினும் என் பாணமும் வீணாகலாகாது. இந்தப் பாணத்திற்கு இலக்காவது யாது? விரைவில் கூறுக' என்று கேட்டான்.

(அ-ரை): பூதலம் . பூமி; பொன்றுவித்தனை : அழிவித்தாய், வேதவித்து : வேதத்தையறிந்தவன்; விரதம் : இங்கு துறவறம்; பிழைப்பது . தவறுவது; இலக்கம் : குறி; இயம்புதி : சொல்வாய்.

108. அவ்வம்பு, பரசுராமனது தவங்களையெல்லாம் வாரிக் கொண்டு மீளல்.

(க - ரை): 'நீர் தொடுத்த அம்பு பழுதாகாத வண்ணம் நான் இதுவரை செய்த தவங்களையெல்லாம் இலக்காகத் தருகிறேன்; கொள்வீராக' என்று பரசுராமன் சொல்லவே, இராமபாணம் அவனது தவங்களையெல்லாம் வாரிக்கொண்டு இராமனிடத்திற்கு வந்தது.

(அ-ரை): நெகிழ்த்தனன் : தளரவிட்டான்: கணை : அம்பு, மையறு குற்றமற்ற.

109. பரசுராமன் இராமனை ஆசீர்வதித்து விடைபெற்றுச் செல்லல்.

(க - ரை): 'இராமனே! நீ நினைத்த செயல்களெல்லாம் எளிதில் கைகூடப் பெறுவனவாகுக' என்று இராமனை வாழ்த்தி விடைபெற்றுச் சென்றான்.

(அ-ரை): மண்ணிய : சாணைபிடித்த; மணி : நீல இரத்தினம்; வண்ண : நிறத்தையுடையவனே; துழாய்க்கண்ணி : துளசிமாலை; கண்ணிய : மாலையணிந்தவனே; களைகண் : பற்றுக்கோடு.

107. 'பூதலத் தரசை எல்லாம்
பொன்றுவித் தனை; என்றாலும்,
வேதவித் தாய மேலோன்
மைந்தன்நீ! விரதம் பூண்டாய்!
ஆதலின் கொல்லல் ஆகா(து);
அம்பிது பிழைப்ப(து) அன்றால்;
யாதுஇதற்(கு) இலக்கம் ஆவ(து)?
இயம்புதி விரைவின்' என்றான்.

108. 'எய்தஅம்(பு) இடைபழு(து) எய்தி டாமல்,என்
செய்தவம் யாவையும் சிதைக்க வே'எனக்
கைஅவன் நெகிழ்த்தனன்; கணையும்சென்(று), அவன்
மைஅறு தவம்எலாம் வாரி மீண்டதே.

109. 'எண்ணிய பொருள்எலாம் இனிது முற்றுக
மண்ணிய மணிநிற வண்ண! வண்துழாய்க்
கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய
புண்ணிய! விடை!' எனத் தொழுது போயினான்.

அயோத்தியில் நடந்த வரலாறு கூறுவது.

மந்திரப் படலம். மந்திரம் : ஆலோசனை.

தசரதன் மந்திரிகளோடு ஆலோசிப்பதைக் கூறுவது

110. கடவுள் வாழ்த்து.

(க - ரை): அரசனும் சிற்றன்னையும் தனக்குக் கொடுமை செய்தலால் தனக்குக் கிடைக்க இருந்த அரசைத் துறந்து, வனத்தையும் கடலையும் கடந்து, தேவர்களின் துன்பத்தைப் போக்கிய அரசனாக வந்த இராமனை, உடம்பும் அதில் உயிரும் அதில் உணர்வும் பிரியாது கலந்திருப்பதைப்போல் உலக மெங்கும் உள்ளும் புறமும் வியாபித்துள்ள பரம்பொருளென்று கூறுவர் ஞானிகள்.

(அ-ரை): வைப்பு : இடம், உலகம; கோல் : அரசு; கோத்தாய் : சிறந்த தாய்; இமைப்ப : செய்ய.

111. தசரதன் சபைக்கு வசிட்டர் வருகை.

(க - ரை): தசரதன் செய்யும் அரசாட்சியை நன்கு செலுத் தும் ஒரு தெய்வம் என்னும்படி, பிரமன் திருமால் சிவன் என்னும் மும்மூர்த்திகளோடு நால்வராக எண்ணத்தக்க வசிட்ட முனிவர் தசரதன் சபைக்கு வந்தார்.

(அ-ரை): பூவரு · பொலிவு பொருந்திய, பொலம : பொன்; பொரு இல்: நிகரில்லாத.

112. தசரதனது மந்திரிகளின் இயல்பு கூறுதல்.

(க - ரை): உயர்குடியிற் பிறந்து, பல நூல்களைப் படித்தும் கேட்டும், அவற்றின் பயனையடைந்து, துன்பம் முதலியன விளை யினும் நடுநிலைமை தவறாதவராய் நீதியில் நிற்பவர். வஞ்சனை முதலியவற்றை நீக்கித் தருமத்தை மேற்கொண்டவர்.

(அ-ரை): குப்பை : கூட்டம்; நலியினும . துன்புறுத்தினும்; சலம் : வஞ்சனை.

113. இதுவும் அது.

(க - ரை): அவர்கள் காலம் இடம் கருவி முதலியவற்றை நூலறிவோடு ஆராய்ந்து, தெய்வத்தின் தன்மையையும் கூர்ந் தறிந்து, தரும நிலையை அளந்தறிந்த சான்றோர்; ஒழுக்க நெறி யையும் புகழ் வரு செயல்களையும் நன்கு அறிந்து, அவற்றால் வரும் நன்மைகளை எல்லாம் தம் தலைவர் பெற முயலும இயல் புடையவர்.

(அ-ரை): சீலம் : ஒழுக்கம், சால்பு, மேன்மை; பயக்கும் : உண்டாக்கு கிற; குணித்த : அளந்தறிந்த; நுனித்து : கூர்மையாக அறிந்து. "பொருள் கருவி காலம் வினையிடனொ டைந்தும்–இருள் தீர எண்ணிச் செயல்" என்னும் குறட் கருத்து அமைந்தது இப்பாடல்.

# அயோத்தியா காண்டம்

## மந்திரப் படலம்

110. வானின்(று) இழிந்து வரம்(பு)இகந்த
மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனும், உயிரும், உணர்வும்போல்,
உள்ளும், புறத்தும் உளன் என்ப
கூனும்.சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்பக் கோல்துறந்து
கானும் கடலும் கட‌ந்(து) இமையோர்
இடுக்கண் காத்த கழல்வேந்தே.

111. பூவரு பொலன்கழல் பொருவில் மன்னவன்
காவலில், ஆணையின் கடவு ளாம்என,
தேவரும் முனிவரும் உணரும் தேவர்கள்
மூவரில் நால்வராம் முனிவந்(து) எய்தினான்

112. குலம்முதல் தொன்மையும், கலையின் குப்பையும்,
பலமுதல் கேள்வியும் பயனும் எய்தினார்;
நலமுதல் நலியினும் நடுவு நோக்குவார்;
சலம்முதல் அறுத்(து)அரும் தருமம் தாங்கினார்.

113. காலமும், இடனும், ஏற்ற
கருவியும், தெரியக் கற்ற
நூல்உற நோக்கித், தெய்வம்
நுனித்(து)அறம் குணித்த மேலோர்;
சீலமும் புகழ்க்கு வேண்டும்
செய்கையும் தெளிந்து கொண்டு
பால்வரும் உறுதி யாவும்
தலைவற்குப் பயக்கும் நீரார்.

114. இதுவும் அது.

(க - ரை): ஒரு காரியம் செய்வதால் விளையும் நன்மை தீமைகளை நாடி, நோயை யறிந்து வைத்தியன் அதை ஏற்ற வகையில் நீக்குவதைப்போல் அரசனுக்கு வரக்கூடிய கெடுதிகளை நீக்கி நன்மையை ஊட்டும் தன்மையை உடையவர்; ஒருவனுக்கு முற்பிறப்பில் செய்த தீவினைப் பயனை துன்பம் நேர்ந்தபொழுது அவன் செய்த தர்மம் துணை நின்று தலையைக் காப்பதுபோல் அரசனைக் காத்துவரும் தன்மையினர்.

(அ-ரை): மருத்துவன் : வைத்தியன்; தொல்லை : பழமை; 'தருமம் தலைகாக்கும்' என்பது பழமொழி.

115. தசரதன் தன் உள்ளக்கருத்தை வெளியிடுதல்.

(க - ரை): யாவரும், நாம் ஒருநாள் இறந்துவிடவே நேரும் என்பதை நினைக்க வேண்டும். அதை மறப்பார்களானால் அதை விடக் கொடிய கெடுதி இல்லை. ஆகையினால் இனிப் பிறவாமைக்கு வழிதேட வேண்டுமே யானால் துறவை மேற்கொள்ள வேண்டும். பிறவிப் பெருங்கடலை நீந்துவதற்குத் துறவென்னும் தெப்பத்தைவிட வேறு வழியே இல்லை.

(அ-ரை) இம்மை இப்பிறப்பு.

116. இதுவும் அது.

(க - ரை): புத்திரர் இன்மையால் நெடுங்காலம் துன்புற்றேன். அத்துன்பத்தை நீக்க இராமன் பிறந்திருக்கிறான். இனி அவன் அரசு பொறுப்பேற்று வருந்த, யான் அதினின்றும் தப்பி நற்கதி அடைவதற்கு ஒரு நல்ல வழியைத் தேர்ந்திருக்கிறேன்.

**குறிப்பு:** அவன் வருந்த என்பது அரசாட்சிப் பொறுப்பைத் தாங்குதல்.

(அ-ரை): வரம்பு இல் அளவில்லாத; உய்ந்தனன் · தப்பிப் பிழைத்து.

117. இதுவும் அது.

(க - ரை): என் மகனை இராமன் சீதையைத் திருமணம் செய்யக்கண்ட நான், இனி அவன், பூமி தேவியையும் திருமணம் செய்யக் கண்டு மகிழ விரும்புகிறேன்.

(அ-ரை): பெருமகன் : பெருமை பொருந்தியவன், இராமன்; என் வயின் : என்னிடத்தில்; அருமகன் : அருமையான மகன், இராமன்; உவப்ப : மகிழ்ச்சியடைய; 'அவனிமாது எனும் ஒரு மகள் மணம்' என்பது சீவக சிந்தாமணியில் 'மண்மகள் இலம்பகம்' என வருவது போல் ஆகும்.

114. நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு
எல்லையில் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்;
ஒல்லைவந்(து) உறுவன உற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென உதவும் சூழ்ச்சியார்.

115. 'இறப்பெனும் மெய்ம்மையை, இம்மை யாவர்க்கும்
மறப்பெனும் அதனின்மேல் கேடு மற்றுண்டோ?
துறப்பெனும் தெப்பமே துணைசெ யாவிடின்,
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்கல் ஆகுமோ?

116. 'மைந்தரை இன்மையின் வரம்பில் காலமும்
நொந்தனன்; இராமன்என் நோவை நீக்குவான்
வந்தனன்; இனிஅவன் வருந்த, யான்பிழைத்(து)
உய்ந்தனன் போவ(து)ஓர் உறுதி எண்ணினேன்.

117. 'பெருமகன் என்வயின் பிறக்கச் சீதையாம்
திருமகள் மணவினை தெரியக் கண்டயான்,
அருமகன் நிறைகுணத்(து) அவனி மா(து), எனும்
ஒருமகள் மணமும்கண்(டு), உவப்ப உன்னினேன்."

118. அதற்கு வசிட்டர் கூறியது.

(க - ரை): "அரசனே! நின் முன்னோர் எத்தனையோ பேர் அரசாட்சி செய்து பெருமையடைந்தனர் என்றாலும், இராமனைப் போல் புதல்வனைப் பெற்று உன்னைப்போல் பெருமையடைந்தவர் யாரும் இல்லை" என்று தசரதனைப் புகழ்ந்து, "இனி நீ செய்ய வேண்டிய கடமையும், தருமமும் நீ சொன்னதே ஆகும்" என்று வசிட்டர் பாராட்டினார்.

(அ-ரை) நிருப அரசனே; நேமி : அரசாட்சியென்னும் சக்கரம்; உருட்டி செலுத்தி; கருமம . கடமை; தகவோய் : நற்குணங்களையுடையவனே.

119 அவ்வாறு தன் கருத்திற்கு வசிட்டர் இசைந்ததை அறிந்து தசரதன் இராமனை அழைத்துவரச் செய்து, அவன் தன்னை வணங்க, அவனைத் தசரதன் தழுவிக் கொள்ளுதல்.

(க - ரை): தனது மார்போடணைத்துத் தன் இரண்டு தோளி னுலும் தசரதன் இராமனைத் தழுவிக்கொண்டான் என்பதில் என்ன நயம் உள்ளது? தசரதன் இராமனைத் தழுவவில்லை; 'இனிப் பூமி பாரம் தாங்கும் ஆற்றல் இவனுக்கு உண்டா?' என்று அவனுடைய மார்பு உரத்தையும் தோள் வலிமையையும் தெரிய எண்ணி அரசாட்சி செய்த தன்னுடைய மார்பையும் தோளையும் கொண்டு அளந்தான்.

(அ-ரை): விலங்கல் · மலை; அலங்கல் : மாலை, திரு : இலக்குமி.

120. தழுவின அரசன் இராமனைப் பார்த்துத் தன் கருத்தைக் கூற அதற்கு இராமன் இசைதல்.

(க - ரை): தந்தை தன் கருத்தை வெளியிட, இராமன் அதற்காக மகிழ்ச்சி உறவும் இல்லை; அதை அலட்சியம் செய்யவும் இல்லை. 'அரசன் இட்ட கட்டளையைச் செய்வதே எனது கடமை'யென்று கருதித் தன் இசைவைக் குறிப்பால் உணர்த்தினன்.

(அ-ரை): தாதை : தந்தை; கொற்றவன் : அரசன்; எற்கு : எனக்கு.

121. இராமன் இசைவை யறிந்த தசரதன் முடிசூட்டும் நாள் குறித்து அரசர்களுக்கு ஓலை போக்க, வந்த அரசர்களுடன் தசரதன் தன் கருத்தை வெளியிட்டபொழுது, அவர்கள் கூறுதல்.

(க - ரை): ஊருணி நீர் நிறைவதையும், பல்வகைப் பயன் உதவும் ஒரு மரம் நடுவூரில் பழுப்பதையும், மேகம் மழை பெய்வதையும் ஆற்றில் வெள்ளம் பெருகுவதையும் வேண்டாமென்று மறுப்பவரும் உண்டோ?

(அ-ரை): ஊருணி : ஊரிற்குப் பொதுவாய் நீர் முகந்து உண்ணும் கிணறு; மாடு : பக்கம், இடம்; மழை : மேகம்; வார் : ஒடுகின்ற; 'ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்-பேரறி வாளன் திரு', 'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம் – நயனுடை'யான்கட் படின்' என்ற குறள்களின் கருத்தைக் கம்பர் இப்பாட்டில் அமைத்திருக்கிறார்.

118. 'நிருப! நின்குல மன்னவர் நேமிபண்(டு) உருட்டிப்
பெருமை எய்தினர்; யாவரே இராமனைப் பெற்றார்!
கரும மும்இது; கற்றுணர்ந் தோய்க்(கு) இனிக்கடவ
தரும மும்இது; தக்கதே உரைத்தனை தகவோய்!'

119. நலம்கொள் மைந்தனைத் தழுவினன்
என்ப(து)என்; நளிநீர்
நிலங்கள் தாங்குறும் நிலையினை
நிலையிட நினைந்தான்;
விலங்கல் அன்னதிண் தோளையும்.
மெய்த்திரு இருக்கும்
அலங்கல் மார்பையும் தனதுதோள
மார்புகொண்(டு) அளந்தான்.

120. தாதை அப்பரி(சு) உரைசெயத்
தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்;
'கடன்இ(து)'என் றுணர்ந்தும்,
'யாது கொற்றவன் ஏவியது
அது செயல்அன்றோ
நீதி எற்(கு)'என நினைந்தும்,அப்
பணிதலை நின்றான்.

121. 'ஊருணி நிறையவும், உதவும் மா(டு)உயர்
பார்கெழு பழுமரம் பழுத்(து)அற் றாகவும்;
கார்மழை பொழியவும், கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும், மறுக்கின் றார்கள்யார்?'

**122.** *அடுத்து அரசாளுகை வரும் இராமனுக்கு, அவர்கள் குல குருவாகிய வசிட்டர் அரச நீதியை எடுத்துக் கூறல்.*

**(க - ரை):** *"இராமா! அரசாளுகை இருப்பவன் யாரோடும் பகை கொள்ளக் கூடாது; அவ்வாறு இருந்தால் உலகில் சண்டையே மறைந்துவிடும்; புகழ் மிகும்; சேனையின் வலியும் குறையாது. அவ்வாறின்றிப் பகை பாராட்டுபவன் கெடுவான். அல்லாமலும் அவன் விரும்பியது ஒன்றும் நடவாது."*

**(அ-ரை)** *தார் : சேனை; வேரொடும் கெடல் என்பது 'ஊருடன் பகைக்கின் வேரொடும் கெடும்' என்னும் பழமொழியின் கருத்து.*

**123.** *இதுவும் அது.*

**(க - ரை):** *"இன்சொல், ஈகை, சிந்தனை, எண்ணித் துணிதல், தூய்மை, மேன்மை, வெற்றி, நீதி, நெறி தவறாமை ஆகிய இக் குணங்களை உடையவனுக்கு ஒருபோதும் அழிவுண்டாகாது."*

**(அ-ரை)** *எண் : சிந்தனை; வினையன் : எண்ணித் துணிபவன்; விழுமியன் : உயர்ந்த ஒழுக்கமுடையவன்.*

குறிப்பு: *'இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால் தான்கண் டனைத்திவ் வுலகு' என்னும் குறளின் கருத்து முதலடியில் அமைந்துள்ளது.*

**124. கதைத் தொடர்ச்சி :** *இவ்வாறு வசிட்டர் உபதேசித்த பின் அவரவர் தம் தம் இருக்கைகளுக்குச் செல்ல, மறுநாள் இராமன் முடிசூட்டலுக்கு வேண்டி நகரம் பலவாறு அலங்கரிக்கப்படுதலை யறிந்த கூனி தன் வீட்டை விட்டு வெளிப்பட்டாள்.*

**(க - ரை):** *அந்நகரம் தேவலோகமோ என்னும்படி அலங்கரிக்கப்பட்டு விளங்கும் சமயத்தில், கூனி வீட்டினின்றும் புறப்பட்டாள். அது இராவணன் செய்த பாவம் வெளிப்பட்டு வருவது போல் இருந்தது.*

குறிப்பு : *இதில் கதையின் ஒருபகுதி மற்றொரு பகுதிக்கு உவமானமாகக் கூறப்பட்டுள்ளது. இராவணன் கெடுவதற்குரிய நிகழ்ச்சிகளில் கூனி புறப்பட்டதும் ஒன்றாகலின் இவ்வாறு கூறப்பட்டது.*

**(அ-ரை).** *அமலை : ஆரவாரம்; ஏல்வை : சமயம்; துன்னரும் : அடைவதற்கரிய.*

**125.** *இதுவும் அது.*

**(க - ரை):** *நெஞ்சு துடிக்க, கோபம் அதிகரிக்க, மனம் கலங்க, கண்ணில் கனல் பொறி பறக்க, உரத்துப் பேசும் சொல்லோடு மூன்று உலகங்களுக்கும் துன்பத்தை உண்டாக்குபவளாகத் தோன்றினாள்.*

**(அ-ரை):** *ஊன்றிய : அழுத்தமான; வெகுளி : கோபம்; உளைதல் : வருந்துதல்; கான்றிடும் : கக்குகின்ற (நெருப்பு); நயனம் : கண்; கதிக்கும் : எடுத்துப் பேசும்.*

## மந்தரை சூழ்ச்சிப் படலம்

122. 'யாரொ டும்பகை கொள்ளலன், என்றபின்,
போர்ஒ டுங்கும்; புகழ்ஒடுங் காது;தன்
தார்ஒ டுங்கல்செல் லாது;அது தந்தபின்
வேரொ டும்கெடல் வேண்டல்உண் டாகுமோ?

123. 'இனிய சொல்லினன், ஈகையன், எண்ணினன்,
வினையன், தூயன், விழுமியன், வென்றியன்,
நினையும் நீதி நெறிகட வான்எனில்,
அனைய மன்னற்(கு) அழிவும்உண் டாம்கொலோ?'

124. அந்நகர் அணிவுறும் அமலை வானவர்
பொன்னகர் இயல்பெனப் பொலியும் ஏல்வையில்,
இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினள்.

125. தோன்றிய கூனியும் துடிக்கும் நெஞ்சினள்;
ஊன்றிய வெகுளியாள்; உளைக்கும் உளளத்தாள்;
கான்(று)எரி நயனத்தாள்; கதிக்கும் சொல்லினள்;
மூன்றுல கினுக்கும்ஓர் இடுக்கண் மூட்டுவாள்.

**126.** அவ்வாறு வந்து கைகேயியின் அரண்மனையை யடைந்து, அவள் தூங்குவதைக் கண்ட கூனி கூறுதல்.

**(க-ரை):** "பாம்பு தன்னைப் பற்ற அணுகுவதைக் கூட அறியாமல் சந்திரன் ஒளி வீசுவது போல், பெரிய துன்பம் உன்னை நெருக்க வந்திருக்கும் பொழுதும், நீ வருந்தாமல் தூங்கிக்கொண்டே இருக்கின்றாயே?" என்று கைகேயிக்குக் கூனி கூறினாள்.

**(அ-ரை):** அணங்கு : துன்புறுத்துகின்ற, அரா . பாம்பு, பிணங்கு : மாறுபட்ட; உணங்குதல வருந்துதல, இப்பாடல் உவமையணி.

**127.** அதற்குக் கைகேயி கூறுதல்.

**(க-ரை):** "உலகத்தில் சாதாரணமான புதல்வர்களைப் பெற்றவர்களே துயரம் நீங்கி இன்புற்றிருப்பார்கள்; இந்த உலகத்துக்கெல்லாம் நன்னெறி காட்டும் வேதம்போன்ற இராமனைப் புதல்வனைப் பெற்ற எனக்கும் நேரக் கூடிய துன்பம் உண்டோ?" என்று கைகேயி கூறினாள்.

**(அ-ரை):** பராவரும : துதித்துப போற்றுவதற்குஅரிய ,பயகக . பெற, உராவரும · நெருங்கிவருகின்ற, விராவரும் . பொருந்திய; எற்கு எனக்கு; இடர் · துன்பம.

**128.** அதற்குக் கூனி சொல்லுதல்.

**(க - ரை):** "அரசர் அரண்மனையில் பிறந்து, அங்கேயே செல்வத்தோடு வளர்ந்து, ஓர் அரசனுக்கு வாழ்க்கைப் பட்டுப் பெரிய அரசியாய், துன்பம் என்பதை இதுவரை அறியாதிருந்த நீ, அளவிடற்கரிய துன்பக் கடலில் வீழப் போகிறாய்; சொன்னாலும் தெரியவில்லையே; நீயாக எங்கே அறியப் போகிறாய்?" என்றாள் கூனி.

**(அ-ரை)** இல் . வீடு, கரை செயறகு அரும் அளவிட முடியாத.

**129.** அதற்குக் கைகேயி கூறுதல்.

**(க-ரை):** "நீ எனக்கு நன்மை செய்பவளும் அல்ல, என் மகன் பரதனுக்கு நன்மை செய்பவளும் அல்ல; அல்லது உனக்கு நன்மை செய்ய வந்தவளும் அல்ல; ஏதோ தீயவினை தூண்டுதலால் இங்கே வந்து உன் மனத்திற்குப் பட்டதையெல்லாம் கூறுகிறாய்; மதி கெட்டவளே!"

**(அ-ரை):** ஊழ்வினை : தீய ஊழ்; மனக்கு . மனத்திற்கு, மதி இலா : புத்தியில்லாத.

126. 'அணங்குவாள் விடஅரா அணுகும் எல்லையும்
குணம்கெடா(து) ஒளிவிரி குளிர்வெண் திங்கள்போல்,
பிணங்குவான் பேர்இடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவாய் அல்லைநீ! உறங்கு வாய்!' என்றாள்.

127. 'பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும்
உராவரும் துயரைவிட்(டு) உறுதி காண்பரால்;
விராவரும் புவிக்கெலாம் வேத மேஅன,
இராமனைப் பயந்தவெற்(கு) இடர்உண் டோ'' என்றாள்.

128. 'அரசர்இல பிறந்து,பின் அரசர் இல்வளர்ந்(து),
அரசர்இல் புகுந்து,பேர் அரசி ஆன நீ
கரைசெயற்(கு) அரும்துயர்க் கடலில் வீழ்கின்றாய்!
உரைசெயக் கேட்கிலை; உணர்தி யோ!' என்றாள்.

129. 'எனக்கு நல்லையும் அல்லைநீ! என்மகன் பரதன்
தனக்கு நல்லையும் அல்லைநீ! தருமமே நோக்கின்,
உனக்கு நல்லையும் அல்லை! வந்(து) ஊழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினை; மதியிலா மனத்தோய்!

130. இதுவும் அது.

(க - ரை): "பிறவி எடுப்பதன் பயன் நல்ல புகழையடைய வேண்டும் என்பது. அதோடு வசை அடையவும் கூடாது. அதனால் உடல் நிலை மாறுபட்டாலும், நீதிநிலை மாறுபட்டாலும், நல்லொழுக்கம் மாறுபட்டாலும், தவம் மாறுபட்டாலும், வீரம் மாறுபட்டாலும், வழக்கமாக வருகின்ற முறைமைக்கு மாறி நடப்பது புகழைத் தருவதாகுமா? வசையை அன்றோ உண்டாக்கும்?"

(அ—ரை): செயிர் : குற்றம்; வரன்முறை : தொன்று தொட்டு வழக்கமாக வரும் முறைமை; நிறம் என்பது பண்பைக் குறிக்காமல் அதற்குரிய உடமையைக் குறிப்பதால் பண்பாகு பெயர்.

131. மந்தரை மீண்டும் துர்ப்போதனை செய்தல்.

(க-ரை): "மூத்தவனுக்கே அரசுரிமை என்றால் தசரதனன்றோ மூத்தவன்? இராமன் அவனுக்கு இளையவன்தானே? வயதில் மூத்த தசரதன் இருக்கையில் இராமன் எப்படிப் பட்டம் கட்டிக் கொள்ளலாம்? இந்நிலையில் இராமன் முடிசூடுவது நீதியென்றால் பரதன் முடி சூடுவதும் நீதியே."

(அ—ரை): ஏத்து : ஏததுதல்; துதிக்கத்தக்க, மீத்தரும் : மிகுதியான; செல்வம்—அரசாட்சியாகிய செல்வம்; கடல் வண்ணன் · கடல் போன்ற கருமை நிறத்தை உடைய இராமன்.

132. கைகேயி கூனியின் மொழிவயமாதல்.

(க - ரை): அரக்கர் செய்த பாவங்களும், அல்லாதவராகிய தேவரும் மக்களும் செய்த புண்ணியங்களும் ஆகிய இரண்டும் சேர்ந்து கைகேயியின் மனத்தைத் திருப்பிச் செலுத்தியதால் அருள் நிறைந்த உள்ளத்தோடிருந்த கேகேயி தன் அருட்குணம் நீங்கினள். இதுவும் ஓர் நன்மைக்கேயாயிற்று. அவ்வாறு அவள் இரக்கம் இன்றி இராமனைக் காடு போகச் செய்ததால் அல்லவா, இந்த உலகங்கள் எல்லாம் இன்றைக்கும் இராமனது பரந்த புகழாகிய அமிர்தத்தை உண்டு திளைக்கின்றன!

(அ—ரை): துரக்க · செலுத்த; தூமொழி வஞ்சனை இல்லாத பேச்சு. கதையின் எதிர்பாராத நிகழ்ச்சிக்குக் காரணங் கூறுதலை இப்பாடலால் அறியலாம். இது கடமையும் ஆகும். பரக்கும் . விரிந்த.

133. கூனி போன பின் கைகேயி அலங்கோலஞ் செய்து கிடத்தல்.

(க - ரை): அம்பு பட்டு மான் வீழ்ந்து கிடந்ததைப் போலவும், தோகை விரித்தாடும் ஒரு மயில் சுருண்டு பூமியில் கிடந்ததைப் போலவும், நமது சீதையாகிய மகாலட்சுமி இந்த நகரத்தை விட்டு நீங்குகிறபடியால் அந்த இடத்திற்கு வந்தடைந்த மூதேவியோ என்று எங்கும் பேச்செழ, கைகேயி அலங்கோலமாகப் பூமியில் கிடந்தாள்.

(அ—ரை): நவ்வி : மான்; கவ்வை : ஆரவாரம்; அவ்வை : தாய்; தனையை : மகள்; கடிகமழ் : வாசனை வீசுகின்ற.

130. 'பிறந்(து) இறந்துபோய்ப் பெறுவதும்
இழப்பதும் புகழே;
நிறம்தி றம்பினும், நியாயமே
திறம்பினும், நெறியின்
திறம்தி றம்பினும், செய்தவம்
திறம்பினும், செயிர்தீர்
மறம்தி றம்பினும் வரன்முறை
திறம்புதல் வழக்கோ!'

131 'மூத்த வர்க்(கு) உரித்து அரசுஎனும்
முறைமையின், உலகம்
காத்த மன்னனின் இளையன் அன்றோ,
கடல் வண்ணன்,
ஏத்து நீள்முடி புனைவதற்(கு)
இசைந்தனன் என்றால்
மீத்த ரும்செல்வம் பரதனை
விலக்குமா(று) எவனோ?'

132. அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும்,
துரக்க, நல்அருள் துறந்தனள் தூமொழி; மடமான்
இரக்கம் இன்மையன் றோஇன்(று)இவ் வுலகங்கள் இராமன்
பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின் றதுவே.

கைகேயி சூழ்வினைப் படலம்

133. நவ்வி வீழ்ந்தென, நாடக
மயில்துயின் றென்னக்,
கவ்வை கூர்தரச் சனகியாம்
கடிகமழ் கமலத்(து)
அவ்வை நீங்கும்என்(று) அயோத்திவந்
தடைந்தஅம் மடந்தை
தவ்வை ஆம்எனக் கிடந்தனள்
கேகயன் தனயை.

134. கைகேயி தசரதனிடம் வரம் கேட்டல்.

(க - ரை): அப்பொழுது அவள் அரண்மனைக்கு வந்த தசரதன் அவளைத் தேற்றப் புக, அவள், "முன்பு ஒரு நாள் நீர் எனக்குக் கொடுத்த வரங்கள் இரண்டில், ஒன்றால் பரதன் முடி சூடவும் மற்றொன்றால் இராமன் வனம்போகவும் கொடுக்க வேண்டும்" என்று கேட்டு நின்றாள்.

உலகிலுள்ள கொடுமைகள் ஒன்று சேர்ந்து இழைக்கும் துன்பத்தினும் மிக்க துன்பத்தை விளைப்பவள் என்பது கடைசியடியின் கருத்து.

(அ-ரை): ஏய : உத்தரவிட்ட, சேய . மகன்; கேள்வன் கணவன்.

135. அதைக் கேட்ட சக்கரவர்த்தி, துயருற்றுக் கீழே விழுதல்.

(க - ரை): கைகேயி என்னும் பாம்பின் நாவிலிருந்து தோன்றிய சொற்களாகிய விடம் பரவ, அதனால் திகிலடைந்து அச்சொல்லின் கொடுமை தாங்காமல் உடல் முழுதும் வெந்து, பாம்பால் கடிக்கப்பட்ட பெரிய யானை விழுவதைப் போல் கீழே விழுந்தான் தசரதன்.

(அ-ரை): நாகம்:பாம்பு, துணுக்கம். திடுக்கிடுதல், ஆசம். உடம்பு; அரவு: பாம்பு; வேழம் : யானை; வேகம் : வீரம்.

136. கைகேயி கேட்ட வரத்திற்குத் தசரதன் பதில் கூறுதல்.

(க - ரை): தசரதன் கைகேயியைப் பார்த்து, "நீ என் கண்ணை வேண்டினாலும் உனக்குக் கொடுக்கக் கடமைப் பட்டுள்ளேன். என் உயிர் வேண்டுமானால் அது உனக்குச் சொந்தம்; (ஆகவே அதைக் கொடுக்க எனக்கு உரிமையில்லை. நீயே எடுத்துக்கொள்.) உனக்கு வேண்டுமேயானால் பரதனுக்கு முடிசூட்டும் அவ்வொரு வரத்தை மட்டும் கேள்; மற்றொன்றை அறவே மறந்துவிடு" என்று கூறினான்.

(அ-ரை): உள்நேர் ஆவி : உடம்பினுள் பொருந்தியுள்ள உயிர், வண்மை : ஈகை. கொடையாளியின் மகளாகையால் கேட்பதைக் கொடுக்க வேண்டும் என்ற கருத்துப்பட 'வண்மைக் கேகயன் மானே' என்றார். இராமன் வனம்புகுவதை வாயினால் கூறவும் அஞ்சி 'மற்றையது' என்று விளக்கினார்.

137. இதுவும் அது.

(க - ரை): "நாட்டை நீயாண்டாலும் சரி; உனது மகன் பரதன் ஆண்டாலும் சரி; இராமன் இந்த நகரை விட்டுப் போகாதவாறு அருள் புரிவாயாக" என்றான் தசரதன்.

குறிப்பு: இராமனைத் தசரதன் எவ்வாறு மதித்துள்ளான் என்பதை இப்பாட்டின் பிற்பகுதியில் காணலாம்.

(அ-ரை): நாடு இறவாமை : நாட்டைக் கடவாமை; நய : தயவுசெய்.

134. 'ஏய வரங்கள் இரண்டில், ஒன்றி ஞல்என்
சேய்உல(கு) ஆள்வது; சீதை கேள்வன் ஒன்ருல்
போய்வனம் ஆள்வ(து)' எனப்பு கன்று நின்ருள்;
தீயவை யாவை யினும்சி றந்த தீயாள்.

135. நாகம் எனும்கொடி யாள்தன் நாவில்வந்த
சோக விடம்தொட ரத்து னுக்கம் எய்தா;
ஆகம் அடங்கலும் வெந்(து) அழிந்(து)அராவின்
வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான்.

136. 'கண்ணே வேண்டும் என்னினும்
ஈயக் கடவேன்;என்
உள்நேர் ஆவி வேண்டினும்
இன்றே உனதன்ருே?
பெண்ணே! வண்மைக் கேகயன்
மானே!பெறுவாயேல்
மண்ணே கொள்நீ மற்றைய(து)
ஒன்றும் மற'என்ருன்.

137 'நின்மகன் ஆள்வான்; நீஇனி(து)
ஆள்வாய்; நிலம்எல்லாம்
உன்வயம் ஆமே! ஆளுதி
தந்தேன்; உரைகுன்றேன்;
என்மகன், என்கண், என்உயிர்,
எல்லா உயிர்கட்கும்
நன்மகன் இந்த நாடிற
வாமை நய' என்ருன்.

**138.** முடிசூட்டு விழாவைக் கொண்டாடும் நகர மாந்தர் நிலை.

**(க - ரை):** வேந்தர்கள், அந்தணர், ஆடவர், மகளிர் இவர்கள் தனித்தனியே கூட்டமாக அந்நகரத்தில் உலாவுகின்றனர். சோதிடர்களும் உலாவினர்.

**(அ-ரை)**: வேதியர் : அந்தணர்; மாந்தர் . ஆடவர்; 'போந்ததே பெரிதென்பாரும். புகுவதே பெரிதென்பாரும்' என்பது சோதிடரைக் குறிக்கும். போந்தது : இறந்தகால நிகழ்ச்சி; புகுவது . எதிர்கால நிகழ்ச்சி; இவற்றை அறிந்தவர் சோதிடர்.

**139.** கைகேயியின் மாளிகைக்கு இராமன் செல்லுதை.

**(க - ரை):** 'இராமன் கோசலையால் வளர்க்கப்படவில்லை; அவனை வளர்த்த தெல்லாம் கைகேயிதான். தான் வளர்த்த மகன் முடி சூட்டுகையில் அவளுக்குச் சொல்ல முடியாத மகிழ்ச்சி உண்டாவது இயற்கை தானே' என்று இராமனைச் சூழ்ந்து செல்லும் மக்கள் கூறினர்.

**(அ-ரை):** மடந்தை · மகள், கிளர் ஞாலம் . விளங்குகின்ற பூமி.

**140.** தன் மாளிகை புகுந்த இராமனுக்கு எதிராகக் கைகேயி வருதல்.

**(க - ரை):** கைகேயியின் மாளிகையில் தன் தந்தையைக் காண இராமன் சென்றபோது, 'சக்கரவர்த்தி தன் வாயால் சொல்லமாட்டார்; அதை நானே சொல்லுவேன்' என்று இராமனுக்கு எதிரே கைகேயி வந்தாள். தாயென நினைத்து வந்த இராமனுக்கு எதிரில் அவள் யமன் வருவது போல் வந்தாள்.

**(அ-ரை):** ஆயன · அவைகள், வேலை . சமயத்தில்; சூழல் : பக்கம்.

**குறிப்பு:** இதைமாற்றி எவ்வித உவமை கூறினும் பொருந்தாமையை 'வாங்கரும் பாதம்' என்ற பாட்டின் உரையில் காண்க.

**141.** கைகேயி இராமனுக்கு அரசன் கட்டளையைக் கூறுதல்.

**(க-ரை):** 'இந்த நிலமெல்லாம் பரதன் ஆளவும், நீ சடை முடி தரித்து, தவத்தை மேற்கொண்டு வனங்களுக்குச் சென்று, அங்குள்ள புண்ணிய நதிகளில் நீராடிப் பதினன்கு ஆண்டுக்குப் பின் திரும்பி வருக' என்று அரசர் உனக்குக் கட்டளையிட்டார் என்று கைகேயி இராமனிடம் கூறினள்.

**(அ-ரை):** ஆழி : கடல்; பூழி : புழுதி; உலகை ஆள்வதிலும் தவம்புரியச் செல்வது மேன்மை என்னுங் கருத்தை இங்கே கைகேயி குறிப்பாக உணர்த்தியுள்ளாள். உலகம் நிலையாமையுடைத்தென்பதை 'ஆழி சூழ் உலகம்' என்றும், தவமேன்மையைக் குறிப்பதற்கு 'தாங்கருந்தவம்' என்றும் கூறி அத்துடன் புண்ணியப் புனலாடும் பேற்றையும் கைகேயி கூறுகிருள்.

138. வேந்தரே பெரிதென் பாரும்,
வேதியர் பெரிதென் பாரும்,
மாந்தரே பெரிதென் பாரும்,
மகளிரே பெரிதென் பாரும்,
போந்ததே பெரிதென் பாரும்,
புகுவதே பெரிதென் பாரும்,
தேர்ந்ததே தேரின் அல்லால்
யாவரே தெரியக் கண்டார்?

139. 'தாய்கையில் வளர்ந்திலன்; வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தை; கிளர் ஞாலம்இவன் ஆள
ஈகையில் உவந்தவள், இயற்கை இ(து) என்றால்
தோகைஅவள் பேர்உவகை சொல்லல்அரி(து)!'என்பார்.

140. ஆயன நிகழும் வேலை,
அண்ணலும், அயர்ந்து தேறத்
தூயவன், இருந்த சூழல்
துருவினன் வருதல் நோக்கி
'நாயகன் உரையான் வாயால்,
நான்இது பகர்வென்' என்னாத்
தாய்என நினைவான் முன்னே
கூற்(று) எனத் தமியள் வந்தாள்.

141. 'ஆழிசூழ் உலகம் எல்லாம்
பரதனே ஆள, நீபோய்த்
தாழ்இரும் சடைகள் தாங்கித்,
தாங்கரும் தவம் மேற்கொண்டு,
பூழிவெம் கானம் நண்ணிப்,
புண்ணியத் துறைகள் ஆடி,
ஏழிரண்டு ஆண்டில் வாஎன்(று)
இயம்பினன் அரசன்' என்றாள்.

142. அதற்கு இராமன் பதில் கூறுதல்.

(க - ரை): "அன்னையே! 'அரசன் கட்டளை என்று கூறுகின்றீர்; உமது கட்டளை என்றாலும் நான் மறுப்பேனா? என் தம்பி பெற்ற செல்வம் நான் பெற்றதல்லவா? எனக்கு இதன் மேலும் வேறு நன்மை என்ன இருக்க முடியும்? இந்தக் கட்டளையைத் தலைமேற்கொண்டேன்; இதோ இப்படியே காட்டுக்குப் போகிறேன்; உம்மிடம் உத்தரவும் பெற்றுக் கொள்கிறேன்'' என்று இராமன் பதில் கூறினான்.

(அ-ரை): பணி : கட்டளை; மின் ஒளிர் கானம் · மின்னலின் ஒளி அடிக்கடி வீசும் வனம; (மலர்களால்) மின்னலைப் போல் பிரகாசிக்கும் வனம.

143. கோசலையின் மாளிகைக்கு இராமன் செல்லுதல்.

(க - ரை): தன் மகன் முடிசூடும் கோலத்தோடு, தன்னைக் காண வருவான் என்ற மகிழ்ச்சி தழைக்க நின்ற கோசலையின் மாளிகைக்கு, அவை ஒன்றும் இன்றி விதி முன்னே செல்லவும், தருமம் பின்னால் வருந்தித் தொடரவும் இராமன் தனியாக அங்கே வந்தான்.

(அ-ரை). குழைக்கின்ற கவரி வளைந்து வீசும வெண்சாமரை. கொற்றம் : வெற்றி, மௌலி . முடி, இழைக்கின்ற தீவினைகளைச் செய்கின்ற. தருமம் பின் இரங்கி ஏக 'இராமன் அரசு செலுத்தித் தன்னை வளர்ப்பதற்கின்றி வனத்திற்குச் செல்கிறானே' என்று தருமம் அவன்பின் ஏங்கிச் சென்றது

144. கோசலையிடம் இராமன், அரசன் கட்டளையைக் கூறக் கேட்ட அவள் துயரம்.

(க - ரை): "தெய்வங்களே! உலகில் தருமம் ஒன்று உண்டென்பார்களே; அது எனக்கு மட்டும் இல்லையா? என் உயிர் நைந்து ஒழிய இந்நிலைமையை அடைவித்தது எதுவோ?'' என்று இளங்கன்றைப் பிரிந்தபோது கறவைமாடு வருந்துவதைப்போல் கோசலை துயருற்றாள்.

(அ-ரை): நைந்து . மெலிந்து, இற. அழிய, மழைக்குன்றம் மேகம போலும் கரிய நிறத்தையுடைய மலை.

145. தசரதன் கைகேயியை நிந்தித்தல்.

(க - ரை): இராமனைத் தவிரத் தனக்கு வேறோர் உயிரில்லை என்று எண்ணியிருந்த அரசன், அவன் வனத்திற்குப் போவான் என்பதைத் தெரிந்து கைகேயியை நோக்கி, "அடி பாவி! உன்னை முன்னால் மனமகிழ்ச்சியோடு கண்டேன். நெடுநாட்களாக உன்னுடன் கூடி உன் வாய் விடத்தை உண்டேன். அதனால் நீ என் உயிரை அடியோடு உண்டுவிட்டாய். நான் உன்னை மனைவியாகக் கொள்ளவில்லை. என் உயிருக்கு ஓர் எமனைகவே கொண்டேன்'' என்று கூறினான்.

(அ-ரை): நெஞ்சம் கனிவாய் : மனமகிழ்வாய்; கனிவாய்விடம் : கொவ்வைக்கனி போன்ற உன் வாயின் நஞ்சு.

142. 'மன்னவன் பணிஅன் றாகில்
நும்பணி மறுப்ப னோ?என்
பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்ற தன்றோ?
என் இனி உறுதிஅப்பால்;
இப்பணி தலைமேல் கொண்டேன்;
மின்ஒளிர் கானம் இன்றே
போகின்றேன்; விடையும் கொண்டேன்.'

## நகர் நீங்கு படலம்

143. குழைக்கின்ற கவரி இன்றிக்,
கொற்றவெண் குடையும் இன்றி,
இழைக்கின்ற விதிமுன் செல்லத்,
தருமம்பின் இரங்கி ஏக,
'மழைக்குன்றம் அனையான் மௌலி
கவித்தனன் வரும்'என் றென்று
தழைக்கின்ற உள்ளத்(து) அன்னாள்
முன்,ஒரு தமியன் சென்றான்.

144. 'அறம் எனக்(கு)இலை யோ'எனும் 'ஆவிறைந்(து)
இறவி டுத்த(து) என்? தெய்வதங் காள்!'எனும்;
பிற உரைப்ப(து)என்? கன்று பிரிந்துழிக்
கறவை ஒப்பக் கரைந்து கலங்கினாள்.

145. 'கண்டேன் நெஞ்சம் கனிவாய்க்;
கனிவாய் விடம்நான் நெடுநாள்
உண்டேன்; அதனால் நீஎன்
உயிரை முதலோ(டு) உண்டாய்!
பண்டே எரிமுன் உன்னைப்
பாவி தேவி யாகக்
கொண்டேன் அல்லேன், வேறோர்
கூற்றம் தேடிக் கொண்டேன்.'

**146.** தசரதன் வசிட்ட முனிவரிடம் கூறுதல்.

**(க - ரை):** தசரதன் எவ்வளவு சொல்லியும் மனம் சற்றும் இரங்காதவளாகிய கைகேயியைப் பற்றி அங்கு வந்த வசிட்ட முனிவரிடம், "முனிவரே! இனி இவள் என் மனைவி ஆகாள்; இனி முடிசூட இருக்கும் பரதன் என் மகனும் ஆகான், எனக்குச் செய்யும் சடங்குகளுக்கெல்லாம், அவனுக்கு உரிமையும் இல்லை" என்று கூறினன்.

**(அ-ரை)** தாரம் - மனைவி, மன் - அரசன்; உன்னேன் - நினைக்கமாட்டேன்.

**147.** தசரதன் கைகேயியை நிந்தித்தல்.

**(க - ரை):** "கொடிய காட்டில் என் மகனைப் போகச் செய்வாய்; அதனால் என் உயிரையே இரண்டாகப் பிளந்தாய்; இனி உன் தாலிக் கயிறே உன் மகனுக்குக் கையில் கட்டும் காப்புக் கயிறு ஆகட்டும்."

**(அ-ரை):** விழிக்கும் கண் வேறில்லா வெம் கான் - எந்தவிதக் கண் கொண்டும் பார்க்கமுடியாத அவ்வளவு வெப்பத்தையுடைய கொடிய காடு; போழ்தல் - பிளத்தல், சுழிக்கும் : தடுமாற்றம் உண்டாக்கும் செயல்; கழுத்து நாண் : தாலிச்சரடு. காப்பு நாண் . நல்லகாரியம் செய்பவர்கள் முதலில், கையில் காப்புக்கட்டிக் கொள்ளுதல் மரபு.

**148.** இராமன் பிரிவை அறிந்த நகரின் துயரம்.

**(க - ரை):** இராமன் வனம் புகுவான் என்ற வார்த்தை நகரெங்கும் பரவிய பொழுது, ஒவ்வொரு வீட்டிலும் இருந்த கிளிகளும் மைனாக் குருவிகளும் அழுதன, பூனைகளும் அழுதன; அறிவு தெரியாத குழந்தைகளும் அழுதன என்றால் பெரியவர்களைப்பற்றி என்ன சொல்ல இருக்கிறது?

**(அ-ரை)** கிள்ளை : கிளி, பூவை மைனாக்குருவி; கிளர் விளங்குகின்ற; பூசை : பூனை. இப்பாடல் இளிவரல் சுவை அமைந்தது.

**149.** இதுவும் அது.

**(க - ரை):** மகனைப் பிரிந்த தசரதனைப் போலவே, அந்நகரில் இருந்த பசுக்களும், கன்றுகளும், யானை குதிரைகளும், பறவைகளும் அழுதன; சோலைகளும், அவற்றில் மலர்ந்த மலர்களும் அழுவதைப்போல் வாடிநின்றன; தண்ணீரும் அழுவதைப்போல் தெளிவின்றிக் காணப்பட்டது.

**குறிப்பு:** புனல புள் அழுத என்பதைப் புனல் அழுத, புள் அழுத எனப் பிரித்துக் கூட்டுக.

**(அ-ரை):** புள் : பறவை; கள் : தேன்; கா : சோலை; களிறு : யானை; கால் வயப் போர் மா:வலிய காலையுடைய போரில் வெற்றிதரக்கூடிய குதிரை; மான : போல. இப்பாடலும் இளிவரல் சுவை அமைந்தது.

**146.** இன்னே பலவும் பகர்வான்
இரங்கா தாளை நோக்கிச்
'சொன்னேன் இன்றே, இவள்என்
தாரம் அல்லள் துறந்தேன்;
மன்னே ஆவான் வரும்அப்
பரதன் தனையும், மகன்என்(று)
உன்னேன்; முனிவா! அவனும்
ஆகான் உரிமைக்(கு)' என்றான்.

**147.** 'விழிக்கும் கண்வே(று) இல்லா
வெம்கான், என்கான் முளையைச்
சுழிக்கும் வினையால் ஏகச்
சூழ்வாய்; என்னைப் போழ்வாய்;
பழிக்கு நாணாய்; மாணாப்
பாவி! இனிஎன் பல,உன்
கழுத்தின் நாண உன் மகற்குக்
காப்பின் நாணும்' என்றான்.

148. கிள்ளை யொடுபூவை அழுத கிளர்மாடத்(து)
உள்உறையும் பூசை அழுத, உருஅறியாப்
பிள்ளை அழுத, பெரியோரை என்சொல்ல;
வள்ளல் வனம்புகுவான் என்றுரைத்த மாற்றத்தால்.

**149.** **ஆவும் அழுத, அதன்கன்(று)அழுத, அன்றலர்ந்த**
**பூவும் அழுத, புனல்புள்அழுத, கள்ஒழுகும்**
**காவும் அழுத, களி(று)அழுத, கால்வயப்போர்**
**மாவும் அழுத, அம் மன்னவனை மானவே.**

**150.** *தன் தமையனைக் காடு போகச் செய்தனரே என்னும் சீற்றத்தால் இலக்குவன் போர்க்கோலம் பூண்டு சொல்லுதல்.*

**(க - ரை):** "நான் பூமிதேவியின் பாரம் குறைய எதிர்த் தாரையெல்லாம் கொல்லவும், அவர் உடம்பை வான் அளவும்படி குவிக்கவும், இன்றைக்கே என் தலைவனாகிய இராமனுக்கு முடி சூட்டவும் நின்றேன். என் போரில் தம்மைக் காப்பவர் காத்துக் கொள்வார்களாக." இப்பாடல் வீரச்சுவை யமைந்தது.

**(அ-ரை):** புவிப்பாவை . பூமிதேவி, அவிதல் · அழித்தல், ஆக்கை · உடம்பு, அண்டம : ஆகாயம், கோ . தலைவன், கொற்றம் · வெற்றி, மௌலி · முடி, காமின் : பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

**151.** *இராமன் இலக்குவனைச் சமாதானப் படுத்துதல்.*

**(க - ரை).** "தம்பியே! ஒரு ஆற்றில் தண்ணீர் இல்லாவிட்டால் அது ஆற்றின் குற்றமன்று அதுபோல நான் காடுபோக வேண்டியிருந்தது இந்த நகர் செய்த குற்றம் அன்று; நம்மைப் பெற்று வளர்த்த கைகேயியின் மதியின் குற்றமும் அன்று · பரதன் குற்றமும அன்று. நமது விதிசெய்த குற்றமேயாகும். ஆதலால் நீ யாரோடு கோபிக்கின்றாய்?" என்று இராமன் சமாதானப் படுத்தினான்.

**(அ-ரை)** பயந்த . பெற்ற, 'மூத்தவன் தகப்பனோடொப்பான' என்ற முறையால், மைந்த என்று இராமன அழைக்கின்றான், புரந்தாள் : பாது காத்தாள்.

**152.** *அதற்கு இலக்குவன் வெகுண்டு பதில் கூறுதல்.*

**(க - ரை).** "காற்றினால் கொல்லன் உலையில் இட்ட தீ கொதிக்குமாறுபோல என் மனம் கொதிக்கின்றது; அக் கொதிப்பை எவ்வாறு ஆற்றுவது? நமக்குத் துன்பம் செய்தவளாகிய கைகேயியின் மதிக்கும் ஒரு மதியாகி, தேவர்களுக்கும மீறிய வலியுடையதாகிய அந்த விதிக்கும் ஒரு விதியாகும் என் அம்பு. ஆதலால் என் வில்லின் திறத்தைப் பார்ப்பாயாக" என்று இலக்குவன் இராமனுக்குக் கூறினான்.

இப்பாடல் வெகுளிச்சுவை அமைந்தது.

**(அ-ரை)** ஊதை : காற்று, உதிக்கும தோன்றுகின்ற, கோள் . துன்பம, கைகேயியின் எண்ணத்தை விதிமாற்றியதால் அது அவள் மதிக்கும் மதியாகியது. உன்னை முடி சூடாமல் செய்தது விதி; இப்போது நான் அதற்கு எதிராக முடிசூட்டுவேன் என்று இலக்குவன் கூறுவது விதிக்கும் விதியாகும.

**153** *சுமித்திரை வருந்துதலும், அவளை இராமன் தேற்றலும்.*

**(க - ரை):** "அன்னையே! நான் காட்டில், கடலில், ஆகாயத்தில் வசிப்பதாயினும் சரி; அங்கெல்லாம் நான் அயோத்தியில் வசிப்பதைப் போலவே வாழ்வேன். என்னைத் துன்புறுத்துபவர்கள் எவரும் இல்லை; ஆகையால் எதற்காக வருந்துகிறாய்?" என்று இராமன் சுமித்திரையைத் தேற்றினான். சுமித்திரையின் துயரம் முதலில் உடலிற் பாய்ந்து பின் உயிரில் பாய்ந்து, கடைசியில் அறிவிலும் பாய்ந்தது என்பது ஈற்றடியின் கருத்து. 'இராமர் இருக்கும் இடம் அயோத்தி' என்பது பழமொழி.

**(அ-ரை):** உலையற்க : கவலைப்படற்க; கலி : ஓசை.

150. 'புவிப்பாவை பரம்கெடப் போரில்வந்
தோரை எல்லாம்
அவிப்பானும், அவித்தவர் ஆக்கையை
அண்டம் முற்றக்
குவிப்பானும், இன்றேஎன் கோவினைக்
கொற்ற மௌலி
கவிப்பானும் நின்றேன்; இதுகாக்குநர்,
காமின்'' என்றான்.

151. 'நதியின் பிழைஅன்று நறும்புனல் இன்மை, அற்றே
பதியின் பிழைஅன்று பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழைஅன்று; மகன்பிழை அன்று; மைந்த
விதியின் பிழை,நீ இதற்குஎன்கொல்வெகுண்ட(து)' என்றான்.

152. 'உதிக்கும் உலையுள் உறுதீஎன
ஊதை பொங்கக்
கொதிக்கும் மனம்எங் ஙனம்ஆற்றுவென்?
கோள் இழைத்தாள்
மதிக்கும் மதியாய்,முதல்
வானவர்க்கும் வலீஇதாம்
விதிக்கும் விதியாகும் என்வில் தொழில்
காண்டி' என்றான்.

153. 'கான்புக் கிடினும், கடல்புக்
கிடினும், கலிப்பேர்
வான்புக் கிடினும், எனக்(கு) அன்னவை
மாண்அ யோத்தி
யான்புக் க(து)ஒக்கும்; எனையார்
நலிகிற்கும் ஈட்டார்,
ஊன்புக்(கு) உயிர்புக்(கு) உணர்புக்(கு)
உலையற்க' என்றான்.

**154.** *சுமித்திரை இலக்குவனுக்குக் கான்செல்ல விடை கொடுத்துச் சொன்ன அறிவுரை.*

**(க - ரை).** "இலக்குமணனே ! அந்தக் காடு உனக்கு வசிப்பதற்கு ஒத்துக்கொள்ளாததன்று, ஆகவே அந்த வனத்தை இவ்வயோத்தி போலவும், இராமனை உன் தந்தை போலவும், சீதையை எங்கள் மூவரையும் போலவும் பாவித்து இராமனோடு போய்வா ; இனி இவ்விடத்தில் நின்றாலும் குற்றம்" என்றாள்

**(அ-ரை)**: ஏதம : குற்றம, வையம . பூமி.

**குறிப்பு:** வான்மீகச் சுலோகத்தின் கருத்தும இப்பாடலின் கருத்தும ஒத்திருப்பது கருதத்தக்கது.

**155.** *இதுவும் அது.*

**(க - ரை)**: சுமித்திரை தன் மகனுக்குப் பின்னும் சில அறிவுரை கூறி அனுப்புகிறாள். "மகனே ! நீ இராமன்பின் செல்வாயாக ; உன்னை நீ அவன் தம்பியென்று கருதாமல் அவனுக்கு வேலையாளாகக் கருதிக்கொள் ; அவன் இட்ட வேலைகளைச் செய் ; அவன் நகருக்குத் திரும்பி வருவானே யானால் நீயும் வா, அப்படி இன்றேல் அவனுக்கு முன்பே நீ இறந்து விடு" என்பதே அவ்வறிவுரை

**(அ-ரை).** ஏவல் : வேலை; பகர்வாள் கூறுவாள், மன்னும் நிலைபெறற, **முடி** : முடிந்துவிடு; வார்விழி சோர : கண்ணீர் சொரிய

**156.** *தன்னை வனத்திற்கு வரவேண்டாமென்ற இராமனுக்கு இலக்குவன் கூறுதல்.*

**(க - ரை)**: "இராமபிரானே! ஒரு குளத்தில் தண்ணீர் இருக்குமானால் அங்கே மீனும் நீலோத்பலமும இருக்கும், பூமி இருக்குமானால் அதிலிருந்து உண்டாகும் பொருள்கள் எல்லாம் இருக்கும். அதுபோல நானும் சீதையும் உயிர் வாழ்ந்திருப்பது யாரால் என்று நினைக்கிறீர்?" என்று தன்னை வனத்திற்கு வர வேண்டாமென்ற இராமனிடம இலக்குவன் கூறினான்

**(அ-ரை)** உள : இருப்பன, நீலம : நீலோத்பலம், பார்ப்புறின் ஆராய்ந்தவிடத்து, நார் உள தனு உளாய் : அன்பு நிறைந்த உடலை உடையவனே; நாண் கயிறு பூட்டிய வில்லை உடையவனே என்றும கூறலாம.

**157.** *இராமனது துறவுக் கோலத்தைக் கண்ட வசிட்டரது வருத்தம்.*

**(க - ரை)**: 'அரசபோகம் குறித்த அந்த மங்கல நாளில் தாழ் நிலைமையுடையதாகிய மரவுரியை இராமன் உடுத்தினான்; அந்த நான்கு முகத்தையுடைய பிரம்மாவே பாதுகாக்க நினைத்தாலும், ஒருவருக்கு உற்ற ஊழ்வினையை ஒழிக்க முடியுமா?' என்று வசிட்டர் வருந்தினார்.

**(அ-ரை)**: நுதலிய : குறித்த, சீரை : மரவுரி; சூழினும் : காத்துக் கொள்ளும் வழியைத் தேடினும். இக்கருத்தை 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று - சூழினும் தான்முந் துறும்' என்னும் குறளில் காணலாம்.

154. 'ஆகாத(து) அன்றால் உனக்(கு)
அவ்வனம் இவ்வயோத்தி;
மாகாதல்இ ராமன் அம்மன்னவன்;
வையம் ஈந்தும்
போகா உயிர்த் தாயர்நம்
பூங்குழல் சீதை; என்றே
ஏகாய்! இனிஇவ் வயின்நிற்றலும்
ஏதம்' என்றாள்.

155. பின்னும் பகர்வாள், 'மகனேஇவன் பின்செல், தம்பி
என்னும் படியன்(று), அடியாரின் ஏவல் செய்தி!
மன்னும் நகர்க்கே இவன் வந்திடில் வா! அதன்றேல்,
முன்னம் முடி'என் றனள்வார்விழி சோர நின்றாள்.

156. 'நீர்உள எனின்உள மீனும் நீலமும்;
பார்உள எனின்உள யாவும; பார்ப்புறின்
நார்உள தனுஉளாய்! நானும், சீதையும்
ஆர்உளர் எனில்உளேம் அருளு வாய்'என்றான்.

157. 'வாழ்வினை நுதலிய மங்க லத்துநாள்
தாழ்வினை அதுவரச் சீரை சாத்தினாள்;
சூழ்வினை நான்முகத்(து) ஒருவன் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ!'

**158.** கானகத்தின் வெம்மையை உன் கால் தாங்காதாகையால் நீ இங்கேயே இரு என்று கூறிய இராமனுக்குச் சீதை கூறுதல்.

**(க - ரை):** "அன்பும் பற்றும் நீங்கி என்னை விலக்குகின்றீர்; அதற்காகக் கானகம் சுடும் என்கிறீர், பிரளய காலத்துச் சூரியன் காயும் வெப்பமும் உமது பிரிவினால் நான் அடையும் வெப்பத்துக்கு ஈடாகுமா? உமது பிரிவை விடவா கானகம் சுடும்?" என்று சீதை இராமனுக்குரைத்தாள்.

**(அ-ரை)** பரிவு அன்பு, இகந்த நீங்கிய, ஒருவுகின்றனை விலக்குகின்றனை, ஊழி பிரளயகாலம், அருக்கன் சூரியன்

**குறிப்பு.** பிரளயகாலத்தில் சூரியன் காய்ந்து உலகிலுள்ள பொருளெல்லாம் எரிப்பான் என்பது நூற்கொள்கை

**159.** யாவரும் தொடர்ந்துவர இராமன் தேரில் செல்லுதல்

**(க - ரை):** இராமனை வனத்துக்கு அனுப்பும்போது, அரசனருகே இருந்த தேவியரும், சுவரில் எழுதிய சித்திரங்களும் தவிர அந்நகரினர் அனைவரும் சென்றனர்.

**(அ-ரை).** குரிசில் தலைவன, மா இயல் தானை குதிரைகளைக் கொண்ட சேனை, மன் : அரசன், ஓவியம் சித்திரம.

**குறிப்பு:** உயிர் இருப்பின் சித்திரங்களும காட்டிற்குச் சென்றிருக்கும.

**160.** இராமனைக் காட்டிற்கு அனுப்பியதால் துயருற்ற சுமந்திரன் என்னும் மந்திரியை இராமன் தேற்றுதல்

**(க - ரை):** 'பெரிய தர்மமானது முற்பட நின்று கீர்த்தியை நிறுவி, இறந்த பின்னும் அழியாமல் நின்று உறுதியைத் தருவது அத்தருமத்தின் வழி நான் நடக்கின்றேன்: உலகில் இன்பம் வந்தபொழுது மகிழ்பவர்கள், துன்பம் வந்தபொழுது அதையும அநுபவித்துத்தான் ஆகவேண்டும் அதனால் நீ கவலற்க!' என்று இராமன் தேற்றினான்

**(அ-ரை).** இசை புகழ், நிறீஇ நிறுவி, ஆயிடை அவ்விடத்து.

**161.** சுமந்திரனிடம் சீதை சொல்லியனுப்பும் செய்தி.

**(க - ரை):** "சுமந்திரரே! நீர் நகருக்குத் திரும்பிச் சக்கரவர்த்திக்கும், மாமிமார்களுக்கும் எனது வணக்கம் கூறி என் தங்கைமார்களிடம் நான் வளர்த்துவந்த கிளி, மைனா முதலியவற்றைப் பாதுகாக்கும்படி சொல்லுக" என்று சீதை கூறினாள்.

**(அ-ரை):** எங்கையர் : என்தங்கையர்; போற்றுமின் : காப்பாற்றுங்கள், பூவை : மைனா.

158. 'பரி(வு) இகந்த மனத்தொடு, பற்றிலாது
ஒருவுகின்றனை; ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது(து)? ஈண்டுநின்
பிரிவினும்சுடுமோபெரும் காடு?' என்றாள்.

159. ஏவிய குரிசில்பின் யாவர் ஏகிலார்?
மாவியல் தானைஅம் மன்னை நீங்கலாத்
தேவியர் ஒழிந்தனர்; தெய்வ மா நகர்
ஓவியம் ஒழிந்தன உயிர் இலாமையால்

160. 'முன்பு,நின்(று) இசை நிறீஇ முடிவு முற்றிய
பின்பும்,நின்(று) உறுதியைப் பயக்கும் பேர்அறம்;
இன்பம்வந்(து) உறும்எனின் இனிய(து), ஆயிடைத்
துன்பம்வந்(து) உறும்எனில் துறக்கல் ஆகுமோ!'

161. அன்னவள் கூறுவாள்; 'அரசர்க்கு,அத்தையர்க்கு,
என்னுடை வணக்கம்முன் இயம்பி, யான்உடைப்
பொன்நிறப் பூவையும் கிளியும் போற்றுமின்
என்னமற்(று) எங்கையர்க்(கு) இயம்புவாய்!'என்றாள்.

162. இலக்குவன் சுமந்திரனிடம் மறுமொழி கூறுதல்.

(க - ரை): 'காட்டிலுள்ள காய்கனிகளை நாங்கள் உண்ண அங்கே நல்ல உணவு வகைகளை உண்கின்ற சக்கரவர்த்திக்கு இன்னும் நாங்கள் சாகாமல் இருக்கின்ற வலிமையை உடையவர் களாயிருக்கின்றேம் என்பதைச் சொல்வாயாக' என்று இலக்கு வன் சுமந்திரனிடம் மறுமொழி கூறினன்.

(அ–ரை): போனகம் : உணவு; பொய்யில் : பொய்யில்லாத; ஊன் உடம்பு; அகம் : இடம்; வானகம் : சுவர்க்கம்.

163. இராமன் முதலிய மூவரும் இரவில் வழி நடத்தல்.

(க - ரை): சீதையின் கற்பும், தனது நற்குணமும், கருணையும், அறிவும், உண்மையும், தன் வில்லும், தன் தம்பியும் ஆகிய இவற் றைத் துணையாகக் கொண்டு நடு இரவில் இராமன் காட்டில் சென்றான்.

(அ–ரை)· தகவு . குணம்; மையறு . குற்றமற்ற; உணர்வு . அறிவு, வாய்மை · உண்மை; அல் ; இரவு, நாப்பண் ; நடு.

164. நிலவொளியில் அவர்கள் செல்லல்

(க - ரை): சீதையின் மெல்லிய கால் காட்டில் நடப்பதால் வருந்தாமல் இருக்கச் சந்திரன் தன் ஒளியாகிய பஞ்சினைப் பூமி யில் பரப்பினாற்போல் பரந்த ஒளியில் இராமனும், அவன்மேல் பொன்னுடை போர்த்தாற்போல் கண்ணும் காவலுமாக வரு கின்ற தம்பியும், சென்றனர்.

(அ–ரை): அஞ்சனம் · மை, கறுப்பு; குன்றம் · மலை, எஞ்சல் இல் குறையாத, இந்து : சந்திரன்; வெம்சிலைப புருவம் : கொடிய வில்போன்ற புருவம், 'பொன்' என்பது பொன்னுடையைக் குறிப்பதால் ஆகுபெயர்.

165. வழியனுப்பச் சென்ற தேர் திரும்பியது கேட்ட தசரதன் 'இராமன் வந்தானோ?' எனல்.

(க - ரை): தேர் திரும்பி வந்தது என்று கூறக்கேட்ட தசரதன், இராமன் வந்திருப்பானென்று எண்ணிக் கண்விழித்து, வசிட்ட முனிவரைப் பார்த்து, "இராமன் வந்தனனோ?" என்று கேட்டான்.

(அ–ரை): இயம்பல் : சொல்லல்; வரதன் : இராமன்; வரத்தைத் தருப வன், மேன்மையைத் தருபவன்; புரைதபு : குற்றம் நீங்கிய; கமலம் : தாமரை, நாட்டம் : கண்; விரதம் : துறவு.

162. 'கானகம் பற்றிநல் புதல்வன் காய்உணப்,
போனகம் பற்றிய பொய்யில் மன்னற்(கு),இங்கு
ஊன்அகம் பற்றிய உயிர்கொடு இன்னும்போய்
வானகம பற்றிலா வலிமை கூ(று)'என்றான்.

163. தையல்தன் கற்பும்,தன் தகவும், தம்பியும்,
மையறு கருணையும், உணர்வும், வாய்மையும்,
செய்யதன் வில்லுமே சேமம்ஆ கக்கொண்டு
ஐயனும் போயினான் அல்லின் நாப்பணே.

164. அஞ்சனக் குன்றம்அன்ன
அழகனும், அழகன் தன்மேல்
எஞ்சலில் பொன்போர்த் தன்ன
இளவலும், இந்து என்பான்
வெம்சிலைப் புருவத் தாள்தன்
மெல்அடிக் கேற்ப வெண்ணூல்
பஞ்சிடைப் படுத்தால் என்ன,
வெண்நிலாப் பரப்பப் போனார்.

165. 'இரதம்வந் துற்ற(து)' என்றாங்கு
யாவரும் இயம்ப லோடும்,
வரதன்வந் துற்றான் என்ன,
மன்னனும் மயக்கம் தீர்ந்தான்;
புரைதபு கமல நாட்டம்
பொருக்கென விழித்து நோக்கி,
விரதமா தவனைக் கண்டான்;
'வீரன்வந் தனனோ?' என்றான்.

166. தசரதன் ஆவி பிரிதல்.

(க-ரை): தசரதன் சுமந்திரனை நோக்கி, "இராமன் நெடுந் தூரம் போயிருப்பானோ? அல்லது அணிமையில்' இருக்கின்றானோ?" என்று கேட்க, சுமந்திரன், "காட்டினிடையே இராமன் தம்பியொடும் சீதையொடும் போய்விட்டான்" என்ற அளவில் தசரதன் உயிர்விட்டான்.

(அ-ரை)· நாயகன் : தலைவன்; நம்பி ஆடவரில் சிறந்தவன், இராமன், சேயன் : தூரத்திலுள்ளவன்; அணியன் சமீபத்தில் இருப்பவன், வேய் உயா கானம் மூங்கில் உயர்ந்து அடர்ந்த காடு.

167. அந்தச் சமயத்தில் சூரியன் தோன்றுதல்.

(க-ரை): 'எனது குலத்தில் தோன்றிய புதல்வனாகிய தசரதன் இறந்தான். அவன் புதல்வர்களும் நாட்டைவிட்டு அகன்றனர்; அவர்கள் வரும் அளவும் நானே இவ்வுலகைக் காப் பேன்' என்று அரசற்குரிய சின்னங்களோடு வருபவனைப் போலச் சூரியன் உதித்தான்.

(அ-ரை) வேலை கடல், தூநீர் மேன்மையான தன்மையுடைய நீ ஒளிவாள் ஒளிர்கின்ற வாள், புடை இலங்க · பக்கத்தில் பிரகாசிக்கவும் இப்பாடல் தற்குறிப் பேற்ற அணி.

குறிப்பு சூரியனிடம உள்ள அரசற்குரிய சின்னங்கள் · சமுத்திரமாகிய முரசு, வானோர் துதித்தல், பூமியிலுள்ளோர் வணங்குதல், ஒளியாகிய வாள், தேர் ஏறிவருதல் ஆகியவை.

168. இராமன் காட்டின் வழியே செல்லுதல்.

(க-ரை): சூரியன் தன் உடம்பின் ஒளியில் மறையும்படி யான ஒளியோடு, சீதையோடும் தம்பியோடும் இராமன் வனத் தில் சென்றான்.

(அ-ரை)· வெய்யோன் . சூரியன், சோதி . ஒளி; மை அஞ்சனம

குறிப்பு: இராமனுடைய அழகுக்கு இங்கே கூறும் அஞ்சனம் முதலிய உவமங் கள் ஒன்றற்கொன்று ஏற்றம் உடையவை. இதை ஆராய்ந்தறிக

169. வனத்தில் முனிவர்கள் இவர்களை உபசரித்தல்.

(க-ரை): வனத்து முனிவர் தங்கள் தவப்பள்ளிக்கு இவர் களை அழைத்துச் சென்று, உவகைக் கண்ணீரால் நீராட்டி, இன் சொல்லாகிய மலர் சூட்டி, அன்பாகிய அமிர்தத்தை ஊட்டினார் கள். இவ்வாறு இவர்களுடைய, வழியில் வந்த இளைப்பை மாற்றினார்கள்.

(அ-ரை). புதுப்புனல் : புதிய நீர்; மொய்ம்மலர்:மிக்க மலர்; ஆர் அமிர்து கிடைத்தற்கரிய அமிர்தம்; வீட்டினர் : வீழ்த்தினர், நீக்கினர்.

குறிப்பு: இங்கு முனிவர் செயலைக் கூறுவதும், நான்கடிகளின் ஈற்றிலும எதுகை வரத் தொடுத்ததும் போற்றத்தக்கது.

166. நாயகன் பின்னும் தன்தேர்ப்
பாகனை நோக்கி,'நம்பி
சேயனோ அணியனோ'என்(று)
உரைத்தலும, தேர்வலானும்
'வேய்உயர் கானில், தானும்,
தம்பியும், மிதிலைப் பொன்னும்
போயினன்' என்றான்; என்ற
போழ்தத்தே ஆவி போனான்.

167. மீன்நீர் வேலை முர(சு)இயமப,
விண்ணோர் ஏத்த, மண்இறைஞ்சத்,
தூநீர் ஒளிவாள் புடை இலங்கச்
சுடர்த்தேர் ஏறித் தோன்றினான்;
'வானே புக்கான அரும்புதல்வன்;
மக்கள அகன்றார்; வரும்அளவும்
யானே காப்பென் இவ்வுலகை'
என்பான் போல எரிகதிரோன்.

கங்கைப் படலம்

168. வெய்யோன்ஒளி, தன்மேனியின்
விரிசோதியன் மறையப்,
பொய்யோஎனும் இடையாளொடும்,
இளையானொடும் போனான்;
மையோ,மர கதமோ;மறி
கடலோ, மழைமுகிலோ
ஐயோ இவன் வடிவென்பதோர்
அழியாஅழ குடையான்.

169. பொழியும் கண்ணில் புதுப்புனல் ஆட்டினர்;
மொழியும் இன்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்;
அழிவில் அன்பெனும் ஆர்அமிர்(து) ஊட்டினர்;
வழியில் வந்த வருத்தத்தை வீட்டினர்.

170. முனிவர் அளித்த உணவை உண்ணல்.

(க - ரை): பாற்கடலில் தான் வருந்திக் கடைந்த அமுதத்தை, தேவர்கள் உண்ணக் கொடுத்தவனாகிய இராமன், இன்று முனிவர் தந்த இலை உணவையும் உண்டு மகிழ்ந்தான். நல்லவற்குச் செய்யும் உதவி வீணாகுமா?

(அ-ரை). அமரர் . தேவர், அடகு இலை, அவித்த கீரை முதலியன, திருந்தினர் · திருத்தமான ஒழுக்கத்தை யுடையவர்கள், வயின் இடத்தில்.

171. குகன் என்னும் வேடர் தலைவனது இயல்பைக் கூறுவது.

குகனது தோற்றம்.

(க - ரை): கால் உடை அணிந்தவனும், கங்கையின் ஆழத்தைப் போல நெடியவனும், இடுப்பில் தோலாடை உடுத்தியவனும், புலிவாலாகிய கச்சையை அணிந்தவனுமாய்க் குகன் தோன்றினான்.

(அ-ரை) காழம : ஆடை, இங்கு காலாடையைக குறிககிறது, குறங்கு தொடை; சூழவிட்ட சுற்றிக் கட்டித் தொங்கவிடட; தொடு · கட்டிய.

172. இதுவும் அது.

(க - ரை): கச்சையில் செருகிய இரத்தக் கறைபடிந்த உடைவாளை அணிந்தவன்; பாம்பைப்போலும் அஞ்சத்தக்க பார்வையை உடையவன்; பித்தர்களைப்போல் ஒன்றோடொன்று பொருந்தாத பேச்சைப் பேசுபவன்; இந்திரனுடைய வச்சிராயுதத்தைப் போன்ற இடுப்பினை உடையவன்.

(அ-ரை): கச்சு . கச்சை; ஆர்த்த : கட்டிய; நச்சரா நஞ்சு—அரா: விடத்தையுடைய பாம்பு, பிச்சர் : பித்தர்-போலி. மருங்கு . இடுப்பு; சொலல வேண்டிய சொற்கள் அனைத்தையும சொல்லாமல் சில சொல்லி அதிலிருநது கேட்பவர் உய்த்துணரும்படி பேசுபவன் என்பது மூன்றாம் அடியின் கருத்து.

173. குகன் இராமனைக் காண வருதல்.

(க - ரை): கங்கையாற்றின் அருகில் உள்ள சிருங்கிபேரபுரம என்னும் நகரில் வாழ்பவன்; தேனையும் மீனையும் சிற்றுண்டியாகக் கொள்பவன்; கங்கைக் கரையின் வடகரையில் இருந்த இராமனைக் காண அவனருகே வந்து சேர்ந்தான்.

(அ-ரை): மருங்கு : பக்கம்; உபகாரத்தன் : உப—ஆகாரம், உப ஆகாரம் என்பது உபகாரமென மருவிவந்தது; சிற்றுண்டி என்பது பொருளாகும்.

170. வருந்தித் தான்தர வந்த அமுதையும்
'அருந்தும் நீர்'என்(று) அமரரை ஊட்டினான்;
விருந்து மெல் அட(கு) உண்டு விளங்கினான்;
திருந்தி னார்வயின் செய்தன தேயுமோ ?

## குகப்படலம்

171. காழும் இட்ட குறங்கினன்; கங்கையின்
ஆழும் இட்ட நெடுமையினான்; அரை
தாழ விட்டசெந் தோலன்; தயங்குறச்
சூழ விட்ட தொடுபுலி வாலினான்.

172. கச்சொ(டு) ஆர்த்த கறைக்கதிர் வாளினன்;
நச்சு அராவின் நடுக்குறு நோக்கினன்;
பிச்ச ராம்அன்ன பேச்சினன்; இந்திரன்
வச்சி ராயுதம் போலும் மருங்கினான்.

173. சிருங்கி பேரம் எனத்,திரைக் கங்கையின்
மருங்கு தோன்றும் நகருறை வாழ்க்கையன்;
ஒருங்கு தேனொடு, மீன்,உப காரத்தன்;
இருந்த வள்ளலைக் காணவந்(து) எய்தினான்.

174. வந்தவன் தன் கருத்தைக் கூறுதல்.

(க - ரை): அருகில் வந்து அவர்களைக் கூவி அழைத்து, நீங்கள் யார் என்று கேட்பதற்கு முன்பே, இலக்குவன் அவனருகில் போய் 'நீ யார்' என்று குகனைக் கேட்க, அவன் இராமனைப் பார்த்து, 'தேவா! நான் இவ்வாற்றில் படகு முதலியவற்றை ஓட்டும் வேட்டுவர் குலத்தினன்; உமது பாதத்தை வணங்க வந்தேன்' என்று கூறினன்

(அ-ரை). சேவிக்க வணங்க. குறுகி : அணுகி. நாவாய் : கப்பல், இங்கு படகு, தோணி, ஓடம், தெப்பம் முதலியவற்றைக் குறிக்கும். இறைஞ்சினன் : வணங்கினன்

175. அதையறிந்த இராமன் கூறுதல்

(க - ரை): குகன் சொன்ன வார்த்தையைக் கேட்ட இராமன், சீதை முகத்தையும் தம்பி முகத்தையும் நோக்கி, 'இவன் சிறந்த அன்பன்' என்று கருணையோடு முகமலர்ந்து, குகனைப் பார்த்து 'எவரினும் சிறந்த இனிய நண்பனே! நீ எங்களுடன் இங்கேயே இருப்பாயாக' என்று கூறினன்

(அ-ரை): கோதை வில் குரிசில் : வெற்றி மாலையையணிந்த வில்லையேந்திய தலைவன், இராமன். இப்பாடல் கருணைரசம் பொருந்தியது.

176 அவர்கள் இரவுக் காலத்தை அங்குக் கழித்தல்.

(க - ரை): அப்பொழுது மாலைக்காலம் வர, தன் செய்கடன்களை யெல்லாம் முறைப்படி முடித்த இராமன், நாணற்கழிகளால் இலக்குவன் அமைத்த பர்ணசாலையில், சீதையோடு பூமியாகிய படுக்கையில் தூங்க, இலக்குவனைவன் கையில் வில்லையேந்திக் கண்ணை இமைத்தலும் செய்யாமல் நின்று அவர்களைப் பாது காத்து வந்தான்.

(அ-ரை): நியமம் நித்திய கடமை . சந்தியாவந்தனம் முதலியவை: மரபுளி : விதிப்படி. வேலை கடல், பாயல் படுக்கை.

177 இலக்குவனைக் கண்ட குகன் நிலை.

(க - ரை): பர்ணசாலையை வண்டுகள் சுற்றிவருவது போல் சுற்றிவந்து, கையில் நாண் பூட்டிய வில்லோடு, 'இவர்களுக்கு இந் நிலை வந்ததே' என்று வெம்பி, கலங்கிய நெஞ்சோடு, கண் விழித்து நின்ற தம்பியையும், இராமனையும் பார்த்துக் குகன் மலையினின்று அருவி ஓடிவருவதைப் போலக் கண்ணீர் சொரிந்து நின்றான். இப்பாடல் அவலச்சுவை நிரம்பியது.

(அ-ரை): தும்பி : வண்டு; வெம்பி : வெதும்பி; அம்பி : படகு.

174. கூவா முன்னம் இளையோன் குறுகி'நீ
ஆவான் யார்?'என, அன்பின் இறைஞ்சினன்;
'தேவா நின்கழல் சேவிக்க வந்தனென்;
நாவாய் வேட்டுவன் நாய்அடி யேன்'என்றான்.

175. கோதையில் குரிசில்,அன்னான்
கூறிய கொள்கை கேட்டான்;
சீதையை நோக்கித் தம்பி
திருமுகம் நோக்கித், 'தீராக்
காதலன் ஆகும்' என்று
கருணையின் மலர்ந்த கண்ணன்,
'யாதினும் இனிய நண்ப
இருத்தீஈண்(டு) எம்மொ(டு)'என்றான்.

176. மாலைவாய் நியமம் செய்து, மரபுளி இயற்றி வைகல்,
வேலைவாய் அமிர்தன் னாளும்,வீரனும், விரித்த நாணல்
மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினர்;வரிவில் ஏந்திக்,
காலைவாய் அளவும்,தம்பி இமைப்பிலன் காத்து நின்றான்.

177. தும்பியின் குழாத்தில் சுற்றும்
சுற்றத்தன்; தொடுத்த வில்லன்;
வெம்பிவெந்(து) அழியா நின்ற
நெஞ்சினன்; விழித்த கண்ணன்,
தம்பிநின் றானைநோக்கித்,
தலைமகன் தன்மை நோக்கி
அம்பியின் தலைவன்,கண்ணீர்
அருவிசோர் குன்றின் நின்றான்.

178. குகன் என்றென்றும் தன் ஊரிலேயே தங்கும்படி இராமனை வேண்டுதல்.

(க - ரை): "ஐயனே! உனக்கு வேண்டிய வசதிகள் அனைத்தும் இங்கே இயல்பாக அமைந்துள்ளன நான் உயிருள்ள வரையும் நீ என்னிடமே தங்கவேண்டும், புறப்படுங்கள் என் ஊருக்கு" என்றான்

**வசதிகள் ஆவன:** உண்பதற்குத் தேனும் தினைமாவும் உண்டு; தேவரும் விரும்பத்தக்க மாமிச உணவும் உண்டு; உங்களுக்குத் துணையாக என்னுடைய உயிர் உண்டு; அம்மை விளையாடச் சோலைகள் உண்டு; நீராடுவதற்குக் கங்கையும் உண்டு.

(அ-ரை) உண்டால்: உண்டு—ஆல்; ஊன்: மாமிசம்; எம்பால்: என்னிடத்திற்கு, கான் சோலை.

179. குகனுடைய வேண்டுகோளுக்கு இராமனது பதில்.

(க - ரை): குகன் வார்த்தையைக் கேட்ட இராமன், "நீ என் உயிர் அனைய நண்பன், என் தம்பி உன் தம்பி; இவள் உன்னுடைய மைத்துனி; இந்த உலகமெல்லாம் உன்னுடையது; நான் உனக்கு உரிமையுடையவன்" என்று கூறினான்.

(அ-ரை). அமலன் பாவமற்றவன், இராமன்; கேளா கேட்டு; இளவல்: தம்பி; கேள் உறவு, (மைத்துனி.) நன்னுதல்: நல் நுதல்: நல்ல நெற்றி. இப்பாடல் கருணைரசம் பொருந்தியது.

180. இராமன் கூறுதல்.

(க - ரை): இராமன் வனத்திற் சென்று துன்புறுவானே எனக் குகன் வருத்தம் அடைந்தான். அதை அறிந்த இராமன், "குகனே! உலகில் முதலில் துன்புற்றாலன்றோ அடுத்துச் சுகம் கிடைக்கும்? இதற்கு மாறாக இருப்பவர்களுக்கு உளது துன்பமே. ஆகவே நான் துன்புறுவேனென்று நீ கவலைப்படாதே. நமக்கிடையில் ஒரு நாளும் பிரிவு நேராது. நாங்கள் இதுவரையில் நால்வரே உடன் பிறந்தவராக இருந்தோம் அதோடு நின்றுவிடாமல் இப்பொழுது உன்னையும் சேர்த்து ஐவர் ஆகின்றோம்" என்று கூறினான்.

(அ-ரை) மன்னும: நிலைபெற்ற; உன்னேல்: நினைக்காதே.

181. கங்கையாற்றைக் கடந்து இராமன் வனத்தில் செல்வதைக் கூறுவது வனம்புகு படலமாகும்.

இராமன் சீதைக்கு வனத்தின் பல வளங்களைக் காட்டிக் கொண்டு செல்லுதல்.

(க - ரை): "சீதையே! இங்கே காந்தள் மலரின் மேல் தங்கிய கிளி, நீ முன் கையில் ஏந்திய கிளியை ஒத்திருப்பதைப் பார்ப்பாயாக" என்று காட்டினான்.

(அ-ரை): சேந்து: செந்நிறங்கொண்டு; செங்கோலம்: செந்நிறத்தையுடைய அழகு; கவினுறும்: அழகு தோன்றுகின்ற; நறு: நல்ல.

178. 'தேன்உள; திணைஉண்டால்; தேவரும் நுகர்தற்காம்
ஊன்உள; துணைநாயேம் உயிர்உள; விளையாடக்
கான்உள; புனல்ஆடக் கங்கையும் உள(து)அன்றே?
நான்உள தனையும்நீ இனிதிரு; நடஎம்பால்.'

179. அன்னவன் உரைகேளா, அமலனும் உரைநேர்வான்;
'என்உயிர் அனையாய்நீ! இளவல்உன் இளையான்;இந்
நன்னுத லவள்நின்கேள்; நளிர்கடல் நிலம்எல்லாம்
உன்னுடை யதுநான்உன் உரிமையின் உளென்' என்று.

180. 'துன்புளது எனின் அன்றே
சுகம்உள(து)? அதுஅன்றிப்
பின்புள(து), இடைமன்னும்
பிரிவுஉள(து) எனஉன்னேல்!
முன்புளம் ஒருநால்வேம்;
முடிவுள(து) எனவுன்னா
அன்புள இனிநாம்ஓர்
ஐவர்கள் உளர்ஆனோம்!'

## வனம்புகு படலம்

181. 'சேந்தொளி விரிசெவ்வாய்ப பைங்கிளி, செங்கோலக்
காந்தளின் மலர்ஏறிப் பொலிவது, கவினுரும்
மாந்தளிர் நறுமேனி மங்கைநின் மணிமுன்கை
ஏந்தின எனல்ஆகும் இயல்பின; இவைகாணாய்!

182. இதுவும் அது.

(க - ரை): "சீதையே! செந்நிறத்தையுடைய செருந்திப் பூவின்மேல் பொன்னிறமுடைய அசோகம் பூவும், அதில் மொய்க்கும் கரிய வண்டுகளும், அவை ஊதுவதால் மேலே எழும் மகரந்தப் பொடிகளும், தட்டான் பட்டடையில் நெருப்பும், அதன் மேல் இட்ட பொன்னும், அதன் மேல் இட்ட கரியும், அதிலெழும் தீயையும் ஒத்துத் தோன்றுவதைப் பார்" என்று கூறினன்.

(அ-ரை): செருந்தி . ஒருமரம்—செந்நிறப் பூப் பூப்பது. இருந்தை . அடுப்புக் கரி

183. பரத்துவாசன் இராமனை எதிர்கொள்ள வரும் தோற்றம்.

(க - ரை): குடை பிடித்துக் கொண்டும், கையில் முக்கோலையும் கமண்டலத்தையும் ஏந்திக் கொண்டும், சடையைத் தரித்துக் கொண்டும், மான் தோலை இடுக்கிக் கொண்டும், மரவுரியை உடுத்துக் கொண்டும் விளங்குபவரும், ரோமங்கள் வெளியே காணப்படும் உடம்பையும், நன்னெறியில் நடக்கும் ஒழுக்கத்தையும், நான்கு வேதங்களும் கூத்தாடும் நாவையுமுடையவருமான பரத்துவாச முனிவர்

(அ-ரை): திமிர்கோலன் முக்கோலை யேந்தியவன், குண்டிகை: கமண்டலம், சருமம் தோல்; மரநார் மரவுரி, நடம நவில் கூத்தாடும்.

184. இராமன் நிலையைக் கண்டு பரத்துவாச முனிவர் இரங்குதல்

(க - ரை): இராமனுக்கு நேர்ந்தவற்றையெல்லாம உணர்ந்து, "இது விதி செய்த தீமை; இது போன்ற தீவினைகளும் உலகில் உண்டோ? ஐயோ! பூமிதேவி இவன் அரசனாகி ஆளும் பேற்றைப் பெற்றிலளே?" என்று பரத்துவாசன் இரங்கிக் கூறினன்.

(அ-ரை): உறறுள—உற்று—உள அடைந்துள்ள; பொருள் செய்தி, உணர்வுற அறிவிற் பொருந்த; நவை குற்றம்; இங்குத் தீமையைக் குறிககிறது. இற்றது . இதுபோன்றது, இடர் துன்பம.

185. பரத்துவாசன், இராமனை 'இங்கேயே தங்குக' என்று வேண்டுதல்.

(க - ரை): பரத்துவாசன் இராமனைப் பார்த்து, "இத்தீர்த்தம், கங்கை யமுனை சரஸ்வதி என்னும் மூன்று நதிகளும் கூடிய திருவேணி சங்கமம் என்னும் பெயருடையதாகும்; ஆகலின் நான் இந்தத் தீரத்தை விட்டுப் பிரியாமல் இங்கேயே தங்கியுள்ளேன். இந் நதியின் தீர்த்தம், பிரம்மாவிற்கும கிடைத்தற்கரியது; எம் போன்ற முனிவர்கள் தகுதிக்கு மேற்பட்டது; ஆகலின் நீ இங்கேயே தங்குவாயாக" என்று கூறினன்.

(அ-ரை): கரியவள் : யமுனை; நாமகள் . சரஸ்வதி; தாமரைச்செங்கண் · தாமரை போன்ற சிவந்த கண்; அங்கண்: அழகிய அருள்; இருத்திர்: இருப்பீர்.

182. 'அருந்ததி அனையாளே! அமுதினும் இனியாளே!
செருந்தியின் மலர்தாங்கும் செறியிதழ் இல்அசோகம்,
பொருந்தின களிவண்டின் பொலிவன, பொன்ஊதும்
இருந்தையின் எழுதீஒத்(து) எழுவன, இயல்காணாய்!'

183. குடையினான்; நிமிர்கோலன்; குண்டிகை யினன்; மூரிச்
சடையினான்; உரிமானின் சருமன்; நல் மரநாரின்
உடையினான்; மயிர்நாறும உருவினன், நெறிபேணும்
நடையினன், மறைநாலும நடமநவில் தரும்நாவான்.

184. உற்றுள பொருள் எல்லாம் உணர்வுற உரைசெய்தான்;
நற்றவ முனி 'அந்தோ விதிதரு நவை' என்பான்;
'இற்றது செயல்உண்டோ இனி' என இடர்கொண்டான்.
'பெற்றிலள் தவம்அந்தோ பெருநில மகள்' என்ருன்.

185. 'கங்கை யாளொடு, கரியவள்,
நாமகள் கலந்த
சங்கம் ஆதலின் பிரியலன்;
தாமரைச் செங்கண்
அங்கண் நாயக! அயனுக்கும்
அரும்பெறல் தீர்த்தம்;
எங்கள் போலியர் தரத்த(து)அன்று;
இருத்திர் ஈண்(டு)' என்ருன்.

**186.** *'நிலவெம்மையைச் சீதை தாங்காள்' என்று இராமன் எண்ண அப்பாலை நிலம் சோலை நிலமாக மாறியது.*

(**க - ரை**): *சித்திர கூடத்திற்குச் செல்லும் வழியில் பாலை நிலம் தென்பட்டது. சீதையின் மெல்லடி இவ்வெம்மையைத் தாங்காதென இராமன் நினைத்த அளவில், அது சோலை நிலமாக மாறி, பருவமல்லாத காலத்திலும் மரங்களில் பழங்கள் பழுத்தன; விதையில்லாமல் செடி கொடிகள் முளைத்தன; கொம்புகள் மகளிர் போலத் தழைத்தன. ஆகையினால் நல்லொழுக்கத்தினும் சிறந்த தவம் ஒன்று உண்டா?*

(**அ—ரை**): கந்தம் : கிழங்கின் மேற்பாகம; முகிழ்த்தன : தோன்றின; **சீலம்** : ஒழுக்கம்; 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்—ஈண்டு முயலப் படும்' என்று தவம செயவோர் காரியத்தை, நல்லொழுக்கமுடைய இராமன் செய்தலால் 'இனபச்சீலம அன்றியும் செயதவம் வேறொன்று உளதோ' என்றார்.

**187.** *சித்திர கூடத்தைக் காணல்.*

(**க - ரை**): *வெறுமை நீங்கிச் சோலையாகிய பாலை நிலத்தை நீங்கித் தன்னைப் பாம்பு பற்ற வருகிறதோ என்று அஞ்சி, சந்திரன் மேகத்துக்குள் பயந்து ஒளிந்து கொள்ளும்படி இடிக்கும மேகத்தை ஆண் யானை பெண் யானையாகக் கருதி அதைப் பற்றக் கை நீட்டும் சித்திரகூட மலையைக் கண்டனர்.*

(**அ—ரை**) குளிறு : ஓசையிடுகினற, வான் . ஆகாயம; வெளிறு . வெறுமை; மதிக்குழவி : பிறைச்சநதிரன், பிளிறுதல் : காச்சிதநல், பெருமபனைந் தடக்கை : பெரிய பனைமரம் போன்ற துதிககை.

*இராமன் சீதைக்குச் சித்திரகூடத்தின் வளங்களைச் காட்டுதல்.*

**188.** *யானைக் காட்சி*

(**க - ரை**) *"சீதையே! சூல் முதிர்ந்த தன் பெண் யானைக்கு ஆண் யானையானது மனமுருகுகின்ற காதலோடு, குகையில் உள்ள தேனடையை எடுத்து, அதில் மொய்க்கும் வண்டுகளைத் தழையினால் வீசி ஒதுக்கி, பிழிந்த தேனைத் தன் கையினால் அதன் வாயில் தருவதைப் பார்" என்று இராமன் காட்டினான்.*

(**அரை**) ஓச்சி . வீசி ஒதுக்கி, முருகு வாசப, முழை . குகை; பிறை மருப்பு · பிறைபோன்ற தந்தம்.

**189.** *குரங்கின் விளையாட்டு.*

(**க - ரை**): *"சீதையே! கடுவனோடு இனிது விளையாடிக் கொண்டிருக்கும் மந்தி, இந்த அருவி நீரை முகந்து வீசிக் கடுவன் மேல் எறிய, அது மலைச் சிகரத்தின் மீது ஏறி அங்கே படிந்த மேகத்தின் மழைத் துளிகளை வாரி மந்தியின் மேல் வீசுவதைப் பார்" என்று இராமன் காட்டினான்.*

(**அ—ரை**): ஒருவில் : நீங்கமுடியாத; மருவு : பொருந்திய; கருவி மா மழை · மின்னல் இடியோடு கூடிய பெரிய மேகம்; கருவி : தொகுதி; உரிச்சொல்.

186. காலம் இன்றியும் கனிந்தன கனி;நெடும் கந்தம்
மூலம் இன்றியும் முகிழ்த்தன; நிலன்உற முழுதும்
கோல மங்கையர் ஒத்தன கொம்பர்கள்; இன்பச்
சீலம் அன்றியும் செய்தவம் வேறும்ஒன்(று) உளதோ!

187. வெளிறு நீங்கிய பாலையை மெல்லனப் போனார்;
குளிறு வான்மதிக் குழவிதன் சூல்வயிற்(று) ஒளிப்பப்,
பிளிறு மேகத்தைப் பிடிஎனப், பெரும்பனைத் தடக்கைக்
களிறு நீட்டும்,அச் சித்திர கூடத்தைக் கண்டார்.

188. 'உருகு காதலின், தழைகொண்டு மழலைவண்(டு)ஓச்சி,
முருகு நாறுசெந் தேனினை முழைநின்றும் வாங்கிப்
பெருகு சூல்இளம் பிடிக்(கு),ஒரு பிறைமருப்பு யானை,
பருக வாயினில், கையினின்(று) அளிப்பது பாராய்.'

189. 'ஒருவில் பெண்மைஎன்(று) உரைக்கின்ற
உடலினுக்(கு) உயிரே!
மருவு காதலின் இனிதுடன்
ஆடிய மந்தி,
அருவி நீர்கொடு வீசத்,தான்
அப்புறத்(து) ஏறிக்,
கருவி மாமழை உதிர்ப்ப(து)ஓர்
கடுவனைக் காணாய்!'

**190.** மலைப் பாறையின் தோற்றம்.

**(க - ரை):** "சீதையே! செந்நிறப் பாறையின்மேல் பரவிய நீல இரத்தினங்களின்மேல், மூங்கில் உதிர்த்த முத்துக்கள், செவ்வானம் படர்ந்து, மத்தியில் உள்ள கரிய மேகத்தினிடத்தில், ஒளிவிடுகின்ற நட்சத்திரங்களைப்போல் ஒளிர்வதைப் பார்!" என்று இராமன் காட்டினான்.

**(அ—ரை):** திலகம் திலகம், நெற்றிப் பொட்டு, முகத்தை விளங்கச் செய்வது திலகம்; ஆதலால் மாதர் திலகம், புலவர் திலகம், அறிஞர் திலகம் என்று கூறுவது மரபு. இதனை நளவெண்பாவிலும், 'நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ' என வருவதாலும் அறிக. இனம் : கூட்டம், திணிகல் : உறுதியான கல்; மேய மூங்கில், செக்கர் வானம் : செவ்வானம்; இமைப்பன : ஒளி வீசுவன.

**191.** மலைப் பாம்புகளின் தோற்றம்.

**(க - ரை):** "சீதையே! பெரிய யானைகளையும் எடுத்து விழுங்கும் மலைப் பாம்புகள், தம்முடைய கொடுமையெல்லாம் அடங்கி, முனிவர்கள் தடமேல் ஏறி மலைக்குச் செல்லப் படியமைத்தது போலச் சுருண்டு சுருண்டு படுத்திருப்பதைப் பார்!" என்றான்.

**(அ—ரை)** இடிகொள்வேழம் : இடியைப் போல் ஒலிக்கின்ற யானை; எயிறு : பல், தந்தம்; மாசுணம் : மலைப்பாம்பு; தாழ்வரை : மலையடியில்.

**192.** இராமன் சீதையையும் இலக்குவனையும் பாராட்டித் தனக்குள் கூறுதல்.

**(க - ரை):** 'சீதையின் மெல்லிய பாதங்கள், வெம்மையும் பருக்கைக் கற்களும் பொருந்திய காட்டில் நடந்து வந்தன; என் தம்பியினுடைய கை, கால்நாட்டிக் குழிதோண்டிக் கழிமாட்டி இலை வேய்ந்து சாலை சமைத்தன; உலகத்தில் ஒன்றும் இல்லாத ஏழைகளுக்கு எச்செயல்தான் அரியது?'

**(அ—ரை)** மேவு : வெம்மையும், பருக்கைக் கற்களும் பொருந்திய; கோன் : அரசன், போந்தன, வந்தன; தாவில் : கேடில்லாத; உரிச்சொல். இதில் ஒருவர் காலையும் மற்றொருவர் கையையும் பாராட்டியவாறு:— 'இவள் எப்பொழுதாவது காட்டில் நடந்து வருகிறாளா? இவன் எப்பொழுதாவது சாலை கட்டிப் பழகியிருக்கிறானா? ஆகையால் யாதும் இல்லாதவற்கு எவை இயையாதன?' என்று கூறியதால் வேற்றுப்பொருள் வைப்பணி.

**193.** இராமன் இலக்குவனைக் கேட்டல்.

**(க - ரை):** "தம்பி! நீ என்னோடு இணைபிரியாது இருந்தவனையிற்றே; சாலையமைத்தல் முதலியவற்றை என்றைக்குப் பழகினாய்?" என்று கண்ணீர் சொரிய இராமன் இலக்குவனைக் கேட்டான்.

**குறிப்பு:** துன்று தாமரைக் கண்பனி சோர்கின்றான் என்பது சோகரசம் பொருந்திய மெய்ப்பாடாகும்.

**(அ—ரை):** துலவிய : விளங்குகின்ற; துன்று : நெருங்கிய; தாமரைக் கண் : தாமரைமலர் போன்ற கண்.

190. 'மடந்தை மார்க்கொரு திலதமே!மணிநிறத் திணிகல்
தொடர்ந்த பாறையில் வேயினம் சொரிகதிர் முத்தம்
இடந்தொறும்கிடந்(து) இமைப்பன, எக்களம் செக்கர்
படர்ந்த வானிடைத் தாரகை நிகர்ப்பன பாராய்!'

191. 'இடிகொள் வேழத்தை, எயிற்றொடும் எடுத்துடன் விழுங்கும்
கடிய மாசுணம, கற்றறிந் தவர்என அடங்கிச்,
சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாம்மிதித்(து) ஏறப்
படிக ளாம்எனத்,தாழ்வரை கிடப்பன பாராய்!'

192 'மேவு கானம் மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன;
தாவில் எம்பிகை சாலை சமைத்தன;
யாவை யாதும் இலார்க்(கு)இயை யாதவே.'

193. என்று சிந்தித்(து) இளையவற் பார்த்(து)'இரு
குன்று போலக் குலவிய தோளினாய்!
என்று கற்றனை நீயிது பேசு'என்றான்;
துன்று தாமரைக் கண்பனி சோர்கின்றான்.

**194.** யாவரினும் பெரியவனாகிய இராமன், இலக்குவனுக்குத் தந்தை மகனுக்கு அறிவுரை கூறுவதுபோன்ற நீதி கூறல்.

**(க - ரை) :** "இளையவ! செல்வத்தினால் வரும் இன்பத்திற்கு ஓர் எல்லை உண்டு : இதுபோன்ற அழிவற்ற பணிகளால் வரும் இன்பத்திற்கு அளவில்லை ; ஆகையினால் பின்னால் வரக்கூடிய பெரிய நன்மையைக் கருதி மகிழ்ச்சியோடு இரு" என்றான்.

**(அ—ரை):** மன்னும் : நிலைபெற்ற; உன்னு : நினை; ஊதியம் : பயன்.
**குறிப்பு:** இந்த ஒப்பற்ற அறிவுரையை எடுத்துக் கூறுகின்ற இராமனைப் பெரியவன் என்று சுட்டியது கருதத்தக்கது.

**195.** தன் தாய்ப்பாட்டன் வீட்டில் இருந்த பரதன், வந்த தூதுவரிடத்தில் தந்தை முதலியோரின் நலனை உசாவுதல்.

**(க - ரை) :** 'தசரதன் நலமுள்ளவனா?' என்று கேட்டு, 'இராமனும் இலக்குவனும் வலியரோ?' என்று வினவி, அவர்கள் 'ஆம்' என்றலும், அவர்களை வாழ்த்தி வணங்குபவனாய்க் கும்பிட்டான்.

**(அ—ரை):** வலியன் : வலிமையுடையவன், நலமுள்ளவன; இலைகொள பூண் : இலைபோலும பசும் பொன்னாற் செய்த நகை; உலைவில் : குறைவில்லாத; தாழ் தடக்கை : முழங்கால் வரைக்கும் தொங்குகின்ற நீண்ட கை.

**196.** கோசல நாட்டை யடைந்த பரதன், அங்குள்ள துயரக் காட்சிகளைக் காண்டல்.

**(க - ரை) :** வயலெல்லாம் அழகு நீங்கின ; ஆடவர்களின் தோள்களில் மாலை இல்லை ; சோலைகளும், நெல் முதலிய பயிர்களும் வற்றிக் கிடந்தன ; லக்ஷ்மி அங்குள்ள தாமரை மலரிலிருந்து நீங்கியதைப் போலவே அந்நாட்டிலிருந்தும் நீங்கிவிட்டாள்.

**(அ—ரை):** ஏர் : அழகு; தார் : மாலை; தண்டலை : சோலை; பங்கயம : தாமரை.

**197.** இதுவும் அது.

**(க - ரை) :** மற்றும் அந்நாட்டின் முகமெல்லாம் பொலிவிழந்து காணப்பட்டன ; மாடங்கள் அகிற்புகையை இழந்தன ; விளக்குகளெல்லாம் சுடரை இழந்தன , மகளிர் கூந்தலெல்லாம் மலர் சூடுதலை இழந்தன.

**(அ—ரை):** தீவிகை: தீபிகை : விளக்கு; நகை : ஒளி, சிரிப்புமாம்; அழல் சிகை : சுடரின் கொழுந்து; ஓதி : கூந்தல்; தேமலர்த் தொகை : வாசனை பொருந்திய மலர்மாலைகளின் மிகுதி.

194. பின்னும் தம்பியை நோக்கிப், பெரியவன்
'மன்னும் செல்வத்திற்(கு) உண்டு வரம்(பு);இதற்கு
என்ன கேடுண்(டு)? இவ் எல்லையில் இன்பத்தை
உன்னு! மேல்வரும் ஊதியத்தோ(டு)' என்றான்.

## பள்ளியடைப் படலம்

195. 'வலியன்' என்றவர் கூற மகிழ்ந்தனன்;
'இலைகொள் பூண் இளங் கோளம் பிரானொடும்
உலைவில் செல்வத்த னோ?' என 'உண்(டு)' எனத்
தலையின் ஏந்தினன் தாழ்தடக் கைகளே.

196. ஏர்து றந்த வயல்; இள மைந்தர்தோள்
தார்து றந்தன; தண்தலை நெல்லினும்
நீர்து றந்தன; தாமரை நீத்தெனப்
பார்து றந்தனள் பங்கயச் செல்வியே.

197. நகை இழந்தன வாள்முகம்; நா(று)அகில்
புகை இழந்தன மாளிகை; பொங்(கு)அழல்
சிகை இழந்தன தீவிகை; தேமலர்த்
தொகை இழந்தன தோகையர் ஓதியே.

198. அயோத்தி நகரின் அவலநிலையைப் பரதன் காண்டல்.

(க - ரை): அங்குள்ள ஊர்திகளை ஏறிச் செலுத்துபவர் இல்லாமையால் தண்ணீரில்லாத ஆற்றைப்போல் வீதிகளெல்லாம் பொலிவற்றுக் கிடந்தன.

குறிப்பு: ஊர்திகளாவன: தேர், குதிரை, யானை, பல்லக்கு, வண்டி முதலியவைகள்.

(அ—ரை) மா : குதிரை; ஊரும் : ஏறிச் செல்லுகின்ற; பண்டி : வண்டி; எழில் : அழகு; வாரி : தண்ணீர்; வாலுகம் : மணல்.

199. 'தந்தை எங்குளார்?' என்ற பரதனுக்குக் கைகேயி கூறுதல்.

(க - ரை): 'தந்தை எங்குளார்' என்று கேட்ட பரதனுக்குக் கைகேயி, 'அசுரர் வலியெல்லாம் தொலைத்து இப்பூமியைக் காத்து வந்த அரசன், தேவலோகம் வணங்கும்படியாகச் சுவர்க்கம் அடைந்தான்; அதற்காக நீ ஒன்றும் வருந்தவேண்டாம்' என்று தேற்றினாள்.

(அ—ரை) ஆனவன : அவன்; தானவர் : அசுரர், அவனி : உலகம்; வானகம் : சுவர்க்கம்.

200. பரதன் புலம்புதல்.

(க - ரை): 'மனுச்சக்கரவர்த்தி முதலாகத் தன் முன்னோர்களைப் பற்றிக் கூறும் கதைகளைப் புதுக்கிய தலைவனாகிய தந்தையே! இவ்வுலகில் அனைவரையும் பிரிந்து போயினும் போகுக; இராமனை எவ்வாறு பிரிந்து போயினை' என்று பரதன் புலம்பினான்.

(அ—ரை): முதலவன் : சூரியகுல முதல்வனாகிய மனு, நோன்மை : வலிமை; நூறிய : அழித்த; கண்ணுடை நுதலவன் வில் : சிவனுடைய வில்; முந்தையோர் பழம் கதையையும் புதுக்கிய தலைவன் : முன்னோரின் செயற்கருஞ்செயல்கள் கதையாகக் கேட்கப்பட்டவற்றைச் செயலால் காட்டிய தசரதன் என்பது கருத்து.

201. இதுவும் அது.

(க - ரை): 'தவத்தால் பெற்ற மகனுக்கு உலகம் முழுவதையும் அளித்து, அவனுக்கு முடிசூட்டும் விழாச்சிறப்பையும் நீ கண்களால் காணப்பெற்றிலையே?' என்று பரதன் இராமனை நினைத்து வருந்தினான்.

(அ—ரை): பற்றுஉறு : பொருந்திய; பயந்த : பெற்ற; கொற்றம் : வெற்றி; முடிமணக் கோலம் : முடிசூட்டும் விழாவின் சிறப்பு.

198. தேரும், மாவும், களிறும், சிவிகையும்,
ஊரும் பண்டியும் ஊருநர் இன்மையால்,
யாரும் இன்றி எழில்இல வீதிகள்,
வாரி இன்றிய வாலுக ஆற்றினே.

199. ஆனவன் உரைசெய அழிவில் சிந்தையாள்
'தானவர்'வலிதொலைத்(து) அவனி தாங்கிய
தேன்அமர் தெரியலான் தேவர் கைதொழ
வானகம் எய்தினன்; வருந்தல்நீ!' என்றாள்.

200. 'முதலவன் முதலிய முந்தை யோர்பழம்
கதையையும் புதுக்கிய தலைவ, கண்ணுடை
நுதலவன் சிலைவிலின் நோன்மை நூறிய
புதல்வனை எங்ஙனம் பிரிந்து போயினாய்!'

201. 'பற்(று)உறு தவத்தினில் பயந்த மைந்தற்கு
முற்றுல(கு) அளித்து,நீ முறையின் எய்திய
கொற்றநல் முடிமணக் கோலம் காணவும்
பெற்றிலை போலும்,நின் பெரிய கண்களால்.'

**202.** இராமன் வனத்திற்குப் போயினன் என்று கேட்ட பரதன் துயரம்.

(**க - ரை**): இராமன் வனத்திற்குச் சென்றுவிட்டான் என்று கைகேயி கூறிய வார்த்தையைக் கேட்ட பரதன், நெருப்பை உண்டவன்போல் இருந்து, 'இன்னும் நான் எத்தனை துன்பச் செய்திகள் கேட்க இருக்கிறேனோ? நான் செய்தற்குரிய காரியம் இனி என்ன உளது?' என்று வருந்தினன்.

(**அ—ரை**): மாற்றம் : சொல்; வினைத்திறம் : திறமையான செயல், விளைப்பது : செய்வது; எனைத்து உள : எவ்வளவு உள்ளனவோ?

**203.** 'வனம்போயது எதனால்?' என்று பரதன் வினாதல்.

(**க - ரை**): 'இராமன் காட்டிற்கேகியது பிறர்செய்த தீமையினாலோ? தெய்வம் கோபித்தோ? மிக்க விதியினாலோ? அல்லது வேறு எந்தக் காரணத்தாலே?' என்று பரதன் புலம்பினன்.

(**அ—ரை**): ஏந்தல் . தலைவன்; சீறியோ · கோபித்தோ, ஓங்கிய : மிக்க.

**204.** பரதன், இராமனுக்கு அஞ்சித் தாயைக் கொல்லாது, கடிந்து கூறல்.

(**க - ரை**): "நீ செய்த சூழ்ச்சியினாலே தந்தை இறந்தான், தமையன் காடுபுக்கான் என்று கேட்டும் உன் வாயைக் கிழிக்காமல் இருக்கிறேன். ஆகையால் நான் ஆசையோடு இந்த உலகத்தை அரசாட்சி செய்பவனே ஆகின்றேன்."

(**அ—ரை**): தம்முன் : அண்ணன்; கொடும்புணர்ப்பு : கொடிய சூழ்ச்சி; கீண்டிலென்: கீண்டிலேன் : கிழிக்காமல் இருக்கிறேன்.

**205.** தன்னிடம் வந்த பரதனுக்குக் கோசலை கூறல்.

(**க - ரை**): 'இவன் களங்கமற்ற நெஞ்சையும், குற்றமற்ற செய்கையையும் உடையவன்; நல்லவனே' என்று அறிந்த கோசலை, "பரதனே! உன் தாய் செய்த வஞ்சகத்தை நீ அறியவில்லை போலும்" என்று கூறினள்.

(**அ—ரை**): மையறு : குற்றமற்ற; மாசு : குற்றம்; செய்யவன் : நல்லவன்; இழைத்த : செய்த.

202. 'வனத்தினன்' என்றவள் இசைத்த மாற்றத்தை
நினைத்தனன்; இருந்தனன் நெருப்புண் டானென;
'வினைத்திறம் யா(து)இனி விளைப்ப(து)? இன்னமும்
எனைத்துள கேட்பன துன்பம்? யான்'என்றான்.

203. ஏங்கினன் விம்மலோ(டு) இருந்த ஏந்தல்,'அப்
பூங்கழற் காலவன் வனத்துப் போயது,
தீங்கிழைத் ததனிறோ? தெய்வம் சீறியோ?
ஓங்கிய விதியினோ? யாதி னோ?'என.

204. 'மாண்டனன் எந்தை,என் தம்முன் மாதவம்
பூண்டனன் நின்கொடும் புணர்ப்பினால் என்றால்,
நீண்டிலென் வாய்அது, கேட்டும் நின்றயான்
ஆண்டன னே,யன்றோ அரசை ஆசையால்!'

205. 'மைஅறு மனத்தொரு மாசு ளான்அலன்;
செய்யனே' என்பது தேரும் சிந்தையாள்,
'கைகயர் கோமகள் இழைத்த கைதவம்,
ஐய! நீ அறிந்திலை போலும்ஆல்?'என்றாள்.

206. பரதனின் சபதம். இச்செய்யுள் குளகம்.

(க - ரை): "நான் இராமதுரோகத்திற்கு ஆளாயிருப்பேனுல் பாவம் செய்தவன், கருணையற்ற மனத்தையுடையவன், பிறர் மனைவியை விரும்பியவன், அயலாரைக் கோபிப்பவன், உயிர்க்கொலை செய்பவன், துறவிகளுக்குத் துயர் செய்யப் பிறரைத் தூண்டினவன் ஆகியோர் போகும் நரகத்திற்குப் போவேனுகுக."

(அ—ரை): அறங்கெட : புண்ணியம் அழிய; பிறன்கடை நிற்றல் : பிறர் மனைவியை விரும்புதல்; மறம்கொடு : வலிமைகொண்டு; 'அறன்கடை நின்ருருள் எல்லாம் பிறன்கடை-நின்ருரிற் பேதையார் இல்' என்னும் குறளிலும இக் கருத்தைக் காணலாம.

207. இதுவும் அது.

(க - ரை): "கன்னியைக் கற்பழித்தவன், குருவின் மனைவியை விரும்பிப் பார்ப்பவன், கள் அருந்துபவன், திருட்டுத்தனமாகப் பிறர் பொருளை அபகரித்தவன் ஆகிய இவர்கள் போகும் கதிக்கு நான் போவேனுக" என்ருன்.

(அ—ரை). பன்னி : பத்தினி, மனைவி; களவு : திருட்டுத்தனம்; பொன் : பொருள்; உறுகதி : அடையும் கதி.

## இராமனைக் காணப் பரதன் செல்லுதலைக் கூறும் படலம்

ஆறு : வழி, செல் : சென்ற

208. மந்திரி முதலியோர் அரசவைக்கு வருதல்.

(க - ரை): மந்திரிகளும், நகரமாந்தரும், சேனைத்தலைவரும், சிற்றரசர்களும், முனிவரோடு மற்ற அறிஞர்களும் அரசவையில் அங்கிருந்த பரதனை வந்து சூழ்ந்தனர்

(அ—ரை): மந்திரம : ஆலோசனை; கிழவர் : உரிமையுடையவர், தந்திரம் : படை; பாலர் : பரிபாலிப்பவர்; சுந்தரக் குரிசில் : அழகிய தலைவன்.

209. பரதனை வசிட்டமுனிவர் முடிசூட வேண்டுதல்.

(க - ரை): "பரதனே! உனது தந்தையோ இறந்துவிட்டார்; உன் தமையனும் அரசைத் துறந்தான்; அடுத்தபடி உலகையாள வேண்டிய அரசுரிமை, தாயின் வரத்தின்படி அரசன் ஆணையால் உன்பால் வந்துளது; நீ அரசனுக வேண்டுமென்பதே எங்கள் கருத்து" என்று வசிட்டர் கூறினுர்.

(அ—ரை). உந்தை : உன் தந்தை; உம்முன் : உனது முன்னவன், இராமன்; அந்தம் இல் : அழிவில்லாத.

206. 'அறம்கெட முயன்றவன், அருள்இல் நெஞ்சினன்,
பிறன்கடை நின்றவன், பிறரைச் சீறினேன்,
மறம்கொடு மன்உயிர் கொன்று வாழ்ந்தவன்,
துறந்தமா தவர்க்(கு)அரும் துயரம் சூழ்ந்துளோன்.'

207 'கன்னியை அழிசெயக் கருதினேன்; குரு
பன்னியை நோக்கினேன், பருகி னேன்,மறை
பொன் இகழ் களவினில் பொருந்தி னேன்,எனும்
இன்னவர் உறுகதி என்ன தாகவே.'

## ஆறுசெல் படலம்

208 மந்திரக் கிழவரும், நகர மாந்தரும,
தந்திரத் தலைவரும், தரணி பாலரும்,
அந்தர முனிவரோ(டு) அறிஞர் யாவரும்
சுந்தரக் குரிசிலை மரபின் சுற்றினர்.

209. 'உந்தையோ இறந்தனன்; உம்முன் நீத்தனன்;
வந்ததும் அன்னைதன் வரத்தின்; மைந்தநீ
அந்தம்இல் பேர்அர(சு) அளித்தி! அன்னது
சிந்தனை எமக்(கு)'எனத் தெரிந்து கூறினன்.

210. அது கேட்ட பரதன் நிலை.

(க - ரை): "இந்த உலகம் உன்னைச் சரணாக அடைந்துள்ளது; ஆதலால் இவ்வுலகை நீ காப்பாற்றுவாயாக" என்று வசிட்டர் சொல்லக் கேட்ட அளவில் பரதன், விடத்தை உண்ணென்று ஒருவர் வேண்ட அதைக் கேட்டவர் அஞ்சுவதைப் போல் அஞ்சினான்; அறிவு சோர்ந்தான்; கண்ணீர் அருவிபோலச் சொரிந்தது.

(அ—ரை): செஞ்செவே : திருத்தமாக; முனிவரன் : முனிவரில் மேன்மையாளவன்; அயர்ந்தனன் : சோர்ந்தனன்.

211. பரதனது பதில்.

(க - ரை): 'மூன்று உலகங்களுக்கும் முதல்வனாகிய மூத்தவன் இருக்க அவன் தம்பியாகிய நான் முடிசூடுதல் அந்தத் தருமத்திற்கு ஏற்றதாய் இருக்குமேயானால், என் தாயாகிய கைகேயியின் செய்கையும் குற்றமற்றதாகும்.'

(அ—ரை): தோன்றினன் : பிறந்தவன்; சான்றோர் உரைசெய்த அத் தருமம் : மேலோர்களால் எடுத்துக் கூறப்படும் அத்தருமம்.

212. 'இராமனை அரசனாக்குவேன்' எனப் பரதன் கூறுதல்.

(க - ரை): 'நான் அரசாள்வது நல்ல முறையினால் தான்; தீய வழியால் அல்ல; என்றாலும் நான் அரசனாகி வாழ விரும்பவில்லை. ஆதலால் இராமனை அழைத்து வந்து முறைப்படி நானே முடிசூட்டுகிறேன், பாருங்கள்."

(அ-ரை): பொறை : பாரம்; அலங்கல் : மாலை; தொல்நெறி முறைமை : தொன்றுதொட்ட முறைமை; காண்டிரால் : பாருங்கள்.

213. அவையோர் பரதனை வாழ்த்துதல்.

(க - ரை): "அரசு செலுத்தியும், தருமங்களைக் காத்தும், யாகங்கள் செய்தும ஒருவன் புகழ் சம்பாதிக்க வேண்டுமா? உன்னைப் போல் அறத்தின் வழி நின்றால், அதுவே சாலும்; ஆகையால் இந்தப் பதினான்கு உலகங்களும் அழிந்தாலும், உன் புகழ் அழியாது நிற்பதாகும்" என்று வாழ்த்தினர்.

(அ—ரை): ஆழி : சக்கரம்; ஆழி உருட்டல் : அரசாட்சியாகிய சக்கரத்தைச் செலுத்துதல்; எஞ்சினும் : இறந்தாலும்.

210. 'தஞ்சம் இவ்வுலகம்நீ தாங்கு வாய்'எனச்
செஞ்செவே முனிவரன் செப்பக் கேட்டலும்,
'நஞ்சினை நுகர்'என நடுங்கு வாரினும்
அஞ்சினன்; அயர்ந்தனன்;அருவிக் கண்ணினன்.

211. 'மூன்றுல கினுக்கும்ஓர் முதல்வ னய்முதல்
தோன்றினன் இருக்க,யான் மகுடம் சூடுதல்
சான்றவர் உரைசெய்அத் தருமம் ஆயதேல்,
ஈன்றவள் செய்கையில் இழுக்குண் டாகுமோ?'

212. 'நன்னெறி என்னினும், நான்இந் நானிலம்
மன்உயிர்ப் பொறைசுமந்(து), இருந்து வாழ்கிலேன்;
அன்னவன் தனைக்கொணர்ந்(து) அலங்கல் மாமுடி
தொல்நெறி முறைமையில் சூடடல் காண்டிரால்.'

213. 'ஆழியை உருட்டியும், அறங்கள் போற்றியும்,
வேள்வியை இயற்றியும் வளர்க்க வேண்டுமோ!
ஏழினே(டு) ஏழ்எனும் உலகம் எஞ்சினும்
வாழிய நின்புகழ்!' என்று வாழ்த்தினர்.

214. பரதன் இராமனை அழைத்துவரப் புறப்படுதல்.

(க - ரை): பரதன், பெரிய சேனை தனக்கு முன் செல்லத் தன் இடுப்பில் மரவுரி உடுத்துக் கொண்டு, சத்துருக்கனனோடும் தேரில் ஏறித் துயரத்தோடு சென்றான்.

(அ—ரை) ஏந்தல் . தலைவன்; சீரை : மரவுரி.

215. காட்டிற்குச் சென்ற பரதன், இராமன் தங்கியிருந்த இடத்தில் தங்குதல்.

(க - ரை): நீர் சொரியும் கண்களோடு, இராமன் தங்கிய இடத்தில் புற்களாகிய அணை மீது கிழங்கும் கனியும் கூட உண்ணாமல் பரதன் தங்கினான்.

(அ—ரை) அல் . இருட்டு, கல் அணை கல்லில் பொருந்திய; புல் அணை : புல்லாகிய படுக்கை, வைகினை . தங்கினை.

பரதன் சேனை கங்கையை அடைந்தமையைக் கூறுவது.

216. பரதன் சேனையைக் கண்ட குகனின் சீற்றம்.

(க - ரை) : யமனைப் போலும் வலிமையுடைய குகனானவன், பரதனது சேனையை ஒரு சிறிய துகளாகக் கருதிக் கோபத்தோடு நோக்கினான். அப்பொழுது அவனுக்குச் சிரிப்பு வந்தது; கண்களில் நெருப்புப் பொறி பறந்தது, மூக்கில் புகை கிளம்பிற்று; புருவமானது வில்லைப் போல வளைந்தது.

(அ—ரை): கூற்று . எமன்; தொகைமுரண் சேனை : கூட்டமாகிய வலிய சேனை; துகள் ஒரு சிறு புழுதி; நாற : தோன்ற; நாசி . மூக்கு.

217. குகன் தன் சேனையைத் திரட்டுதல்.

(க - ரை): "இப்படைகளெல்லாம் எலிகள்; நான் ஒரு பாம்பு" என்று சொல்லிக் கொண்டு, தனது சேனையைத் தன்னருகே வருமாறு கூவி அழைத்தான். அச்சேனை, உலகில் வாழும் புலிகள் எல்லாம் ஓரிடத்தில் திரண்டது போலக் கூடியது.

(அ—ரை) அரவம் : பாம்பு; ஒலி உலாம் : ஆரவாரம் மிக்க; உவந்து : விரும்பி; வள் உகிர் கூரிய நகம், "ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்" என்னும் குறளின் கருத்து இப்பாட்டின் முதலடியில் வந்துள்ளது.

214. இன்னணம் நெடும்படை ஏக, ஏந்தலும்
தன் உடைத் திருஅரைச் சீரை சாத்தினான்;
பின் இளையவனொடும், பிறந்த துன்பொடும்,
நன்னெடுந் தேர்மிசை நடத்தல் மேயினான்.

215. அல்அணை நெடும்கண்நீர் அருவி ஆடினன்;
கல்அணை கிழங்கொடு கனியும் உண்டிலன்;
வில்அணைத்(து) உயர்ந்ததோள் வீரன் வைகிய
புல்அணை மருங்கில்தான் பொடிமின் வைகினான்.

கங்கை காண் படலம்

216. குகன்எனப் பெயரிய கூற்றின் ஆற்றலான்;
தொகைமுரண் சேனையைத் துகளின் நோக்குவான்;
நகைமிகக், கண்கள்தீ நாற, நாசியில
புகைஉறக், குனிப்புறும் புருவப் போர்விலான்.

217. 'எலியெலாம் இப்படை அரவம் யான்' என
ஒலிஉலாம் சேனையை உவந்து கூவினான்;
வலிஉலாம் உலகினில் வாழும் வள்உகிர்ப்
புலிஎலாம் ஒருவழிப் புகுந்த போலவே.

218. எதிர்க்கரையில் நின்ற குகனைக் குறித்துச் சுமந்திரன் பரதனுக்குத் தெரிவித்தல்.

(க -ரை): "கங்கையின் இருகரைக்கும் உரிமையுடையவன் அளவில்லாத ஓடங்களைச் செலுத்துபவன்; நமது இராமனுக்கு ஆருயிர் நண்பன்; உயர்ந்த தோளையும், ஆண் யானையன்ன தோற்றத்தையும், எப்பொழுதும் வில்லை வளைத்துப் பிடிக்கும் தொழிலையும் உடையவன். அவன் பெயர் குகன் என்பது."

(அ—ரை): நாவாய் : ஓடம்; கரியின் ஏறு : ஆண யானை; கொங்கு : வாசனை; அலரும் : மலரும்; தார் : மாலை; குறி : பெயர்.

219. இதுவும் அது.

(க - ரை) : "மலைபோலும் வலிமையுடையவன்; அளவற்ற அன்புடையவன்; இருட்டைப் போலும் உடம்பையுடையவன்; பரதனே! உன்னைக் காண வேண்டுமென்ற ஆசையோடு வழியெதிரே நின்று கொண்டிருக்கின்றான்" என்று சுமந்திரன் பரதனுக்குக் கூறினான்.

(அ—ரை) கல் : மலை; திண்மை : வலிமை; அல் : இருட்டு; மணிநிறம் : நீலநிறம்; மழைகாணும் : மேகத்தைப் போன்ற, காணும் என்பது உவம உருபு, நெறி : வழி.

220. 'நானே முன் சென்று குகனைக் காண்பேன்' எனப் பரதன் புறப்படுதல்.

(க - ரை): குகன் உங்களுக்குத் தந்தையை ஒப்பான் என்று கூறியதைக் கேட்டு மகிழ்ந்த பரதன், 'அவன் இராமனால் தழுவிக் கொள்ளப்பட்ட நண்பனாயிருப்பதால், அத்தகையவனை நானே முன் சென்று காண்பேன்' என்று புறப்பட்டான்.

(அ—ரை) துணை . ஒப்பு, சமானம்; துரிசு இலா : களங்கமில்லாத; மன் : அரசன், இராமன்; மனக்கு : மனததிற்கு; துணைவன் : தோழன்; என் முன்னே: என்னைககாண அவன் வருவதன் முன்பே.

221. பரதன் தோற்றத்தைக் கண்ட குகன் நிலை.

(க - ரை): மரவுரி தரித்து, அழுக்கடைந்த உடம்போடும், ஒளியிழந்த முகத்தோடும், கல்லும் கனியும்படியாக நைந்துருகும் துயரத்தை உடைய பரதன் நிலையைக் கண்ட குகன், தன் கையில் பிடித்திருந்த வில் கீழே நழுவியதும் தெரியாதபடி துன்பமுற்று மரம் போல் நின்றுவிட்டான்.

(அ—ரை): வற்கலை : மரவுரி; மாசு : அழுக்கு; நல்கலை : நல்ல ஒளி; நகை : ஒளி; நின்றொழிந்தான் : நின்றேவிட்டான். இப்பாடல் மருட்கை யென்னும் மெய்ப்பாடமைந்தது.

218. ‘கங்கைஇரு கரையுடையான்,
கணக்கிறந்த நாவாயான்,
உங்கள்குலத் தனிநாதற்(கு)
உயிர்த்துணைவன், உயர்தோளான்,
வெம்கரியின் ஏறனையான்,
விற்பிடித்த வேலையினான்,
கொங்கலரும் நறும்தண்தார்க்
குகன்என்னும் குறியுடையான்.

219. ‘கல்காணும் திண்மையான்,
கரைகாணாக் காதலான்,
அல்காணின் கண்டனைய
அழகமைந்த மேனியான்,
மல்காணும் திருநெடுந்தோள
மழைகாணும் மணிநிறத்தோய்!
நின்காணும் உள்ளத்தான்
நெறிஎதிர்நின் றனன்’ என்றான்

220. தன்முன்னே அவன்தன்மை,
தந்தைதுணை முந்துரைத்த
சொல்முன்னே உவக்கின்ற
துரி(சு)இலாத திருமனத்தான்,
‘மன்முன்னே தழீஇக்கொண்ட
மனக்(கு) இனிய துணைவனேல
என்முன்னே அவன்காண்பென்
யானேசென்(று)’ எனஎழுந்தான்.

221. வற்கலையின் உடையானை, மாசடைந்த மெய்யானை,
நற்கலையில் மதியென்ன நகைஇழந்த முகத்தானைக்,
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்;
விற்கையினின்(று) இடைவீழ, விம்முற்று நின்றொழிந்தான்.

222. குகன் தன் கருத்தை மாற்றிக் கூறல்.

(க - ரை): "இவன் (பரதன்) என் தலைவனாகிய இராமனைப் போன்றிருக்கின்றான்; அருகில் நின்றவன் இலக்குவனைப் போன்றிருக்கின்றான்; எல்லையில்லாத துயரத்தோடு காணப்படுகிறான்; அதோடும் இராமன் சென்ற திசையை நோக்கிக் கும்பிடுகிறான்; இராமனோடு சிலநாள் பழகிய எனக்கே இவ்வளவு அன்பு நிகழுமானால், அவன் உடன்பிறந்தார்கள் அவனுக்குத் தீமை செய்வார்களா? தவறாக நினைத்து விட்டேனே" யென்று வருந்தினான்.

(அ—ரை): நம்பி . ஆடவரிற் சிறந்தவன், இராமன், அயல் : அருகே; பிழைப்பு : குற்றம்; இழைப்பரோ செய்வார்களோ.

223. குகன், பரதன் ஆகிய இருவரின் செயல்கள்.

(க - ரை): தன்னை முதலில் வணங்கிய குகனைப் பரதனும் வணங்கினான். உடனே குகன் காலில் விழப் பரதன் தழுவிக் கொண்டான்

**விளக்கம்:** 'மலர் இருந்த அந்தணனும் தலை வணங்கும் அவனும், வந்தெதிரே தொழுதானை வணங்கினான்; அவன் அடி வீழ்ந்தான்; தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான், தந்தையினும் களி கூரத் தழுவினான்' என்று பொருள் கொள்ள வேண்டும். வந்தெதிரே தொழுதலும், அடி வீழ்தலும் குகன் செயல். எதிர்வணங்குதலும், தழுவிக்கொள்ளுதலும் பரதன் செயல். இவ்வாறு கொள்ளுவதே முறை. 'பரதன், அடி வீழ்ந்தான்' என்பது தகுதி முறையன்று என அறிஞர் கூறுவர். ஆகையால் அடுத்த பாட்டில் 'தழுவின புளிஞர் வேந்தன்' என்பதற்குத் **தழு**வப்பட்ட என்று பொருள் கொள்ள வேண்டும் இவ்வாறு கூறுபவர் 'செயப்படு பொருளைச் செய்தது போலத் தொழிற் படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே' (தொல்-சொல்) என்னும் நூற்பாவைக் காட்டுவர். மலர் இருந்த அந்தணன்: பிரமன்.

(அ—ரை) தகவு : மேன்மை; சென்னி : தலை; சீர்த்தி : மிகு புகழ் : உரிச் சொல்; 'சீர்த்தி மிகுபுகழ்' என்பது தொல்காப்பியம.

224. குகன் பரதனைப் புகழ்தல்.'

(க - ரை) : "தாயின் வார்த்தையை மேற்கொண்டு, உன் தந்தை உனக்குக் கொடுத்த பூமியாளும் பொறுப்பை,'இது பாரம்' என்று விலக்கித் துன்பம் நிறைந்த முகத்தோடு நீ காட்டிற்கு இராமனை அழைத்து வர வந்ததை உணருமிடத்து, ஆயிரம் இராமர்கள் சேர்ந்தாலும் உன் ஒருவனுக்கு இணையாவார்களா?" என்று குகன் பரதனைப் புகழ்ந்தான்.

(அ-ரை): தாதை தந்தை; தீவினை : பாவம், நீத்து : நீக்கி, துறந்து; **போயினை** : இடவழுவமைதி; கேழ : இணை, சமானம்; தெரியின் : ஆராயுமிடத்து.

222. 'நம்பியும்என் நாயகனை
ஒக்கின்றான்; அயல்நின்றான்,
தம்பியையும் ஒக்கின்றான்;
தவவேடம் தலைநின்றான்;
துன்பம்ஒரு முடிவில்லை;
திசைநோக்கித் தொழுகின்றான்;
எம்பெருமான் பின்பிறந்தார்
இழைப்பரோ பிழைப்(பு)!'என்றான்.

223. வந்(து)எதிரே தொழுதானை,
வணங்கினான் மலர்இருந்த
அந்தணனும் தலைவணங்கும்
அவனும்:அவன் அடிவீழ்ந்தான்;
தந்தையினும் களிகூரத்
தழுவினான், தகவுடையோர்
சிந்தையினும் சென்னியினும்
வீற்றிருக்கும் சீர்த்தியான்.

224. 'தாய்உரை கொண்டு,தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச், சிந்தனை முகத்தில் தேக்கிப்,
போயினை என்ற போழ்து, புகழினோய் தன்மை கண்டால்,
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா!'

**225.** இராமன் துயில இலக்குவன் யாது செய்தான் என வினவிய பரதனுக்குக் குகன் கூறுதல்.

**(க - ரை) :** இராமனும் சீதையும் தூங்கும்பொழுது, இலக்குவன் கையில் வில்லை ஊன்றிக்கொண்டு, பெருமூச்சோடு விடியுமளவும் சற்றும் கண் இமையாமல் அவர்களைப் பாதுகாத்து நின்றான்.

**(அ-ரை):** அல் : இருட்டு; வில்லை ஊன்றுதல் விலங்கு முதலியவரால் தீமைவராமல் தடுப்பதற்கு; வெய்துயிர்த்தல் : வெப்பத்தோடு மூச்சுவிடுதல; கங்குல் : இரவு; நயனம் : கண; கண் இமையாமை பாதுகாவலின் திறம.

**226.** கோசலையைச் சுட்டி, யாரென்று கேட்ட குகனுக்குப் பரதன் கூறுதல்.

**(க - ரை) :** குகன் கோசலையைத் தொழுது, 'இவர் யார்' என்று பரதனைக் கேட்க, அதற்குப் பரதன், 'இவர் தசரதன் முதல் தேவியார்; இராமனைப் பெற்று அதனால் அடைதற்கிருந்த பெருஞ்செல்வத்தை, யான் பிறந்ததனால் இழந்து விட்டவள்' என்று பதில் கூறினான்.

**(அ-ரை)**: சுற்றத்தார் தேவரொடும தொழநின்ற கோசலை சுற்றத்தவர்கள் தேவர்களுக்குச் சமானமாக வைத்து தொழுதற்குரிய கோசலை. கொற்றத் தார்க்குரிசில் : வெற்றி மாலையை அணிந்த பரதனே. அண்மை விளி, கோக்கள் வைகும் முற்றத்தான் : தன்னைக் காண வந்த அரசர்கள் காத்திருக்கும் முற்றத்தையுடையவன்; மூன்றுலகம ஈன்றானை முன் ஈன்றான் திருமாலினை, மூன்றுலகம் ஈன்றான் : பிரமன்.

**227.** கோசலைக்குப் பரதன் குகனைத் தெரிவித்தல்

**(க - ரை) :** இவள் இராமனைப் பெற்றவள் என்ற மாத்திரத்தில், அவர் காலில் விழுந்து நெடுநேரம் அழுது கொண்டிருந்த குகனைப் பார்த்து, 'இவன் யார்?' என்று பரதனைக் கோசலை வினவ, "இவன் இராமனுக்கு இனிய நண்பன்; எங்கள் மூவருக்கும் மூத்தவன்; குகன் என்பது இவன் பெயர்" என்று பரதன் தெரிவித்தான்.

**(அ-ரை)**: அடியின் மிசை காலினமேல், கன்றுபிரி கார் ஆவின் துயருடைய கொடி : கோசலை; கார் ஆ : பசுவின் வகைகளில் ஒன்று, காராமபசு என்பர்; கொடி : ஆகுபெயர், கழற்கால் மைந்தன வீரக்கழல் அணிந்த காலை யுடைய பரதன்; குரிசில : தலைவன

**228.** சுமித்திரையைக் குகனுக்குப் பரதன் தெரிவித்தல்.

**(க - ரை) :** கோசலையின் அருகில் நின்ற சுமித்திரையைப் பார்த்து, "ஐயனே, அன்பு நிறைந்தவராய்க் காணப்படும் இவர் யார்?" என்று குகன் கேட்க, "நிலையில்லாத தன் உடம்பை நிற்பதாகச் செய்து இறந்த தசரத மன்னனின் இளைய தேவி: இராமனுக்குத் தம்பியரும் உண்டு என்று பிறர் அறியும்படி அவனோடு தொடர்ந்து சென்ற இலக்குவனைப் பெற்ற பெரியாள்" என்று பரதன் தெரிவித்தான.

**(அ-ரை):** அறந்தானே என்கின்ற அயல் நின்றாள் . தருமமே ஒரு வடிவெடுத்தாற் போன்ற சுமித்திரை; நெறி திறம்பாத தன்மெய்யை நிற்பது ஆக்கி இறந்தான் : புகழுடம்பை நிறுவிப் பூதவுடம்பை நீக்கினன்; தொழுகுலம் : குலதெய்வம்.

225. 'அல்லைஆண்(டு) அமைந்தமேனி
அழகனும்,அவளும் துஞ்ச,
வில்லைஊன் றியகை யோடும்,
வெய்(து)உயிர்ப் போடும், வீரன்
கல்லைஆண்(டு) உயர்ந்த தோளாய்!
கண்கள் நீர் சொரியக் கங்குல்
எல்லைகாண பளவும் நின்றான்!
இமைப்பிலன் நயனம்' என்றான்.

226. சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற
கோசலையைத் தொழுது நோக்கி
'கொற்றத்தார்க் குரிசில்! இவர் ஆர்'என்று
குகன்வினவ, 'கோக்கள் வைகும்
முற்றத்தான் முதல்தேவி; மூன்றுலகம்
ஈன்றானை முன்ஈன் றானைப்
பெற்றத்தால் பெறும்செல்வம், யான்பிறத்த
லால்துறந்த பெரியாள்' என்றான்.

227. என்றலுமே அடியின்மிசை நெடிதுவீழ்ந்(து)
அழுவானை, 'இவன்யார்' என்று
கன்றுபிரி கார்ஆவின் துயருடைய
கொடிவினவக், கழற்கால் மைந்தன்,
'இன்துணைவன் இராகவனுக்(கு), இலக்குவற்கும்,
இளையவற்கும். எனக்கும் மூத்தான்;
குன்றனைய திருநெடுந்தோள் குகன் என்பான்;
இந்நின்ற குரிசில்' என்றான்.

228. அறந்தானே என்கின்ற அயலநின்றாள்
தனைநோக்கி 'ஐய அன்பின்
நிறைந்தாளை உரை'என்ன, 'நெறிதிறம்பாத்
தன்மெய்யை நிற்ப(து) ஆக்கி
இறந்தான்தன் இளம்தேவி; யாவர்க்கும்
தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன்என்னப் பிரியாதான்
தனைப்பயந்த பெரியாள்'என்றான்.

229. கைகேயியைத் தெரிவித்தல்.

(க - ரை): "துன்பங்கள் எல்லாவற்றையும் தோற்றுவித்தவள்; பழியை வளர்க்கும் செவிலித்தாய்; தன்னுடைய பாவம் பொருந்திய குடலிலே கிடந்த நாளும், எல்லாப் பொருள்களும், இராமனைப் பிரிந்தமையால் உயிர் அற்றவை போல் காணப்படும் இவ்வுலகத்தில் தான் ஒருத்திமட்டும் துன்பமற்ற முகத்தோடு தோற்றுகின்ற இவள் என்னைப் பெற்றவள்."

(அ-ரை) படர் துன்பம்; படைத்தவள் : தோன்றச் செய்தவள் செவிலி : வளர்க்குந்தாய்; குடா : குடல், போலி; இடர் : துன்பம்.

230. பரதன் சேனையோடு வரக்கண்ட இலக்குவன் செயல்.

(க - ரை): இலக்குவன் சிகரங்கள் தூளாகும்படி மிதித்துப் பூமியில் குதித்து, "அண்ணு! பரதன் உம்மை மதியாமல் தன்னுடைய சேனையின் வலிமையைக் கொண்டு உம்மேல் படையெடுத்து வருகிறுன்" என்று இராமனிடம் கூறினுன்.

(அ-ரை) பார் : பூமி, குவடு : சிகரம், மேல்வந்தான் : படையெடுத்து வந்தான்; இப்பாடல் வெகுளிச்சுவை நிரம்பியது.

231. இலக்குவன் பேச்சு.

(க - ரை): "அரசன் கட்டளைப்படி, உலகத்தையாள இருந்த பரதன் இப்பொழுது எனது கட்டளைப்படி நரகத்தை ஆள்வதை நீ பார்ப்பாயாக" என்று இலக்குவன் இராமனிடம் வீரவுரை பகர்ந்தான்.

(அ-ரை): ஒரு மகள் : ஒரு பெண், கைகேயி, பெருமகன் : சக்கரவர்த்தி, ஏவல் : கட்டளை; இருநிலம் : பெரிய பூமி, அருநரகு : துயர்பொறுத்தற்கரிய நரகம்.

232. இலக்குவன் கருதியது தவறு என்று இராமன் கூறல்.

(க - ரை): "தம்பி! 'தசரதன், என்மேல் வைத்த அன்பினுல் நான் திரும்பி வருவேனென்று எண்ணியும், பூமியை எனக்குத் தருதலையும் கருதிப் பரதனை இங்கு அனுப்பியிருக்கலாம்' என்று நினைப்பதைத் தவிர, அவன் என்னேடு போர் செய்ய வந்திருக்கிருனென நினைப்பது அறிவுடைமையாகுமா?" என்று இராமன் கூறினுன்.

(அ-ரை): பெருமகன் : சக்கரவர்த்தி, தசரதன்; வயின் : இடத்தில்; : சேனை; பொரும் : போர் புரிவான்.

229. 'படர்எலாம் படைத்தாளைப், பழிவளர்க்கும்
செவிலியைத்,தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
உயிர்ப்பாரம் குறைந்து தேய,
உடர்எலாம் உயிர்இலா எனத்தோன்றும்
உலகத்தே ஒருத்தி அன்றே
இடர்இலா முகத்தாளை அறிந்திலையேல்,
இந்நின்றாள் என்னை ஈன்றாள்.'

## திருவடி சூட்டு படலம்

230. குதித்தனன் பார்இடைக், குவடு நீறுஎழ
மிதித்தனன்; இராமனை விரைவின் எய்தினன்;
'மதித்திலன் பரதன்,நின் மேல்வந் தான்,மதில்
பதிப்பெரும் சேனையின் பரப்பினன்' என்றான்.

231. 'ஒருமகள் காதலின், உலகை நோய்செய்த
பெருமகன் ஏவலின், பரதன் தான்பெறும
இருநிலம் ஆள்கைவிட்(டு), இன்றென் ஏவலால்
அருநர(கு) ஆள்வது காண்டி ஆழியாய்!'

232. 'பெருமகன், என்வயின் பிறந்த காதலின்
வரும்,என நினைகையும், மண்ணை என்வயின்
தரும்என நினைகையும் தவிரத்,தானையால்
பொரும்என நினைகையும் புலமைப் பாலதோ?'

233. இதுவும் அது.

(க - ரை) : "மிக உயர்ச்சி பொருந்தியதாகிய தருமம் என்கின்ற தெய்வம்; நல்லொழுக்கத்திற்கு ஓர் ஆணிப் பொன்; எனத் தகைய பரதன் இங்கு வந்தது என்னைக் காண்பதற்காகவே இருக்கும். இது உண்மையென்பதைப் பின்னால் நீ அறியப் போகிறாய்' என்று இராமன் இலக்குவனுக்குக் கூறினன்.

(அ-ரை): சேண் . தூரம், செம்மை : நல்லொழுக்கம்; ஆணி : உரையாணிப்பொன்; பூண இயல மெய்யமபினைய் ஆபரணததையணிநத தோளையுடையவனே; போந்தது · வந்தது; காணிய காணும் பொருட்டு.

234. பரதன் நிலையை இராமன் நோக்குதல்.

(க - ரை) : மேலே கூப்பித் தொழுத கையை உடையவனாய், துவண்ட உடம்பை உடையவனாய், அழுதழுது நொந்து போன கண்ணை உடையவனாய், துயரம் என்பது இத்தகையது என எழுதிக் காட்டியது போன்ற வடிவத்தையுடையவனாய் வருகின்ற பரதன் நிலைமையை, முற்றும் உணர் பேரறிஞனாகிய இராமன் முற்ற முடிய நோக்கினான்.

(அ-ரை). அவலம் · துயரம், படிவம வடிவம்; இப்பாடல் அவலச்சுவை நிரம்பியது.

235. பரதனுடைய தோற்றம்.

(க -ரை) : பெருந் தவஞ்செய்து திருமகளானவள் தான் அடைந்த நாயகனைப் பிரிந்து, அதனால் நலமெல்லாம் நீங்கித் துன்பப் பட்டு அனுப்பிய ஒரு தூதன் என்னும்படி பரதன் அங்கு வந்து சேர்ந்தான்.

(அ—ரை). கோதற குற்றம் நீங்க; நலம் : நன்மை, இன்பம், அழகு முதலியன.

236. வந்த பரதனால் தந்தை இறந்ததை அறிந்த இராமன் புலம்பல்.

(க - ரை). "நந்தா விளக்கைப போன்று புகழ் தங்குறுது வாழ்ந்த தலைவனே! இவ்வுலகிலுள்ளோருக்குத் தந்தையே! தருமத்திற்கு ஒரு தாயே! கருணைக்கோர் நிலைக்களமானவனே! எமது தந்தையே! பகையரசர்களுக்கு ஆண் சிங்கமே! இறந்து விட்டீரே! ஐயோ! உண்மையைக் காப்பதற்கு உலகத்தில் இனி யார் இருக்கிறார்கள்?" என்று இராமன் புலம்பினான்.

(அ—ரை): தயா : கருணை; இகல்வேந்தர் : பகையரசர். இப்பாடல் அவலச்சுவை நிரம்பியது.

233. 'சேண்உயர் தருமத்தின் தேவைச், செம்மையின்
ஆணியை, அன்னது நினைக்கல் ஆகுமோ!
பூண்இயல் மொய்ம்பினாய்! போந்தது ஈண்டெனைக்
காணிய; நீஇது பின்னும் காண்டியால்.'

234. தொழுதுயர் கையினன்; துவண்ட மேனியன்;
அழுதழி கண்ணினன்; அவலம் ஈதென
எழுதிய படிவம்ஒத்(து) எய்து வான்தனை,
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான்.

235. கோதறத் தவம்செய்து குறிப்பின் எய்திய
நாதனைப் பிரிந்தனள், நலத்தின் நீங்கினாள்,
வேதனைத் திருமகள் மெலிகின் றாள்,விடு
தூ(து)எனப் பரதனும் தொழுது தோன்றினான்.

236. 'நந்தா விளக்கனைய நாயகனே! நானிலத்தோர்
தந்தாய்! தனிஅறத்தின் தாயே! தயா நிலையே!
எந்தாய்! இகல்வேந்தர் ஏறே! இறந்தனையே!
அந்தோ! இனிவாய்மைக்(கு) ஆர்உளரே! மற்(று)'என்றான்.

237. இதுவும் அது.

(க-ரை): "நாட்டை விட்டு நான் காடு வந்தேன் என்பதைப் பொறுக்க முடியாமல் உயிர் விட்டாய்; அதையறிந்தும் நான் இன்னும் உயிருடன் இருக்கிறேனே!" என்று புலம்பினன்.

இப்பாடலும் அவலச்சுவை நிரம்பியது.

(அ—ரை). தரியாது : பிரிவாற்ருமல்; உகந்து : விரும்பி; ஊன் உடம்பு; தெவ்வர் : பகைவர்.

குறிப்பு: 'பகைவருடைய உடலிலிருந்த உயிர், தசரதன் வேலில் வந்தடைந்தது' என்பது ஈற்றடியின் கருத்து.

238. தந்தை இறந்தமைக்கு வருந்திய இராமனை வசிட்டர் தேற்றுதல்.

(க - ரை): "வேதங்களை முடியக் கற்ற இராமனே! உலகில் பிறந்தவர்கள் தங்களுக்கு உறுதியாகக் கொள்ளத்தக்கது, துறவு பூண்டு முத்தியடைதலும், அறம் செய்து சுவர்க்கம் புகுதலும் ஆகிய இவற்றைத் தவிர வேறோர் உறுதி இல்லை. உலகில் உயிர்கள் பிறத்தலும் இறத்தலும் இயற்கை என்பதை மறந்தனையா?" என்று தேற்றினர்.

(அ—ரை) துறத்தல் . துறவு பூணுதல்; மறை வேதம்; வரம்பு எல்லை.

239. பரதன் இராமனிடம் கூறுதல்.

(க - ரை): 'உன்மேல் வைத்த மிகுந்த அன்பினல் தந்தை இறக்கவும், நீ கொடிய காட்டையடையவும், நான் முழு மனத்தோடு வஞ்சனை செய்யும் வகையினல் அரசைக் கவர்வதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்த ஒரு பகைவனே யாவேன்' என்று பரதன் கூறினன்.

(அ—ரை) தொகைஇல் : தொகுத்துக் கூறமுடியாத, துஞ்ச . இறக்க; புந்தி : மனம; வவ்வ : கவர, அபகரிக்க; இறவு : சமயம்.

240. பரதனது வேண்டுகோள் தக்கதன்று என இராமன் மறுத்துரைத்தல்.

(க - ரை): "பரதனே! தாய் வரம் கேட்டுத் தந்தை உடன்பட்டுக் கட்டளையிட்டபடி நான் காடு வந்து நம் குலதர்மத்தைக் காப்பாற்றினேன். இப்பொழுது நீ கேட்கிருய் என்பதால் நம் குல தர்மத்தை ஒழித்து விடுதல் நியாய மாகுமா?"

(அ—ரை): மேய : மேவிய, பொருந்திய; தவிர்தல் ; ஒழிதல்; ஆய்வு அரும் : ஆராய்வதற்கு அருமையான; புலம் : கல்வியறிவு, குலதர்மம் பாதுகாத்து என்பது இங்கு பெற்றோர்கள் கட்டளையை நிறைவேற்றுதல்.

237. 'தேன்அடைந்த சோலைத்
திருநாடு கைவிட்டுக்
கான்அடைந்தேன், என்னத
தரியாது, காவலநீ
வான் அடைந்தாய்! இன்னம
இருந்தேன் நான் வாழ்(வு)உகந்தே!
ஊன்அடைந்த தெவ்வர்
உயிர்அடைந்த ஒள்வேலாய்!'

238. 'துறத்தலும், நல்அறத் துறையும் அல்லது
புறத்தொரு துணையிலை பொருந்தும் மன்உயிர்க்கு,
இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்ட நீ!'

239. 'தொகையில் அன்பினுல் இறைவன துஞ்சநீ
புகையும் வெம்சுரம் புகுதப், புந்தியால்
வகையில் வஞ்சனுய் அரசுவவ்வ, யான்
பகைவ னேகொலாம்? இறவு பார்க்கின்றேன்?

240. 'தாய்வ ரம்கொளத் தந்தை ஏவலால்
மேய நம்குலத் தருமம் மேவினேன்;
நீவ ரம்கொளத் தவிர்தல் நேர்மையோ?
ஆய்(வு)அ ரும்புலத்(து) அறிவு மேவினுய்!'

241. அதற்குப் பரதன் பதில்.

(க - ரை): "அண்ணா! 'உன் வார்த்தைப்படி பூமியானது எனக்கு உரியது ஆனால், அந்த உரிமையினால் அதை உனக்கு நான் தர விரும்புகிறேன்; எனக்கு முன் பிறந்ததனாலேயும், மூன்று உலகத்திலும் நிகரற்றவனாக இருப்பதனாலேயும், அரசாட்சி செய்யத் தகுதியுடைய நீ வந்து முடி தரிப்பாயாக" என்று கூறினான்.

(அ—ரை): பார் . பூமி, மகுடம் : முடி.

242. இராமன் பரதனுக்குக் கூறுதல்.

(க - ரை): "தந்தை சொற்படி நான் பதினான்கு ஆண்டு வனத்தில் தங்கிப் பின் வருவேன். அதுவரையும் தந்தை ஆண்ட இப்பூவுலகை நீ ஆண்டு வருவாயாக; நான் என் ஆணையால் தந்தேன்" என்று இராமன் கூறினான்.

(அ—ரை): எந்தை : என் தந்தை. ஏழொடுஏழ் · பதினான்கு; பாரகம் : பூமி; மெய்ம்மையால்: உண்மையால்.

243. பரதன், இராமனது கட்டளையை ஏற்றுக் கூறல்.

(க - ரை): "உமது கட்டளைப்படிப் பதினான்கு ஆண்டு கழிந்ததும், நீர் அயோத்தி வந்து அரசினை ஏற்று ஆளவேண்டும். அவ்வாறு வந்து ஆளாவிட்டால், நான் அக்கினியில் விழுந்து விடுவேன்; இது சத்தியம்; உமது ஆணை" என்று பரதன் கூறினான்.

(அ—ரை): நாமநீர . பயம்தரும அகழி சூழ்ந்த; கோமுறை : அரசாட்சி முறை; கூர் எரி சாம : என் உடம்பு மிக்க நெருப்பில் விழுந்து இறக்கும். உடல் என எழுவாய் வருவிககப்பட்டது. சாம சாகும; சாகும் என்னும செய்யுமென் முற்று ஈற்றயல் கெட்டுச் சாம என நின்றது; சரதம சத்தியம், உண்மை.

244. திருவடியைத் தன் முடியில் சூடி, பரதன் மீளுதல்.

(க - ரை): இராமனுடைய பாதுகை இரண்டையும் அழுத கண்ணோடு கிரீடமாகக் கொண்டு தலையில் சூட்டிக் கொண்ட பரதன், இராமனுடைய இரண்டு கால்களையும் வணங்கித் திரும்பிப் போயினான்.

(அ—ரை): அடித்தலம் : பாதுகை; முடித்தலம் : மகுடம்; படித்தலம் : பூமி, பொடித்தலம : பூமியிலுள்ள புழுதி; இலங்குறு : விளங்குகின்ற; பொலம பொன்.

245. நந்தியம்பதியில் பாதுகைக்கு முடிசூட்டி, பரதன் செங்கோல் செலுத்துதல்.

(க - ரை): அங்ஙனம் திரும்பிச் சென்ற பரதன், அயோத்தி போகாமல் நந்திக் கிராமம் என்ற ஊரில் போய், இராமனது பாதுகை அரசாட்சி செய்ய, தான் இராப்பகலும் அழுத கண்ணீரையுடையவனாய் மனவலியினால் ஐம்பொறிகளையும் அடக்கி இருந்தான்.

(அ—ரை): செந்தனிக்கோல் : தனிச்செங்கோல் என மாற்றுக; சிந்தை மனவலி; இந்தியங்கள் : ஐம்பொறிகள்; அவித்து : அடக்கி; சிந்தையான் இந்தியங்களை அவித்து என்பதை, 'உரன் என்னுந் தோட்டியான் ஓர்ஐந்தும் காப்பான்' (குறள்) என்பதால் உணர்க. அந்தி : இரவு.

241. 'முன்னர் வந்துதித்(து), உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பிலா நீபி றந்தபார்
என்ன தாகில், நான் இன்று தந்தனென்;
மன்ன போந்துநீ மகுடம் சூ(டு)' என.

242. 'எந்தை ஏவ ஆண்(டு) ஏழொடு ஏழ்என
வந்த காலம்நான் வனத்துள் வைக; நீ
தந்தை பாரகம் தன்னை மெய்ம்மையால்
அந்த நாள்எலாம் ஆள்என் ஆணையால்.'

243. ஆம் எனில் ஏழிரண்(டு) ஆண்டினில் ஐய நீ
நாமநீர் நெடுநகர் நண்ணி, நானிலம்
கோமுறை புரிகிலை என்னில் கூர்எரி
சாம் இது சரதம்! நின் ஆணை சாற்றினேன்.'

244 அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினன்,
முடித்தலம் இவையென முறையின் சூடினான்,
படித்தலத்(து) இறைஞ்சினன், பரதன் போயினான்,
பொடித்தலம் இலங்குறு பொலம்கொள் மேனியான்.

245. நந்தியம் பதியிடை, நாதன் பாதுகம்
செந்தனிக் கோல்முறை செலுத்தச், சிந்தையான்
இந்தியங் களைஅவித்(து) இருத்தல் மேயினான்
அந்தியும் பகலும்நீர் அருத கண்ணினான்.

246. கடவுள் வாழ்த்து.

(க - ரை): வேறுபாடுள்ள உலகத்தில் வேறுபாடின்றிக் காணப்படுபவர்; வேதம், அதை உணர்ந்தவர், அதைத் தந்த பிரமன் முதலியோரால் அறியப் படாதவர்; முதன்மையான தேவர் எவரோ அவரே எங்கள் அறிவுக்கு அறிவாய் நின்று விளங்குபவர்.

(அ—ரை): பேதியாது : வேறுபடாமல்; நிமிர் : பரந்த; பிறழ்கிலா : தவறில்லாமல்; விரிஞ்சன : பிரமன்; அரோ : அசை; ஓதிஓதி உணரும் தொறும் உணர்ச்சி உதவும வேதம : படிககுந்தோறும படிககுந்தோறும புதுப் புது அறிவு தோற்றுகினற வேதம. வேதத்தில இவை இருபபதை நாம் அறியோம். ஆனல் கமபன் கவிகளில் இருப்பதை அறிகிறோம.

247. விராதன் வலிமை.

(க - ரை): விராதன் என்னும் அரக்கன், பஞ்ச பூதங்களெல்லாம் திரண்டு ஒரு புதிய வடிவம் எடுத்ததென்று சொல்லத் தக்க வடிவத்தையுடையவன்; இடி போன்ற குரலையுடையவன்; பிரமன் வரத்தால் இலட்சத்து இருபத்தையாயிரம் யானை பலமுடையவன்.

(அ-ரை). ஓத ஒத்த : சொல்ல தககுந்த; உரும : இடி; மதவெற்பு : மதத்தையுடைய மலை, யானை. இவ்வாறு கூறுவதை வெளிப்படையென்பர் இலக்கண நூலார் கடையிட்ட : கடைசியில் சேர்தத. பாதம் : கால்; லக்கம் : நூறுயிரம்.

248. இராமனுல் கொல்லப்பட்டுத் தன் கந்தருவ வடிவம் அமைந்த விராதன், இராமனை முழுமுதற் கடவுளென்றுணர்ந்து துதித்தல்.

(க - ரை): துன்பமயமான பிறவிக்கடல் கடப்பதற்கு வகுத்த சமயங்கள் எத்தனை உளவோ, அத்தனைக்கும் தலைவனுகி நிற்கும் ஒப்பற்ற கடவுளே! எல்லாம் உன் செயலாலே ஆவதென்றால் இனி, மற்றத் தேவர்கள் எதைக்கொண்டு என்ன செய்ய இருக்கிறார்கள்?

(அ ரை): பனி : துன்பம், நடுக்கம்; நனி : மிகுதி, உரிச்சொல்; தகை : தன்மை.

249. இதுவும் அது.

(க - ரை): "இறைவனே! உலகத்தில் தாய்ப் பசுவை அறியாத கன்றில்லை. கன்றை அறியாத தாய்ப் பசுவும் இல்லை. அதைப் போல உலக உயிர்களுக் கெல்லாம் தாயாக இருக்கின்ற நீ, அவைகளை அறிவாய். ஆனல் அவைகள் ஒன்றும் உன்னை அறிந்ததில்லை; இது என்ன மாயம்!"

(அ—ரை): ஆய் : தாய; 'வாராதே வர வல்லாய்' என்பது 'வந்தாய் போல வாராதாய், வாராதாய் போல வருவானே' எனனும் திருவாய்மொழியின் கருத்து. இந்த விராதன் துதியைப் படித்த ஒரு வைணவர் திருவாய்மொழி கூட இதற்கு இணையாகாது என்று கூறினமை கருதத்தக்கது.

# ஆரணிய காண்டம்

## விராதன் வதைப் படலம்

246. பேதி யாது,நிமிர் போத உருவம் பிறழ்கிலா,
ஓதி ஓதிஉண ரும்தொறும் உணர்ச்சி உதவும்
வேதம்,வேதியர், விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதிதேவர் அவர், எம்அறிவி னுக்(கு)அறி(வு); அரோ.

247. பூதம் அத்தனையும் ஓர்வடிவு கொண்(டு),புதி(து),என்று
ஓத ஒத்த உரு வத்தன்; உரும் ஒத்த குரலன்;
காத லித்(து)அயன் அளித்த கடை யிட்ட கணிதப்
பாத லக்கமத வெற்(பு)அவை படைத்த வலியான்.

248. 'பனிநின்ற பெரும்பிறவிக் கடல்கடக்கும் புணைபற்றி,
நனிநின்ற சமயத்தோர் எல்லாரும், நன்றென்னத்
தனிநின்ற தத்துவத்தின் தகைமூர்த்தி, நீயாகில்
இனிநின்ற முதல்தேவர் என்கொண்டென் செய்வாரே?'

249. 'தாய்தன்னை அறியாத கன்றில்லை; தன்கன்றை
ஆயும் அறியும்; உலகின்தாய் ஆகின்;ஐய
நீஅறிதி எப்பொருளும்; அவைஉன்னை நிலைஅறியா;
மாயை இது என்கொலோ? வாராதே வரவல்லாய்!'

250. சரபங்கர் துதித்தல்.

(க - ரை): "உலகில் காணப்படும் பொருள்தோறும் தோய்ந்தும் தோயாது நின்ற ஒளியே! உலகப் பற்றை அறுத்தவர்களுக்கு உறவே! கருணைக்கு ஓர் நிலைக்களமே! வேதங்களால் அறியப்படும் அறிவுமயமானவனே! அரக்கர் எமக்குச் செய்யும் துயரங்களைச் சொல்லி முறையிட்ட அன்று வரங்கொடுத்தபடி, அவதாரம் எடுத்து வந்தனையே! உமது பாதங்கள் இந்தப் பூமியின் அளவுதானோ?"

(அ-ரை): தொடக்கு : பற்று. ஆசை; நேடி : தேடி, அலைப்புண்டு : துன்பப்பட்டு; இணையடி : இரண்டாகிய கால்.

251. இதுவும் அது.

(க - ரை): "கருங்கடலில் பள்ளி கொண்ட இறைவனே! உனக்குப் பகைவரும் நட்பினரும் இல்லை; ஒளியும் இருட்டும் இல்லை; மேலும் கீழும் இல்லை; உனக்கு மூத்தவரும் இளையவரும் இல்லை; முதல் இடை கடை இல்லை; முன்னும் பின்னும் இல்லை. இது உன்னுடைய பழமையான நிலைமையென்றால், வில்லை யேந்திக் கால் நோகும்படியாக வனம்வந்து என்னைக் காக்க வந்தீர்; காவாது ஒழிந்தால் உனக்குப் பழியும் உண்டாகுமா? உனக்கு நான் செய்யும் கைம்மாறும் உண்டோ?"

(அ—ரை). மேவாதார் : பகைவர்; மேவினர் உறவினர், தொன்று பழமை; சேவடி : சிவந்த பாதம்.

252. இதுவும் அது.

(க - ரை): "தலைவனே! ஆதியில் ஒரே பொருளாக இருந்து, அதிலிருந்து பல வடிவமாகத் தோன்றி, ஊழிக்காலமும் ஆகி, உலகைப் படைத்துச் செவ்வையாக நின்ற ஞானக் கொழுந்தே! எங்கள் குற்றத்தைத் தீர்க்கும் தலைவனே! உலகில் அறம் செய்பவர்களைக் காத்தும், பாவிகளைக் கடிந்தும் நிற்கின்றாய்! அவர்கள் செய்த பாவமும் நீ படைத்த பொருள்தானே; ஆகையால் பாவிகளைக் கடிதலும் தகுமா?"

(அ-ரை) மூலம் : அடிப்படை; ஆசு . பற்றுக்கோடு; செஞ்சவே : செவ்வையாக; நவை : குற்றம்; காய்தல் : கடிதல்

253. இராம இலக்குவர் வழிச் செல்லுதல்.

(க-ரை): மலைகள், மரங்கள், பாறைகள், ஆறுகள், மலைச் சாரல்கள், சோலைகள் சுற்றிய இடங்கள், குளங்கள் ஆகியவற்றைக் கடந்து இராம இலக்குவர் சென்றனர்.

(அ-ரை): மணிக்கல் : இரத்தினக் கல்; பழுவம் : சோலை; சூழல் : சுற்றிய இடம்; தடம் : குளம்.

## சரபங்கன் பிறப்பு நீங்கு படலம்

250. 'தோய்ந்தும் பொருள்அனைத்தும், தோயாது நின்ற
சுடரே! தொடக்கறுத்தோர் சுற்றமே!பற்றி
நீந்த அரிய நெடும்கருணைக் கெல்லாம்
நிலயமே! வேத நெறிமுறையின் நேடி
ஆய்ந்த உணர்வின் உணர்வே! பகையால்
அலைப்புண்(டு) அடியேம் அடிபோற்ற, அந்நாள்
ஈந்த வரம்உதவ எய்தினையே! எந்தாய்!
இருநிலத்த வோநின் இணையடித்தா மரைதாம்.'

251. 'மேவாதார் இல்லை; மேவினரும் இல்லை;
வெளியோ(டு) இருள்இல்லை; மேல்கீழும் இல்லை;
மூவாதமை இல்லை; மூத்தமையும் இல்லை;
முதல்,இடையோ(டு), ஈறில்லை, முன்னொடுபின் இல்லை;
தேவா!இங்(கு) இவ்வோநின் தொன்றுநிலை என்றால்,
சிலையேந்தி வந்தெம்மைச் சேவடிகள் நோவக்
காவா(து) ஒழியின் பழிபெரிதோ, அன்றே;
கருங்கடலில் கணவளர்ந்தோய! கைமமாறும் உண்டோ?'

252. 'ஒன்றாகி, மூலத்(து) உருவம் பலவாகி,
உணர்வும் உயிரும் பிறிதாகி, ஊழி
சென்(று)ஆ சறும்காலத்(து), அந்நிலைய(து) ஆகித்,
திறத்(து) உலகம் தானாகிச், செஞ்சவே நின்ற
நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே! நங்கள்
நவைதீர்க்கும் நாயகமே! நலவினையே நோக்கி
நின்றாரைக் காத்தி! அயலோரைக் காய்தி!
நிலையில்லாத் தீவினையும் நீதந்த(து) அன்றே!'

## அகத்தியப் படலம்

253. மலைகளும், மரங்களும், மணிக்கல் பாறையும்,
அலைபுனல் நதிகளும், அருவிச் சாரலும்,
இலைசெறி பழுவமும், இனிய சூழலும்,
நிலைமிகு தடங்களும் இனிது நீங்கினர்.

254. அவ்வனத்து முனிவரின் நிலை.

(க-ரை): அங்குள்ள முனிவர்கள் பிறர் வேண்டியவற்றைத் தரவல்ல தவ வலிமை உடையவர்கள்; என்ற போதிலும் அரக்கர் தங்களைத் துன்புறுத்தும் போது, தங்கள் பொறுமையினால் அவர்களைக் கோபிக்காமல் விட்டவர்கள். அதனால் அங்கே யுள்ள அரக்கர்களால் துன்புறுத்தப்பட்டார்கள்.

(அ-ரை) பொறை பொறுமை; ஆற்றல் வலிமை, வெகுளி கோபம்; அரோ: அசை, 'வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம் ஈண்டு முயலப் படும்' என்னும் குறட்கருத்து இப்பாடலின் முதலடியில் அமைந்துள்ளது.

255. முனிவர் இராமனிடம் முறையிடல்.

(க-ரை): "ஐயனே! இப்பக்கங்களில் அறத்தின் நீங்கிய அரக்கர் என்று சிலர் இருக்கின்றனர்; அவர்கள் இரக்கமற்ற நெஞ்சினர்; அவர்கள் துன்புறுத்தலினால் நாங்கள் ஒழுகும் ஒழுக்க நெறி தவிர்ந்து, தவம் செய்தலாகிய கடமையிலிருந்து நீங்கியுள்ளோம்."

(அ-ரை) படர் நெறி ஒழுகும் வழி; துரக்க : செலுத்த, துறை வழி.

256. முனிவர்கள் 'அபயம்' என்றல்.

(க-ரை): "அரச ஆணைச் சக்கரத்தினால் உலகைக் காத்த தசரதன் புதல்வனே! நீங்காத இருட்டில் கிடந்த எங்களுக்கு நீ ஒரு சூரியனாகத் தோன்றினாய்; நாங்கள் உன் அபயம்" என்றனர்.

(அ-ரை) நேமி : சக்கரம்; ஓம்பிய . பாதுகாத்த; பொருள் : புகழ்; வைகல் . நாள்; இரவி சூரியன், அபயம் அடைக்கலம்.

257. முனிவர் துயர்கேட்ட இராமன் கூறுதல்.

(க-ரை): "அரசன் இறந்தான்; தாய் துன்புறுகிறாள்; என் தம்பி வருந்துகிறான்; என் நகர மாந்தர் கொடிய துன்பத்தில் ஆழ்கின்றனர்; இவ்வாறு நிகழவும் நான் காட்டிற்கு வந்தேன்; அப்படி வந்தது உங்களைக் காத்தற்கு உதவிற்று என்றால் அது நான் செய்த புண்ணியம்" என்று இராமன் கூறினான்.

(அ-ரை): வீய : இறக்க; யாய் : தாய்; ஏந்தல் : தலைவன்; எம்பி : என் தம்பி.

254. வேண்டின வேண்டினர்க்(கு) அளிக்கும் மெய்தவம்
பூண்டுளர் ஆயினும், பொறையின் ஆற்றலால்,
மூண்டெழு வெகுளியை முறையின் நீக்கினர்;
ஆண்டுறை அரக்கரால் அலைப்புண் டார்;அரோ.

255. 'இரக்கம்என்(று) ஒருபொருள் இலாத நெஞ்சினர்,
அரக்கர்என்(று) உளர்சிலர்; அறத்தின் நீங்கினர்;
நெருக்கவும், யாம்படர் நெறிஅ லாநெறி
துரக்கவும், அருந்தவத் துறையும் நீங்கினேம்.

256. 'உருள் உடை நேமியால் உலகை ஓம்பிய,
பொருள் உடை மன்னவன் புதல்வ! போக்கிலா
இருள் உடை வைகலெம்; இரவி தோன்றினை!
அருள் உடை வீர!நின் அபயம் யாம்'என்றார்.

257. 'வேந்தன் வீயவும். யாய்துயர் மேவவும்,
ஏந்தல் எம்பி வருந்தவும், என்நகர்
மாந்தர் வன்துயர் கூரவும், யான்வனம்
போந்த(து) என்னுடைப் புண்ணியத் தால்' என்றான்.

258. இராமன் கூறுதல்.

(க - ரை): தன்னுயிர் கொடுத்தாயினும் பசு, அந்தணர், பிறர், எளியவர் என்பவரைக் காத்தல் வேண்டும்; அவ்வாறு இறந்தவர் தேவர்களும் வணங்கத்தக்க மேலான தேவர்கள் ஆவார்கள்.

(அ-ரை): ஆ : பசு; தகை : அழகு; வான் : சுவர்க்கம்.

259. இராமனுக்கு எதிரில் அகத்தியர் வருதல்.

(க - ரை): அகத்தியர் பெருமகிழ்ச்சி யுடையவராகி, தன்னை இராமன் வணங்கச் சென்றார்.

(அ-ரை). ஆண்தகையர் . ஆண்மைககுணம் உடையவர், இராம இலக்குவர்; ஈண்டு : மிககு எழுகின்ற; அவ்வயின் : அவ்விடத்து; சரண : பாதம், கால்; நேமி : திருமால், நீணட தமிழால் உலகை நேமியின் அளந்தான் : திருமால் உலகை அளந்ததைப போல, உலகம முழுதிலும் தமிழ் பரவும்படி செய்தவன் (அகத்தியர்).

260. அகத்திய முனிவரின் பெருமை.

(க - ரை): சிவபெருமான், தமக்கு உபதேசித்த நான்கு வேதங்களிலும் சிறந்த தமிழ் மொழியை, உலக வழக்கையும் செய்யுள் வழக்கையும் நோக்கி ஆராய்ந்து அகத்தியம் என்னும் நூலால் உலகத்திற்கு உதவியவன்.

(அ-ரை): உழக்கு மறை . வருந்திப் பயிலும் வேதம்; வழக்கு : உலக வழக்கு; மதிக்கவி : செய்யுள் வழக்கு; மரபின : முறைமைப்படி; நிழல் : ஒளி. பொலிவு . விளங்குகின்ற; நாடி : ஆராய்ந்த; தழல் : நெருப்பு; புரை : மேன்மை.
குறிப்பு: கம்பன், தமிழைபபற்றிக் கூறும் இடங்களில் இதுவும் ஒன்று.

261. இராமனைக் கண்ட அகத்தியர் மகிழ்ச்சி.

(க - ரை): காவிரி நீரைக் கொணர்ந்தவராகிய அகத்திய முனிவர், இராமனைக் கண்டதும் ஆனந்தக் கண்ணீர் வழியும்படியாக மகிழ்ச்சி யடைந்தார்.

(அ-ரை): புண்டரிகம் : தாமரை; வாள் : ஒளி; நயனம் : கண்; குண்டிகை : கமண்டலம்.

258. 'ஆவுக் காயினும், அந்தணர்க் காயினும்,
யாவர்க் காயினும், எளியவர்க் காயினும்,
சாவப்பெற்றவ ரேதகை வான்உறை
தேவர்க் கும்தொழும் தேவர்கள் ஆகுவார்.'

259. ஆண்தகையர் அவ்வயின் அடைந்தமை அறிந்தான்,
ஈண்டுவகை வேலை,துணை ஏழ்உலகம் எய்த,
மாண்டவர தன்சரண் வணங்கஎதிர் வந்தான்;
நீண்டதமி ழால்உலகை, நேமியின் அளந்தான்.

260. உழக்குமறை நாலினும் உயர்ந்(து) உலகம்ஓதும்
வழக்கினும், மதிக்கவி யினும்மர பின்நாடி,
நிழற்பொலி கணிச்சிமணி நெற்றிஉமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்.

261. கண்டனன் இராமனை வரக்கருணை கூரப்,
புண்டரிக வாள்நயனம் நீர்பொழிய நின்றான்;
எண்திசையும், ஏழ்உலகும், எவ்வுயிரும் உய்யக்,
குண்டிகையி னில்,பொருவில் காவிரி கொணர்ந்தான்.

262. இராமனை அகத்தியர் பாராட்டுதல்.

(க - ரை): "சக்கரவர்த்தித் திருமகனே! நீ இங்கு வந்ததனால் வேதங்கள், மனுநீதி, அறம், வருந்திக்கொண்டிருக்கும் தேவர்கள், ஏழுலகம் ஆகியவைகள் வாழ்வடையும்; அசுரர்கள் தாழ்வடைவர்; இனி இந்த இடத்தில் தங்குவாயாக" என்று அகத்தியர் பாராட்டிச் சொன்னார்.

(அ—ரை): தாழும : தாழவடைந்திருக்கிற; தானவர் . அசுரர், ஆழி; சக்கரம்; உறைதி : தங்குவாயாக.

263. அகத்தியர் பஞ்சவடி என்னும் இடத்தைக் கூறுதல்.

(க - ரை): உயர்ந்த மரங்கள் அடர்ந்து, மலைகள் உயர்ந்து, மணற் குன்றுகளோடு சுற்றிலும் சோலை சூழ்ந்ததாக ஆறுகள் பக்கத்தில் ஓடிக்கொண்டிருக்கும்படியான பஞ்சவடி என்னும் வசித்தற்குரிய இடம், ஓர் குன்றின் பக்கத்தில் உள்ளது.

(அ—ரை). குலாவு . செழித்து; புடைவிமமி : சுற்றிலும மிகுந்து, தூங்கு : அசைகின்ற; திரை : அலை, சூழல் : இடம், பாஙகர் . பககததில, உள தால் : ஆல் : அசை, உறையுள :தஙகும இடம; மஞ்ச வைந்த எனபதன் போலி.'

264. பஞ்சவடியின் வளங் கூறுதல்.

(க - ரை): "இங்கே பழம் கொடுக்கக் கூடிய வாழைகள் இருக்கின்றன; நெற்பயிர்கள் உள்ளன; தேன் வழியும்படியான மலர்களும் இருக்கின்றன; தெய்வத்தன்மை பொருந்திய காவிரி போன்ற ஆறுகளும் உள்ளன: சீதையுடன் விளையாடுவதற்கு நாரைகளும் அன்னங்களும் உள்ளன.

(அ—ரை). கன்னிஇள . ஒரு பொருட் பன்மொழி, கன்னி இள வாழை : இளமையான வாழை; போது · மலா; போதா : நாரை.

இராம இலக்குவர் சடாயுவைக் கண்டமை கூறுதல்.

265. சடாயுவின் தோற்றம்.

(க - ரை): நிலம் தாங்க வலியிலது என்னும்படி வலியமலை போல் அங்கிருந்த சடாயுவை, இராம இலக்குவர் கண்டனர்.

(அ-ரை): ஓங்குயர் : மிகவுயர்ந்த—ஒருபொருட் பன்மொழி, வரை : மலை; வீங்கிய வலி : மிக்க வலிமை; அயிர்க்கும் : ஐயமுறுகின்ற.

262. 'வாழும் மறை; வாழும்மனு நீதி;அறம் வாழும்;
தாழும்இமை யோர்உயர்வர்; தானவர்கள் தாழ்வார்;
ஆழிஉழ வன்புதல்வ! ஐயம்இலை மெய்யே;
ஏழுலகும் வாழும்இனி இங்குறைதி!' என்றான்.

263. 'ஓங்குமரன் ஓங்கி,மலை யோங்கி,மணல் ஓங்கிப்
பூங்குலை குலாவுகுளிர் சோலைபுடை விம்மித்,
தூங்குதிரை ஆறுதவழ் சூழல(து),ஓர் குன்றின்
பாங்கர்உள தாலஉறையுள் பஞ்சவடி; மஞ்ச!'

264. 'கன்னிஇள வாழைகனி ஈவ;கதிர் வாலின்
செந்நெல் உள; தேன்ஒழுகு போதும்உள; தெய்வப்
பொன்னிஎனல் ஆயபுனல் ஆறும்உள; போதா,
அன்னம்உள, பொன்இவளொ(டு) அன்பின்விளையாட.'

## சடாயுகாண் படலம்

265. ஓங்குயர் நெடுவரை ஒன்றில் நின்(று)அது,
தாங்கல(து), இருநிலம் தாழ்ந்து தாழ்வுற,
வீங்கிய வலியினில் இருந்த வீரனை
ஆங்கவர் அணுகினர், அயிர்க்கும் சிந்தையார்.

266. சடாயு இராம இலக்குவரைப் பார்த்தல்.

(க - ரை): இராம இலக்குவரைப் பார்த்துச் சடாயு வானவன், "கருமலை செம்மலை போல இருவர் வருகின்றனர். வருகின்ற இவர்கள் என் தோழன் தசரதனை ஒத்திருக்கின்றனர்."

(அ-ரை): கருமலை இராமனுக்கும செம்மலை இலக்குவனுக்கும் உவமையாகக் கூறப்பட்டன. காட்சி : தோற்றம்; திரு : இலக்குமி; துணைவன : நண பன்; ஆழியான் : சக்கரவர்த்தி; அரோ : அசை.

267. தசரதன் இறந்தமை கேட்டுச் சடாயு புலம்பல்.

(க - ரை): "உலகிற்கு மகிழ்ச்சியை விளைவிக்கும் கொற்றக் குடையையுடையவனே! நீயாளும் பூமி ஆள்வாரற்றுக் கிடக்கவும், நான் வருந்தவும் விட்டுப் பிரிந்தனையோ! என்னைவிட்டுப் பிரிந்தது, என்னுடைய நட்பின் திறத்தை அறிவதற்கோ! நீவிர் இறந்தமையைக் கேட்ட பாவி இன்னும் உயிர் துறக்கவில்லை; நான் ஒரு விலங்கு; ஆதலினால் நான் விலகி நிற்கிறேன்."

(அ-ரை). அலங்காரம : அழகு; அமுதளிக்கும . மகிழ்ச்சியை விளை விக்கும என்ற பொருளில் வந்தது. குடை என்பது அரசாட்சியைக் குறிக்கும. நேயம : நட்பு, ஆல் · அசை, விலஙகினென : விலகினேன்; 'விலங் கானேன் ஆதலினால் விலங்கினேன்'—ஒரு சொல் நயம.

268. இதுவும் அது.

(க - ரை): "தோழனே! சம்பராசுரனை வதைத்த அந்நாளில் என்னைப் பார்த்து, "நீ உயிர், நான் உடல்" என்று சொன்னீரே; உயிர் இங்கே கிடக்கிறது; உடல் போயிற்று; அந்தப் புத்தி கெட்ட எமன் உயிரைப்போட்டுவிட்டு உடலைத் தூக்கிச் சென்றானே" என்று புலம்பினான்.

(அ—ரை) அயிர் : நுணமணல்; கடல் வலயம் · கடல் சூழ்ந்த பூமண்டலம்; அயல் அறிய : அயலார் அறியுமபடி, செயிர : கோபம; விசும்பு : வானுலகம்; உணர்வு இறந்த : அறிவுகெட்ட; கூற்றினர் : எமன். இகழ்ச்சிக் குறிபபு. இப்பாடல் அவலச்சுவை நிரம்பியது.

269. சடாயுவின் செய்கை.

(க - ரை): சடாயு, இராம இலக்குவர்களைத் தனது இரண்டு சிறகுகளாலும் தழுவிக்கொண்டு "என் மக்களே! நீங்கள் உங்கள் தந்தைக்குச் செய்ததைப் போல இறந்தபின் எனக்கும் நீர்க்கடன் முதலியவற்றைச் செய்வீர்களாக; என் நண்பன் பிரியவும் தாங்கியிருக்கும் இந்த உடற் சுமையை நெருப்பில் புகுந்து ஒழிக்காவிடின், இந்தத் துயரத்தை மறக்க முடியாது" என்று கூறினான். இப்பாடல் அவலச்சுவை நிரம்பியது.

(அ—ரை): மருவு இனிய : பழகுவதற்கு இனிய; உடற்பொறை : உடற் சுமை.

266. 'கருமலை செம்மலை அனைய காட்சியர்;
திருமகிழ் மார்பினர்; செங்கண் வீரர்தாம்,
அருமைசெய் குணத்தின்என் துணைவன், ஆழியான்
ஒருவனை இருவரும் ஒத்துளார்; அரோ!'

267. 'அலங்காரம் எனஉலகுக்(கு) அமுதளிக்கும்
தனிக்குடையாய்! ஆழிசூழ்ந்த
நிலம்காவல் அதுகிடக்க, நிலையாத
நிலைஉடையேன் நேயநெஞ்சின்
நலம்காண நடந்தனையோ! நாயகனே!
தீவினையென் நண்பின் நின்றும்
விலங்கா னேன்! ஆதலினால் விலங்கினேன்;
இன்னும்உயிர் விட்டிலேனால்.'

268. 'தயிர்உடைக்கும் மத்தென்ன, உலகைநலி
சம்பரனைத் தடிந்த அந்நாள்
அயிர்கிடக்கும் கடல்வலயத்(து) அயல்அறிய,
'நீஉடல்,நான் ஆவி' என்று
செயிர் கிடத்தல் செய்யாத திருமனத்தாய்!
செப்பினாய் திறம்பா நின்சொல்;
உயிர்கிடக்க, உடலை, விசும்(பு) ஏற்றினார்
உணர்விறந்த கூற்றினாரே.'

269. மருவினிய குணத்தவரை இருசிறகால்
உறத்தழுவி 'மக்காள்! நீரே
உரியகடன் வினையேற்கும் உதவுவீர்;
உடல் இரண்டுக்(கு) உயிர்ஒன் றானான்
பிரியவுந்தான் பிரியாதே இனிதிருக்கும்
உடற்பொறையாம் பிழை பாரா(து)
எரிஅதனின் இன்றேபுக்(கு) இறவேனேல்
இத்துயரம் மறவேன்' என்றான்.

**270.** சடாயுவுக்கு இராம இலக்குவர் கூறுதல்.

**(க - ரை):** "நன்னெறியினின்றும் நீங்காதவனே! தாயும் தந்தையும் போன்ற உன்னைக் கண்டதும், நகரைப் பிரிந்துவந்த துன்பத்தையும், காடடைந்த துன்பத்தையும் நீங்கினோம். நீயும் எங்களைவிட்டு நீங்குவாயோ?" என்று வருந்திக் கூறினர்.

**(அ—ரை)** தாயின், தந்தையின்: தாயைப் போலவும், தந்தையைப் போலவும், நகர் வாயின்: நகரிடத்தினின்றும், நுன்னின்: உம்மால.

பஞ்சவடி என்னும் இடத்தை அடைந்தமையைக் கூறுவது; பஞ்சவடி: ஐந்து ஆலமரங்களைக் கொண்டது; வடம் - ஆலமரம்.

**271.** இராம இலக்குவர் கோதாவரியைக் கண்டனர்.

**(க - ரை):** பூமிக்கு அழகு தருவதாகச் சிறந்த பொருள்களைத் தந்து, வயல்களை இருமருங்கும் கொண்டதாய், ஐந்திணைகளிலும் பாய்ந்து, சான்றோர் கவியைப் போல தோன்றும் கோதாவரியை இராம இலக்குவர் கண்டனர்.

**(அ-ரை)** புவி: பூமி; ஆன்ற: சிறந்த; புலம்: அறிவு, விளைநிலம், அளாவி: கலந்து; சவி: ஒளி. கவிக்கும் ஆற்றுக்கும் சிலேடை. (1) சொற்சுவை பொருட்சுவை நிரம்பியதால், சிறந்த கருத்துக்களைக் கொண்டு, அறிவைத் தெரிவதாக, அகப்பொருள் துறைகளுடன், ஐந்திணை முறையைக் கலந்து, தெளிந்த கருத்துடன், இனிய ஓசையுடையதாகி உலகமக்களுக்கு நல்லொழுக்கங்களை எடுத்துக் கூறுவது கவி. (2) பூமியை அலங்கரித்து, முத்து முதலிய மணிகளுடன், விளைநிலங்களையுடையதாகி, யாவரும் செய்யும் துறைகளையுடையதாய், ஐந்திணை வழியாகத் தெளிந்த நீருடன் செல்வது ஆறு.

**272.** கோதாவரியின் கரையில் சீதையும், இராமனும்.

**(க - ரை):** அங்கே விளையாடும் அன்னங்களின் நடையையும் தன்னோடு வரும் சீதையின் நடையையும் ஒப்புமை நோக்கி இராமன் சிறிய முறுவல் செய்தான். சீதை, அங்கே நீருண்டு செல்லும் ஆண் யானைகளின் நடையையும் தன்னோடு உலாவும் இராமனின் நடையையும் ஒப்புமை நோக்கி இதுவரையும் சிரித்திராத சிரிப்பை உடையவளானாள்.

**(அ-ரை):** ஓதிமம்: அன்னம், உழையவள்: பக்கத்தில் இருப்பவள்; முறுவல்: சிரிப்பு, மாதவள்: மாது அவள்: அந்த மாது, போதகம்: யானை.

**273.** இதுவும் அது.

**(க - ரை):** இராமன் அங்கே சோலைகளில் பூங்கொடிகளைக் கண்டு, அவை சீதையின் இடையை ஒப்பதை அறிந்தான். சீதை அங்குள்ள நீர் நிலைகளில் நீலோற்பல மலர்களின் இடையிடையே மலர்ந்து நிற்கும் தாமரை மலர்களைக் கண்டு அவை இராமனின் வடிவத்தை ஒப்பதை அறிந்தாள்.

**(அ—ரை):** வீக்கு: மிகுந்து; பாங்கர்: பக்கம்; வல்லி: கொடி; நுடங்க: துவண்டசைய; மருங்குல்: இடை; அல்லி: அகவிதழ்.

270. 'தாயின், நீங்கரும் தந்தையின், தண்நகர்
வாயின் நீங்கி வனம்புகுந்(து) எய்திய
நோயின் நீங்கினம் நுன்னின்; எங்களை
நீயும் நீங்குதி யோநெறி நீங்கலாய்?'

## பஞ்சவடிப் படலம்

271. புவியினுக்(கு) அணியாய், ஆன்ற
பொருள்தந்து, புலத்திற்(று) ஆகி,
அவிஅகத் துறைகள் தாங்கி,
ஐந்திணை நெறிஅ ளாவிச்,
சவிஉறத் தெளிந்து, தண்ணென்
ஒழுக்கமும் தழுவிச், சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா
வரியினை வீரர் கண்டார்.

272. ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன், உழையள் ஆகும்
சீதைதன் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான்;
மாதவள் தானும், ஆண்டு
வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப்
புதியதோர் முறுவல் பூத்தாள்.

273. வில்இயல் தடக்கை வீரன்.
வீங்குநீர் ஆற்றின் பாங்கர்
வல்லிகள் நுடங்கக கண்டான்,
மங்கைதன் மருங்குல் கண்டான்;
எல்லிஅம் குவளைக் கானத்(து)
இடைஇடை மலர்ந்து நின்ற
அல்லிஅம் கமலம் கண்டாள்,
அண்ணல்தன் வடிவு கண்டாள்.

சூர்ப்பணகையின் மானபங்கத்தைப் பற்றிக் கூறுவது; சூர்ப்பம் : முறம்; நகை : நகத்தையுடையவள்; முறம் போன்ற நகத்தையுடையவள் என்பது பொருள்.

274. சூர்ப்பணகையின் தன்மை.

(க - ரை): இராவணன் அடியோடு அழிவதற்குக் காரணமாக இருந்தவள்; பிறக்கும்போதே உடலோடு தோன்றி, பின்பு தான் வெளிப்பட்டுத் துன்பம் செய்யும்வரை உடம்போடு கலந்து மறைந்திருக்கும் கொடிய நோயைப் போன்றவள்.

(அ—ரை) நிருதர் : அரக்கர்; வேந்தன் : இங்கு இராவணன்; மூலம் : வேர்; முடிக்கும் : அழிக்கும்; மெய்ம்பு . வலிமை, விளைகாலம : பயன் தரும் காலம், உறை : இருக்கின்ற, 'உடன்பிறந்தே கொல்லும் வியாதி' என்பது முதுரை.

275. சூர்ப்பணகை இராமன் அழகில் ஈடுபடல்.

(க - ரை) : 'சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணால் அழிந்த மன்மதன், அன்று முதல் தவம்பண்ணி இந்த நல்ல வடிவத்தோடு வந்திருக்கிறான்' என்று நினைத்தாள்.

(அ—ரை) கற்றை அம் சடையவன் : சடைக்கற்றையுடைய சிவபெருமான்; காய்தல் : சுட்டழித்தல்; இறறவன் : அழிந்துபோனவனாகிய மன்மதன்; அநங்கன் : உடம்பில்லாதவன், மன்மதன், பெயர்த்தும : மறுபடியும.

276. இராமன் முகத்தைச் சூர்ப்பணகை வர்ணித்தல்.

(க - ரை) : 'இவன் முகம் பகலில் விரிந்து இரவில் குவியும் தாமரையை ஒக்குமென்று சொல்ல முடியுமா? அல்லது சந்திரனென்றால் அது நாளொரு கலையாகத் தேய்ந்துகொண்டு செல்கிறது; என்றும் குறையாத முழுமதியென்றால் அதற்கும் களங்கம் உண்டே; ஆதலால் அதனையும் எப்படி உவமை கூறுவது' என்று எண்ணினாள்.

(அ—ரை) ஒளிரும் : பிரகாசிக்கின்ற; பொதி அவிழ் : கட்டு விரிந்த; கதிர் : ஒளி; அமமதி : முழுமதி; மறு : களங்கம.

277. இராமனது ஆடையைப் புகழ்தல்.

(க - ரை): "பொன்னாடை அணியத்தக்க இவனுடைய இடை மரவுரியை அணிந்திருக்கின்றதே; இந்த மரவுரி செய்த தவம் அந்தப் பொன்னாடை செய்திலது போலும்!"

(அ—ரை): நற்கலைமதிஉற:நல்ல ஒளியையுடைய சந்திரன்போல; வயங்கு: விளங்குகின்ற; நயமி : ஆடவரிற் சிறந்தவன், இராமன்; எற்கலை : எல்-கலை; எல் : ஒளி; கலை : கதிர்; திருஅரை : அழகிய இடுப்பு; ஏமுற : மகிழ்வடைய; வற்கலை : மரவுரி; நோற்றன : தவஞ்செய்தன; பொற்கலை : பொன்னாடை; மணி : அழகிய; நோற்றில : தவஞ்செய்யவில்லை.

## சூர்ப்பணகைப் படலம்

274. நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற, முடிக்கும் மொய்ம்பினள்,
மேலைநாள் உயிரொடும் பிறந்து, தான்விளை
காலம் ஓர்ந்(து) உடன்உறை கடிய நோயனாள்.

275. 'கற்றைஅம் சடையவன், கண்ணின் காய்தலால்,
இற்றவன், அன்றுதொட்(டு) இன்று காறும்,தான்
நற்றவம் இயற்றி, அவ் அநங்கன் நல்உருப்
பெற்றனன் ஆம்' எனப் பெயர்த்தும் எண்ணுவாள்.

276. 'அதிகம்நின்(று) ஒளிரும்இவ் அழகன் வாள்முகம்
பொதிஅவிழ் தாமரைப் பூவை ஒப்பதோ !
கதிர்மதி ஆம்எனின் கலைகள் தேயும்; அம்
மதிஎனின் அதற்கும்ஓர் மறுஉண்(டு) என்னும் ஆல்.

277. 'நற்கலை மதிஉற வயங்கு நம்பிதன்,
எற்கலை திருஅரை எய்தி ஏமுற
வற்கலை நோற்றன;மாசி லாமணிப்
பொற்கலை நோற்றில போலும் ஆல்' என்றாள்.

278. அவள் அழகிய உருவெடுத்து வருதல்.

(க - ரை): வஞ்சனையுடையவளாகிய அவள் ஒரு மின்னற் கொடியைப்போல் அழகிய வடிவம் எடுத்துக்கொண்டு மயில் போலும் தோற்றத்தோடு அன்னமென நடந்து வந்தாள்.

(அ-ரை). பஞ்சி ஒளிர : செம்பஞ்சுக் குழம்பு பூசி ஒளிர்கின்ற; விஞ்சு குளிர் : மிக்க குளிர்ச்சி; பல்லவம் . கொழுந்து; செஞ்செவிய : மிகவும் சிவந்த; கஞ்சம : தாமரை; அம சொல் இளமஞ்ஞை : அழகிய சொலலைப் பேசுகின்ற மயில்; இல்பொருள் உவமை. மினனும் வஞ்சி : மின் னற்கொடி; நஞ்சம . விடம; இங்கு அவள் நடையைபபோலச சந்தம அமைத் திருப்பது கருததத்தக்கது.

279. இதுவும் அது.

(க - ரை): தேவலோகத்திலுள்ள காமவல்லிக் கொடியா னது ஒரு நல்ல மேனியோடும், காமம் விளைகின்ற தேன்போன்ற சொல்லோடும், நல்ல மங்கைப் பருவம் அடைந்து, மானையொத்த கண்ணோடும், ஒரு மயிலின் சாயலோடும் வருவதுபோல வந்தாள்.

(அ—ரை) கான . கற்பகச் சோலை; உயிரதத : பெற்ற; கதிர் : ஒளி; வல்லி : கொடி, காமவல்லி; செவ்வி : பருவம.

280. இராமன் சூர்ப்பணகை வருவதைப் பார்த்தல்.

(க-ரை): நூபுரமும், மேகலாபரணமும், ஆடையும், கூந்தலில் பூவைமொய்க்கும் வண்டுகளும் ஒலிக்கும் ஓசை காரணமாக யாரோ ஒரு பெண் வருகிறாளென்று உணர்ந்த இராமன் அவள் வரும் திசையை நோக்கினான்.

(அ-ரை) நூபுரம் : காலில் அணியப படுவது; மேகலை : இடுப்பில் அணி யப் படுவது. நூல . இங்கு ஆடை, கருவியாகுபெயர். அறல ஓதி : கருமணல் போன்ற கூந்தல், பூ முரலும் : பூவில் ஒலிககும, பூசலிடுதல் : ஆரவாரிததல்.

281. சூர்ப்பணகை, தன்னை இன்னாளென்று அறிமுகப் படுத்தல்.

(க - ரை): "நான் பிரமனது புத்திரராகிய புலஸ்தியரது மகனான விச்சிரவசுவின் புதல்வி; சிவபெருமானது நண்பனாகிய குபேரனது தங்கை; அதோடு இராவணனுக்கும் தங்கை யாவேன்; என் பெயர் காமவல்லி என்பது; நான் திருமண மாகாத பெண்."

(அ-ரை). பூவிலோன் . தாமரை மலரை வீடாகவுடைய பிரமன்; இல் : வீடு; செற்ற : அழிதத, சேவலோன் : இடபவாகனததையுடையவன், சிவ பெருமான். செங்கையோன் : குபேரன்; மா : யானை; இராமனது பூணூலைக் கண்ட சூர்ப்பணகை தான் பிராமணப பெண்ணெனறும, சிவனால் அறிவும, குபேரனால் செல்வமும், இராவணனால் படைவலிமையும் கிடைக்குமென்றும் சொல்லி ஈர்க்க எண்ணியது கருதத்தக்கது.

278. பஞ்சிஒளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்,
செஞ்செவிய கஞ்சம்நிகர் சீறடிகள் ஆகி,
அம்சொல்இள மஞ்ஞைஎன, அன்னம்என, மின்னும்
வஞ்சிஎன, நஞ்சம்என, வஞ்சமகள் வந்தாள்.

279. கானில்உயர் கற்பகம் உயிர்த்தகதிர் வல்லி,
மேனிநனி பெற்று,விளை காமம்நிறை வாசத்
தேனின்மொழி உற்(று), இனிய செவ்விநனி பெற்(று)ஓர்
மானின்விழி பெற்று,மயில் வந்த(து)என வந்தாள்.

280. நூபுரமும், மேகலையும், நாலும், அறல்ஓதிப்
பூமுரலும் வண்டும், இவை பூசலிடும் ஓசை
தாம் உரைசெய் கின்ற(து)ஒரு தையல்வரும்; என்னக்,
கோமகனும் அத்திசை குறித்(து)எதிர் விழித்தான்.

281. பூவிலோன் புதல்வன் மைந்தன்
புதல்வி;முப் புரங்கள் செற்ற
சேவலோன் துணைவன் ஆன
செங்கையோன் தங்கை; திக்கின்
மாவெலாம் தொலைத்து வெள்ளி
மலைஎடுத்(து) உலகம் மூன்றும்
காவலோன் பின்னை; காம
வல்லியாம் கன்னி' என்றாள்.

**282.** சூர்ப்பணகை இராமனிடம் தன்னை மணக்க வேண்டுதல்.

**(க - ரை):** "குலமகளிர் தாம் கொண்ட காம விருப்பத்தை ஆண்களிடம் சொல்லுவதென்பது மரபல்ல; நான் என்ன செய்வேன்; அந்த இச்சையால் வருந்துகின்ற என் உயிரை நோக்கி வருந்துகின்றேன்; இதற்குத் துணைசெய்ய வேறு ஆடவர் ஒருவரும் இல்லாதவளாக இருக்கின்றேன். மன்மதன் என்கின்ற வலிய கொடுமையினின்றும் என்னைக் காப்பாயாக" என்று கூறினள்.

**(அ-ரை):** குலமகளிர் : நற்குடியிற் பிறந்த மகளிர்; வன்மை : வலிய துன்பம்; ஏமம் : இன்பம், வன்மையைக் காத்து : வன்மையினின்றும் காத்தியென வருதலால் வேற்றுமை மயக்கம். 'யாதன் உருபிற் கூறிற் றாயினும், பொருள்செல் மருங்கில் வேற்றுமை சாரும்' எனபது நன்னூல் சூத்திரம்.

**283.** அதற்கு இராமன் கூறுவது.

**(க - ரை):** பெண்களிற் சிறந்தவளே! உன்னுடன் பிறந்தவர்களில் ஒருவன் மூன்று லோகங்களுக்கும் அரசன்; மற்றவனோ பெருஞ்செல்வனாகிய குபேரன்; அவர்கள் இருவரும் சம்மதப்பட்டு உன்னைக் கொடுப்பார்களேயானால் ஏற்றுக்கொள்வேன்; நீ பெண்; தனியாக வந்திருக்கின்றாய்; அதைப்பற்றி நான் பயப்படுகின்றேன்; இவ்விடத்தைவிட்டு வேறு இடத்தைச் சார்வாயாக."

**(அ-ரை):** ஊங்கில் : இப்பக்கம் பார்த்தால்; வெருவுவென் : பயப்படுவேன்; நங்கை : பெண்களிற் சிறந்தவள்.

**284.** சூர்ப்பணகை தன்னை மணப்பது முறையென்றல்.

**(க - ரை):** "காதல்கொண்ட ஆடவரும் மகளிரும் கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றித் தாங்களே மணந்துகொள்ளலாம்; அது காந்தர்வ மணமென்று வேதங்களிலேயே சொல்லப்பட்டுள்ளது; அந்த முறைப்படி நாம் இருவரும் மணமக்களானால், பின்னர் அதை அறிந்த உடன்பிறந்தாரும் ஏற்றுக்கொள்வர்" என்று கூறினள்.

**(அ-ரை).** காந்தர்ப்பம் கந்தருவம்; ஏந்தல் : பெருமை. பொன் : அழகிய; விருப்பிற்று : விருப்பமுடையது.

**285.** இராமன் சூர்ப்பணகையோடு பரிகசித்துக் கூறுதல்.

**(க - ரை):** "நான் அரக்கருடைய அருளும் பெற்றேன்; உன்னுடைய இன்பத்தையும் அடைந்தேன்; உன்னோடு நீங்காமல் இருக்கும் செல்வத்தோடு எவ்விடத்தும் கூடியிருக்கும் தன்மையையும் பெற்றேன். நகரத்தைவிட்டு வந்த பிறகு செய்த தவம் பலித்து நான் அடைந்தவை இவை மட்டுமா? இன்னும் எத்தனையோ பல" என்று பரிகாசம் செய்து இராமன் சிரித்தான்.

**(அ-ரை):** நிருதர் : அரக்கர்; வரிசிலை : கட்டமைந்த வில்; வடித்த : தொங்கவிட்ட; வாள் எயிறு : ஒளி பொருந்திய பல்; இலங்க : விளங்க; நக்கான் : சிரித்தான்.

282. 'தாம்உறு காமத்தன்மை,
தாங்கள்நேர் உரைப்ப(து) என்ப(து)
ஆம்எனல் ஆவ(து) அன்றால்
அரும்குல மகளிர்க்(கு), அம்மா!
ஏமுறும் உயிர்க்கு நோவேன்!
என்செய்கேன்! யாரும் இல்லேன்;
காமன் என்(று) ஒருவன் செய்யும்
வன்மையைக் காத்தி!' என்றாள்.

283. 'ஒருவனே உலகம் மூன்றிற்(கு)
ஓங்கொரு தலைவன்; ஊங்கில்
ஒருவனே குபேரன், நின்னொ(டு)
உடன்பிறந் தவர்கள்; அன்னார்
தருவரேல் கொள்வென்; அன்றேல்
தமியை;வே றிடத்துச் சார;
வெருவுவென் நங்கை!' என்றான்.
மீட்(டு) அவள் இனைய சொன்னாள்.

284. 'காந்தருப்பம் என்ப(து) உண்டால்
காதலில் கலந்த சிந்தை
மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும்
மறைகளே வகுத்த கூட்டம்;
ஏந்தல்பொன் தோளி னாய்!ஈ(து)
இயைந்தபின், எனக்கு மூத்த
வேந்தர்க்கும் விருப்பிற்(று) ஆகும்;
வேறும் ஓர் உரைஉண்(டு)' என்றாள்.

285 'நிருதர்தம் அருளும் பெற்றேன்!
நின்னலம் பெற்றேன்! நின்னோ(டு)
ஒருவரும் செல்வத்து யாண்டும்
உறையவும் பெற்றேன்; ஒன்றோ!
திருநகர் தீர்ந்த பின்னர்ச்
செய்தவம் பயந்தது' என்னா,
வரிசிலை வடித்த தோளான்
வாள்எயி(று) இலங்க நக்கான்.

**286.** சூர்ப்பணகை சீதையை எடுத்துச் செல்ல முயலல்.

**(க - ரை):** 'இராமன் நியமம் முடிக்கப் போய்விட்டான்; இவள் தனியாய் இருக்கின்றாள்; இனித் தாமதிக்காமல் என் கருத்தை நிறைவேற்றுவதற்கு இதுவே சமயம்' என்று கருதிச் சீதையைத் தூக்கியெடுக்க முயன்றாள். அங்கே மறைவாகச் சீதையைக் காத்துக் கொண்டிருந்த இலக்குவன் அதைக் கண்டான்.

**(அ-ரை)** சமைந்தது : அமைந்தது. தாழ்வுற்று தாமதித்து; துனி : பயம்; இரும்பொழில் பெரிய சோலை.

**287. (க - ரை):** இலக்குமணன், சீதையைத் தூக்கி மேலெழும்பிய சூர்ப்பணகையின் கூந்தலைப் பிடித்து இழுத்து மூக்கையும், காதையும், மார்பின் நுனியையும் சிதைத்தான்.

**(அ-ரை):** ஏலக்கி தாவி, தாங்கி : சீதையைத் தாங்கிக்கொண்டு. உருத்து : கோபித்து, நூக்கி · பற்றி யிழுத்து, நொய்துனின் : இலேசாக; வெய்து இழையேல் தீமையைச் செய்யாதே, இராமனை விரும்பினது, இலக்குவனை விரும்பினது, சீதைக்குத் தீங்கிழைக்கச் சென்றது ஆகிய மூன்று குற்றத்திற்கும் முறையே மூன்று தண்டனைகள் செய்தமையால் 'முறையாற் போக்கி' என்றார்.

**288.** தன் அவயவங்கள் சிதைவு படவே, சூர்ப்பணகை இராவணனை நினைந்து புலம்புதல்.

**(க - ரை):** "சிவபெருமான் உறையும் கைலைமலையை எடுத்த மலையே! நீ நிலைபெற்று இருக்கவும், தவசிகள் இருவர் வில்லையெடுத்துக்கொண்டு, உனக்குச் சிறிதும் அஞ்சாமல் திரிவது உனக்குக் குறைவாகாதா? நான் படும் இந்த அவமானத்தைப் போக்க நீ வாராயோ?" என்று அழுதாள்.

**(அ-ரை)** தாபதர் முனிவர், தழல் எடுத்தான் நெருப்பை ஏந்தியவன், சிவபெருமான்.

**289.** இதுவும் அது.

**(க - ரை):** "சிவபெருமான் இருந்த மலையையே வேரோடு எடுத்த அண்ணா! என்னைக் காலால் உதைத்து உருட்டி மூக்கரிந்த ஒரு மனிதன் இன்னும் உயிரோடு இருந்து தன் தோளைப் பார்க்க, நான் இவ்வாறு கிடந்து அழுவதா? இது நமது கரன் இருந்த காடல்லவா? நமது காட்டில் பிறர் வந்து தீமை செய்யலாமா?"

**(அ-ரை):** உரம் : மார்பு; நரன் : மனிதன்.

286. தனிஇருந்தனள் சமைந்த(து)என்
கருத்(து)எனத் தாழ்வுற்(று)
இனிஇருந்(து)எனக்(கு) எண்ணுவ(து)
இல்என எண்ணத்
துனிஇருந்த,வல் மனத்தினள்
தோகையைத் தொடர்ந்தாள்;
கனிஇரும்பொழில் காத்(து)அயல்
இருந்தவன் கண்டான்.

287. 'ஊக்கித் தாங்கி,விண் படர்வென்' என்(று)
உருத்தெழு வாளை,
நூக்கி நொய்தினின், 'வெய்(து)இழை
யேல்' என நுவலா,
மூக்கும், காதும்,வெம் முரண்முலைக்
கண்களும், முறையால்
போக்கிப் போக்கிய சினத்தொடும்
புரிகுழல் விட்டான்.

288. 'நிலையெடுத்து, நெடுநிலத்து நீயிருக்கத், தாபதர்கள்
சிலை எடுத்துத் திரியும் இது சிறிதன்றே! தேவர்எதிர்
தலைஎடுத்து விழியாமை சமைப்பதே? தழல்எடுத்தான்
மலைஎடுத்த மாமணியே! இவை காண வாராயோ!'

289. 'உரம்நெரிந்து விழ, என்னை
உதைத்துருட்டி மூக்கரிந்த
நரன்இருந்(து) தோள்பார்க்க,
நான் கிடந்து புலம்புவதோ!
கரன்இருந்த வனம்அன்றே!
இவைபடவும் கடவேனே!
அரன்இருந்த மலைஎடுத்த
அண்ணாவோ! அண்ணாவோ!'

290. இதுவும் அது.

(க - ரை): "திக்கு யானைகளோடு போர்புரிந்து அவற்றின் கொம்பை ஒடித்த புகழாலே நிறைந்த புகழையுடைய இராவணா! இராவணா!! ஆசையினாலே நான் மூக்கிழந்து அவமானமடைந்தது உன் கீர்த்திக்குக் குறைவாகாதா?"

(அ-ரை): நசை . விருப்பம்; வசை : பழி, மாசு குற்றம், விசை வேகம; செரு : போர்; மருப்பொசித்த · கொம்பை ஒடித்த; இசை · புகழ்.

291. சூர்ப்பணகை, சீதையைத் தள்ளித் தன்னை மணக்கு மாறு வேண்டல்.

(க-ரை) : "சீதையைத் துரத்திவிட்டு, என்னை யேற்றுக் கொண்டால் பெரிய யுத்த களத்தில் உன்னைப் பாதுகாப்பேன்; உன்னைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் செல்வேன் ; மாமிசம்போல் இனிக்கக் கூடிய பல பழங்களையும் கொண்டு வந்து கொடுப்பேன்; இன்னும் எது வேண்டுமானாலும் தருவேன் ; ஆதலினால் என்னை வெறுத்து இவளுடன் இருப்பதால் உனக்கு என்ன பயன் ?" என்று கேட்டாள்.

(அ-ரை). மாப்போர் · பெரியபோர், தூ : மாமிசா; கைத்து வெறுத்து.

292. சூர்ப்பணகை மறுபடியும் இராமனிடம் மன்றாடுதல்

(க - ரை) : "என் மூக்கை அறுத்தீர் ; அதனால் எனக்கு என்ன வந்துவிட்டது ; நீர் என் பிழையைப் பொறுத்து ஏற்றுக் கொள்வதாக இருந்தால் அரை நொடியில் என் உடம்பை அழகானதாகச் செய்வேன் ; உங்கள் அருளைப்பெறும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமானால் நான் அடைந்த அவமானம் ஒரு பொருட்டு அல்ல ; எனது பெண் தன்மைக்கு அதனால் குறைவு வராது. மூக்கு மிக நீளமாக இருப்பதும் பெண்களுக்கு ஒரு குறைதான் ; ஆகையால் மூக்கரிந்ததனாலும் குற்றமில்லை."

(அ-ரை): நாசி : மூக்கு; மேக்குயரும் : நீண்டுயரும, மிகை அதிகம்.

293. சூர்ப்பணகை பின்னும் மன்றாடுதல்.

(க - ரை) : "வீரர்களே ! நீங்கள் மூக்கை அரிந்த கருத்து, எனக்கு இப்பொழுது விளங்கிற்று. என்னவென்றால் மூக்குச் சிதைந்த இவளை ஒருவரும் விரும்பிப் பாரார் ; இவள் கற்பிற்கும் கெடுதி வராது ; எப்பொழுதும் நம்மிடத்திலேயே இருந்து விடுவாள் என்று எனக்கு நன்மையன்றோ செய்தீர்கள் ; அதனை உட் கொண்டு தான் முன்னைவிட இருமடங்கு அன்பு உங்கள்மேல் கொண்டேன். நான் என்ன அவ்வளவு அறிவில்லாதவளா ?"

(அ-ரை): பொன் உருவப்புனை கழலீர் · பொன் மயமான வீரக்கழலை அணிந்தவர்களே; புழை : ஓட்டை.

குறிப்பு: 'ஆசை வெட்கமறியாது' என்பது பழமொழி. இப்பாடல் நகைச் சுவை அமைந்தது.

290. 'நசையாலே மூக்கிழந்து,
நாணம்இலா நான்பட்ட
வசையாலே நினதுபுகழ்
மாசுண்ட(து) ஆகாதோ!
திசையானை விசைகலங்கச்,
செருச்செய்து, மருப்(பு)ஒசித்த
இசையாலே நிறைந்த புயத்(து)
இராவணவோ! இராவணவோ!'

291. 'மாப்போரில் புறமகாப்பேன்!
வான்சுமந்து செலவல்லேன்!
தூப்போலக் கனிபலவும்
சுவையுடைய தரவல்லேன்!
காமபோரைக கைத்(து)என்? நீர்
கருதியது தருவேன்; இப்
பூப்போலும் மெல்இயலால்
பொருள் என்னே? புகல்வீரே.'

292 போக்கினீர் என்நாசி,
போய்த்தென்! நீர் பொறுக்குவிரேல்
ஆக்குவென் ஓர் நொடிவரையில்;
அழகமைவென்; அருள்கூரும்
பாக்கியம்உண்(டு) எனின், அதனால்
பெண்மைக்கோர் பழுதுண்டோ!
மேக்குயரும் நெடுமூக்கும்
மடந்தையர்க்கு மிகையன்றோ!'

293. 'பொன்உருவப் புனைகழலீர்! புழைகாண
மூக்கரிவான் பொருள்வே(று) உண்டோ?
இன்உருவம் இதுகொண்டிங்(கு) இருந்தொழியும்
நம்மருங்கே; ஏகாள் அப்பால்;
பின்இவளை அயல்ஒருவர் பாரார்;என்
றேஅறிந்தீர்! பிழைசெய் தீரோ?
அன்னதனை அறிந்தன்றோ அன்புஇரட்டி
பூண்டது நான் அறிவிலேனே!'

திரிசிரன் வதையைப் பற்றிக் கூறுவது.

**294.** அரக்கர் இராமனோடு போர் புரிதல்.

**(க-ரை):** அரக்கர் இராமனைக் கூவிக்கொண்டு பிரளய காலத்தில் மேகம் மழை பெய்வதைப்போல கற்களை வாரி வீசி எறிந்தனர்.

**(அ-ரை)** இருள் கீறிய : இருளை நீக்கிய, பரிதியான் சூரியன், வில்லாளன் : இராமன், முனிந்து : கோபித்து; அயில் வேல் : விழியா பார்த்து, தொடை : தொடுத்து.

**295.** அவர்களை இராமன் மடியச்செய்தல்

**(க-ரை).** பலவிதமாக வந்து போர் செய்த அனைவரையும் இராமன் கொன்றொழித்தான்.

**(அ-ரை)** அயில் வாளி : கூரிய அம்பு. செறிந்தார் நெருங்கினவர் செறுக்கார் : கோபித்தவர் மறிந்தார், மறிந்தார் : வீழ்ந்தார் – வெளித்தல் விகாரம்; வலித்துப்பா வற்புறுத்தினவா.

**296.** திரிசிரன் மடிய, சேனைகள் தோற்றோடுதல்

**(க-ரை):** திரிசிரன் என்னும் தலைமை அரக்கன் இராமன் கணையால் கொலையுண்டு கீழே மண்ணில் விழவும், இரத்த வெள்ளத்தில் இறந்த அவன் படை வீரர்கள் குடல் தம் காலைச் சுற்றவும் ஓடினர். மற்றொரு தலைவனாகிய தூடணன் அவர்களை விலக்கவும் நின்றிலர்.

**(அ-ரை):** சிகரம் மலையின் உச்சி; நிருதர் : அரக்கர், பருதி சூரியன்; வார்கழல் : கட்டிய வீரகண்டை; தொடக்க : சுற்ற.

தூடணன் வதையைப்பற்றிக் கூறுவது

**297.** ஓடின வீரர்களைத் தூடணன் வீரவுரை கூறித் தடுத்தல்.

**(க-ரை).** "வீரர்களே! கோபத்தால் சிவந்த உங்கள் கண்கள் வெளுத்து விட்டனவே; நீங்கள் வீட்டிற்குப்போய் உங்கள் வெற்றியை எதிர்பார்த்த மனைவிமாரிடம் காட்டில் நுழைந்து ஓடும்போது முதுகிலே பாய்ந்த மரக்கொம்புகளைக் காட்டுவீர்களா? அல்லது நெஞ்சில் பாய்ந்த அம்புகளைக் காட்டு வீர்களா?" என்று வீரவுரை கூறித் தடுத்தான்.

**(அ-ரை):** வெம்பு : வெதும்புகின்ற; வெரிந் உற : முதுகில் பதியத் தாக்கிய; தடமார்பு : அகன்ற மார்பு; 'முதுகிலே பாய்ந்த கொம்பு, நெஞ்சிலே பாய்ந்த அம்பு' ஒரு சொல் நயம்.

## திரிசிரா வதைப் படலம்

294. பல்லாயிரம் இருள்கீறிய
பகலோன்என ஒளிரும்
வில்லாளனை முனியா,வெயில்
அயிலாம்என விழியாக்,
கல்லார்மழை கணமாமுகில்
கடைநாள்விழு வனபோல்,
எல்லாம்ஒரு தொடையாஉடன்
எய்தார்;வினை செய்தார்.

295. எறிந்தார்என எய்தார்என
நினைந்தார்என எறிய
அறிந்தார்என அறியாவகை
அயில்வாளியின் அறுத்தான்;
செறிந்தாரையும, பிரிந்தாரையும,
செறுத்தாரையும், சினத்தால்
மறிந்தாரையும், வலித்தாரையும்
மடித்தான்சிலை பிடித்தான்.

296 திரிசிராஎனும் சிகரம்மண் சேர்தலும் செறிந்த
நிருதர் ஓடினர்; தூடணன் விலக்கவும் நில்லார்;
பருதி வாளினர் கேடகத் தடக்கையர், பரந்த
குருதி நீரிடை வார்கழல கொழுங்குடல் தொடக்க.

## தூடணன் வதைப் படலம்

297. 'செம்பு காட்டியகண் இணை, பால்எனத் தெளிந்தீர்!
வெம்பு காட்டிடை நுழைதொறும் வெரிந்உறப் பாய்ந்த
கொம்பு காட்டுதி ரோ?தட மார்பிடைக் குளித்த
அம்பு காட்டுதி ரோ?குல மங்கையர்க்(கு) அம்மா.

298. இராமன் தூடணனோடு போர்புரிதல்.

(க - ரை) : இராமன் அவனுடைய வீரத்தை நோக்கிச் சிரித்து, கணை யேவித் தூடணனது தேரைச் சிதைத்து, வில்லை யொடித்து. கவசத்தையும் கிழித்தான்.

(அ-ரை): சேயொளி : (உதட்டின்) செம்மை ஒளி; கணை தெரிந்தான் : அம்பு விட்டான்; நொய்தின் : எளிதாக; நொறில் : விரைவில்; பரி : குதிரை; நூறி : அழித்து, கடிந்தான் : கிழித்தான்.

299. சூர்ப்பணகைக்குப் பரிந்து, போருக்கு வந்த திரிசிரன், தூடணன் படியவே, கரன் போருக்கு எழுதலைக் கூறுவது.

(க - ரை) : அரக்க வீரர்கள் போரில் இறந்தனர் என்பதை அறிந்து கோபித்துப் போர்க்களம் வந்த கரன், கடல்போல் தோன்றும் இரத்த வெள்ளத்தில் ஒரு மந்தர மலையைப்போல் நின்றான்.

(அ-ரை): அடங்கலும அரக்கர் : அரக்கர் அனைவரும, அழன்றான் : கோபித்தான்; ஒடுங்கல் இல் : குறையாத; நிணக்குருதி . கொழுப்போடு கூடிய இரத்தம்; ஓதம : கடல்; உள்ளான் நடுவில; ஆன் மூன்றாம் வேற்றுமை உருபு.

300. இலக்குவனும் சீதையும் இராமனை வணங்குதல்.

(க - ரை) : இராமனது அம்பால் அடியுண்டு வானில் மறைந்து ஒளிக்கும் அரக்கர் உடம்பினின்றும் தெறித்த இரத்தத் துளிகளும், புழுதிகளும் இராமன்மேல் பட, அதைக் கழுவுவார் போன்று இலக்குவனும் சீதையும் தங்கள் கண்ணீரால் இராம னுடைய பாதத்தைக் கழுவினார்கள்.

(அ-ரை) கண்ணீர்விடுதல் : அவ்வளவு பெரிய படை முழுவதையும் மூன்று நாழிகைகளில் இராமன் ஒருவனே நின்று அழித்தமைக்கு விட்ட ஆனந்தக் கண்ணீர் ஆகும்; வெய்யவர் : கொடியவர், புண்ணின நீர் : இரத்தம்; பொடி : புழுதி, அன்னம் : சீதை; உவமையாகு பெயர்.

சூர்ப்பணகை அடைந்த அவமானம் கருதி இராவணன் துயருற்றதைத் கூறுவது.

301. இராவணன் இருந்த கொலுமண்டபம்.

(க-ரை.): இராவணனது கொலுமண்டபம் பிரம்மாவினாலும் படைக்க முடியாதது; (வேண்டிய பொருளனைத்தும்) உதவும் தருமம்போல் அங்கு எல்லாப் பொருள்களும் நிறைந்திருந்தன; மயன் என்னும் அசுரத்தச்சன் தன்னுடைய அறிவு, ஆற்றல் எல்லாம் கொண்டு இயற்றியது அம்மண்டபம் ஆகும்.

(அ-ரை): வகுப்பரிது : படைக்க முடியாதது; நுனிப்பது : கூர்ந்தறிவது; வரம்பில் ஆற்றல் : எல்லை இல்லாத வலிமை; உலைவிலா : அழிவில்லாத; புலன் : அறிவு; தெரிப்பது : காட்டுவது; மன், ஓ : அசைச்சொற்கள்.

298. எய்த காலமும் வலியும்நன்(று) எனநினைந்து இராமன்
செய்த சேயொளி முறுவலன் கடுங்கணை தெரிந்தான்;
நொய்தின் அங்(கு)அவன் நொறில்பரித் தேர்பட நூறிக்
கையில் வெஞ்சிலை அறுத்(து), ஒளிர் கவசமும் கடிந்தான்.

## கரன் வதைப் படலம்

299. கடும்கரன் எனப்பெயர் படைத்தகழல் வீரன்,
அடங்கலும் அரக்கர்அழி(வு) உற்றிட அழன்றான்;
ஒடுங்கல்இல் நிணக்குருதி ஓதம்அதின் உள்ளான்
நெடும்கடலின் மந்தரம் எனத்தமியன் நின்றான்.

300. விண்ணின் நீங்கிய வெய்யவர் மேனியின்
புண்ணின் நீரும், பொடிகளும் போய்உக,
அண்ணல் வீரனைத், தம்பியும், அன்னமும்
கண்ணின் நீரினில் பாதம் கழுவினர்.

## இராவணன் துன்புறு படலம்

301. நிலையிலா உலகினிடை நிற்பனவும்,
நடப்பனவும், நெறியின் ஈந்த
மலரின்மேல் நான்முகற்கும வகுப்பரிது;
நுனிப்பதொரு வரம்பில் ஆற்றல்
உலையிலா வகைஇழைத்த தருமம்என,
நினைந்தவெல்லாம் உதவும், தச்சன்
புலன் எலாம் தெரிப்பதொரு, புனைமணிமண்
டபம் அதனில் பொலிய;மன்னோ.

**302.** இராவணன் கொலு வீற்றிருந்த சிறப்பு.

**(க - ரை)** கங்கை முதலாகிய தெய்வத்தன்மை பொருந்திய தேவமாதர்கள் அனைவரும் தங்கள் கைகளில் அரிசியையும், மலர்களையும் கொண்டு வந்து இராவணன்மேல் இறைத்து, மங்கலமொழி கூறி வாழ்த்தினர்

**(அ-ரை).** கடவுள் கன்னியர் தேவமாதர்கள், ஒல்கிட : அசைய, சிந்தினர் : முற்றெச்சம்.

**303.** இதுவும் அது

**(க - ரை) :** ஊர்வசி முதலாக தேவநாட்டிய மகளிர் வாத்திய இசைகளோடு, தாள ஒத்துக்கேற்ப நடிக்க அதை, இராவணன் பார்த்துக்கொண்டு,

**(அ-ரை).** ஊரு . தொடை, பிரமனது தொடையில் தோன்றியதால் ஊர்வசி யெனப்பட்டாள், கலாபம் . தோகை; மஞ்ஞை . மயில், வார்விசி வார் இறுக்கிக் கட்டிய, கருவி : முழவு முதலிய வாத்தியங்கள், பாணி தாள வொத்து; நாரியர் பெண்கள், நாரம் . அன்பு

**304.** இவ்வாறு மகிழ்ச்சியோடிருக்கும் இராவணன் மண்டபத்துக்குச் சூர்ப்பணகை வருதல்

**(க - ரை) :** இவ்வாறு நடந்து கொண்டிருக்கும அந்த இடத்தில் சூர்ப்பணகையானவள், தலையில் கையை வைத்துக் கொண்டு இரத்த தாரை சிவந்து வடிகின்ற கொங்கையோடும், அவ்வாறே காணப்படுகின்ற மூக்கோடும், காதில்லாதவளாகவும் மேகம் முழங்குவதுபோல் திறந்து அழுதுகொண்டிருக்கின்ற வாயோடும் (தோன்றினள்).

**(அ-ரை)** அவ்வழி : அந்த இடத்தில், சோரி . இரத்தம், சேந்து இழி செந்நிறத்தோடு ஒழுகுகின்ற, மங்குல் · மேகம்.

**305.** சூர்ப்பணகையின் அழுகை ஒலி.

**(க - ரை) :** எங்கே பார்த்தாலும், எப்பொழுதும் முழவு, வீணை, புல்லாங்குழல், யாழ், ஆம்பலந்தீங்குழல், வெற்றிச்சங்கு, தாரை ஆகியவற்றின் ஓசையைத் தவிர வேறு ஓசையைக் கேட்டறியாத இலங்கையில், இன்று என்றுமில்லாத புலம்பலோசை புதிதாகக் கேட்டது.

**(அ-ரை):** முரளி : புல்லாங்குழல், குழல் : ஆம்பலந்தீங்குழல்; அரோ : அசை.

302. கங்கையே முதலிய கடவுள் கன்னியர்
கொங்கைகள் சுமந்(து)இடை கொடியின் ஒல்கிடச்
செங்கையில் அரிசியும் மலரும் சிந்தினர்
மங்கல முறைமொழி கூறி வாழ்த்தவே.

303. ஊருவில் தோன்றிய உருப்ப சிப்பெயர்க்
காரிகை யார்முதல் கலாப மஞ்ஞைபோல்,
வார்விசிக் கருவியோர் வகுத்த பாணியின்,
நாரியர், அருநடம் நடிப்ப நோக்கியே

304. தங்கையும் அவ்வழித், தலையில் தாங்கிய
செங்கையள், சோரியின் தாரை சேந்திழி
கொங்கையள், மூக்கிலள், குழையில் காதிலள்,
மங்குலின் ஒலிபடத் திறந்த வாயினள்

305. முழவினில், வீணையில், முரளி, யாழினில
தழுவிய குழலினில், சங்கில், தாரையில்
எழுகுரல் இன்றியே, என்றும் இல்ல(து) ஓர்
அழுகுரல் பிறந்த(து)அவ் விலங்கைக்கு அன்(று);அரோ.

**306.** தன்னை அவமானஞ் செய்தாரைப்பற்றிச் சூர்ப்பணகை இராவணனிடம் கூறுதல்.

**(க-ரை):** "மரவுரி தரித்தவர்கள்; வீரக்கழல் அணிந்தவர்கள்; பூணூல் அணிந்தவர்கள்; விற்போர் பயின்றவர்கள்; வேதத்தைச் சொல்லிக்கொண்டிருக்கின்றவர்கள்; நல்ல உடம்பைப் பெற்றவர்கள்; உன்னை ஒரு துரும்பாகவும் மதிக்காதவர்கள்; அம்புப் புட்டில்களைச் சுமந்திருக்கிறார்கள்; உன்னால் அவர்களை ஒன்றும் செய்யமுடியாது."

**(அ-ரை)** வற்கலை : மரவுரி, வார்கழலர் : வீரக்கழலை அணிந்தவர்கள்; மெய்யர் : உடம்புள்ளவர்; உற்கு : உனக்கு; உன்னார் : நினைக்கமாட்டார்கள்; துகள் : புழுதி, துணை : அளவு; தூணி : அம்புப்புட்டில்

**307.** இதுவும் அது.

**(க-ரை):** "வனத்திலுள்ள முனிவர்களெல்லாம் போய், அரக்கர்களுக்கு நாங்கள் அஞ்சினோம் என்று முறையிட, அதனால் உலகத்தையெல்லாம் வென்று விடுவோம் என்று நினைத்துக் கொண்டிருக்கின்ற அரக்கர்களாகிய உங்கள் குலத்தை வேரொடு முழுதும் கொல்வதாகச் சபதம் பூண்டு வந்திருக்கின்றனர்."

**(அ-ரை)** ஏறுநெறி மேன்மையான வழியிற் செல்கின்ற; வேறும்: வெல்லுவோம்; கோறும் : கொல்லுவோம்; முந்தை : முற்பட்ட காலம்.

**308.** இதுவும் அது.

**(க-ரை):** "நான் கரதூடணரிடத்தில் முறையிட, போருக்கு வந்தவர்கள் அத்தனை பேரையும் ஒரே வில்லினால் தனியாக மூன்று நாழிகையில் இராமன் கொன்றொழித்தான்."

**(அ-ரை)** எல் : ஒளி; ஒன்று பொருந்திய; ஏந்தல் : தலைவன்; கடிகை ; நாழிகை.

**309.** சீதையின் அழகைச் சூர்ப்பணகை இராவணனிடம் சொல்லுதல்.

**(க-ரை):** சீதையின் கட்டிமுடிந்த கூந்தல் மேகத்தை ஒக்கும்; அவள் அவிழ்த்து விட்ட கூந்தல் மழைபெய்வதை ஒக்கும்; அவள் பாதங்கள் செம்பஞ்சுக் குழம்புபோல் இருக்கும்; கால் விரல்கள் பவளத்துண்டை ஒக்கும்; தன் சொல்லைத் தேவாமிர்தத்திலிருந்து அள்ளிக்கொண்டவள்; அவளுடைய முகம் தாமரையை ஒக்குமேனும் கண்கள் கடலைவிட அகன்றவை."

**(அ-ரை):** மஞ்சு : மேகம்; அளக ஓதி : கட்டிமுடித்த கூந்தல்; வடிந்த கூந்தல் : அவிழ்த்த கூந்தல்; வதனம் : முகம்; மை தீர்: குற்றமற்ற; கஞ்சம் : தாமரை

306. ‘வற்கலையர்; வார்கழலர்; மார்பின் அணிநூலர்;
விற்கலையர்; வேதம்உறை நாவர்;நனி மெய்யர்;
உற்(கு)அலையர்; உன்னைஓர் துகள்துணையும் உன்னார்;
சொல்கலை எனத்தொலைவில் தூணிகள் சுமந்தார்.’

307. ‘ஆறுமனம் அஞ்சினம் அரக்கரை’ எனச்சென்(று)
ஏறுநெறி அந்தணர் இயம்ப; உலகெல்லாம்
வேறும்எனும் நுங்கள்குலம் வேரொடும் அடங்கக்
‘கோறும்’என முந்தைஒரு சூள்உறவு கொண்டார்’

308. ‘சொல்என்றன் வாயில் கேட்டார்
தொடர்ந்தெழு சேனை யோடும
கல்என்ற ஒலியில் சென்றார்
கரன்முதல் காளை வீரர்;
எல்ஒன்று கமலச் செங்கண்,
இராமன்என்(று) இசைத்த ஏந்தல்,
வில்ஒன்றில், கடிகை மூன்றில்,
ஏறினார் விண்ணில்’ என்றாள்.

309. ‘மஞ்சொக்கும் அளக ஓதி;
மழைஒக்கும் வடிந்த கூந்தல்;
பஞ்சொக்கும் அடிகள்; செய்ய
பவளத்தின் விரல்கள் ஐய!
அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக்
கொண்டவள்; வதனம் மைதீர்
கஞ்சத்தின் அளவிற் றேனும்
கடலினும் பெரிய கண்கள்’

310. இதுவும் அது.

(க - ரை): "சீதையின், தோளின் அழகைச் சொல்லுவேனே? முகத்தில் விளங்கும் வாள்போன்ற கண்ணின் அழகைச் சொல்லுவேனே? அவள் அழகையெல்லாம் சொல்லுவதற்கு நான் திகைக்கின்றேன். நீ தான் நாளைக்கு அவளைப் பார்க்கப் போகின்றாயே; அதற்குள் நான் சொல்லாவிட்டால் என்ன?"

(அ-ரை). வாள் வாள்போன்ற கண், வல் : சூதாடு கருவிபோன்ற தனம்; இரண்டும் உவமையாகு பெயர்கள், காண்டி . காண்பாய்.

311. இதுவும் அது.

(க - ரை): "நெல் இலை நெல்லென்று அறியாத ஒருவனுக்கு, இது புல்லைப்போன்றிருக்குமென்று சொன்னால் அது எப்படியோ, அப்படியே சீதையின் புருவத்தை வில்லொக்கும், கண்ணை வேலொக்கும், பல்லை முத்தொக்கும், இதழைப் பவளம் ஒக்கும் என்று சொல்லுவது. சொல் ஏதோ ஒத்திருக்கும், ஆனால் பொருள் ஒத்திராது. அவள் அவயவத்திற்குக் கூறக்கூடிய உவமையும் உலகத்தில் உண்டோ?"

(அ-ரை) நுதல் நெற்றி - இங்கே புருவத்தைக் குறித்தது, இதழ் - உதடு

312 இதுவும் அது.

(க - ரை): "இந்திரன் இந்திராணியையும், சிவபெருமான் உமாதேவியாரையும், திருமால் இலக்குமியையும் மனைவியராகப் பெற்றதைப்போல நீயும் சீதையைப் பெற்றிருக்கின்றாய். இதில் அவர்களுக்கும் உனக்கும் உள்ள வேறுபாட்டைப் பார்த்தால் நீ பெற்ற நன்மை அவர்களுக்கு இல்லை."

(அ-ரை) சசி இந்திராணி, இருமூன்று வதனன் ஆறுமுகன், அந்தரம் . வேறுபாடு, இப்பாடலின் ஈற்றடியைப் பிரித்துப் பொருள் கொண்டால் இரு பொருள் தருவது கருதத்தக்கது. உனக்கே நன்மை என்று கொண்டால் அவர்கள் மனைவியரினும் சீதை கட்டழகானவள் எனக் கொள்ள வேண்டும். 'நன்மை அவர்க்கு, இல்லை உனக்கு' என்றால் 'அயலான் மனைவியைக் காதலிப்பதால் உனக்குத் தீமை' எனப் பொருள் கொள்ளவேண்டும்.

313. இதுவும் அது.

(க - ரை): "ஒருவன் தன் மனைவியை இடப்பாகத்தில் வைத்துக்கொண்டான், இலக்குமியை ஒருவன் மார்பில் வைத்துக் கொண்டான், பிரமன் தன் மனைவியை நாவில் வைத்துக் கொண்டான்; அவர்கள் தமக்குள்ளேயே தம் மனைவியரை வைத்துக்கொண்டதைப்போல் நீ எங்கே சீதையை வைத்துக்கொள்வாய்?" என்று வினவினள்.

**குறிப்பு:** எங்ஙனம் வைத்து வாழ்தி? என்பது, நீ சீதையை வைத்து வாழமுடியாது எனவும் பொருள் படுவது கருதத் தக்கது.

**(அ-ரை):** பங்கயம் · தாமரை; பொன் : இலக்குமி; ஆகம் . மார்பு; மாகம் : வான்.

310. 'தோளையே சொல்லு கேனோ!
சுடர்முகத்(து) உலவு கின்ற
வாளையே சொல்லு கேனோ!
வல்அவை வழுத்து கேனோ!
மீளவும் திகைப்ப(து) அல்லால்
தனித்தனி விளம்பல் ஆற்றேன்;
நாளையே காண்டி அன்றே,
நான்உனக்(கு) உரைப்பது என்னோ?'

311. 'வில்ஒக்கும் நுதல்என் றாலும்,
வேல்ஒக்கும் விழிஎன் றாலும்,
பல்ஒக்கும் முத்தென் றாலும்,
பவளத்தை இதழ்என் றாலும்,
சொல்ஒக்கும்; பொருள்ஒவ் வாதால்;
சொல்லலாம் உவமை உண்டோ?
நெல்ஒக்கும்; புல்என் றாலும்
நேர்உரைத் தாக வற்றோ?'

312. 'இந்திரன் சசியைப் பெற்றான்,
இருமூன்று வதனத் தோனதன்
தந்தையும் உமையைப் பெற்றான்;
தாமரைச் செங்க ணானும்
செந்திரு மகளைப் பெற்றான்;
சீதையைப் பெற்றாய் நீயும்,
அந்தரம் பார்க்கின், நன்மை
அவர்க்கிலை உனக்கே ஐயா!'

313. 'பாகத்தில் ஒருவன் வைத்தான்;
பங்கயத்(து) இருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான்;
அந்தணன் நாவில் வைத்தான்;
மேகத்தில் மின்னை முன்னை
வென்றநுண் ணிடையி னாளை
மாகத்தோள் வீர,பெற்றால்
எங்ஙனம் வைத்து வாழ்தி?'

### 314. இராவணனிடம் சூர்ப்பணகையின் வேண்டுகோள்.

(க - ரை): "உலகம் போற்றும்படி சீதையோடு கூடி நீ விளையாடு; இராமனோடு கூடி விளையாடும்படி அவனை எனக்குக் கொடுப்பாயாக" என்று சூர்ப்பணகை வேண்டினாள்.

(அ-ரை): வேலை : சமுத்திரம், ஊடாடும் : விளையாடும்; தேன் : வண்டு; மேகலை உலகம் : கடல் விளை, மேகலையாக அணிந்த பூமி.

### 315. சீதையின் வடிவழகைக் கேட்ட இராவணன் நிலை.

(க - ரை): சீதையின் அழகிய வடிவம் பரவியதால் இராவணனது முழு மனமும் அவளை நினைத்தவாறிருந்தது. மன்மத பாணத்தினால் வருந்திய அவன் வேறொன்றையும் நினைக்க முடியவில்லை. பிறன் மனைவியைத் தீண்டினால் தனக்கு அழிவு நேரும் என்ற சாபத்தையும் மறந்தான் கரன் முதலிய உடன்பிறந்தார்களைக் கொன்று தங்கையின் மூக்கரிந்தவனது வலிமையைக் கூட மறந்திருந்தான்

(அ-ரை): உரன் : வலிமை; அரன் : சிவன்; வரன் : வரம், போலி

### 316. இதுவும் அது.

(க - ரை): பின்னர் இராவணன் சீதையைக் கவர்ந்து வந்து சிறையில் வைப்பதற்கு முந்தியே தன் மனமாகிய சிறையில் அவளை வைத்தான்: அவனுடைய உள்ளம், வெப்பத்தையுடைய வெயிலில் ஒரு பாறையின்மேல் வைத்த வெண்ணெயைப்போல உருகிற்று.

(அ-ரை): வந்தியா முன்னம் : கவரா முன்பு, எயில் : மதில், அயில் : வேல்.

### 317. இதுவும் அது.

(க - ரை): அறிவற்றவன் பிறருக்குத் தோன்றாதபடி மறைவாகச் செய்த தீமை எளிதில் வெளிப்பட்டுப் பலருக்கும் புலனாவதைப்போல் இராவணன் மறைவாகக் கொண்ட காமநோய் பலரும் அறியும்படி வளர்ந்தது. விதியின் வலிமையினாலும், மேல் அவனுக்கு நேரக்கூடிய நிகழ்ச்சிகளினாலும், மதி கெட்டு, அதன் பயனாக அவன் காமநோய் வளர்ந்தது.

(அ-ரை): மதி : புத்தி, பயத்தினாலும் : பயனினாலும்; கதிஉறு : விரைதல் உற்ற.

314. 'மீன்கொண்(டு) ஊடாடும் வேலை
மேகலை உலகம் ஏத்தத்,
தேன்கொண்(டு) ஊடாடும் கூந்தல்,
சிற்றிடைச் சீதை என்னும்
மான்கொண்(டு) ஊடாடு நீ;உன்
வாள்வலி உலகம் காண
யான்கொண்(டு) ஊடாடும் வண்ணம்
இராமனைத் தருதி என்பால்.'

315. கரனையும் மறந்தான்; தங்கை
மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான்; உற்ற
பழியையும் மறந்தான்;வெற்றி
அரனையும் கொண்ட காமன்
அம்பினால் முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான்; கேட்ட
மங்கையை மறந்தி லாதான்.

316. மயில்உடைச் சாய லாளை
வஞ்சியா முன்னம், நீண்ட
எயில்உடை இலங்கை நாதன்
இதயமாம் சிறையில் வைத்தான்;
அயில்உடை அரக்கன் உள்ளம்
அவ்வழி மெலல மெல்ல
வெயில்உடை நாளில் உற்ற
வெண்ணெய் போல் உருகிற்(று)அன்றே.

317. விதியது வலியி னாலும், மேல்உள விளைவி னாலும்,
மதியுறு கேடு வந்து குறுகிய பயத்தி னாலும்,
கதியுறு பொறியின் வெய்ய காமநோய், கலவி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல்,வளர்ந்த தன்றே.

*11*

### மாரீசன் வதையைப்பற்றிக் கூறுவது

**318.** 'நீ மான் வடிவம் எடுத்துக்கொண்டு சென்று சீதையைக் கவர்வதற்கு உதவி செய்வாயாக' என்று வேண்டின இராவணனுக்கு, மாரீசன் கூறுதல்.

**(க - ரை):** "நீ இவ்வளவு பெரிய செல்வம்பெற்றது அறவழியில் நின்று செய்த தவத்தின் பயனலா? அன்றிப் பாவத்தின் வழியாலா? அவ்வாறு அறவழியால் நீ பெற்ற செல்வங்களையெல்லாம் இப்பொழுது பாவம் செய்தலினால் இழக்கத் தொடங்குகிறாயா?" என்று கூறினான்.

**(அ-ரை)** திறத்திறன் : மிக்க வலிமை, முற்றி : முடித்து; மறத்திறன் : பாவ வழி; மறை : வேதம; புறம் பாவம் (அறத்திற்குப் புறம்பானது).

**319.** 'பிறன் மனைவியை விரும்புவதால் தீமையே அடைவர்' என மாரீசன் கூறல்.

**(க - ரை):** "தம்மிடத்தில் அன்பு வைத்துத் தம்மை நம்பிய அரசனை வஞ்சித்து, அவன் நாட்டைக் கவர்ந்தவர்களும், நல்ல வழியில் ஒழுகாதவர்களும், பிறனுடைய தாரத்தை விரும்பினவர்களும் ஆகிய இவர்களையெல்லாம் தருமதேவதை அறுத்து ஒழிக்கும். தீமை செய்து எவரையா வாழ்ந்தவர்கள்?"

**(அ-ரை).** நார் : அன்பு, நாரம் : அம சாரியை; நடை : நல்லொழுக்கம்; வாரம் : உரிமை, ஈரும் : அறுக்கும்; கண்டகா : முள் போன்ற தீயர்.

குறிப்பு : அறக் கடவுள் தீயோரை ஒறுக்கும் என்பதை, "அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு", "பாயுமோ அலைப்பிலதனை அறம்" என வரும் குறள்களால் அறிக.

**320.** மாரீசன், இராமனுடைய பெருமையைக் கூறல்.

**(க - ரை):** "இராமனுடைய அம்புகள், சிவபெருமான் முதற்கொண்டு மற்ற தேவர்கள் வரை உள்ள வானுலகத்தவரையும் பூவுலகத்தவரையும் ஒரு நொடியில் உயிர் தின்பவை; விசுவாமித்திரன் கொடுத்தவை; தெய்வத் தன்மைவாய்ந்தவை; கோபத்தை உடையவை; குற்ற மற்றவை; அளவற்றவை; அவை எண்ணிய படி செய்பவை."

**(அ-ரை)** கோசிகன் விசுவாமித்திரன். ஆசில : குற்றமற்றவை, இமைப்பின் : நொடிப்பொழுதில்; கணிப்பில : அளவற்றவை.

**321.** இராவணன் மாரீசனைப் பயமுறுத்தல்.

**(க - ரை):** "என் வார்த்தையை நீ மறுத்தாயானால் என் வாளினால் வெட்டி உன்னை ஒழித்து, உன் உதவி இல்லாமலேயே என் எண்ணத்தை முடிப்பேன். இனி உயிரோடு சுற்றித் திரிதலை வேண்டுவாயேயானால் என் குறிப்பின்படி நட" என்று இராவணன் மாரீசனைப் பயமுறுத்தினான்.

**(அ-ரை):** வடி : கூர்மை பொருந்திய (வாள்); ஒறுத்து : தண்டித்து; மனம் உற்றது : நினைத்தது; ஒழிகில்லேன் : தவறமாட்டேன்; உழலின் : சுற்றித் திரியின்.

## மாரீசன் வதைப் படலம்

318. 'திறத்திற னாலோ செய்தவம் முற்றித் திருஉற்றாய்!
மறத்திற னாலோ சொல்லுதி! சொல்லாய் மறைவல்லோய்!
அறத்திற னாலே எய்தினை அன்றோ அதுநீயும்,
புறத்திற னாலே பின்னும் இமைக்கப் புகுவாயோ?'

319. 'நாரம் கொண்டார் நாடு கவர்ந்தார், நடையல்லா
வாரங் கொண்டார், மற்றொரு வன்தன் மனைவாழும்
தாரங் கொண்டார், என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈரும் கண்டாய்; கண்டகர் உய்ந்தார் எவர்ஐயா?'

320. 'ஈசன்முதல், மற்றும் இமை யோர்உலகும், மற்றைத்
தேசமுதல், முற்றும்ஓர் இமைப்பின் உயிர்தின்ப;
கோசிகன் அமைத்தகட வுட்படை, கொதிப்போ(டு)
ஆசில கணிப்பில இராமன்அருள் நிற்ப.'

321. 'மறுத்தனை எனப்பெறினும் நின்னைவடி வாளால்
ஒறுத்து மனம் உற்றது முடிப்பென்; ஒழி கில்லேன்;
வெறுப்பன கிளத்தல்உறும் இத்தொழிலை விட்(டு)என்
குறிப்பின்வழி நிற்றி, உயிர் கொண்டுழலின்' என்றான்.

322. மாரீசன் அறவுரை.

(க-ரை): "அற்ப வழியில் ஒழுகுகின்றவனே! உன் நன்மையைக் கருதி என் உரிமையினுல் இந்த நீதியைச் சொன்னேன். அன்றி இராமனிடத்திற்குச் செல்வதால் எனக்குச் சாவு நேருமே யென்று போவதற்கஞ்சி நான் சொல்லவில்லை. ஒருவனுக்கு நாசகாலம் வரும்போது பிறர் சொல்லும் நன்மைகளெல்லாம் தீமைகளாகவே தோன்றும். நான் செய்தற்குரிய காரியத்தைச் சொல்; செய்வேன்" என்ருன்.

(அ-ரை): வயின் : இடம்; உறுதி : சொந்தம, இறுதி : முடிவு; இசைத தேன் : சொன்னேன்; தின்மை : தீமையென்பதன் மருஉ, புன்மை : அறபம; நீர் : குணம், தன்மை; புகறி : சொல்லுவாயாக.

323. இராவணன் கூறுவது.

(க-ரை): "அவ்விருவரைக் கொல்லுவதற்குச் சேனை கூட வேண்டுமா? என் கைவாள் ஒன்றே போதும். அவர்களைக் கொன்ருல் சீதையும் இறந்து விடுவாள். ஆகையால் மாயையினுல் நாம் அவளைக் கைப்பற்றுவோம்" என்று கூறினுன்.

(அ-ரை) தானை : சேனை; தடக்கை : பெரிய கை, ஆனவன் அவன்; மானவள் : மான் போன்ற அவள், மானிடப பிறப்பினள் என்றும கூறலாம, வலித்தும் : கைப்பற்றுவோம. இது குளகம.

324. மாரீசன் கொண்ட மானின் வடிவுத்தோற்றம்.

(க-ரை): உடம்பு முழுதும் பொன் மயம்; காலும், செவியும், வாலும் இரத்தின மயம். 'இப்படிப்பட்ட மான் தோன்றுவது ஏதோவொரு மாயமாக இருக்குமேயன்றி உண்மையாக இருக்குமா' என்று எல்லோரும் ஐயமுறும்படி இருந்தது.

(அ-ரை); காயம் : உடமபு; மணி : இரத்தினம், கனகம் . பொன், ஏயும்: பொருந்தும்.

325. மாயமானின் செயல்.

(க-ரை): மலையின்மேல் ஏறும்; அங்கிருந்து மேகக் கூட்டத்தில் குதிக்கும்; அருகிற் சென்ருல் ஓடும்; நின்ருல் கையில் தொடும் அளவு அருகில் வந்து நிற்கும். இவ்வாறு கண்டோர் உள்ளத்தைக் கவர்ந்து, விலை மாதர் உள்ளத்தைப் போலப் பல இடங்களில் போயிற்று.

(அ-ரை): இவரும் : ஏறும்; குழு : கூட்டம்; தாழின் : நின்ருல்; நேயம : அன்பு; மன்றல் : வாசனை; கோதை : மாலை.

322. 'உன்வயின் உறுதி நோக்கி,
உண்மையின் உணர்த்தி னேன்; மற்(று)
என்வயின் இறுதி நோக்கி,
அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்;
நன்மையும் திண்மை அன்றே
நாசம்வந்(து) உற்ற போது;
புன்மையின் நின்ற நீராய்!
செய்வது புகறி'என்றான்.

323. ஆனவன் உரைக்க, நக்க
அரக்கர்கோன், 'அவரை வெல்லத்
தானையும் வேண்டு மோ?என்
தடக்கைவாள் தக்க(து) அன்றே!
ஏனையர் இறக்கின் தானும்
தமியளாய் இறக்கும் அன்றே!
மானவள் ஆத லாலே
மாயையின் வலித்தும்'என்றான்.

324. 'காயம் கனகம்; மணிகால், செவி, வால்
பாயும் உருவோ(டு) இதுபண்(பு) அலவால்;
மாயம், எனல்அன் றிமனக் கொளவே
ஏயும்,இறைமெய் அல'என் றனவே.

325. குன்றிடை இவரும்,மேகக்
குழுவிடைக் குதிக்கும்,கூடச்
சென்றிடின் அகலும்;தாழின்
தீண்டலாம் தகைமைத்(து) ஆகும்;
நின்றதே போல நீங்கும்;
நிதிவழி நேயம் நீட்டும்
மன்றல்அம் கோதை மாதர்
மனம்எனப் போயிற்(று); அம்மா!

326. இராமன் மாயமானை வதைத்தல்.

(க - ரை): சீதையின் விருப்பப்படி மானைப் பிடிக்கச் சென்று, அதை மாயமான் என்றுணர்ந்து இராமன் கொல்ல, அது சாகும் தருவாயில் (இராமன் குரலில்) 'இலக்குவனே, சீதையே' என்று அலறிக் கூவி உயிர்விட்டது. அவ்வோசை எட்டுத் திக்குகளிலும் கேட்கும்படியாக இருந்தது.

(அ-ரை): நெட்டிலைச்சரம்· நெடிய இலைபோன்ற அம்பு, பகுவாய்: பிளந்த வாய்.

இராவணன் சீதையை வஞ்சித்து எடுத்துச் சென்றதைக் கூறுவது.

327. அக்குரலைக் கேட்டு வருந்திய சீதையை இலக்குவன் தேற்றுதல்.

(க - ரை). மாரீசன் குரலை இராமன் குரலென்றும், இராமன் இறந்தான் என்றும் அஞ்சிய சீதைக்கு இலக்குவன். இராமனுடைய வலிமையை விளக்குகிறான். "முப்புரங்களை அழித்த சிவபெருமானிடம் பெற்ற சனகனுடைய வில்லை எளிதில் ஒடித்த இராமனது வலிமைக்கு ஒப்பான வலிமை வேறு உலகத்தில் உண்டா" என்று கூறித் தேற்றினான்.

(அ—ரை)· புங்கவன் சிவபெருமான்; புங்கம: மேன்மை, மாற்றம் · வார்த்தை, இற்றது : ஒடிந்தது.

328. சீதையின் செயல்.

(க - ரை): இராமன் உண்மையாகவே இறந்துவிட்டான் என்று கருதிய சீதை, இலக்குவன் வார்த்தையை நம்பாமல், "ஒரு நாள் பழகினும் பழகினவர்களுக்குத் தங்கள் உயிரைக் கொடுப்பார்கள். பலநாள் பழகிய நீ இராமன் இறந்தமையைக் குரலால் கேட்டறிந்தும் அவரிடம் போகாமல் இங்கு நிற்கின்றாய்! இனி அதோ, காட்டில் தெரியும் நெருப்பில் விழுந்து நான் இறப்பேன்" என்றாள்.

(அ—ரை). பகல் : நாள்; பெருமகன் . தலைவன்; பெற்றி , தன்மை; உலைவு : அழிவு; வெருவலை : அஞ்சாமல்; கடிது : விரைவில.

329. அதற்கு இலக்குமணன் செயல்.

(க - ரை): 'நான் சீதையை விட்டுப்போகின்றேன்; தனியாய் இருக்கின்றாள்; ஏதாவது ஆபத்து நேர்ந்தால், நம்மைப் பாதுகாத்துவரும் சடாயு பாதுகாப்பான்' என்று எண்ணித் தேவர்கள் செய்த தவத்தினால் இலக்குவன் சீதையைப் பிரிந்து போனான்.

(அ—ரை): புரிவல் : செய்வேன்; எருவை : கழுகு; செம்மல் : தலைவன்; இலக்குவன். சீதை பிரிந்ததிலிருந்து இனி நிகழ்வன யாவும் தேவர்களுக்கு நன்மை பயத்தலால் 'தேவர் செய்த தவத்தினால்' என்றார்.

326. நெட்டி லேச்சரம், வஞ்சனை நெஞ்சுரப்
பட்ட(து); அப்பொழு தேபகு வாயினால்,
அட்ட திக்கினும் அப்புற மும்புக,
விட்ட ழைத்து,ஒரு குன்றென வீழ்ந்தனன்

## சீதையை வஞ்சித்த படலம்

327. 'மாற்றம்என் பகர்வது? மண்ணும் வானமும்
போற்ற,வன் திரிபுரம் எரித்த புங்கவன்
ஏற்றிநின்(று) எய்தவில் இற்ற(து); எம்பிரான்
ஆற்றலின் அமைவ(து)ஓர் ஆற்றல் உண்மையோ?'

328. 'ஒருபகல் பழகினர் உயிரை ஈவரால்;
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும்,நீ
வெருவலை நின்றனை; வே(று)என்? யான்இனி
எரியிடைக் கடிதுவீழ்ந்(து) இறப்பென் ஈண்(டு)'என்று.

329. 'போவது புரிவல்யான், புகுந்த(து) உண்(டு) எனின்,
காவல்செய் எருவையின் தலைவன் கண்உறும்;
ஆவது 'காக்கும்' என்(று)அறிவுற்(று), அவ்வழித்
தேவர்செய் தவத்தினால், செம்மல் ஏகினான்.

330. இராவணன் சீதையினிடம் வருதல்.

(க - ரை) : உணவே கொள்ளாமையால் உடம்பில் சதையே இல்லையென்னும்படி வற்றின உடம்பையுடையவனாகி, நெடுந் தூரத்திலிருந்து களைத்து வந்தவனைப்போல், கையில் வீணையைக் கொண்டு, விரலினால் நரம்பைத் தழுவி, வேதத்தைப் பாடிக் கொண்டு வருகின்றான்.

(அ-ரை) ஊண் : உணவு, உலர்ந்த : வற்றிய; சேண் : தூரம்; பாணி : கை; உழந்து : தடவி.

331. இதுவும் அது.

(க - ரை) : பூ அரும்பு வெடித்து மலராகும்பொழுது இதழ் ஒவ்வொன்றாய் விரிவதுபோலக் காலை எட்டி வைத்து, நெருப்பை மிதிப்பவனைப்போல பூமியை மிதித்து, ஓயாது நடுங்குகின்ற கால் கைகளோடு மிகவும் மூத்த கிழத்தன்மையுடையவனாகி வந்தான்.

(அ-ரை). பூப்பொதி அவிழ்ந்தன . கட்டவிழ்ந்து பூ மலர்வதைப் போல; பூதலம் : பூமி; தீப்பொதிந்தது : நெருப்பையுடையது, காபப ந : தடுக்க முடியாத; முனிய : வெறுக்கும்படியாக

332. சீதையின் செயல்.

(க - ரை) : யாரோ ஒரு கிழமுனிவர் என்று கருதிய சீதை, அவனை வணங்கி, " இங்கே இருங்கள் " என்று வேண்டிப் பிரம்புப் பாயை விரித்தாள். தன் கையிலிருந்த திரிதண்டத்தைக் கீழே வைத்து, அவன் அங்கிருந்தான்.

(அ-ரை): வேத்திரம் . பிரம்பு; மா : பெரிய; பூத்தொடர்சாலை . பூவால் வேயப்பட்ட சாலை; திரிதண்டு . முக்கோல், துறவிகளுக்கு இது உரியது என்பதை "நூலே கரகம் முக்கோல் மணையே–ஆயுங்காலை அந்தணர்க் குரிய" என வரும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம.

333. இராவணன் வந்த வனத்தின் நிகழ்ச்சி.

(க - ரை) : பாதகனைக் கண்ணிற் காணுவதற்கும் அஞ்சி மலைகளும் மரங்களும் நடுங்கின ; பறவைகளும் கூவுதல் இன்றி ஒடுங்கின ; விலங்குகளும் அஞ்சின ; பாம்புகளும் படத்தைச் சுருக்கிக்கொண்டு ஒதுங்கின.

(அ-ரை): அவிந்து : ஒடுங்கி; குறைந்து : சுருங்கி; பாதகம் : பாவம்.

330. ஊண் இலன் ஆம்,என உலர்ந்த மேனியன்;
சேண்நெறி வந்ததோர் வருத்தச் செய்கையன்;
பாணியின் உழந்திடைப் படிக்கின் றான்என
வீணையின் இசைபட வேதம் பாடுவான்.

331. பூப்பொதி அவிழ்ந்தன நகை.யன்; பூதலம்
தீப்பொதிந் தாம்என மிதிக்கும் செய்கையன்;
காப்பரு நடுக்குறும் காலன்; கையினன்;
மூப்பெனும் பருவமும் முனிய முற்றினன்.

332. ஏத்தினள்; எய்தலும் 'இருத்திர் ஈண்(டு)'என
வேத்திரத்(து) ஆசனம் விதியின் நல்கினள்;
மாத்திரி தண்(டு) அயல் வைத்த வஞ்சனும்
பூத்தொடர் சாலையின் இருந்த போழ்தினே.

333. நடுங்கின மலைகளும், மரனும், நா அவிந்து
அடங்கின பறவையும்; விலங்கும் அஞ்சின;
படம்குறைந்(து) ஒதுங்கின பாம்பும்; பாதகக்
கடுந்தொழில் அரக்கனைக் காணும் கண்ணினே.

334. நீ யாரென்று கேட்ட இராவணனுக்குச் சீதை கூறுதல்.

(க - ரை:) "அடிகளே! உம்மைப்போன்ற பெரியோரைத் தவிர வேறு தெய்வம் கருதாதவனாகிய சனகமகாராசனுடைய புதல்வி; காகுத்தன் மனைவி" என்று சீதை இராவணனுக்குப் பதிலுரைத்தாள்.

(அ-ரை). அனகம் : பாவமற்ற, நெறிபடர் வழியில் ஒழுகுகின்ற, நும் அலால் : உம்மைப் போன்றவர்களையல்லாமல், காகுத்தன் . ககுத்தன் என்னும் அரசனின் மரபில் வந்தவன் காகுத்தன், இராமன்; இவ்வாறு வருவதைத் 'தத்திதாந்த நாமம்' என்பர் இலக்கண நூலார், மறுஇல் : குற்றம் இல்லாத.

335. முனிவடிவத்திலிருந்த இராவணன் சீதையிடம் தன் பெருமையைக் கூறுதல்.

(க - ரை): "நீர் எங்கிருந்து வருகிறீர்' என்று கேட்ட சீதைக்கு, "நான் இலங்கையிலிருந்து வருகிறேன்; அதற்கு அரசனாகிய இராவணனது பெருமையை நீர் அறிவீரா? அவன் இந்திரனுக்கும் மேலான இந்திரன்; சித்திரத்திலும் எழுத முடியாத அழகையுடையவன்; பிரமனுடைய குலத்தில் வந்தவன்; எப்பொழுதும் வேதங்களையே பயிலும் நாவையுடையவன்; தேவலோக முதல் எல்லா உலகங்களையும் ஆளுகின்றவன்."

(அ-ரை): சுந்தரம் . அழகு, அந்தரம் . வானுலகம்.

336. இதுவும் அது.

(க - ரை): "பிரமதேவனால் கொடுக்கப்பட்ட அளவற்ற வாழ்நாளை உடையவன்; சிவபெருமான் கொடுத்த வாளை ஏந்தியவன்; நவக்கிரகங்களையும் வாரிச் சிறையில் இட்டவன்; மேன்மையான குணத்தையுடையவன்."

(அ-ரை): அந்தம்இல் : முடிவில்லாத, நாரி . பெண், வெமகோள் : கொடிய கிரகங்கள் (நவக்கிரகங்கள)

337. இதுவும் அது.

(க - ரை): "நல்லொழுக்கத்தை யுடையவன்; அனேக பொருள்களைக் கேட்டறிந்தவன்; நேர்மையானவன்; மன்மதன் திகைக்கும்படியான அழகையுடையவன்; என்னைப் போன்ற துறவிகளெல்லாம் கடவுள் என்று எண்ணத்தக்கவன்; மும்மூர்த்திகளின் பெருமை முழுவதையும் அடைந்தவன்."

(அ-ரை): வெம்மை : கொடுமை, செம்மை : நேர்மை; செவ்வி : அழகு; பெற்றி : தன்மை.

334. 'அனகமா நெறிபடர் அடிகள்! நும்அலால்
நினைவதோர் தெய்வம்வே றிலாத நெஞ்சினன்;
சனகன்மா மகள்;பெயர் சனகி; காகுத்தன்
மனைவியான்' என்றனள் மறுவில் கற்பினாள்.

335. 'இந்திரற்(கு) இந்திரன்; எழுதல் ஆகலாச்
சுந்தரன்; நான்முகன் மரபில் தோன்றினன்;
அந்தரத் தோடும்எவ் வுலகும் ஆள்கின்றான்;
மந்திரத்(து) அருமறை வைகும் நாவினன்.

336. 'தாள்உடை மலர்உளான் தந்த அந்தம்இல்
நாள்உடை வாழ்க்கையன்; நாரி பாகததன்
வாள்உடைத் தடக்கையன்; வாரி வைத்தவெம்
கோள்உடைச் சிறையினன். குணங்கள் மேன்மையான்.'

337. 'வெம்மைதீர் ஒழுக்கினன்; விரிந்த கேள்வியன்;
செம்மையோன்; மன்மதன் திகைக்கும் செவ்வியன்;
எம்மனோர் அனைவரும் இறைவன் என்(று)எணும்
மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான்.'

**338.** *அங்ஙனங்கூறிய இராவணனுக்குச் சீதை கூறுதல்.*

**(க - ரை)** *: "முனிவர் வேடம்பூண்ட நீர், வனத்தில் முனிவர்களோடும் வசிக்கவில்லை; நாடு நகரங்களில் சென்று நன்மக்களோடும் பழகவில்லை; பாவிகளாகிய அரக்கர் இனத்தில் தங்கினீரே! வேடத்திற்குத் தகாத காரியஞ் செய்தீர்" என்றாள்.*

**(அ-ரை)**: *மருங்கு : பக்கம்; புனல் : நீர்வளம்; வைகினீர் : தங்கினீர்.*

**339.** *இராவணன் தன் உண்மை வடிவோடு தோன்றிச் சீதையை வெகுண்டு கூறுதல்.*

**(க - ரை)**. *"விண்ணவர்களும் நான் ஏவிய வேலைசெய்யும் படியாக வென்ற என் வீரத்தைப் பார்! பூமியில் ஒரு புழுவிற்குச் சமானமான மனிதர்கள் வலியரென்று கூறினாய்; பெண்ணாகை யால் தப்பினாய்; இல்லையேல் பிசைந்து தின்றிருப்பேன்; பெண் பழி வந்தாலும் சரியென்று உன்னைக் கொல்லுவேன்; அவ்வாறு செய்தால் என் உயிர் போய்விடுமென்று அஞ்சுகிறேன்."*

**(அ-ரை)**: *பிழைத்தாய் : தப்பினாய்.*

**340.** *சீதைக்கு இராவணன் கூறுதல்.*

**(க - ரை)** *: "அன்னமே! நீ கலங்காதே! இதுவரை யாரையும் கும்பிடாத என் தலைகள் ஒவ்வொன்றிலும் உன்னைத்தாங்கி, தேவமகளிர் எல்லாரும், நீ இட்ட வேலையைச் செய்ய, பதினன்கு உலகங்களையும் ஆளும் செல்வத்தில் நீ தங்குவாயாக" என்று கூறினன்.*

**(அ-ரை)**: *குலைவுறல் : கலங்காதே; அலகில் பூண் : அளவற்ற ஆபரணம்; உறைதி : தங்குவாய்.*

**341.** *அதற்குச் சீதை சொல்லுதல்.*

**(க - ரை)**: *அவன் சொல்லைக் கேட்டதும் சீதை தன் இரு காதுகளையும் பொத்திக் கொண்டு, "காகுத்தன் மனைவியாகிய என்னை, தேவர்களுக்கு முனிவர் தரும் அவிப்பாகத்தை விரும்பும் நாயைப்போல் விரும்பி என்ன சொன்னாய் அரக்கனே!" என்று சீறினள்.*

**(அ-ரை)**: *தளிர்க்கை : தளிர் போன்ற கை; வேட்டது : விரும்பினது.*

338. 'வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர்;
புனல்திரு நாட்டிடைப் புனிதர் ஊர்புக
நினைத்திலிர்; அறநெறி நினைக்கி லாதவர்
இனத்திடை வைகினிர்; என்செய் தீர்!'என்றாள்.

339. 'விண்ணவர் ஏவல் செய்ய
வென்றஎன் வீரம் பாராய்!
மண்ணிடைப் புழுவின் வாழும்
மானிடர் வலியர் என்றாய்!
பெண்எனப் பிழைத்தாய்!அல்லை;
உன்னையான் பிசைந்து தின்ன
எண்ணுவென் என்னின்,பின்னை
என்உயிர் இழப்பென்' என்றான்.

340. 'குலைவுறல் அன்னம்! முன்னம் யாரையும்கும்பி டாஎன்
தலைமிசை மகுடம் என்னத், தனித்தனி இனிது தாங்கி
அலகில்பூண் அரம்பை மாதர் அடிமுறை ஏவல் செய்ய,
உலகம்ஈ ரேழும் ஆளும் செல்வத்துள் உறைதி!' என்றான்.

341. செவிகளைத் தளிர்க்கை யாலே
சிக்குறச் சேமம் செய்தாள்;
'கவினும்வெம் சிலைக்கை வென்றிக்
காகுத்தன் கற்பி னேனைப்,
புவியிடை ஒழுக்கம் நோக்காப்,
பொங்(கு)எரிப் புனிதர் ஈயும்
அவியை,நாய் வேட்ட(து)என்ன,
என் சொனாய் அரக்க!'என்னா.

342. இராவணன் சீதையை எடுத்தல்.

(க - ரை): அப்பொழுது அவன் பிரமன் கொடுத்த சாபத்தை நினைத்து, அவளைத் தீண்டாதவனாகிப் பூமியை ஒரு யோசனைதூரம் அவள் இருந்த இடத்தோடு பெயர்த்தான்.

(அ-ரை): ஆண்டு : அப்பொழுது; ஆயிடை . அவ்விடத்து; ஆயிழை : ஆராய்ந்தெடுத்த அணிகளையுடையவள், சீதை, அயன் : பிரமன்; கீண்டான் : பெயர்த்தெடுத்தான்.

343. சீதை மரங்கள் முதலியவற்றைப் பார்த்துக் கூறல்.

(க - ரை): "மலைகளே! மரங்களே! மயில்களே! குயில்களே! ஆண் மான்களே! பெண் மான்களே! ஆண் யானைகளே! பெண் யானைகளே! என் உயிரோ நிற்காது; இராம இலக்குவரிடத்திற்குப் போய் இராவணன் என்னை எடுத்துச் செல்லுவதைச் சொல்லுவீர்களாக."

(அ-ரை). கலை ஆண் மான், பிணை பெண் மான்; களிறு : ஆண் யானை; பிடி : பெண் யானை, உலையா அழியாத, நேடினிர்போய் தேடிப்போய்; உழை : இடம்.

344. சீதை கோதாவரியைப் பார்த்துக் கூறல்.

(க - ரை): "கோதாவரியே! நீ குளிர்ந்து நழைந்து காணப்படுகின்றாய், தாயைப் போன்றிருக்கின்றாய், தெளிந்த மனமுடையவளைப்போல் காணப்படுகின்றாய்; நீ விரைவாக ஓடிப் போய் இராம இலக்குவரிடத்தில் என் நிலையைச் சொல்ல மாட்டாயா?"

(அ-ரை) ஓதாது உணர்வார் · சொல்லாமலே குறிப்பால் உணர்பவர்; உழை : இடத்தில், மனன் . மனம - போலி

சீதையைக் காக்க வந்த சடாயு இராவணனால் கொல்லப் பட்டதைக் கூறுவது.

345. இராவணனால் சிறகு அறுக்கப்பட்ட சடாயுவைக் கண்டு சீதை கூறுதல்.

(க - ரை): 'இலக்குவன் சொன்ன சொல்லை மீறி, அவனை என்னைவிட்டு விலகச்செய்தேன்; அடுத்து இராவணனோடு போர் புரிந்த சடாயுவின் சிறகுகள் அறுபட, அதைக் கண்டு மயங்குகின்றேன். என்னைத் துன்புறுத்தும் விதி இன்னும் என்ன என்ன செய்விக்குமோ!' என்று கலங்கினாள்.

(அ-ரை): பின்னவர் : தம்பி; பேதை : அறிவிலி; பொரும் : போர் புரியும்.

342. ஆண்டா யிடைதீ யவன்,'ஆ யிழையைத்
தீண்டான் அயன்முன் உரைசிந் தைசெயாத்;
தூண்தான் எனலாம் உயர்தோள் வலியால்,
கீண்டான் நிலம்யோ சனைகீழ்ப் புடையே.

343. 'மலையே! மரனே! மயிலே! குயிலே!
கலையே! பிணையே! களிறே! பிடியே!
நிலையா உயிரே! நிலைநே டினிர் போய்
உலையா வலியார் உழைநீர் உரையீர்!'

344. 'கோதா வரியே! குளிர்வாய்! குழைவாய்!
மாதா அனையாய்! மனனே தெளிவாய்!
ஓதா(து) உணர்வார் உழை,ஓ டினைபோய்
நீதான் வினையேன் நிலைசொல் லலையோ?'

சடாயு உயிர் நீத்த படலம்

345. 'பின்னவன் உரையினை மறுத்துப், பேதையேன்
அன்னவன் தனைக்கடி(து) அகற்றினேன்; பொரும்
மன்னவன் சிறைஅற மயங்கி னேன்;விதி
இன்னமும் எவ்வினை இயற்று மோ!'என.

**346. இதுவும் அது.**

**(க - ரை) :** "என்னைக் காக்க வந்த நல்லவராகிய சடாயு தோற்க ஒரு பாவி வெல்வதா? அறம் தோற்கப் பாவம் வெல்லுவதா? தருமம் இல்லையா! தருமம் அழியாது என்று கூறும் வேதமும் பொய்க்குமோ?" என இரங்கிக் கலங்கினாள்.

**(அ-ரை).** அல்லல் : துன்பம். நரகன் நரகத்தில் இருக்கத் தக்கவன்.

**347.** சடாயுவின் நிலை.

**(க - ரை) :** வெட்டி வீழ்த்திய சிறகுகள் இரத்த வெள்ளத்தில் முழுகவும், சீதையை மீட்கவில்லையே என்ற மானமும், இராம இலக்குவரைக் காணவேண்டுமென்ற அன்பும் தன் மனத்தே உறுத்திக் கிடக்கவும் மயங்கிப் பூமியில் கிடந்தான்.

**(அ-ரை)**: வஞ்சி பூங்கொடி போன்ற சீதை, குருதி : இரத்தம். செஞ்செவே : செவ்வையாக.

**348.** பர்ணசாலையில் சீதையைக் காணாது திகைத்த இராமன் நிலை.

**(க - ரை) :** சீதையைக் காணாது திகைத்த இராமன், வேறொரு பொருளும் இன்றிச் சமயத்துக்கு உதவும்படியாகத் தான் புதைத்து வைத்த பொருள் பூமியோடு காணாமல் போனால் அல்லது அதைப் பிறர் கவர்ந்துகொண்டால் ஒருவன் எவ்வளவு திகைத்து ஏக்கமுறுவு நிற்பானோ அப்படி நின்றான்.

**(அ-ரை)** கைத்த வெறுப்படைந்த; உய்த்து சேமித்து வைத்து, கனம குழை அணங்கு கனமான காதணியணிந்த தெய்வப் பெண், சீதை. பொய்த்துளோர் : கள்வர்.

இங்கு உவமைநயம் கருதத்தக்கது.

**349.** சடாயுவின் அருகில் நின்று இராமன் புலம்பல்.

**(க - ரை) :** "என் மனைவி பிறனால் அபகரிக்கப்பட, அவனை எதிர்த்த மேலோனாகிய உன்னைக் கொன்றவனும் இருக்கின்றான். நானும், வில்லோடும் அம்போடும் ஒரு நெடுமரம்போல் நிற்கின்றேன்."

**(அ-ரை).** வாளி : அம்பு; ஏற்றாய் : எதிர்த்து நின்றாய்; வன்தாள் : வலிய கால் (வில்லினுடையது).

316. 'அல்லல்உற் றேனைவந்(து) அஞ்சல் என்றஇந்
நல்லவன் தோற்பதே! நரகன் வெல்வதே!
வெல்வதும் பாவமோ! வேதம் பொய்க்குமோ!
இல்லையோ அறம்'என இரங்கி ஏங்கினாள்.

347. அஞ்சிறை குருதியா(று) அழிந்து சோரவும்,
'வஞ்சியை மீட்டிலென்' என்னும் மானமும்,
செஞ்செவே மக்கள்பால் சென்ற காதலும்
நெஞ்சுறத், துயின்றனன் உணர்வு நீங்கலான்.

348. கைத்த சிந்தையன் கனம்குழை
அணங்கினைக் காணு(து)
உய்த்து வாழ்தர வேறொரு
பொருள் இலான், உதவ
வைத்த மாநிதி மண்ணொடு
மறைந்தன, வாங்கிப்
பொய்த்துளோர்கொளத்
திகைத்துநின் றானையும் போன்றான்

349. 'என்தாரம் பற்றுண்ண ஏன்றாயைச் சான்றோயைக்
கொன்றானும் நின்றான்; கொலையுண்டு நீகிடந்தாய்;
வன்தாள் சிலைஏந்தி, வாளிக் கடல்சுமந்து,
நின்றேனும் நின்றேன், நெடுமரம் போல் நின்றேனே.'

**350.** சடாயு மயக்கந்தேறி இராம இலக்குவரைத் தேற்றுதல்.

**(க - ரை) :** "ஒருவருக்குப் பழைய வினைப்படி இன்ப துன்பங்கள் வரும்; புதிதாக ஒன்றையும் உண்டாக்கிக்கொள்ள முடியாது. ஆதலால் இது முற்பிறப்பில் செய்த வினையின் பயனென்று அமைதியாக இருக்கவேண்டும். விதியை நமது மதியால் வெல்ல முடியுமா?"

**(அ-ரை):** அதிசயம்: புதுமை (புதிய நிகழ்ச்சி மேல நின்றது) பண்பாகு பெயர்; துதியறு: இகழத்தக்க.

**351.** இதுவும் அது.

**(க - ரை) :** "வில்லேந்திய வீரர்களே! சீதையாகிய ஒரு பெண்ணைக் காட்டில் ஒரு துணையும் இன்றித் தனியாக இருக்க விட்டுவிட்டு, ஒரு மானின் பின்னால் போய் உங்கள் குலத்திற்கே பழி தேடிக்கொண்டீர்கள். அது உங்கள் குற்றமேயன்றிப் பிறர் செய்த குற்றமாகுமா?"

**(அ-ரை):** வம்பு: கச்சு. அமர் இழை: அமைபைச் செலுத்துகின்ற; கொம்பு இழை: கொடியினுள் தீமை செய்யக்கூடிய.

**352.** இறந்த சடாயுவுக்கு இராமன் நீர்க்கடன் செலுத்துதல்.

**(க - ரை) :** தான் தந்தையாகக் கொண்ட முறைமைக்கேற்ப இறந்தவர்க்குச் செய்யும் சடங்குகளை எல்லாம் இராமன் செய்து முடித்தான். அந்தச் சமயத்தில் சூரியன் மறைந்தான்.

**(அ-ரை):** மேலை வேலை: மேற்கடல்; புனல்: தண்ணீர்; வெய்யோன்: சூரியன்; இது தற்குறிப்பேற்ற அணி.

அயோமுகி என்பவளின் செய்தி கூறுவது.

**353.** அயோமுகி, இலக்குவனைப் பற்றல்.

**(க - ரை) :** அயோமுகி என்னும் அரக்கி இலக்குவனை வாரி யெடுத்துத் தன் மார்பினிடைத் தழுவிக்கொள்ள அவள் உருவில் அடங்கிய இலக்குவனது தோற்றம் யானைத்தோல் போர்த்துக் கொண்ட உருத்திரபகவானை ஒத்திருந்தது.

**(அ-ரை): பூங்கழல்:** பொலிவு பொருந்திய வீரகண்டை; **மீளி:** வீரன்; **மத ஓங்கல்:** மதத்தைச் சொரியும் மலை; என்றது யானையை; இதை வெளிப்படை யென்பர் இலக்கண நூலார்; **வீங்கிய:** மிகுந்த; **உருத்திரன்:** சிவன்.

350. 'அதிசயம் ஒருவரால் அமைக்கல் ஆகுமோ!
துதியறு பிறவியின் இன்ப துன்பந்தான்
விதிவயம் என்பதை மேற்கொ ளாவிடின்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ?'

351. 'வம்(பு)இழைக் கொங்கை வஞ்சி,
வனத்திடைத் தமியள் வைகக்,
கொம்பிழை மானின் பின்போய்க்,
குலப்பழி கூட்டிக் கொண்டீர்!
அம்(பு)இழை வரிவில் செங்கை
ஐயன்மீர்! ஆயும் காலை,
உம்பிழை என்ப(து) அல்லால்,
உலகம்செய் பிழையும் உண்டோ?'

352. பல்வகைத் துறையும், வேதப்
பலிக்கடன் பலவும் முற்றி,
வெல்வகைக் குமரன் நின்ற
வேலையின், வேலை சார்ந்தான்
தொல்வகைக் குலத்தின் வந்தான்
துன்பத்தால், புனலும் தோய்ந்து
செல்வகைக்(கு) உரிய எல்லாம்
செய்குவான் என்ன வெய்யோன்.

## அயோமுகிப் படலம்

353. ஆங்கவள் மார்பொடு கையின் அடங்கிப்
பூங்கழல் வார்சிலை மீளி பொலிந்தான்;
வீங்கிய வெம்சின வீழ்மத வெம்போர்
ஓங்கல் உரிக்குள் உருத்திரன் ஒத்தான்.

**354.** தன்னைத் தேடிவந்த இராமனை இலக்குவன் அடைதல்.

**(க - ரை):** "அண்ணா! இதோ அடியேன் வந்துவிட்டேன்; வருந்தாதீர்; வாழிய!" என்று கூறி, இராமனுடைய பாதத்தில் வீழ்ந்தான். இலக்குவனைக் கண்ட இராமன், இழந்த கண்ணைப் பெற்றவன்போல் ஆனான்.

**(அ-ரை):** வருந்தல்: வருந்தாதே; அந்தம்இல்: அளவில்லாத, முடிவில்லாத; உள்ளம்: ஊக்கமுடைமை; நயனம்: கண்; சந்தம்: அழகு; புரை: போன்ற; சரணம்: பாதம்; இங்கு உவமை நயம் கருதத்தக்கது.

கவந்தன் என்னும் அரக்கனது செய்தியைக் கூறுவது.

கவந்தம்: தலையில்லாத முண்டம். உடம்பின் தன்மையால் பெயர் பெற்றவன்.

**355.** இராம இலக்குவர் கவந்தனைக் காண்டல்.

**(க - ரை):** கவந்தனது பிளந்த வாயைப் பார்த்ததும், 'இது அரக்கருடைய நகருக்குள் போவதற்குரிய கோபுர வாயிலோ?' என்று ஐயமுற்றனர்.

**(அ-ரை):** நேமி வட்ட வடிவு; பகுவாய்: பிளந்த வாய்; உரு: அச்சம்; உன்னினர்: நினைத்தார்.

**356.** இராமன் இலக்குவனுக்குக் கூறுதல்.

**(க - ரை):** "தம்பி! சீதைபோய் பிரிந்துவிட்டாள்; தந்தைக்குத் தந்தையாக வந்த சடாயுவும் இறந்தார்; நானும் இனி இந்த உடலோடு அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருக்க விரும்பவில்லை. நான் இந்தப் பூதத்திற்கு இப்பொழுது இரையாகிறேன்; நீ நகரத்திற்குப் போய்விடு" என்று கூறினான்.

**(அ—ரை):** வெம்பழி: கொடிய பழி; உழல: திரிய, ஆமிடம்: மாமிச உணவு; ஏகுதி: செல்வாய்.

**357** இராம இலக்குவரால் வதைக்கப்பட்டுத் தனது பழைய வடிவம் எய்திய கவந்தன் இராமனைத் துதித்தல்.

**(க - ரை):** "உலகத்தில் பொருள்களை அறிபவர், அறியப்படும் பொருள் ஆகிய இவற்றுக்கு அறிவாகி அவற்றோடு பிரியாது நிற்கின்றாய்! உன்னுடைய கருணையின் பெருமையினால் உலகை வயிற்றில் அடக்கிப் பின் வெளியிடுகின்றாய்! நீ ஆணோ? பெண்ணோ? அதற்கு மேற்பட்ட பொருளோ? நின் தன்மையை யார் அறிய வல்லவர்கள்?"

**(அ—ரை):** கண்ணுகி: அறிவாகி; காண்டல்: அறிதல்; ஒன்றை யறியுமிடத்து அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என மூன்று வேண்டும்; அவை, இங்கு காண்பான் காணப்படு பொருள், கண், எனக் கூறப்பட்டன. அவை முறையே ஞாதுரு ஞேயம், ஞானம் என வடமொழியில் கூறப்படும்.

354. 'வந்தனென் அடியனேன்; வருந்தல்! வாழிநின்
அந்தம்இல் உள்ளம்' என்(று) அறியக் கூறுவான்
சந்தம்மென் தளிர்புரை சரணம் சார்ந்தனன்;
சிந்தின நயனம்வந் தனைய செய்கையான்.

நவந்தன் படலம்

355. நீர்புகும் நெடுங்கடல் அடங்கும்; நேமிசூழ்
பார்புகு நெடும்பகு வாயைப் பார்த்தனர்;
'சூர்புகல் அரியதோர் அரக்கர் தொல்மதில்
ஊர்புகு வாயிலோ, இ(து)?' என்(று) உன்னினர்.

356. 'தோகையும் பிரிந்தனள்; எந்தை துஞ்சினன்;
வேகவெம் பழிசுமந்(து) உழல வேண்டலேன்;
ஆகலின் யான்இனி இதனுக்(கு) ஆமிடம்;
ஏகுதி ஈண்டுநின்(று) இளவலே!' என்றான்.

357. 'காண்பார்க்கும் காணப் படுபொருட்கும் கண்ணாகிப்
பூண்பாய் போல் நிற்றியால்! யாதொன்றும் பூணாதாய்!
மாண்பால் உலகை வயிற்றொளித்து வாங்குதியால்!
ஆண்பாலோ? பெண்பாலோ? அப்பாலோ? எப்பாலோ?'

**358.** இதுவும் அது.

(**க - ரை**): "எம்பெருமானே! எனக்குப் பிறப்பினால் உண்டாகக்கூடிய மயக்கத்தை நீக்கிக் குற்றமில்லாத உடம்பைக் கொடுத்து, துக்கமென்ற கடலினின்றும் கரையேற்றுவித்து, அறியாமையால் உண்டாகிய மாறுபாடுகளையெல்லாம் நீக்கியொழித்தாய்! நாய் போன்றவனாகி, இழிதொழிலைச் செய்கின்ற நான் இப்பொழுது, உமது கருணைக்கு உரியவனானதற்கு என்ன புண்ணியம் செய்தேனோ?" என்று கவந்தன் துதித்தான்.

(**அ—ரை**): மயல்: மயக்கம்; மாசிலா: குற்றமில்லாத. காயம: உடம்பு. **பிணக்கு**: மாறுபாடு. பேதை: அறியாமை.

சபரி என்னும் பெண் முத்தியடைந்ததைப் பற்றிக் கூறுவது

**359.** இராம இலக்குவர் சபரியை நோக்கி முகமன் கூறுதல்.

(**க - ரை**): "இன்றுதான் என் தவம் பலித்தது" என்று கூறிய சபரியை, "நீ செய்த உபசாரத்தால் எங்கள் வழிவந்த வருத்தம் நீங்கினோம்; நீ வாழ்வாயாக!" என்று வாழ்த்தினர்.

(**அ—ரை**): பூத்தது: விளைந்தது; அம்மனை அம்மா.

**360.** இராம இலக்குவர் பம்பைக் குளத்தை யடைதல்.

(**க - ரை**): இராம இலக்குவர் சோலைகளையும், குன்றுகளையும், திசைகளையும் கடந்து பம்பைக் குளத்தை யடைந்தார்கள்.

(**அ—ரை**): **மண் இடை**: பூமியில்; **வைகல்தோறும்**: நாள்தோறும்; **கட்டழல்**: மிக்க நெருப்பு; **கதுவலாலே**: பற்றுவதாலே; **பொய்கை**: குளம்.

358. 'மாயப் பிறவி மயல்நீக்கி மாசிலாக்
காயத்தை நல்கித் துயரின் கரையேற்றிப்
பேயொத்த பேதைப் பிணக்கறுத்த எம்பெருமான்!
நாயொத்தேன் என்னை நலன்இழைத்தேன் நான்'என்றான்.

## சபரி பிறப்பு நீங்கு படலம்

359. 'இருந்தனென், எந்தைநீ ஈண்(டு)
எய்துதி என்னும் தன்மை
பொருந்திட இன்று தான்என்
புண்ணியம் பூத்த(து)'என்ன,
அருந்தவத்(து) அரசி தன்னை
அன்புற நோக்கி,'நங்கள்
வருந்துறு துயரம் தீர்த்தாய்,
அம்மனை வாழி!'என்றார்.

360. தண்எனும் கானும் குன்றும்,
திசைகளும், தவிரப் போனார்;
மண்இடை வைகல் தோறும்
வரம்பிலா(து) ஆடும் மாக்கள்
கண்ணிய வினைகள் என்னும்
கட்டழல் கதுவ லாலே
புண்ணியம் உருகிற் றன்ன,
பம்பையாம் பொய்கை புக்கார்

கிட்கிந்தை என்னும் இடத்தில் நடந்தவற்றைக் கூறுவது. பம்பையென்னும குளத்தில் நிகழ்ந்தவற்றைக் கூறுவது.

**361.** கடவுள் வாழ்த்து.

**(க - ரை) :** மூன்று வடிவங்களுக்கேற்ப முக்குணமும் ஆகிய முதல்வன், உலகத்தில் தோன்றிய அனைவரும் தன்னை முழுமுதற் கடவுளென்று சொல்லுவதற்குப் பொருத்தமாகிய எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருப்பவனே; ஞானிகள் அறிவுக்கு அறியப்படும் பொருளாய் உள்ளவனும் அவனே.

**(அ-ரை).** மூன்று உரு: அரி, அயன், அரன், என்று ஏற்று நின்று; சான்று: சாட்சி, முக்குணங்களாவன சத்துவம், இராஜஸம, தாமஸம என்பன.

**362.** பம்பையின் வர்ணனை.

**(க - ரை) :** குளத்தின் நடுப்பகுதியில் உள்ள நீர், அரிந்த பளிங்குபோலத் தெளிந்ததாக இருக்கின்றது. அது தமக்கென அறிவு பெற்று எப்பொழுதும் மாருத தன்மையுடையவர்களைப் போன்றிருக்கின்றது. கரைகளைச்சுற்றிலும் உள்ள நீர் நவரத்தினங்கள் பரவியிருப்பதால் நிறம மாறிக் காணப்படுகின்றது. அது தமக்கென ஒரு தெளிந்த அறிவில்லாதவர்களாய்த் தாம் சேர்ந்த இடத்திற்கேற்ப அறிவு மாறிமாறி அமையபவர்களை ஒத்திருக்கின்றது.

**(அ-ரை)** ஏய்ந்த அரிந்த, பளிங்குபோல குளிர்ந்த தண்ணீர், பேர்ந்து தோன்றும்: மாறி மாறி ஒளிர்கின்ற, பிதிர்கை கரையைக் குறிக்கிறது, ஓர்ந்து ஆராய்ந்து, உணர்வில்லாதவர் தமக்கென அறிவில்லாதவர்.

**363.** இதுவும் அது.

**(க - ரை) :** அதில் உள்ள மீன்கள் அலைபடுகருங்கேழ்த்தாம அலையில் முழுகுகின்றன. அது எதைப் போலிருக்கிறதென்றால், இராமன் அவற்றை நோக்கினால் அவை சீதையின் கண்ணுக்கு இணையென்று எண்ணிக் கண்ணில் கண்ணீர் சொட்ட வருந்துவானென்று, அவனுக்குக் காட்டாதபடி அவை நீரில் ஒளித்துக்கொள்வதைப்போல் காணப்பட்டன.

**(அ-ரை):** களிப்படா மனத்தவன் .(சீதையைப் பிரிந்ததால்) மகிழ்ச்சியில்லாத மனத்தையுடையவன், இராமன்; களிப்படா களி சமானமாகாத. கண்ணின் கேள் கண்ணின் உறவு. இப்பாடல் தற்குறிப்பேற்ற அணி

**364.** இராமன் தாமரையை நோக்கிக் கூறுதல்.

**(க - ரை) :** "தாமரையே! உன்னிடத்தில் எப்பொழுதும் வசிப்பவளாகிய லக்ஷ்மியின் அம்சமாகிய சீதை இப்பொழுது என்னிடத்தில் இல்லை. என்னையல்லாத வேறிடத்திலும் இருக்க மாட்டாள். உன்னிடத்தில் விருப்போடு வசிக்கின்ற அவள் இப்பொழுது உன்னிடத்தில் இல்லையென்றால் உன்னோடு எனக்கென்ன உறவு?"

**(அ-ரை):** பொருவும் : போன்ற; அல்லி : அகவிதழ்; புல்லி : தங்கி, பொருந்தி; தமிழ்ப்பாட்டு : இனிமையான பாட்டு; தமிழ் என்ற சொல்லுக்கு இனிமையென்ற பொருள் உள்ளதைத் 'தமிழ்தழீஇய சாயலவர்' என்ற சிந்தாமணி அடியில் காண்க.

# கிட்கிந்தா காண்டம்

## பம்பைப் படலம்

361. மூன்(று)உரு எனக்குணம் மும்மை யாம்முதல்
தோன்றுஉரு எவையும்;அம் முதலைச் சொல்லுதற்(கு)
ஏன்(று)உரு அமைந்தவும், இடையில் நின்றவும்,
சான்(று)உரு; உணர்வினுக்(கு) உணர்வ(து)ஆயினான்.

362. ஈர்ந்தநுண் பளிங்கெனத் தெளிந்த ஈர்ம்புனல்,
பேர்ந்தொளிர் நவமணி படர்ந்த பித்திகை,
சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலால்
ஓர்ந்(து)உணர் வில்லவர் உள்ளம் ஒப்பது.

363. களிப்படா மனத்தவன் காணின், 'கற்பெனும்
கிளிப்படா மொழியவள் விழியின் கேள்'எனத்,
துளிப்படா நயனங்கள் துளிப்பச் சோரும்'என்(று)
ஒளிப்படா(து) ஆயிடை ஒளிக்கும் மீனது

364. 'பொன்பால் பொருவும் விரைஅல்லி
புல்லிப் பொலிந்த பொலந்தாது
தன்பால் தழுவும் குழல்வண்டு,
தமிழ்ப்பாட்(டு) இசைக்கும் தாமரையே!
என்பால் இல்லை; அப்பாலோ
இருப்பார் அல்லர்; விருப்புடைய
உன்பால் இல்லை என்றக்கால்
ஒளிப்பா ரோடும் உறவுண்டோ?'

அனுமனைப்பற்றிக் கூறுவது.

**365.** இராம இலக்குவரைக்கண்ட அனுமன் கருதுதல்.

**(க - ரை)** : "அறத்தையும், மேன்மைக் குணத்தையும் தங்களுக்கு நிதியமாகக் கொண்ட தன்மையுடையவர்; இவர்களைப் பார்த்தால் தங்களுக்கு ஒரு பொருளும் அவசியமில்லையென்று காணப்படுகின்றனர். முகக்குறிப்பை உற்று நோக்கினால், கிடைத்தற்கரிய ஏதோ ஒருபொருளை இழந்து விட்டனர் என்று தெரிகிறது: அதை இரு பக்கங்களிலும் தேடிக்கொண்டிருக்கின்றனர்."

**(அ-ரை).** தகவு: மேன்மை; தனம்: நிதியம், கருமம்: காரியம், இரு மருங்கினும்: இரு பக்கங்களிலும்; துருவுகின்றனர்: தேடுகின்றனர்; அருமருந்து கிடைத்தற்கரிய தேவாமிர்தம்.

**366.** இதுவும் அது.

**(க - ரை)** : "இவர்கள் தேவர்களோ! இவரைக் கண்ட மாத்திரத்தில் என் மனம் உருகுகின்றது; அளவற்ற அன்பு பெருகுகின்றது. இவர்கள் இங்கு வந்தது எதற்கென்று என்னால் தெரிந்துகொள்ள முடியவில்லை."

**(அ-ரை).** தென்புலம்: தெற்குத் திசை; இவாகின்றது மிகுகின்றது, அவதி: எல்லை; அடைவு வந்தது; அறிதல் தேறுறேன்: அறிந்துகொள்ள முடியவில்லை.

**367.** இராமன் அனுமனை, நீ யாரென வினவுதல்.

**(க - ரை)** : இவ்வாறு எண்ணிய அனுமான், இராம இலக்குவரை எதிர்ப்பட்டு, "உங்கள் வரவு நல்வரவாகுக" என்று வணங்கலும், அதற்கு இராமன், "நீ யார்?" எனக்கேட்டான். பின் அனுமன் பதில் சொல்லுவானானான்.

**(அ-ரை)**: செவ்வழி உள்ளம்: நேர்மையான வழியில் செல்லும் மனம்; கவ்வை: ஆரவாரம்; இங்கு 'தீமை' யென்ற பொருளில வந்துளளது, வெவ்வழி, தீய வழி.

**368.** இராமன் அனுமனைப்பற்றி இலக்குவனிடம் கூறுதல்.

**(க - ரை)** : "இளையவனே! இவன் சொற்களிலிருந்து எல்லாக் கலைகளையும் வேதங்களையும், இவன் நன்கு கற்றவனென்று தெரிகிறது. ஆதலின் இவனை ஒரு சொல்லின் செல்வனென்று கூறலாம். இவன் பிரமனோ? சிவபெருமானோ?" என்று இலக்குவனை வினவினான்.

**(அ-ரை).** இசை: புகழ்; காட்சி: தோற்றம், விரிஞ்சன்: பிரமன்; விடை வல்லான்: சிவபெருமான்.

'சொல்லால் அறிப ஒருவனை' என்ற நான்மணிக்கடிகை அடியை இங்கு ஒப்புநோக்குக.

## அனுமப் படலம்

365. 'தருமமும், தகவும், இவர்
தனமெனும் தகையர்;வரு
கருமமும் பிறிதொர்பொருள்
கருதிஅன்(று); அதுகருதின்
அருமருந்(து) அனையது,இடை
அழிவுவந் துள(து):அதனை
இருமருங் கினும்நெடிது
துருவுகின் றனர் இவர்கள'

366. 'துன்பினைத் துடைத்து, மாயத்
தொல்வினை தன்னை நீக்கித்,
தென்புலத் தன்றி மீளா
நெறிஉய்க்கும் தேவ ரோதாம்;
என்பெனக்(கு) உருகுகின்ற(து);
இவர்கின்ற(து) அளவில் காதல்;
அன்பினுக்(கு) அவதி இல்லை;
அடை(வு)என்கொல் அறிதல் தேற்றேன்.'

367. இவ்வழி எண்ணி, ஆண்(டு)அவ்
விருவரும் எய்த லோடும்,
செவ்வழி உள்ளத் தானும்
தெரிவுற எதிர்சென்(று) எய்திக
'கவ்வையின்(று)ஆக நுங்கள்
வர(வு)'எனக் கருணை யோனும்,
'வெவ்வழி நீங்கி யோய்!நீ
யார்?'என விளம்பல் உற்றான்.

368. 'இல்லாத உலகத் தெங்கும்,
இங்கிவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும்,வேதக்
கடலுமே; என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற்(று) அன்றே;
யார்கொல் இச் சொல்லின் செல்வன்,
வில்லார்தோள் இளைய வீர,
விரிஞ்சனோ! விடைவல் லானோ?'

**369.** அனுமானுக்கு இலக்குவன் தங்கள் வரலாற்றைக் கூறல்.

**(க - ரை):** "ஐய! எங்கள் தலைவனாகிய சுக்கிரீவனுக்கு உங்களைப் பற்றித் தெரிவிக்க வேண்டுமே" என்று அனுமன் கேட்க, இளையவன் தங்கள் வரலாறு அனைத்தையும் கூறலுற்றான்.

**(அ-ரை)** விளம்புகேன் சொல்லுவேன்; மரபுளி: முறைமைப்படி, வரிசையாக. மெய்ம்மையின் வேலி போல்வான்: உண்மைக்கு வேலி போன்றவன்.

**370.** அனுமன் தனக்குரிய வடிவத்தோடு நிற்றல்.

**(க - ரை):** இராம இலக்குவர் வியப்புறும்படியும் மகாமேரு மலையும் தன் தோளுக்குத் நிகராகாது என்னும்படியும் தனது பெரிய வடிவத்தோடு அனுமன் நின்றான்.

**(அ-ரை)** மின் மின்னல். உரு: வடிவம். பொன் உருக்கொண்ட மேரு: பொன் மயமான பெருமலை, தருமத்தின் தனிமை தீர்ப்பான்: ஒன்றாக இருந்த தருமம் இப்பொழுது இரண்டாக இருக்கிறது என்னும்படியாக உள்ளவன்.

இப்பாடல் மருட்கைச் சுவை அமைந்தது.

**371** இராமனது மகிழ்ச்சி.

**(க - ரை):** "இளையவனே! நல்ல நிமித்தங்கள் உண்டாகின்றன; அனுமனைத் துணையாகப் பெற்றோம்; இனி நமக்குத் துன்பம் கிடையாது; மகிழ்ச்சியே உண்டாகும்; இந்த அனுமன், தன் சொல்லின்படி வேலை கேட்கத் தலைவனாக இருக்கும் சுக்கிரீவன். எவ்வளவு வலியவனோ? அவன் வலிமை சொல்ல முடியாதது" என்றான் இராமன்.

**(அ—ரை):** நிமித்தம்: சகுனம்; கவி: குரங்கு; எய்திற்று: காலவழுவமைதி.

இராம இலக்குவர் சுக்கிரீவனோடு நட்புக் கொள்ளுதலைக் கூறுவது.

**372.** சுக்கிரீவன் இராம இலக்குவரைக் காண்டல்.

**(க - ரை):** அவர்கள் வடிவைக் கண்டு, சுக்கிரீவன், "பிரமன் படைத்த நாளிலிருந்து இந்த உலகம் இதுவரை அடைந்த பாக்கியங்களெல்லாம் உயர்ந்த தோள்களோடு இரண்டு வடிவு பெற்று வந்தன ஆகும்" என்று கூறி நெடுநேரம் நின்றுவிட்டான்.

**(அ—ரை):** நொடிவரும்: சொல்லுதற்கு அரிய; படிவம்: வடிவம்; மேக்குயர்: மேலே உயர்ந்த.

369 'யார்என விளம்பு கேன்யான்
எம்குலத் தலைவற்(கு) உம்மை;
வீரநீர் பணித்திர்' என்றான்,
மெய்ம்மையின் வேலி போல்வான்;
வார்கழல் இளைய வீரன்,
மரபுளி, வாய்மை யாதும்
சோர்விலன், நிலைமை யெல்லாம்
தெரிவுறச் சொல்லல் உற்றான்

370 மின்உருக் கொண்ட வில்லோர்
வியப்புற, வேத நன்னூல்
பின்உருக் கொண்ட(து) என்னும்
பெருமையாம் பொருளும் தாழ
பொன்உருக் கொண்ட மேரு
புயத்திற் கும் உவமை போதாத
தன்உருக் கொண்டு நின்றான்
தருமத்தின் தனிமை தீர்ப்பான்.

371. 'நல்லன நிமித்தம் பெற்றோம்;
நம்பியைப் பெற்றோம்; நம்பால்
இல்லையே துன்பமான(து)
இன்பமும் எய்திற்(று); இன்னும்,
வில்லினாய்! இவனைப் போலாம்
கவிக்குலக் குரிசில் வீரன்
சொல்லினால் ஏவல் செய்வான்,
அவன்நிலை சொல்லல் பாற்றோ?'

நட்புக் கோள் படலம்

372. நோக்கினான் நெடிது நின்றான்;
'நொடிவரும் கமலத்(து) அண்ணல்
ஆக்கிய உலகம் எல்லாம்
அன்றுதொட்(டு) இன்று காறும்
பாக்கியம் புரிந்த எல்லாம்
குவிந்(து) இரு படிவம் ஆகி
மேக்குயர் தடந்தோள் பெற்று,
வீரராய் விளைந்த' என்பான்.

**373.** சுக்கிரீவன், இராமன் ஆகிய இருவரின் தோற்றம்.

**(க - ரை):** அங்கிருந்த சுக்கிரீவனையும் இராமனையும் நோக்கினால் அரக்கர்களை வேரோடு அழிக்கத் தவமும், முயற்சியும் கூடி நிற்பது போலவும் கல்வியும் ஞானமும் கூடி நிற்பது போலவும் காணப்பட்டனர். இது கவிக் கூற்று.

**(அ—ரை).** கூட்டம ஒத்திருந்த : ஒரு சேர இருந்த; ஈட்டிய : சேர்த்த; தவம் : தவ வலிமை; வாங்க : களைய; ஞானம : அறிவு.

தவம் செய்து பெற்ற வலிமையை முயற்சியினால் பயன்படுததலும், கற்ற கல்வியை அறிவினாற் பயன்படுத்தலுமாம். தவமும் கல்வியும் இராமனுக்கும், முயற்சியும அறிவும சுக்கிரீவனுக்கும உவமை கூறப்பட்டன.

**374.** இராமனைப் பற்றாக அடைந்தமைக்குச் சுக்கிரீவன் பெருமை கொள்ளல்.

**(க - ரை):** அப்பொழுது சுக்கிரீவன் இராமனைப் பார்த்து, "இவ்வுலகில் என்னைப் போலத் தவஞ் செய்தவர் வேறு யார் உளர்? நீ இந்த உலகுக்கெல்லாம் ஒரு பெருந் தலைவன்; அத்தகைய உன்னை நண்பனாக அடையப் பெற்றேன். ஊழ்வினை போய் வந்து ஒன்றைத் தந்தால் அடைய முடியாத பொருளும் உண்டா? அரிய பொருளும் எளிதில் கிடைக்கும்."

**(அ—ரை)**: அமைதி : சமயம், வேளை; அருக்கன் சேய் : சூரியன் மகன்; தீவினை தீய : பாவங்கள் ஒழிய; நோற்றார் : தவஞ் செய்தவர்; மேயினென் : அடைந்தேன்; மேவலாத (த)து : அடைய முடியாதது, தொகுத்தல் விகாரம்.

**375.** இராமன் சுக்கிரீவனுக்குத் தன் கருத்தையறிவித்தல்

**(க - ரை):** சுக்கிரீவன் கூறியதைக் கேட்ட இராமன் அவனை இரங்கிப் பார்த்து, "உனக்கு வந்த இன்ப துன்பங்கள் எனக்கும் வந்தனவே; போனது போக இனி உனக்கு ஒரு துன்பமும் வராதபடி நான் அவற்றை நீக்குவேன்" என்று வாக்குக் கொடுத்து, "அது போலவே நீயும் எனக்குற்ற துன்பங்களை நீக்கக்கடவாய்" என்று கூறினான்.

**(அ—ரை):** தீர்ப்பல் : நீககுவேன்; மொழிநேரல் : வாக்குக் கொடுத்தல்

இராமன் ஏழு மராமரங்களைத் துளைத்த வரலாற்றைக் கூறுவது.

**376.** மராமரங்களின் தன்மை. [மராமரம் : வெண்கடம்பு மரம்.]

**(க - ரை):** உலகைத் அளந்த திருமாலின் முடிசென்ற அளவிற்கும் மேற்சென்ற உயரம் உடையவை; அந்தத் திருமாலைப் போல் அசைக்க முடியாத உறுதியை உடையவை; மகாமேருமலையைப் போன்ற பருமனுடையவை.

**(அ—ரை):** அணடம : ஆகாயம; வரை : மலை; நிலையன : உறுதியானவை; படி : பூமி; நீரிடைக்கிடந்த : சமுத்திரத்தால் சூழப்பட்ட; நீர் : சமுத்திரம, பரிய : பருமனானவை.

373. கூட்டம்ஒத் திருந்த வீரர்,
குறித்தது ஓர் பொருட்கு முன்னாள்
ஈட்டிய தவமும், பின்னர்
முயற்சியும், இயைந்த(து) ஒத்தார்;
மீட்டும்வாள் அரக்கர் என்னும்
தீவினை வேரின் வாங்கக்
கேட்டுணர் கல்வி யோடு
ஞானமும் கிடைத்த(து) ஒத்தார்.

374. ஆயதோர் அவதி யின்கண்
அருக்கன்சேய் அரசை நோக்கித்
'தீவினை தீய நோற்றார்
என்னின்யார்? செல்வ! நின்னை,
நாயசம் உலகுக் கெல்லாம்
என்னலாம், நலம்மிக் கோனை,
மேயினென்; விதியே நல்கின்
மேவலா கா(து)என்?' என்றான்.

375 என்றஅக குரங்கு வேந்தை,
இராமனும் இரங்கி நோக்கி,
'உன்தனக்(கு) உரிய இன்ப
துன்பங்கள் உள்ள, முன்னாள்
சென்றன போக, மேல்வந்(து)
உறுவன தீர்ப்பல்; அன்ன
நின்றன எனக்கும் நிற்கும்
நேர்'என, மொழியும் நேரா.

## மராமரப் படலம்

376. அடியி னல்உல களந்தவன் அண்டத்துக்(கு) அப்பால்
முடியின் மேற்சென்ற முடியன; ஆதலின் முடியா
நெடிய மால்எனும் நிலையன; நீரிடைக் கிடந்த
படியின் மேல்நின்ற மேருமால் வரையினும் பரிய.

**377.** *இராமன் வில்நாண் எறிதல்.*

**(க - ரை):** இராமன் தன் வில்லின் நாணைத் தெறித்த ஒலியைக் கேட்டு, இது ஊழிக் காலத்தில் உலகை யழிக்க வரும் இடியின் முழக்கமோ என்று தேவர்கள் அஞ்சி ஓடினர். அருகில் இலக்குவன் ஒருவனே அஞ்சாது நின்றான். ஏனையோர் இருந்த இடம் தெரியாதபடி ஓடிவிட்டனர்.

**(அ—ரை):** அரிந்தமன் பகைவரை அழிப்பவன், இராமனை இங்கே குறிக்கிறது; இரிந்து : ஓடி, விலகி; கற்பம் பிரளய காலம், பரிந்த : விரும்பிய; பாங்கு : பக்கம்; புணரும் . அடையும்.

**378** *இராமன் அம்பெய்த பொழுது உலகின் நிலை.*

**(க - ரை):** இராமன் அம்பெய்த மரங்களின் தொகை ஏழு என்ற மாத்திரத்தில், ஏழு கடல்களும், ஏழு உலகங்களும், ஏழு முனிவர்களும், சூரியனுடைய ஏழு குதிரைகளும், சப்த மாதர்களும், 'எங்கே தங்கள் மீது இராமபாணம் படுமோ' என்று அஞ்சி நடுங்கினார்கள்.

**(அ—ரை)** வேலை . கடல், இருடியர் முனிவர், புரவி : குதிரை; இலக்கம் : எண்.

*துந்துபி யென்னும் அசுரனது செய்தியைக் கூறுவது.*

**379.** *சுக்கிரீவன் இருசியமுக மலையில் தான் வசிப்பதற்கு நேர்ந்த காரணத்தை இராமனிடம் கூறுதல்*

**(க - ரை):** ''வாலியெறிந்த துந்துபியின் உடம்பு இருசியமுகமலையில், மதங்க முனிவர் ஆசிரமத்தில் வந்து விழுதலும், அவர், 'இதை இங்கே எறிச் செய்தவன் இம்மலைக்கு வருவானாகில் அவன் தலை வெடிக்கக் கடவது, அவனைச் சேர்ந்தவர்கள் இங்கு வரின் கல்லாகக கடவர்' என்று சபித்த சாபம் எனக்குப் பேருதவி ஆயிற்று. இன்றேல் வாலி இங்கு வந்து என்னைக் கொன்றிருப்பான்'' என்று அதன் வரலாற்றைச் சுக்கிரீவன் இராமனிடம் கூறினான்.

**(அ—ரை)** முகடு · உச்சி, முடை · புலால் நாற்றம; பரிவு · அன்பு.

**380.** *துந்துபியின் எலும்புக் கூட்டை இலக்குவன் அப்புறப் படுத்தல்.*

**(க - ரை):** சுக்கிரீவன் வார்த்தையைக் கேட்டறிந்த இராமன் தன் தம்பியை நோக்கி, 'எலும்பு மலையை அப்புறப்படுத்து' எனலும், இலக்குவன் அதைத் தன் காலால் உந்தவும், அது பிரம்ம லோகத்தை முட்டி, பூமியில் விழுந்தது.

**(அ—ரை):** அமலன் : தூயவன், இராமன்; விரிஞ்சன் நாடு : பிரமலோகம்.

377. அரிந்த மன்சிலை நாண்நெடி(து) ஆர்த்தலும் அமரர்
இரிந்து நீங்கினர்; கற்பத்தின் இறுதிஎன்(று) அயிர்த்தார்;
பரிந்த தம்பியே பாங்குநின் றான்;மற்றைப் பல்லோர்
புரிந்த தன்மையை உரைசெயில் பழிஅவர்ப் புணரும்.

378 ஏழு வேலையும், உலகமேல் உயர்ந்தன ஏழும்,
ஏழு குன்றமும், இருடிகள் எழுவரும், புரவி
ஏழும், மங்கையர் எழுவரும் நடுங்கினர் என்ப;
'ஏழு பெற்றதோ இக்கணைக்(கு) இலக்கம்'என்(று) எண்ணி.

துந்துபிப் படலம்

379. 'முட்டிவான் முகடுசென்(று) அளவிஇம் முடைஉடல்
கட்டி,மால் வரையைவந்(து) உறுதலும், கருணையான்
இட்டசா பமும்எனக்(கு) உதவும்;'இவ் வியல்பினில்
பட்டவா முழுவதும் பரிவினல் உரைசெய்தான்.

380. கேட்டனன் அமலனும் கிளந்த வாறெலாம்,
வாள்தொழில் இளவலை 'இதனை மைந்தநீ
ஓட்(டு)'என அவன்கழல் விரலின் உந்தினன்;
மீட்டது விரிஞ்சன்நா(டு) உற்று மீண்டதே.

சீதையின் நகைகளை இராமன் பார்த்ததைப் பற்றிக் கூறுவது.

**381.** இராமன் சீதையின் அணிகலன்களைக் காணல்.

**(க - ரை):** "அவ்வணிகலன்கள் நீங்கிப் போயிருந்த இராமபிரானது அறிவைத் திருப்பிக் கொணர்ந்தன என்பேனோ? இராமனது உயிரைக் கொன்றன என்பேனோ? பூசிய சந்தனத்தைப் போலக் குளிர்ச்சி செய்தன என்பேனோ? வெப்பத்தைச் செய்தன என்பேனோ? என்னென்பேன்?"

**குறிப்பு:** இப்பாடல் கவிக் கூற்று.

**(அ—ரை):** விளித்த : கூவி அழைத்த; அட்டன : கொன்றன.

**382.** அணிகலன்களைக் கண்டபின், சுக்கிரீவன் இராமனிடத்தில் சீதையை நானே கொணர்வேன் என்றல்.

**(க - ரை):** "உலகில் எவ்வளவு பெருமையுடையவ ராயினும் தங்கள் பெருமையை தாங்களே சொல்ல மாட்டார்கள், செய்கையால் காட்டுவார். தருமமே வடிவமான உனக்கு எந்தச் செயல் அரியதாகும்! நீ வருந்தலாமோ?" என்று சுக்கிரீவன் இராமனிடம் கூறினன்.

**(அ-ரை):** அவலம கூர்தியோ : துன்பப் படலாமோ.

வாலி வதையைப் பற்றிக் கூறுதல்.

**383.** தாரை வாலிக்குக் கூறுதல்.

**(க - ரை):** "அரசனே! முன்பு உன்னுடைய தோள்வலிக்குத் தோற்று ஓடிப்போன சுக்கிரீவன் இன்று போர்புரிய வருவானேயானல், அவனுக்கு வலிய துணை இருக்க வேண்டும்" என்று தாரை வாலிக்குக் கூறினள்.

**(அ—ரை):** கொற்றவ : வெற்றியையுடையவனே (அரசன்); குலவு: திரட்சி; இற்றனன் : தோற்றான்; ஈடுண்டு : அடிபட்டு, பெருந்திறல் : பெருவலிமை.

**384.** வாலி தாரைக்கு மறுமொழி கூறல்.

**(க - ரை):** "எல்லா உலகங்களையும் ஆளும் அரசாட்சியைப் பெற்றும் மாற்றாந்தாய் ஏவ, அவள் மகனாகிய பரதனுக்கு மகிழ்ச்சியோடு அவ்வரசாட்சியைக் கொடுத்த தலைவனாகிய இராமனைப் போற்றாமல் என்னைக் கொல்ல வந்திருக்கிறா னென்று பழி கூறத் தகுமா?" என்று வாலி தாரைக்குக் கூறினன்.

**(அ—ரை):** ஆற்றரும் : மிக்க; புகறல் : சொல்லுதல்.

## கலன் காண் படலம்

381. விட்டபேர் உணர்வினை விளித்த, என்கெனோ!
அட்டன உயிரை,அவ் வணிகள், என்கெனோ!
கொட்டின சாந்தெனக் குளிர்ந்த, என்கெனோ!
சுட்டன என்கெனோ! யாது சொல்லுகேன்!

382. 'பெருமையோர் ஆயினும் பெருமை பேசலார்;
கருமமே அல்லது பிறி(து)என் கண்டது?
தருமம்நீ அல்லது தனித்து வேறுண்டோ!
அருமையே(து) உனக்கு' நின்(று) அவலம் கூர்தியோ!'

## வாலி வதைப் படலம்

383. 'கொற்றவ நின்பெரும் குலவுத் தோள்வலிக்கு
இற்றனன் முன்னைநாள் ஈடுண்டு ஏகினன்,
பெற்றிலன் பெருந்திறல்; பெயர்த்தும் போர்செயற்கு
உற்றது நெடுந்துணை உடைமை யால்'என்றாள்.

384. ஏற்றபேர் உலகெலாம் எய்தி, ஈன்றவள்
மாற்றவள் ஏவ,மற் றவள்தன் மைந்தனுக்(கு)
ஆற்றரும் உவகையால் அளித்த ஐயனைப்,
போற்றலை! இன்னன புகறல் பாலையோ!'

**385.** இதுவும் அது.

**(க - ரை):** "இந்த உலகம் முழுவதும் எதிர்த்து வந்தாலும் இராமனுக்குத் தன் வில்லைத் தவிர வேறு துணை வேண்டியதில்லை. அங்ஙனம் இருக்க அற்பத் தொழிலையுடைய குரங்குகளோடு அவன் எதற்காக நட்புக்கொள்ள வேண்டும்" என்று வாலி தாரையிடம் கூறினன்.

**(அ—ரை):** நேரினும் . எதிர்த்தாலும், புணரும் நட்பனே : நட்புப்புணர்வானே என்று மாற்றிக் கூட்டுக.

**386.** இதுவும் அது.

**(க - ரை):** "தன் தம்பிமார்களைத் தன் உயிர்க்குயிராகத் தான் கருதியிருப்பவன் அவன். எனவே, எனக்கும் தம்பிக்கும் இடையே போர் நிகழும்போது குறுக்கிட்டு என்மேல் அம்பு தொடுக்கமாட்டான்."

**(அ—ரை)** இம்பர் இந்த உலகம், ஏயந்தவன் பொருந்தியவன், எம்பி என் தம்பி, ஆழி : கடல்.

**387.** அண்ணனோடு போர்புரியும் தம்பி எவ்வளவு கொடியவனாக இருக்க வேண்டுமென்று கருதிய இலக்குவனுக்கு இராமனது சமாதானம்.

**(க - ரை):** "அப்பா! உலகத்தில் பகுத்தறிவுடைய மனித வர்க்கத்திலேயே உடன் பிறந்தவர்கள் எல்லாரும் தமையன்மார்களிடம் அன்புடையராக இருப்பதில்லை; அப்படியிருந்தால் பரதன் மிக மேலானவனாகக் கருதப்படுவதற்கு இடமுண்டா? பகுத்தறிவில்லாத குரங்குகளிடத்தில் உடன் பிறந்த ஒற்றுமையைக் கவனிக்கலாமா?" என்று இராமன் இலக்குவனிடத்தில் கூறினன்.

**குறிப்பு:** பரதன் பெரிது உத்தமன் ஆகல் உண்டோ? என்பது முன்வந்த 'உண்மையில்லை பொய்யுரை இலாமையால்' என்பதைப் போல் கொள்ளக்கிடந்தது.

**388.** வாலி தன்மேல் பாய்ந்த அம்பைப் பிடுங்கி, அதில் பொறிக்கப்பட்டிருந்த இராம நாமத்தைக் காண்டல்.

**(க - ரை):** மூன்று உலகங்களுக்கும் மூலமந்திரமாக இருப்பதும், தன்னை எண்ணுகின்றவர்களுக்குத் தன்னையே கொடுக்கும் சொல்லும், பிறவி நோய்க்கு மருந்தாய் இருப்பதும் ஆகிய இராம மந்திரத்தைத் தன் கண்களால் கண்டான்.

**(அ—ரை):** சால் . நிறைந்த, பதம் : சொல்; செம்மை : சிறப்பு; மூலம் : முதன்மை.

:385. நின்றபேர் உலகெலாம் நெருக்கி நேரினும்
வென்றிவெம் சிலைஅலால் பிறிது வேண்டுமோ?
தன்துணை ஒருவரும் தன்னில் வே(று)இலான்
புன்தொழில் குரங்கொடு புணரும் நட்பனோ?'

:386. தம்பியர் அல்லது, தனக்கு வே(று)உயிர்
இம்பரின் இல(து)என, எண்ணி ஏய்ந்தவன்;
எம்பியும், யானும்,உற்(று) எதிர்ந்த போரிடை,
அம்பிடை தொடுக்குமோ? அருளின் ஆழியான்.'

:387. 'அத்தா!இது கேள்'என ஆரியன் கூறு வான்,இப்
பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேச லாமோ!
எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்கள் எல்லாம்
ஒத்தால், பரதன்பெரி(து) உத்தமன் ஆதல்உண்டோ?'

:388. மும்மைசால் உலகுக் கெல்லாம்
மூலமந் திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை, இராமன் என்னும்
செம்மைசேர் நாமம் தன்னைக்
கண்களில் தெரியக் கண்டான்.

**389.** இராம பாணம் என்றறிந்த வாலி இராமனைப் பார்த்துக் கூறல்.

**(க - ரை):** தன் மார்பில் பாய்ந்த அம்பு, இராம பாணம் என்றறிந்த வாலி இராமனைப் பார்த்துக் காரணத்தோடு சொல்லலானான்.

**(அ—ரை):** கார்முகில் : கரிய மேகம், வரிவில் . கட்டமைந்த வில், சோரி. இரத்தம், பொடிப்ப · துளிகக; ஏதுவான் : காரணத்தோடு.

**(வி—ரை):** கமலம் பூத்த கார்முகில் —கார்முகில் இராமனின் நிறத்திற்கும், தாமரை அவனது முகம், கண், வாய், கை, கால் இவற்றிற்கும் உவமை

**390.** இதுவும் அது.

**(க - ரை):** "உலகுக்கெல்லாம் தாயாகும் தன்மையும், அறமும் நட்புமாந் தன்மையும் தழுவி நின்றாய், சத்தியத்தையும் குலத்தின் மேன்மையையும் கருதித் தன் உயிரை நீத்த தசரதன் மகனாகவும், பரதனுக்குத் தமையனாகவும் பிறந்தாயே ! ஒருவன் பிறரைத் தீமை செய்யாதபடி காத்துத் தான் தீமையே செய்வானானால் அது பாவமாகாது போலும்!"

**(அ—ரை):** வாய்மை உண்மை. சத்தியம், மரபு : குலம்; மன் உயிர் . நிலை பெற்ற உயிர்.

இங்கு வாலி கூறுவன ஒவ்வொன்றும், இராமபாணத்தினும் கொடியதாக இராமன் மனத்தில் தைக்குமாறு அமைந்திருப்பது கருதத்தக்கது. இராமன எய்தது வில்லம்பு. வாலி எய்தது சொல்லம்பு.

**391.** இதுவும் அது.

**(க - ரை):** "சித்திரத்தில் எழுத முடியாத வடிவழகுடையவனே ! அரசநீதி என்பது உங்கள் குலத்தில் உதித்தவர்களுக்கெல்லாம் உரிமை யாயிற்றே. அந்த அரச நீதி உன்னிடத்தில் மாத்திரம் இல்லாமற்போனதற்குக் காரணம் என்ன? ஆவி போன்றவளும், சனகன் மகளும், பாற்கடலில் அமிழ்தத்தோடும் தோன்றிய லக்ஷ்மியின் அம்சமாகியவளுமான உன் தேவியைப் பிரிந்த துயரினால், நீ செய்தற்குரியது எது, அல்லாதது எது என்பதைக்கூட மறந்து திகைத்துவிட்டாய் போலும் !"

**(அ—ரை):** கோவியல் தருமம : அரசாகக்குரிய நீதி.

**குறிப்பு:** அவ்வளவு கோபத்திலும் வாலி இராமனை, 'ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்' என்றால் இராமனுடைய அழகை என்னென்பது' முன் தாடகை வதைப்படலத்தில், முதியவனும் முனிவனும் பெண் மயலால் துயருற்றவனுமாகிய கோசிகன், இராமன் அழகில் ஈடுபட்டு "கண்ணிற் காண்பரேல், ஆடவர் பெண்மையை அவாவும தோளினாய்" எனக் கூறியதும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

389. கண்ணுற்றான் வாலி, நீலக்
கார்முகில் கமலம் பூத்து,
மண்உற்று, வரிவில் ஏந்தி
வருவதே போலும், மாலைப்
புண்உற்ற(து) அனைய சோரிப்
பொறியொடும் பொடிப்ப நோக்கி
'எண்உற்றாய்' என்செய்தாய்!' என்று
ஏதுவான் இயம்பல் உற்றான்.

390. 'வாய்மையும் மரபும் காத்து
மன்உயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே!நீ
பரதன்முன் தோன்றி னாயே !
தீமைதான் பிறரைக் காத்துத்,
தான்செய்தால் தீங்கன் றாமே?
தாய்மையும் அன்றி, நட்பும்,
தருமமும் தழுவி நின்றாய்.'

391. 'கோவியல் தருமம், உங்கள்
குலத்(து)உதித் தோர்கட்(கு) எல்லாம்,
ஓவியத்(து) எழுத ஒண்ணா
உருவத்தாய் உடைமை அன்றோ?
ஆவியைச், சனகன் பெற்ற
அன்னத்தை, அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத்
திகைத்தனை போலும் செய்கை?'

**392.** இதுவும் அது.

**(க - ரை):** உனக்கு அரக்கர்கள் ஒரு தீங்கைச் செய்து போவார்களேயானால் அதற்குப் பதிலாக ஒரு குரங்கின் அரசைக் கொல்ல வேண்டுமென்று உங்கள் மனுதர்ம நூலில் நீதி கூறிய துண்டா? நீ கருணையே வடிவமுடையவன் ஆயிற்றே; அந்தக் கருணையை யெல்லாம் எங்கே உதிர்த்துவிட்டு வந்தாய்? என்னைக் கொல்ல நான் செய்த பிழை யாது? மேன்மைக் குணத்திற்கு அழிவு தருவதாகிய இத்தொழிலை நீ மேற்கொண்டாயே! இனி இவ்வுலகத்தில் யார் புகழைப் பாதுகாக்க வல்லவர்?''

**(அ—ரை).** உகுத்தாய் உதிர்த்தாய், பரம - கு - பரகு : மேன்மைக் குணத்துக்கு; (பரத்துக்கு) அத்துச்சாரியை குறைந்து நின்றது, பரிக்கல: தாங்குதல்; அப்பா! என்பது இராமன் செய்த தீமைக்கு இரங்கிக் கூறுதல.

**393.** இதுவும் அது.

**(க - ரை):** ''கொற்றவ! ஒருவர் துணையுமின்றியே வெற்றி பெறத் தக்க வீரனே! நீ அங்கே உனக்குரிய அரசை உன் தம்பிக்குக் கொடுத்து நாட்டிலே ஒரு காரியம் செய்தாய்! அது போல் இங்கே என் அரசை என் தம்பிக்குக் கொடுத்துக் காட்டிலேயும் ஒரு காரியம் செய்தாய்! இதன் மேலும் செய்யத் தக்க காரியம் உண்டா?''

**(அ—ரை)** கூட்டு துணை, உதவி, கொற்றவ வெற்றியுடையவனே; தாதை : தந்தை, பூட்டிய சேர்த்த, போந்து வந்து, கருமம் காரியம், எம்பி : என் தம்பி, இது கேலியாகக் கூறிய கூற்று

**394.** இதுவும் அது.

**(க - ரை):** ''நீ என்னைக் கொன்ற இச்செயல் உன் வீரத்திற்கும் பொருந்தாது; அரச நீதிக்கும் ஒவ்வாது; நல்லொழுக்கத்திலும் சேராது; நீ ஆளும் இந்தப் பூமிக்கு என் உடல் ஒரு பாரமும் அன்று; நான் உனக்குப் பகைவனும் அல்லன்; உன்னுடைய பண்புடைமை நீங்கி உன் அன்புக்கு மாறாக இச்செயலைச் செய்தது எதனால்?''

**(அ—ரை):** வாரம் · உரிமை; ஈரம் . அன்பு, அரோ அசை.

**395.** வாலி இராமனிடம் மன்னிப்பு வேண்டல்.

**(க - ரை):** ''உயிர்களுக் கெல்லாம் ஒரு தாயைப் போல அருள் சுரந்து, அறம், ஒழுக்கம், மேன்மைக் குணம் இவற்றிற் கெல்லாம் ஒருவனேயாகி நின்ற ஆடவரிற் சிறந்தவனே! பரம் பொருளாகிய நீ செல்லும் உயர் நெறியை உற்று அறிதற்குரிய நேரான அறிவு நாய் போன்ற எங்களிடத்தில் உண்டா? நான் சொன்ன கொடிய சொற்களைப் பொறுத்தருள்வாயாக'' என்று பெருமைக் குணமுடைய வாலி சொன்னான்.

**(அ-ரை):** தகவு . ஒழுக்கம்; சால்பு : மேன்மைக்குணம்; நவை . குற்றம்.

392. 'அரக்கர்,ஓர் அழிவு செய்து
கழிவரேல், அதற்கு வே(று)ஓர்
குரக்கினத்(து) அரசைக் கொல்ல,
மனுநெறி கூறிற்(று) உண்டோ?
இரக்கம் எங்(கு)உகுத்தாய் என்பால்
எப்பிழை கண்டாய் அப்பா!
பரக்கழி இதுநீ பூண்டால்,
புகழையார் பரிக்கற் பாலார்?'

393. 'கூட்(டு) ஒருவரையும் வேண்டாக்
கொற்றவ! பெற்ற தாதை
பூட்டிய செல்வம், ஆங்கே
தம்பிக்குக் கொடுத்துப் போந்து,
நாட்டொரு கருமம் செய்தாய்!
எம்பிக்(கு)இவ் வரசை நல்கிக்
காட்டொரு கருமம் செய்தாய்!
கருமந்தான் இதன்மேல் உண்டோ?'

394. 'வீரம் அன்று; விதிஅன்று; மெய்ம்மையின்
வாரம் அன்று;நின் மண்ணினுக்(கு) என்உடல்
பாரம் அன்று; பகையன்று; பண்(பு)ஒழிந்(து)
ஈரம் இன்றிஇ(து) என்செய்த வா(று)அரோ?'

395. 'தாய்என உயிர்க்கு நல்கித், தருமமும், தகவும், சால்பும்
நீஎன நின்ற நம்பி! நெறியினின் நோக்கும் நேர்மை
நாய்என நின்ற எம்மால் நவைஉற உணர லாமே!
தீயன பொறுத்தி!' என்றான்; சிறியன சிந்தி யாதான்.

396. வாலி இராமனிடம் வரம் வேண்டல்.

(க - ரை): "அழகனே! நாயேன் உம்மிடம் வேண்டுவது ஒன்று உண்டு. என் தம்பி சில சமயம் மதுவுண்ட மயக்கத்தினல் உமக்கு ஏதேனும் தவறு செய்ய நேர்ந்த போதும், என் மேல் எய்த அம்பை அவன்மேல் எய்யாமல் இருக்க வேண்டும்" என்றான்.

குறிப்பு: என்மேல் ஏவிய அம்பு என்பது இராமன் ஏவிய அம்பு பிறரைக் கொன்று மீளவும் அம்பறாத் தூணியில் வந்து விழும் என்பதனல் ஆகும்.

(அ-ரை): நறவு : மது; புந்தி : மனம்; பகழி : அம்பு.

397. இதுவும் அது.

(க - ரை): "தக்கோய்! இன்னும் ஒரு வரமும் வேண்டுவேன். உனது தம்பிமார்கள் சுக்கிரீவனைப் பார்த்து, 'இவன் தமையனைக் கொல்வித்த மாபாவி!' என்று இகழ வந்தால் அவர்களைத் தடுப்பாயாக; என் தம்பிக்கு முன்னே வாக்குக் கொடுத்த படி அவன் வேண்டுங் குறைகளை முடித்து வைப்பாயாக; உனது பாணம் பட்டு நான் இறக்க இருந்தது, என் ஊழ்வினையே யன்றி உன் குற்றம் ஆகாது".

(அ—ரை) உம்பி உன் தம்பி; தக்கோய் மேன்மையானவனே.

398. இராமனிடம் வாலியின் விண்ணப்பம்.

(க - ரை): "உயர்ந்த தோள்களையுடைய வீரனே! அனுமனை உன் கையில் ஏந்தியிருக்கும் வில்லாக நினை. என் தம்பியை உனது தம்பியாக நினை. ஆராயின் இவர்களைப் போன்ற துணையாவார் உலகில் பிறர் இல்லை. இங்கிருந்து அச் சீதாபிராட்டியாரை, இவர்களால் தேடியறிந்து கொள்வாயாக" என்று வாலி இராமனிடம் விண்ணப்பித்தான்.

(அ—ரை): ஆழி : சக்கராயுதர்; தனு . வில்; கோடி : கொள்வாய்

399. சுக்கிரீவனுக்கு வாலி அறிவுரை கூறல்.

(க - ரை): "மேரு மலையைப் போன்ற தோளையுடைய சுக்கிரீவனே! உலகில் அழியாத செல்வமாகிய முத்தியை வேண்டுபவர்கள் இவன் பெயரைச் சொல்லி இவனையே தியானிக்கின்றனர். இது இவனது உயரிய பரம்பொருள் தன்மை. இது அனைவருக்கும் தெரியாது. மனித நிலையில் வைத்துச் சாதாரணமாகப் பார்த்தபோதும், அவர்களுள் தலைசிறந்தவன் என்பதை, என்னைக் கொன்ற வலிமையானே நன்கு அறியப்படும். இதற்கு வேறு சாட்சி ஒன்றும் வேண்டியதில்லை."

(அ—ரை): பொற்குன்றம் : பொன்மலை-மகாமேரு; ஏது : காரணம்.

396. 'ஓவிய உருவ! நாயேன்
உள(து) ஒன்று பெறுவ(து) உன்பால்,
பூவியல் நறவம் மாந்திப்
புந்திவே(று) உற்ற போழ்தில்
தீவினை இயற்று மேனும்,
எம்பிமேல் சீறி, என்மேல்
ஏவிய பகழி என்னும்
கூற்றினை ஏவல்' என்றான்.

397. 'இன்னம் ஒன்(று) இரப்ப(து)உன்பால்,
எம்பியை உம்பி மார்கள்,
தன்முனைக் கொல்வித் தான்என்(று)
இகழ்வரேல் தடுத்தி தக்கோய்!
முன்முனே மொழிந்தாய் அன்றே
இவன்குறை முடிப்ப(து) ஐயா!
பின் இதன் வினையின் செய்கை!
அதனையும் பிழைக்க லாமோ?'

398. 'அனுமன்என் பவனை, ஆழி
ஐய! நின் செய்ய செங்கைத்
தனுவென நினைதி! மற்றென்
தம்பிநின் தம்பி யாக
நினைதி!ஓர் துணைவர் இன்னோர்
அனையவர் இலை; நீ ஈண்(டு) அவ்
வனிதையை நாடிக் கோடி!
வானினும் உயர்ந்த தோளாய்.'

399. 'நிற்கின்ற செல்வம் வேண்டி,
நெறிநின்ற பொருள்கள் எல்லாம்
கற்கின்ற இவன்தன் நாமம்;
கருதுவ இவனைக் கண்டாய்;
பொற்குன்றம் அனைய தோளாய்!
பொதுநின்ற தலைமை நோக்கின்
எற்கொன்ற வலியே சாலும்;
இதற்கொன்றும் ஏது வேண்டா.'

400. அங்கதனுக்கு வாலி கூறும் அறிவுரை.

(க - ரை): "மைந்தா! இளமையைக் கடந்த நீ, என் சொல்லைக் கடைப்பிடித்து ஒழுகுவாயேயானால், தனக்கு மேல் ஒரு பொருளும் இல்லாது அருவமாய் நின்ற பரம்பொருள் கையில் வில்லேந்திக் கால் தரையில் தோயும்படியாக உருவம் கொண்டு வந்தது. இவனை மனித வடிவனென்று கருதாமல் பிறவி நோய்க்கு மருந்தாகிய முழு முதற் கடவுளென்று வணங்கி வருவாயாக" என்று அறிவுரை கூறினான்.

(அ—ரை): பாலமை இளமைத் தன்மை; மால்தரும் : மயக்கம்தரும்; கட்புலக்கு உற்றது கண்ணில் காணும்படியாக வந்தது.

401. இதுவும் அது.

(க - ரை) "இவன் என்னைக் கொன்றானென்று சிறிதும் நினையாமல் தெய்வமாகக் கொண்டு உன் உயிர்க்கு நன்மையைத் தேடிக் கொள்! இவனுக்கு ஏதேனும் போர் நேர்ந்தால் நீயும் துணையாகப் போவாயாக! உயிர்களின் பக்குவம் அறிந்து அருள் புரிபவனாகிய இவனது பாதங்களைத் தலைமேற் கொண்டு வாழ்வாயாக!"

(அ-ரை) பொன் உயிர்த்து ஒளிரும் பூணாய். பொன்னால் செய்யப்பட்டு ஒளிரும் அணிகலன்களையுடையவனே. இறுதி : முடிவு; இறையும் : சிறிதும்; அமர் : போர்.

402. வாலி அங்கதனை இராமனிடம் அடைக்கலமாக ஒப்புவித்தல்.

(க - ரை): "போலியொழுக்கமுடையவர்களுக்கு வெளிப்படாது நிற்கும் அறிவு மயமானவனே! உம்மோடு போர் புரிய வரும் அரக்கர்களாகிய பஞ்சு மூட்டைக்கு இவன் ஒரு நெருப்புத் திரளை யொத்த தோளையுடையவன்; பாவமற்ற தொழிலைச் செய்பவன்; இவன் உனக்கு அடைக்கலப் பொருளாவான்" என்று இராமனிடம் அங்கதனைக் காட்டிக் கொடுத்தான்.

(அ-ரை) நெய்யடை நெடுவேல் : நெய்பூசிய நீண்ட வேலாயுதம்; தானை : சேனை; நிருதர் : அரக்கர்; துய்அடை : பஞ்சுமூட்டை; அனலி : நெருப்பு; புலமை : அறிவு; புலவ : அறிவுமயமானவனே; கையடை : அடைக்கலப்பொருள்.

வாலி இறந்தமை குறித்துத் தாரை புலம்புதலைக் கூறுவது.

403. தாரை புலம்புதல்.

(க - ரை): "நாயகனே! இராமன் கொல்வானென்று முதலிலே சொன்னேன். அவன் கொல்லானென்று கூறிப் போருக்குச் சென்றாய்! உன் தம்பியை ஒழிக்கவல்ல நீ அவன் சூழ்ச்சியால் இறந்தாய்; நான் உன்னை என்று காண்பேனோ?"

(அ—ரை): சொற்றேன் : சொன்னேன்; உம்பி : உன் தம்பி; இற்றாய் : இறந்தாய்; ஊழிகாணும் : இறுதிக் காலத்தைக் காணவல்ல.

400. 'பாலமை தவிர் நீ, என்சொல்
பற்றுதி ஆயின், தன்னின்
மேல்ஒரு பொருளும் இல்லா
மெய்ப்பொருள் வில்லும் தாங்கிக்
கால்தரை தோய நின்று
கட்புலக்(கு) உற்ற(து) அம்மா;
மால்தரும் பிறவி நோய்க்கு
மருந்தென வணங்கு, மைந்த!'

401. 'என்னுயிர்க்(கு) இறுதி செய்தான்
என்பதை, இறையும் எண்ணு(து),
உன்உயிர்க்(கு) உறுதி செய்தி!
இவற்(கு)அமர் உற்ற(து) உண்டேல்,
பொன்உயிர்த்(து) ஒளிரும் பூணுய்!
போதுதி, நிலைமை நோக்கி
மன்உயிர்க்(கு) உறுதி செய்வான்
மலர்அடி சுமந்து வாழ்தி!'

402. 'நெய்யடை நெடுவேல் தானை
நீல்நிற நிருதர் என்னும
துய்அடைக்(கு) அனலி அன்ன
தோளினன், தொழிலும் தூயன்;
பொய்அடை உள்ளத் தார்க்குப்
புலப்படாப் புலவ! மற்றுன்
கையடை ஆகும்!' என்(று)அவ்
இராமற்குக் காட்டும் காலை

தாரை புலம்புறு படலம்

403. 'சொற்றேன் முந்துற, அன்ன சொல்கொளாய்!
அற்ருன், அன்னது செய்க லான்,என
உற்ருய், உம்பியை ஊழி காணும்நீ
இற்ருய், நான்உனை என்று காண்கெனே?'

404. இதுவும் அது.

(க-ரை): "நீ மார்பினால் தாக்குவையேயானால் மகாமேருமலையும் பொடியாகுமே! அத்தகைய உன் வலிமைக்கு மாறாக ஓர் அம்பு உன்னைக் கொன்றதென்றால் நான் அதை நம்பவில்லை. இது தேவர் செய்த மாயமாக இருக்க வேண்டும்; அல்லது வேறொரு போலி வாலிதான் இறந்திருக்க வேண்டும். உண்மை வீரனாகிய நீ இறந்தாய் என்பதை நான் நம்பவில்லை."

(அ—ரை): நீறு சாமபல் பொடி; தேறேன் : நமபமாட்டேன்; விளிந்து : இறந்து.

405. இராமன் சுக்கிரீவனுக்கு அரச நீதியை எடுத்துக் கூறுதல்.

(க - ரை): "சுக்கிரீவனே! ஒன்றைத் தீர்மானிக்குங்கால் காட்சிப் பிரமாணத்தோடு மட்டும் தீர்மானித்தலாகாது; அநுமானப் பிரமாணமும் வேண்டும்; அதோடு யாரிடத்திலும் உண்மையாகவே நடந்து கொள்ள வேண்டும் என்பதில்லை; வஞ்சனை உடையவர்களிடத்தில் வஞ்சனையாகவே நடந்து கொள்ள வேண்டும்; பகைவரிடத்திலும் சிரித்த முகத்தோடு இன்சொல் சொல்லுவாயாக."

(அ—ரை): அனல் · நெருப்பு; உன்னும் · நினைக்கும்; வினையம் : வஞ்சனை; நகை : சிரிப்பு; நலகு : கொடு.

406. இதுவும் அது.

(க-ரை): "பெண்கள் மேல் வைத்த மோகத்தினாலே உலகில் மாந்தர் பலருக்கு மரணம் நேரும் என்பதை ஐயம் தீரத் தெரிந்து கொள்; இதற்கு வாலி செய்கையே போதிய சான்றாகும். மற்றும் பெண் புத்தி கேட்பதால் துன்பமும் பழியும் நேரும்; அதை எங்களிடத்திலிருந்தே நீ அறிந்து கொள்வாய். ஆகையால் மாதர் மேல் ஆசை வைக்காமலும் அவர் சொல் கேட்காமலும் இருப்பதை விட வேறு உறுதி இல்லை."

(அ—ரை). சஙகை · ஐயம; சாலும் : உறுதிப்படும்; திறம் : சார்பு.

407. இதுவும் அது.

(க - ரை): "உலகில் உயிர்களுக்கு இறத்தலும் பிறத்தலும் இயல்பே; இதனிடையில் அவரவர்களுக்கு நேரும் இன்பதுன்பங்கள் அவரவர் வினைக்கேற்ப வரும். நல்வினை செய்தார் நலம் பெறுவர்: தீவினை செய்தார் தீங்குறுவர். பிரமனுக்கேனும் அறவழி தவறினால் உடனே அழிவு நேரும் என்பதை உறுதியாகக் கொள்."

(அ—ரை). திறநதுளி : உரிய வழியில் ஆராய்ந்தால்; புனிதன் : தூயன். பிரமன்.

404. 'நீறும் மேருவும் நீநெ ருக்கினுல்;
மா(று)ஓர் வாளிஉன் மார்பை ஈர்வதோ?
தேறேன் யான்இது; தேவர் மாயமோ?
வேறோர் வாலிகொ லாம்வி ளிந்துளான்.'

அரசியல் படலம்

405. 'புகைஉடைத்(து) என்னின் உண்டு
பொங்(கு)அனல் அங்கு' என்(று)உன்னும்
மிகைஉடைத்(து) உலகம்; நூலோர்
வினையமும் வேண்டல் பாற்றே,
பகைஉடைச் சிந்தை யார்க்கும்,
பயன்உறு பண்பின் தீரா
நகைஉடை முகத்தை யாகி,
இன்உரை நல்கு நாவால்.'

406. 'மங்கையர் பொருட்டால் எய்தும்
மாந்தர்க்கு மரணம் என்றல்
சங்கையின்(று) உணர்தி! வாலி
செய்கையால் சாலும்;இன்னும்
அங்கவர் திறத்தி னுனே
அல்லலும் பழியும் ஆதல்
எங்களில் காண்டி அன்றே!
இதனின்வே(று) உறுதி உண்டோ?'

407. 'இறத்தலும் பிறத்தல் தானும்
என்பன இரண்டும், யாண்டும்
திறத்துளி நோக்கின், செய்த
வினைதரத் தெரிந்த அன்றே;
புறத்தினி உரைப்ப(து) என்னே!
பூவின்மேல் புனிதற் கேனும்,
அறத்தின(து) இறுதி, வாழ்நாட்(கு)
இறுதி;அஃ(து) உறுதி என்ப.'

408. சுக்கிரீவன் ஆட்சித் திறம்.

(க-ரை): சுக்கிரீவன், அரசச் செல்வத்தை அடைந்து, ஏனைய வானர வீரர்களை அவரவர்கள் தகுதிக்கேற்ப அவ்வப் பதவிகளில் இருத்தி, அங்கதனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டி, தனனுடைய அரசாட்சி திக்கு முழுவதும் பரவுமபடியாகச் செவ்வனே செங்கோல் செலுத்தி இருந்தான்

(அ-ரை): வள அரசு : வளம பொருந்திய அரசாடசி, இளைஞர் : இங்கு அரசகாரியம செய்வோர், கேள் : சுறறம.

கார் காலத்தின் இயல்பைப் பற்றிக் கூறுவது. கார்காலம் ஆவணி புரட்டாசி மாதங்கள்.

409. கார்காலத்தின் இயல்பு.

(க - ரை : கார்காலத்தில் மேகத்தைக் கண்டு ஆடும் மயில் ஓர் பாடினியைப் போல் தோன்ற, பாணர்களுக்கு நப பரிசில் வழங்கும் அரசரைப் போல் மலையில் ஓடிவரும் அருவிகள் பொன் குவியல் களை இறைத்தன, அப்பொழுது நீர் நிலைகளில் தாமரைகள் மலர்ந்திருப்பது விருந்து கண்டு களிக்கும இல்லற மகளிர் முகம் போன்றிருந்தது.

(அ-ரை): கண்ணுளர் : பாணர்கள், கூததர்கள, மஞ்ஞை : மயில், வெளிக்கண் : வெளியிடத்தில்; கார் மேகம, கமலம தாமரை

410. கார் காலத்தில் இராமன் வருந்துதல்.

(க - ரை : கார்காலம் வந்தது என்றால் முனிவரும் நடுங்குவர்; சீதையைப் பிரிந்து தனியாக இருக்கின்ற இராமன இக்காலத்தில் வருந்துகிருனென்றால் அது இயற்கையே.

(அ-ரை): கார் : மேகம; தளர்வர : நடுங்குவா, புளவி தழுவி; வருந்தோ : வருத்தமோ; கிளவி . சொல்; அமிழ்தினைக காட்டிலும, தேனினைக காட்டிலும மிக இனிமையுடையதாகப் பெறற சொலலையுடையவள். வெள்வளை : வெள்ளிய சஙகு வளையல்களை அணிந்தவள

411. மழை பெய்து வெளுத்த மேகத்தின் நிலை.

(க - ரை): உலகில் உள்ள கொடையாளர் தம்மிடம் இருந்த பொருளையெல்லாம் இரவலர் விரும்பியவாறு கொடுத்து, அப் பொருளெல்லாம் அழிந்து போன பொழுது இரவலர்களுக்குக் கொடுக்கப் பொருள் இன்மையால் வெட்கமடைவது போல மழை பெய்த மேகங்கள் வெளுத்தன.

(அ—ரை): மள்கல்இல் : பின்வாங்குதல் இல்லாத; மருவி : பொருந்தி; உள்கிய : நினைத்த; அற்றபோது : அழிந்தபோது; எள்கல்இல் : இழிவில்லாத; வெள்கிய : வெட்கப்பட்ட.

408. வளஅரசு எய்தி, மற்றை
வானர வீரர் யாரும்
கிளைஞரின் உதவ, ஆணை
கிளர்திசை அளப்பக் கேளோ(டு)
அளவிலா ஆற்றல் ஆண்மை
அங்கதன் அறம்கொள் செல்வத்(து)
இளவரசு இயற்ற ஏவி,
இனிதினின் இருந்தான் இப்பால்.

## கார்காலப் படலம்

409. களிக்கும் மஞ்ஞையைக், கண்ணுளர்
இனம்எனக் கண்உற்(று)
அளிக்கும் மன்னரின், பொன்வழங்
கினமலை அருவி;
வெளிக்கண் வந்தகார் விருந்தென,
இருந்துகண்(டு) உளளம்
களிக்கும் மங்கையர் முகம்எனப்,
பொலிந்தன கமலம்.

410. அளவில் கார்எனும் அப்பெரும்
பருவம்வந்(து) அணைந்தால்,
தளர்வர் என்பது தவம்புரி
வோர்கட்கும் தகுமால்:
கிளவி தேனினும் அமிழ்தினும்
கிளைத்தவெள் வளைதோள்
வளவி உண்டவன் வருந்தும்என்
றூல்அது வருத்தோ.

411. மள்கல்இல் பெரும்கொடை மருவி,மண்உளோர்
உள்கிய பொருள்எலாம் உதவி, அற்றபோ(து)
எள்கல்இல் இரவலர்க்(கு) ஈவ(து) இன்மையால்
வெள்கிய மாந்தரின், வெளுத்த மேகமே.

412. நீர் நிலைகளில் மீன் பிறழ்தல்.

(க - ரை): அப்பொழுது நீர் நிலைகளில் நீர், முனிவர் உள்ளம் போல் தெளிந்திருந்தது; அந்நீர் நிலைகளில் பிறழும் மீன்கள், மகளிர் கண்களைப் போல் தோன்றின.

(அ-ரை): ஆடல்மீன் : நீரில் விளையாடிக் கொண்டிருக்கின்ற மீன்; அஞ்சனக்கண் : மைதீட்டிய கண்; பேதையர் : மாதர்.

413. தவளைகளின் நிலை.

(க - ரை): மழை பெய்யும் பொழுது, பள்ளியிற் பயிலும் மாணவர்களைப் போல் ஆரவாரித்த தவளைகள், பின்பு மழை அடங்கியதும் அவசியமில்லாத இடத்து மௌனமாக இருக்கும் அறிஞர்களைப் போல் வாயடங்கி இருந்தன.

(அ-ரை): கணக்காயர் : ஆசிரியர். கமபலை : ஒலி, ஆரவாரம, சிருஅர் . சிறுவர்; பல்அரி . பல தவளைகள் ; அவிந்த : அடங்கின.

'கிட்கிந்தை' என்னும் இடத்தில் நடந்த வரலாற்றைக் கூறுவது.

414. குறித்த காலத்தில் வராத சுக்கிரீவனைப் பற்றி இராமன் இலக்குவனிடம் கூறல்.

(க-ரை): "நம்மால் சுக்கிரீவன் பெரிய அரசச் செல்வத்தைப் பெற்று நாம் செய்த உதவியையும் மறந்தான்; நாம் அவனிடத்தில் வைத்த அன்பினை மறந்தாலும், நமது வீரத்தையாவது நினைந்தானில்லை; ஒன்றனையும் நினையாமல் தன் வாழ்வில் மயங்கிவிட்டான்."

(அ-ரை): திரு : செல்வம்; திறம . தன்மை; சீர்மை : நல்லொழுக்கம்; மறன் : மறம்–போலி.

415. இராமன் ஏவலின்படி சுக்கிரீவனை நாடி இலக்குவன் வருவதை அறிந்த அங்கதன் செயல்.

(க - ரை): அங்கதன், இலக்குவன் வரவு இன்ன கருத்தினதென்று அறியும் பொருட்டு அவன் அருகில் வந்து, அதைக் குறிப்பால் உணர்ந்து கொண்டு, சுக்கிரீவன் இருக்கும் இடத்திற்கு வந்தான்.

(அ-ரை): அன்ன தோன்றல் : அத்தகைய தலைவன், அங்கதன்; மருங்கு . பக்கம்; உட்கொளா : அறிந்து; பொன்னின் வார்கழல் : பொன்னலாய வார் கட்டிய வீரக் கழல்; தாதை : தந்தை, சுக்கிரீவன்; இல் : வீடு ' இருக்கும் இடம்.

412. வஞ்சனைத் தீவினை மறந்த மாதவர்
நெஞ்செனத் தெளிந்தநீர் நிரந்து தோன்றுவ;
பஞ்செனச் சிவக்கும்மென் பாதப் பேதையர்
அஞ்சனக் கண்எனப் பிறழ்ந்த ஆடல்மீன்.

413. கல்வியின் திகழ்கணக் காயர், கம்பலை
பல்வகைச் சிறார்எனப், பகர்வ பல்அரி,
செல்லிடத்(து) அல்லது(ஒன்று) உரைத்தல் செய்கலா
நல்அறி வாளரின், அவிந்த நாவெலாம்.

## கிட்கிந்தைப் படலம்

414. 'பெறல் அரும்திருப் பெற்(று),உதவிப்பெரும்
திறம்நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்;
அறம்மறந்தனன்; அன்புகிடக்கநம்
மறன்அறிந்திலன் வாழ்வின் மயங்கினன்.

415. அன்ன தோன்றலும், ஆணைதொழி [illegible](வு)
இன்னதென்(று)அறி வான்மருங்(கு) எய்தினன்;
மன்னன் மைந்தன் மனக்கருத்(து) [illegible]கொளாப்
பொன்னின் வார்கழல் தாதைஇல் போயினன்.

**416.** இலக்குவன் வரவையறிந்தோர் கூற்று.

**(க - ரை):** இராமனது ஆணைச் சக்கரம் போன்றவனாகிய இலக்குமணன், சுக்கிரீவனுடைய நகர வீதியில் போகும் பொழுது, தாரையைச் சுற்றியிருந்த அங்கதன் முதலியோர் இலக்குவனைக் கண்டு பயந்து, "இலக்குவன் வந்தனனே! நாம் என்ன செய்வது?" என்று தாரையிடம் கூறினார்கள்.

**(அ-ரை):** அன்ன காலை : அப்பொழுது. ஆண்தகை : ஆண்மைக் குணமுடைய இராமன்; ஆழி : ஆணைச்சக்கரம், பொன் : அழகு.

**417.** இலக்குவனிடம் தாரை கூறுவது.

**(க - ரை):** இலக்குவன், பெண்கள் கூட்டத்தின் அருகில் சென்று, தாமரை போன்ற தன் முகத்தைச் சாய்த்துக் கொண்டு, கையிலுள்ள வில்லைக் கீழே ஊன்றி, மாமியார் கூட்டத்தின் இடையே வந்த மருமகனைப் போலக் கூசினவனாக நிற்க, அம்மகளிர் கூட்டத்தின் நடுவில் வந்த தாரை அச்சத்தால் நடுங்கிக் கொண்டு பின் வருவனவற்றைச் சொல்லலானாள்

**(அ-ரை):** வதனம் : முகம், தனு : வில், அணங்கு : தெய்வப் பெண் பொதுவிடை : கூட்டத்தினிடை; முனபின் தெரியாத பெண்கள் கூட்டததில் கூசிநின்ற இலக்குவனுக்கு மாமியார் கூட்டத்தில் நிற்கும் மருமகனை உவமை கூறியது கருதத்தக்கது.

**418.** தாரையின் நிலையைக் கண்ட இலக்குவன் செயல்.

**(க - ரை):** தாலியைக் களைந்து, மற்ற அணிகலன்களையும் விலக்கி, கூந்தலில் அணியும் மாலையையும் நீக்கி, சந்தனம் முதலிய கலவைகள் அணியப் பெறாத தனங்களோடு, கழுத்தும் மறையும் படியாகப் போர்த்துக் கொண்டு நின்ற தாரையின் நிலையைக் கண்டதும், இலக்குவன் துயரக் கண்ணீர் சொட்ட நின்றான்.

**(அ-ரை):** மங்கல அணி : தாலி; கொங்கு : வாசனை; அலர் : பூ; கோதை : மாலை; பூகம் : கமுகு—மகளிர் கழுத்திற்கு உவமை; நயனம் : கண்; பனிப்ப : துளிக்க.

**419.** இலக்குவன் தான் வந்த காரியத்தைத் தாரையிடம் கூறுதல்.

**(க - ரை):** தாரையின் விதவைக் கோலத்தைக் கண்டு தன் தாய்மார்களின் நினைவுவர, ஒரு தூண்போல் நின்ற இலக்குவன், தன்னை வினவின தாரைக்குத் தான் வந்த காரியத்தைச் சொல்லத் தொடங்கினான்.

**(அ-ரை):** அயர்ப்பு : தளர்ச்சி; விளம்ப : சொல்ல; புனைகுழலாள் : அணிந்த கூந்தலையுடையவள்.

416. அன்ன காலையில், ஆண்தகை ஆழியான்
பொன்னின் நன்னகர் வீதியில் புக்கனன்;
சொன்ன தாரையைச் சுற்றினர் நின்றவர்
'என்ன செய்குவ(து)? எய்தினன்' என்றனர்.

417. தாமரை வதனம் சாய்த்துத்
தனுநெடும் தரையில் ஊன்றி
மாமியர்..குழுவின் வந்தான்
ஆம்என மைந்தன் நிற்பப்,
பூமியில் அணங்க னார்தம்
பொதுவிடைப் புகுந்து, பொற்றோள்
தூமன நெடுங்கண் தாரை
நடுங்குவாள் இனைய சொன்னாள்.

418. மங்கல அணியை நீக்கி,
மணிஅணி துறந்து,வாசக்
கொங்கலர் கோதை மாற்றிக்,
குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்கு வெம்முலைகள், பூகக்
கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல்
நயனங்கள் பனிப்ப நின்றான்.

419. 'இனையராம் என்னை யீன்ற
இருவரும்' என்ன வந்த
நினைவினன் அயர்ப்புச் சென்ற
நெஞ்சினன்; நெடிது நின்றான்;
'வினவினாட்(கு) எதிர் ஓர் மாற்றம்
விளம்பவும் வேண்டும்' என்(று)அப்
புனைகுழ லாட்கு வந்த
காரியம் புகல்வ(து) ஆனான்.

**420.** இலக்குவன் வந்த காரணத்தையறிந்த தாரையின் மறுமொழி.

**(க - ரை)** : அறநிலை பொருந்திய மனத்தையுடைய நீங்கள் இருவரும் பேருதவிசெய்து சுக்கிரீவனது வலிய பகையை நீக்கி, அரசு செலுத்தி வீற்றிருக்கும்படி செய்தீர்கள். அத்தகைய உங்களையே அசட்டை செய்தால், அது ஒரு தாழ்மையான செயலாக முடியும், அதோடு இப்பிறப்பிலேயே அவன் செல்வமெல்லாம் நீங்கி, வறுமையுற்று இம்மை மறுமைப் பயன் இரண்டையும் இழப்பான்'' என்று தாரை இலக்குவனிடம் கூறினள்.

**(அ-ரை)** செம்மை : இங்கு அறத்தைக் குறிக்கின்றது. வெம்மை : கொடுமை; இருமை இம்மை மறுமைப்பயன்.

**421.** இலக்குவன் வினவிற்கு அனுமன் மறுமொழி.

**(க - ரை)** : ''ஐயா ! சுக்கிரீவன் உங்களை மறக்கவில்லை; உங்களுக்கு உதவிசெய்யும் பொருட்டுப் பலவகைப்பட்ட சேனைகளையெல்லாம் தன்னிடம் வரும்படி தூதரை ஏவி, அவர்கள் வாராமையால் தாமதம் செய்யலானான். தர்மதேவதைக்கு நிகரான உங்களுக்குக் கொடுத்த வாக்கை அவன் நிறைவேற்றானாயின் பிறவாதவனே ஆவன் அன்றோ ! இது மட்டுமா ? மறுமையில் அவனுக்கு நரகமும் தப்பாது.''

**(அ-ரை)**: கவி : குரங்கு: வயப்படை . வெற்றிப்படை, திறம்திறம திசை தோறும்.

**422.** இதுவும் அது.

**(க - ரை)** : '' இளைய வீரனே ! முன் ஓர் உதவியும் செய்யாமல் இருக்க ஒருவர் தாமே வந்து ஓர் உதவி புரிவாரேயானால், அதற்குக் கைம்மாறாக வையகமும் வானகமும் ஈடாகாது. அவ்வாறு நீங்கள் செய்த உதவிக்குக் கைம்மாறாகப் போர்க்களத்தில் முன்சென்று பகைவன் மார்பில் உதைத்து அவனைக் கொல்ல வேண்டும்: அல்லது அவனால் உதையுண்டு சாகவேண்டும். இவ்வாறு சுக்கிரீவன் செய்யானேல் அவன் உங்களுக்குச்செய்யும் வேறு கைம்மாறு உண்டோ ?''

**(அ-ரை)** மைந்த : வலிமை உடையவனே; உண்டாகவற்றோ : உண்டாக வல்லதோ; செரு . போர்; செறுநர் : பகைவர்; உலைதல் . குலைதல்; மன், ஓ : இரண்டும் அசைச் சொற்கள்.

**423.** நீராடி, உண்ணுமாறு வேண்டிய சுக்கிரீவனுக்கு இலக்குவன் உரைத்தல்.

**(க - ரை)**. '' சுக்கிரீவனே ! சீதாபிராட்டியாரை மீட்டுக் கொண்டு வந்து தந்தால் உலகத்தார் பழிக்கும் பழி என்கின்ற தீயையழித்து, எங்களைக் கங்கையில் நீராடச்செய்ததை ஒக்கும்; அதுவே எங்களுக்குத் தேவாமிர்தம் உண்பித்ததை ஒக்கும். இதைவிட நீ எங்களுக்குச் செய்யும் உயர்ந்த உதவி பிறிதில்லை'' என்று இலக்குவன் கூறினன்.

**(அ-ரை)**: முருங்கு தீ : அழிக்கும் நெருப்பு; ஆர் அமிர்து : அரிய அமுதம.

420. 'செம்மைசேர் உள்ளத் தீர்கள்
செய்தபே ருதவி, தீரா
வெம்மைசேர் பகையும் மாற்றி,
அரசுவீற் றிருக்க விட்டீர்;
உம்மையே இகழ்வர் என்னின்
எளிமையாய் ஒழிவது ஒன்றோ!
இம்மையே வறுமை எய்தி
இருமையும் இழப்பர் அன்றே.'

421. 'மறந்திலன் கவியின் வேந்தன்;
வயப்படை வருவிப் பாரைத்
திறம்திறம் ஏவி, அன்னார்
சேர்வது பார்த்துத் தாழ்ததான;
அறந்துணை நுமக்குத் தான்தன்
வாய்மையை அழிக்கு மாயின்,
பிறந்திலன் அன்றே; ஒன்றோ,
நரகமும் பிழைப்ப(து) அன்றால்.'

422. 'உதவாமல் ஒருவன் செய்த
உதவிக்குக் கைம்மா றாக,
மதவானை அனைய மைந்த!
மற்றும்உண் டாக வற்றோ;
சிதையாத செருவில் அன்னான்
முன்சென்று, செறுநர் மார்பின்
உதையானேல், உதையுண்(டு) ஆவி
உலையானேல், உலகில் மன்னோ.'

423. 'மூட்டிய பழிஎனும் முருங்கு தீஅவித்(து)
ஆட்டினை கங்கைநீர், அரசன் தேவியைக்
காட்டினை எனின், எமைக் கடலின் ஆர்அமிழ்(து)
ஊட்டினை யால்; பிறி(து) உயர்வும் இல்லையால்.'

424. சுக்கிரீவன் தன்மை.

(க - ரை): மிக்க செல்வ வாழ்வில் பற்றின்றி நாள்தோறும் இராமபிரானது திருவடியைப் போற்றிவரும் சுக்கிரீவன், அவ்வாறு செய்துவரும் பரதனை ஒத்திருந்தான்.

(அ—ரை): கண்ணிய : மதிக்கத்தக்க; கணிப்பு அரும் : அளவிடற்கரிய; நண்ணிய : இடைவிடாது வழிபடுகின்ற; கவி : குரங்கு.

வானர சேனையை இராம இலக்குவர் கண்டதைப்பற்றிக் கூறுவது.

425. வானரவீரரின் வலிமை.

(க - ரை): இச்சேனை, ஒடிக்க எண்ணினால் மேருமலையையும் பல துண்டுகளாக ஒடிக்கும்; இடிக்க எண்ணினால் ஆகாயத்தின் உச்சியையும் இடித்துவிடும்; பிடிக்க எண்ணினால் வலிய காற்றையும் எமனையும் பிடித்து அடக்கும்; குடிக்க எண்ணினால் ஏழு கடலையும் உள்ளங்கையில் அள்ளிக் குடித்துவிடும்.

(அ—ரை): முகடு : உச்சி; கூற்று : எமன்; குடங்கை : குழித்த உள்ளங்கை.

சீதையைத் தேடிவரும்படியாக வானரவீரர்களை அனுப்பியதைப் பற்றிக் கூறுவது.

426. சுக்கிரீவன் அனுமனிடம் கூறல்.

(க - ரை): "தெளிந்த அறிவுடைய அனுமானே! நமது வள்ளலாகிய இராமபிரானது தேவியாரை இராவணன் கள்ளத்தனமாக வஞ்சித்து எடுத்துச் சென்றது தெற்குத் திக்கு என்று நான் நினைக்கிறேன். நீயும் அதை நினைத்துப்பார்" என்று கூறினான்.

(அ—ரை): வவ்விய : கவர்ந்த; தெள்ளியோய் : தெளிந்த அறிவுடையவனே; உன்னுவாய் : நினைப்பாய்.

427. சீதா பிராட்டியாரைத் தேட வேண்டிய இடங்களைக் கூறிவந்த சுக்கிரீவன், திருவேங்கட மலையிலும் தேடுமாறு தன் வீரர்களிடம் கூறுதல்.

(க - ரை): "வடமொழிக்குத் தெற்கெல்லையாயும், தமிழ் மொழிக்கு வடக்கெல்லையாயும் பொருந்தி, வேதம் முதலிய நூல்களில் கூறப்படும் எல்லாப் பொருள்களுக்கும் எல்லையாகிய பரம்பொருளைத் தன்னிடத்தில் உடையதாய், நல்ல ஞானத்திற்கு முடிவிடமாய், தனக்கொரு நிகரில்லாமல், உண்மையைப்போல் அழிவற்றதாகிச் சோலைகள் சூழ்ந்த சாரல்களை உடையதாய் உயர்ந்துள்ள திருவேங்கட மலையைப் போய்ச் சேருங்கள்."

(அ—ரை): வரம்பு : எல்லை; சொற்ற : சொன்ன; புடை : பக்கம்; உடை : ஆடை; உறுதிர் : அடைவீர்.

குறிப்பு: 'புகழ் பொதிந்த மெய்யே போல்' என்பது உலகத்தில் எது அழிந்தாலும் சத்தியம் அழியாது என்ற கருத்தை உட்கொண்டு.

424. கண்ணிய கணிப்பரும் செல்வக் காதல் விட்(டு)
அண்ணலை அடிதொழ, அனையும் அன்பினால்,
நண்ணிய கவிக்குலத்(து) அரசன், நாள்தொறும்
புண்ணியன் தொழுகழல் பரதன் போன்றனன்.

## தானைகாண் படலம்

425. ஒடிக்கு மேல்,வட மேருவை வேரொடும் ஒடிக்கும்;
இடிக்கு மேல்,நெடு வான முகட்டையும் இடிக்கும்;
பிடிக்கு மேல்,பெரும் காற்றையும் கூற்றையும் பிடிக்கும்;
குடிக்கு மேல்,கடல் ஏழையும் குடங்கையால் குடிக்கும்.

## நாட விட்ட படலம்

426. 'வள்ளல் தேவியை வஞ்சித்து வவ்விய
கள்ள வல்அரக் கன், செலக் கண்டது,
தெள்ளி யோய்! அது தென்திசை என்பதோர்
உள்ள மும்எனக்(கு) உண்டென உன்னுவாய்.'

427. 'வடசொற்கும் தென்சொற்கும் வரம்பாகி,
நான்மறையும் மற்றை நூலும்
இடைசொற்ற பொருட்கெல்லாம் எல்லையாய்,
நல்லறிவுக்(கு) ஈறாய், வேறு
புடைசுற்றும் துணையின்றிப், புகழ் பொதிந்த
மெய்யேபோல் பூத்து நின்ற
உடைசுற்றும் தண்சாரல் ஓங்கிய வேங்
கடத்தில்சென்(று) உறுதிர் மாதோ!'

428. இதுவும் அது.

(க - ரை): "சுவர்க்கலோகம் அடைந்தவர்களது மனம்போல என்றும் மகிழ்ச்சி குறையாத காவிரி நீர்த்துறைகளையுடைய சோழநாட்டையடைந்து, அதைக் கடந்துசென்றால் வழியில் பல முனிவர்கள் தவம் செய்திருப்பர்; அவர் பக்கம் உங்கள் வீரத்தைக் காட்டாமல் அமைதியாகச்சென்று மலைநாட்டை அடைந்து, அங்கிருந்து செந்தமிழ் நாடாகிய பாண்டி நாட்டைச் சேர்வீர்களாக"

(அ-ரை). துறக்கம சுவாககம; கெழு : பொருநதிய, சோணுடு சோழநாடு—மரூஉ; தொல்லை . பழையவினை-பணபாகுபெயர் மறக்கம் மறத்தல்; உறக்கம் உற்றார், கனவு உற்றார் எனும உணர்வினெடும ஒதுங்கி அமைதியாகக் கடந்து; ஓஙகல : மலை; பிறக்கம ஒளி, அகன் அகன்ற; தமிழ் நாடு என்பது செந்தமிழ் நாடாகிய பாண்டி நாட்டைக் குறிததது; மாது, ஓ : அசைச் சொற்கள்

429. இதுவும் அது.

(க - ரை): "அவ்வாறு தென்பாண்டி நாட்டை அடைந்தால் அங்குப் பொதியமலையில் அகத்திய முனிவரது தமிழ்ச் சங்கத்தைப் போற்றுங்கள்; அந்தப் பொதியமலை அவர் என்றும் வசிக்கும மலை. ஆகையால் அதை வணங்கிச்சென்று தாமிரபருணி யாற்றைக் கடந்து சென்றால் மயேந்திரமென்னும் பெரிய மலையையும், கடலையும் காண்பீர்கள்."

(அ-ரை). இறைஞ்சி வணஙகி; நாககன்று யானைக்குட்டி, நெடுவரை . பெரியமலை, தடம . விசாலமான

430. இராமன் அனுமனிடம் சீதாபிராட்டியாரின் அடையாளங்கூறுதல்.

(க - ரை): "அனுமனே! சீதை மேனியின் நிறத்திற்கு மாந்தளிரை உவமை சொல்லுவோமென்றால், அது சில நாளில் முற்றி விடும்; பொன்னிறம உவமையென்றால், அது அனல்பட்டால் கருகும்; மாணிக்கத்தின் நிறம உவமையென்றால் அது உடைந்து விடும்; ஆகையால் அதுவும் உவமை பொருந்தாது. மின்னல் நிறத்தைச் சொல்லுவோமென்றால் அது வெளிப்பட்டு உடனே மறைந்துவிடும். தாமரை மலரின் நிறத்தைச் சொன்னல் அது சற்றுநேரத்தில் வாடிவிடும். ஆதலின் அவள் நிறத்தையே தான் அதற்கு உவமானம் சொல்ல வேண்டும் வேறு எந்த நிறத்தை உவமை சொல்லுவேன்!"

(அ-ரை). மா : மாந்தளிர்-முதலாகு பெயர், தன்னிறம தானே ஒக்கும் பொது நீங்கு உவமையணி; சமழ்க்கும் . வாடிவிடும்.

431. இராமன் அனுமனிடம் சீதைக்குச் சொல்லியனுப்பல்

(க - ரை): "முன்பு கோசிக முனிவரோடு சனகன் யாகத்தைக் காணும்பொருட்டு மிதிலை நகருக்குள் செல்லும்பொழுது அரசவீதியில், கன்னிமாடத்தில் சீதை நிற்க, நாங்கள் இருவரும் கண்டு கொண்டதைப்பற்றிச் சொல்வாயாக."

(அ-ரை): சென்னி : தலை; மாலையான் : சனகன்; காணிய : காணும் பொருட்டு; ஆடும் : விளையாடும்; கழறுவாய் : சொல்லுவாய்.

428. 'துறக்கம் உற்றார் மனமென்னத் துறைகெழுநீர்ச்
சோணாடு கடந்தால், தொல்லை
மறக்கம் உற்றார் அதன்அயலே மறைந்துறைவர்;
அவ்வழிநீர் வல்லை ஏகி,
உறக்கம் உற்றார் கன(வு)உற்றார் எனும் உணர்வி
னொடும் ஒதுங்கி, மணியார் ஓங்கல்
பிறக்கம் உற்ற மலைநாடு நாடி, அகன்
தமிழ் நாட்டில் பெயர்க மாதோ'

429. 'தென் தமிழ்நாட்(டு) அகன்பொதியில், திருமுனிவன்
தமிழ்ச் சங்கம் சேர்கிற் பீரேல்,
என்றும்அவன் உறைவிடம்ஆம்; ஆதலினால்
அம்மலையை இறைஞ்சி ஏகிப்
பொன்திணிந்த புனல்பெருகும் பொருநைஎனும்
திருநதி பின்(பு)ஒழிய, நாகக்
கன்றுவளர் தடம்சாரல் மயேந்திரமா
நெடுவரையும் கடலும் காண்டிர்.'

430. 'எந்நிறம் உரைக்கேன், மாவின்
இளநிறம் முதிரும்;மற்றைப்
பொன்நிறம் கருகும்;என்றால்,
மணிநிறம் உவமை போதா;
மின்நிறம் நாணி எங்கும்
வெளிப்படா(து) ஒளிக்கும்; வேணடின்
தன்நிறம் தானே ஒக்கும்;
மலர்நிறம் சமழ்க்கும் அன்றே'

431. 'முன்னை நாள், முனியொடும் முதியநீர் மிதிலைவாய்ச்,
சென்னிநீள் மாலையான் வேள்விகா ணியசெல,
அன்னம்ஆ டும்துறைக்(கு) அருகில்நின் றாளைஅக்,
கன்னிமா டத்திடைக் கண்டதும், கழறுவாய்!'

**432.** இதுவும் அது.

(க-ரை): "நாங்கள் நகரை நீங்கி வரும்பொழுது அயோத்தி மதிலை அடைவதற்கு முந்தியே, 'இன்னும் காடு எவ்வளவு தூரம் உள்ளது' என்று சீதை வினவியதைச் சொல்வாயாக" என்று இராமன் அனுமனிடம் கூறினன்.

(அ-ரை): மல்லல் : வளம்; மதி : சந்திரன்; கல்லின் : மலைபோன்ற; கடை : வாயில்; வெம்கானம் : கொடிய கானம்; உணர : நினைக்கும்படி.

வானரசேனை வரும் வழியில் ஒரு பிலத்தில் இறங்கி மீண்டதைப்பற்றிக் கூறுவது.

**433.** வானர சேனைகள் பிலத்தில் கண்ட நகரின் வளம்.

(க - ரை): பிலத்தில் கண்ட அந்நகரில், அமிர்தம் போன்ற சோறு முதலிய உணவு வகைகளும், தேனும், மதுவும், சுவையுடைய கனி வகைகளின் கூட்டமும், இன்னும் பல பயனுடைய பொருள்களும் எங்கும் மணம் வீசும்படியாக அளவற்றிருந்தன.

(அ-ரை): உறழ் : போன்ற; அயினி : சோறு; நறவம் : தேன்; தேறல் : மது; பிறக்கம் : மிகுதி; கமழ்வுற : வாசனைவீச; கொட்பு : வளைவு.

சேனைகள் வழியில் சென்றதைப்பற்றிக் கூறுவது; ஆறு : வழி.

**434.** வெளியில் பல இடங்களிலும் சீதையைத் தேடுதல்.

(க - ரை): படித்துறைகளிலும், மயிலாடிக்கொண்டிருக்கும்படியான இடங்களிலும், ஆற்றிடைக் குறைகளிலும், சோலைகளிலும், மலைச்சாரல்களில் ஓடிவருகின்ற அருவிநீர் தேங்கிய இடங்களிலும், குளங்களிலும், பளிங்குப்பாறைகளிலும் வானர வீரர்கள் சீதையைத் தேடினார்கள்.

(அ—ரை): தோகை : மயில்–சினையாகு பெயர்; சூழல் : சுற்றியுள்ள பக்கம்; குறை : ஆற்றிடைக் குறை (தீவு); சிறை : தேங்குமிடம்; தடம் : குளம்; அறை : பாறை, அறிவின் கேள்வியார் : (கல்வியறிவோடு) கேள்வியறிவுடையவர்கள்.

**435.** வானரவீரர் கண்ட கோதாவரியாற்றின் வர்ணனை.

(க-ரை): வீசும் அலைகளையுடையதாகி, இரத்தினங்களொடு ஓடிவருகின்ற அந்தக் கோதாவரியாறு கரை ஓரங்களில் நீர்த் திவலைகளைச் சிதறிக்கொண்டிருப்பது, இந்தப் பூமியானது கண்ணீர் சொரிந்து அழுவதை ஒத்திருந்தது.

(அ ரை): கலுழிமாரி : கண்ணீராகிய மழை.

**குறிப்பு: சனகன் வேள்வி செய்ய நிலத்தை உழுதபொழுது, படைச்சாலினின்றும் சீதை தோன்றிய வரலாறு இரண்டாம் மூன்றும் அடிகளில் கூறப்படுகிறது.**

432. 'மல்லன்மா நகர்துறந்(து) ஏகுநாள், மதிதொடும்
கல்லின்மா மதின்மணிக் கடைகடந் திடுதல்முன்,
'எல்லைதீர்(வு) அரியவெம் கானம்யா தோ?' எனச்
சொல்லினள்; அஃதெலாம் உணரநீ சொல்லுவாய்.'

## பிலம்புக்கு நீங்கு படலம்

433. அமிழ்துறழ் அயினியை அடுத்த உண்டியும்,
தமிழ்நிகர் நறவமும், தனித்தண் தேறலும்,
இமிழ்கனிப் பிறக்கமும், பிறவும், இன்னன
கமழ்வுறத் தோன்றிய கணக்கில் கொட்பது.

## ஆறுசெல் படலம்

434. துறையும், தோகைநின்(று) ஆடு சூழலும்,
குறையும், சோலையும் குளிர்ந்த சாரல்நீர்ச்
சிறையும் தெள்ளுபூந் தடமும், தென்பளிக்(கு)
அறையும் தேடினர் அறிவின் கேள்வியார்.

435. எழுகின்ற திரையிற்(று) ஆகி
இழிகின்ற மணிநீர் யாறு
தொழுகின்ற சனகன் வேள்வி
தொடங்கிய சுருதிச் சொல்லால
உழுகின்ற பொழுதின், ஈன்ற
ஒருமகட்(கு) இரங்கி,ஞாலம்
அழுகின்ற கலுழி மாரி
ஆம்எனப், பொலிந்த(து) அன்றே.

436. திருவேங்கட மலையின் வருணனை.

(க - ரை): முனிவர்களும், அந்தணர்களும், முற்பிறப்பில் செய்த பாவத்தை ஒழிக்கவல்ல தத்துவ ஞானிகளும், தேவர்களும், தேவமகளிர்களும், சித்தர்களும் மலையில் ஓடும் அருவி நீரில் நாள் தோறும் வந்து நீராடுகின்றனர்.

(அ-ரை) மறைவலோர் . அந்தணர், முந்தைநாள் : முற்பிறப்பு; அமரர் மாதர் : தெய்வ மகளிர்.

குறிப்பு. இந்நூலுள் 427-ஆம் பாடலில் சுக்கிரீவனால் சீதையைத் தேடவேண்டிய இடங்களில் திருவேங்கடமும் ஒன்றெனக் கூறப்பட்டது. இப் பாடலில் வானரவீரர்கள் திருவேங்கட மலையை அடைந்து அங்கே காணபதைப் பற்றிக் கூறப்படுகிறது.

437. வானர வீரர்கள் தொண்டை நாட்டைக் கடந்து சோழ நாட்டையடைதல்.

(க - ரை): தொண்டை நாட்டைக் கடந்து சென்ற நிகரற்றவர்களான வானர வீரர்கள் சோழ நாட்டை அடைந்தார்கள். நெல், கரும்பு, கமுகு ஆகிய இவைகள் அடர்ந்து செல்வோருக்கு வருத்தம் செய்யும் வழிகளில் மெல்லப் போனார்கள்.

(அ ரை): பொன்னி . காவிரி; பொருவிலர் : ஒப்பில்லாதவர்; கமுகு : பாக்குமரம்; செறிந்து . அடர்ந்து; இன்னல் : துன்பம்.

438. சோழ நாட்டின் வருணனை.

(க - ரை): அங்கே தென்னை மரங்கள் நல்லகுலையாகக் காய்த்து நிற்கும்; அருகிலே தாழை மரங்கள் கக்கும் சோற்றின் வாடையைச் சோலைகளிலுள்ள மாங்கனிகள் தம்முடைய மணத்தினால் போக்கும். வயல்களில் நெல் நாற்றுக்கள் வெளிக் கிளம்பித் தோன்றும்; அந்த நாற்றை வளர்க்கும் வயற் சேறுகளில் செங்கழுநீர் மலர்கள் வளர்ந்து காணப்படும்.

(அ—ரை): தாறு : குலை; தாழை · தென்னை, தாழஞ் செடி. தாழஞ் செடி ஒருவிதச் சோறுபோன்ற பொருளைக கக்கும் என்பதைக் 'கூன கைதை சோறு கால்வன' எனவரும திருவிளையாடற் புராணத்தாலும அறிக. செங்கழுநீர் : நீர்ப்பூககளில் ஒன்று; தீம்பிழி · தேன்; நாறு : நாற்று, நாறுவ . காணப்படுவன: இரண்டாம அடியில் உள்ள நாறுவ என்பது இடைநிலைத் தீவகம்,

439. வானர வீரர்கள் சோழ சேர நாடுகளைக் கடந்து பாண்டிய நாட்டை அடைதல்.

(க - ரை): அத்தகைய சோழ நாட்டை நீங்கி, இல்லற ஒழுக்கமுடைய சேர நாட்டையும் நீங்கித் தென் தமிழ் நாடாகிய பாணடிய நாட்டை அடைந்தனர்.

(அ—ரை): மனையின் மாட்சிகுலாம் மலைமண்டலம் : இல்லறத்தின் சிறப்பு விளங்குகின்ற சேரநாடு; அகன் : அகன்ற; புனல் நாடு : சோழ நாடு; மேயினர்: அடைந்தார்.

436. முனிவரும், மறைவ லோரும்,
முந்தைநாள் சிந்தை மூண்ட
வினைவரும் நெறியை மாற்றும்
மெய்யுணர் வோரும், விண்ணோர்
எனைவரும் அமரர் மாதர்
யாவரும், சித்தர் என்போர்
அனைவரும், அருவி நன்னீர்
நாளும்வந்(து) ஆடு கின்றார்.

437. அன்ன தொண்டைநல் நாடு கட ந்(து),அகல்
பொன்னி நாடு பொருவிலர் எய்தினார்;
செந்நெ லும்,கரும் பும்,கமு கும்செறிந்(து)
இன்னல் செயயும் நெறிஅரி(து) ஏகுவார்.

438. தாறு நாறுவ தாழைகள்; தாழையின்
சோறு நாறுவ தீம்பிழி மாங்கனி:
நாறு நாறுவ; நாறு வளர்க்குறும
சேறு நாறுவ செங்கழு நீர்; அரோ!

439. அனைய பொன்னி அகன்புனல் நா(டு)ஒரீஇ
மனையின் மாட்சி குலாம்,மலை மண்டலம்
வினையின் நீங்கிய பண்பினர், மேயினார்,
இனிய தென்தமிழ் நாடுசென்(று) எய்தினார்.

சடாயுவின் தமையனாராகிய சம்பாதியைப் பற்றிக் கூறுவது.

**440.** தன் தம்பியாகிய சடாயு இறந்தமையை அனுமன் வாயிலாக அறிந்த சம்பாதியின் நிலை.

(க - ரை): 'முறைமை தவறாத என் தம்பியும் இறந்து விட்டானே' என்று துடிக்கின்ற நெஞ்சோடும், பதைக்கின்ற உடம்போடும் இறகு அறுக்கப்பட்ட மலையென்னும்படி நடந்து சென்று கொண்டிருந்தான்.

(அ—ரை). எம்பி : என் தம்பி. குலிசவேல் : வச்சிராயுதம்.

**441.** சம்பாதி வானரரிடம் தனது வரலாற்றைக் கூறுதல்.

(க - ரை): "தாய்போலும் அன்புடைய நண்பர்களே! உடன் பிறந்த நாங்கள் இருவரும் சம்பாதி, சடாயு என்று சொல்லப் படுவோம். நாங்கள் கழுகின் கூட்டத்திற்கு அரசர்கள்; சூரியன் தேர்ப்பாகனாகிய அருணனின் மைந்தர்கள்."

(அ—ரை) தகைய : இங்கு அன்பைக் குறிக்கிறது. சேய் ஒளி : செம்மை நிறம். பரவை : கடல். ஞாலம் : பூமி. கதிர்க்கடவுள் : சூரியன்.

**442.** இதுவும் அது.

(க – ரை): "நாங்கள் இளமைக் காலத்தில் தேவலோகத்தைக் காண விரும்பி ஆகாயத்தில் பறந்து செல்லும் பொழுது, சூரியனுடைய தேரைப் பார்த்தோம். நாங்கள் பார்ப்பதற்கு முன்பே சூரியன் எங்களைப் பார்த்துச் சீறி, எனது சிறகு கருகும் படியாகச் செய்தான்"

(அ–ரை): உம்பர் நாடு : தேவலோகம்; காண்டும் : பார்ப்போம்; மீயுயர் : மிக உயர்ந்த–ஒருபொருட் பன்மொழி; மேக்கு : மேல்; வேலை : பொழுது; காய்கதிர்க் கடவுள், செங்கதிர்ச்செல்வன் : சூரியன்.

**443.** இதுவும் அது

(க - ரை): "அவ்வாறு சிறகு கருகியதால் மண்ணில் விழுந்து துன்புறும் என் நிலையைக் கண்ட அச்சூரியன், 'சீதையைத் தேட வரும் வானர வீரர்கள் உச்சரிக்கும் இராமநாம மந்திரத்தால் கருகின சிறகு பெற்று நீ எழுவாய்" என்று கருணையினால் அருள் கூர்ந்தான்.

(அ–ரை): எண் : எண்ணம்; வயங்கு : விளங்குகின்ற.

## சம்பாதிப் படலம்

440. 'முறையுடை எம்பியார் முடிந்த வா'எனப்
பறையிடு நெஞ்சினன்; பதைக்கும் மேனியன்;
இறையுடைக் குலிசவேல் எறிதலால் முனம்
சிறையறு மலைஎனச் செல்லும் செய்கையான்.

441. 'தாய்எனத் தகைய நண்பீர்!
சம்பாதி சடாயு என்பேம்;
சேய்ஒளிச் சிறைய வேகக்
கழுகினுக்(கு)அரசு செய்வேம்;
பாய்திரைப் பரவை ஞாலம்
படர்இருள் பருகும் பண்பின்
ஆய்கதிர்க் கடவுள், தேர்ஊர்
அருணனுக்(கு) அமைந்த மைந்தர்.

442. 'ஆயுயர் உம்பர் நாடு
காண்டும்; என்(று) அறிவு தள்ள
மீயுயர் விசும்பின் ஊடு
மேக்குறச் செல்லும் வேலை,
காய்கதிர்க் கடவுள் தேரைக்
கண்ணுற்றேம்; கண்ணுறுமுன்
தீயையும் தீக்கும் தெய்வச்
செங்கதிர்ச் செல்வன் சீறி.

443. 'மண்ணிடை விழுந்த என்னை,
வானிடை வயங்கு வள்ளல்,
கண்ணிடை நோக்கி, உற்ற
கருணையான், 'சனகன் காதல்
பெண்ணிடை யீட்டின் வந்த
வானரர் இராமன் பேரை
எண்ணிடை உற்ற காலத்(து)
இறகுபெற்(று) எழுதி!' என்றான்.

**444.** *சம்பாதி வானர வீரரை வேண்டல்.*

**(க - ரை):** "*வானர வீரர்களே! சீதா பிராட்டியார் இலங்கையில் இருக்கின்றார்; அங்கே நீங்கள் அனைவரும் ஒருங்கு போவதென்றால் இயலாத காரியம். ஆதலால் உங்களில் வல்லவனான ஒருவன் மாத்திரம் இலங்கைக்குள் மறைந்து சென்று இராமன் கூறிய உண்மையான வார்த்தைகளைச் சொல்லிப் பிராட்டியாரைத் தேற்றி வாருங்கள்; இல்லையேல் இராமனிடம் சென்று பிராட்டியார் இலங்கையில் இருப்பதாக என்னை நம்பிச் சொல்லுங்கள்!*"

**(அ-ரை):** *சேறல் : செல்லுதல், அவண் : அங்கு; வாய்மை : வார்த்தை; தெருட்டி : தேற்றி.*

*மகேந்திர மலையில் நிகழ்ந்தனவற்றைக் கூறுவது.*

**445.** *சாம்பவான் அனுமனைப் புகழ்தல்.*

**(க-ரை)** : ''*அனுமானே! உம் ஒருவரோடு மூவுலகும் எதிர்த்து வந்தாலும் அதை ஒரு பொருளாகக் கருதாமல் போர் செய்யும் வலிமை மிக்க, உயர்ந்த தோளை உடையீர்! உலகத்தில் இருளை நீக்கும் சூரியன் தேர் முன்னால் சென்று வடமொழி நூல்களையெல்லாம் கற்றறிந்தீர்!*''

**(அ—ரை):** *ஓாவில, ஓர்வு இல் : நினைதல் இல்லாத, வலம் வலிமை, வெற்றி; ஒல்கல் இல் : தளராத, சீக்கும : நீக்கும்; பகலோன் : சூரியன்*

**446.** *இதுவும் அது.*

**(க - ரை).** ''*நீதி வழியில் ஒழுகுகின்றீர்; உண்மை பொருந்தியவராய் இருக்கின்றீர்; மனத்தாலும் பெண்களை நினைக்காமல் அறிவு வளரப் பெற்றீர்; வேதங்களையெல்லாம் கற்றறிந்தீர்; என்றும் சிரஞ்சீவியாக இருக்கின்றீர்; அனைவராலும் பிரமனே நீர் எனச் சொல்லப்படுகின்றீர்!*''

**(அ-ரை).** *நின்றீர் . ஒழுகுகின்றீர்–'கற்றபின் நிற்க அதற்குத் தக' என்னும் குறளிலும் இப்பொருள் படுவதைக் காணலாம். வாய்மை . உண்மை; பேணுது : பாராட்டாது; ஊழி . பிரளயகாலம்; அயன் : பிரமன், அறைகின்றீர் : சொல்லப்படுகின்றீர்; செயப்பாட்டு வினை செய்வினை போல 'அறைகின்றீர' எனக் கூறப்பட்டுள்ளது.*

**447.** (A) *அனுமான் சாம்பவான் முதலான வானரர்களிடம் கூறுதல்.*

**(க - ரை):** ''*இலங்கையை வேரோடு தோண்டி இங்கே கொண்டு வந்து போடு என்றாலும், குறுக்கிட்ட அரக்கர்களையெல்லாம் அடியோடு அழித்துச் சீதா பிராட்டியாரைத் திருப்பிக் கொண்டு வந்து சேர் என்றாலும், நீங்கள் சொன்னபடியே செய்து முடிப்பேன்; அஞ்சவேண்டாம்; அதை விரைவில் பார்ப்பீர்கள்!*''

**(அ-ரை):** *இடந்து : தோண்டி; இவ்வயின் : இவ்விடம்; விலங்கினர் : தடுத்தவர்; விளிய : சாகும்படியாக; நூறி : பொடியாகச் செய்து; போது : வா; மாற்றம் : வார்த்தை; கடிது : விரைவில்.*

444. 'எல்லீரும் சேறல் என்ப(து)
எளிதன்(று)அவ் இலங்கை மூதூர்;
வல்லீரேல், ஒருவர் ஏகி,
மறைந்(து)அவண் ஒழுகி, வாய்மை
சொல்லீரே; துயரை நீக்கித்,
தோகையைத் தெருட்டி மீள்திர்!
அல்லீரேல், என்சொல் தேறி,
உணர்த்துமின் அழகற்(கு)அம்மா!'

மகேந்திரப் படலம்

445. 'போர்முன் எதிர்ந்தால் மூவுலகேனும் பொருளாக
ஓர்வில் வலப்கொண்(டு) ஒலகலில்,வீரத்(து) உயர்தோளீர்!
பாருலகெங்கும பேர்இருள் சீகும் பகலோன்முன்,
தேர்முன் நடந்தே, ஆரிய நூலும் தெரிவுற்றீர்!'

446. 'நீதியில் நின்றீர்! வாய்மை அமைந்தீா! நினைவாலும்
மாதர்நலம்பேணு(து)வளர்ந்தீர்! மறையெல்லாம்
ஓதி உணர்ந்தீர!ஊழி கடந்தீர்! உலகீனும்
ஆதி அயன்தானேயென யாரும அறைகின்றீர்!'

447.A. 'இலங்கையை இடந்து வேரோ(டு),
இவ்வயின தருகென் றுலும்,
விலங்கினர் தம்மை எல்லாம்,
வேரொடும் விளிய நூறிப்,
பொலன்குழை மயிலைக் கொண்டு
போதெனப் புகன்றிட் டாலும்,
கலங்கலிர் உரைத்த மாற்றம்
முடிக்குவல்; கடிது காணபீர்.'

**447.** (B) இதுவும் அது.

**(க - ரை) :** "கடலாற் சூழப்பட்ட உலகம் முழுவதையும் அழிக்கக் கடல் பொங்கி வந்தாலும், இந்தப் பூமியானது உடைந்துபோய் உயர்ந்து வானத்திற்சென்றாலும், உங்களுடைய கருணையும் இராமபிரானுடைய ஏவலும் ஆகிய இரண்டையும் இரண்டு சிறகுகளாகக் கொண்டு கருடாழ்வானைப்போல் நான் இக்கடலைக் கடப்பதை நீங்கள் காண்பீர்களாக!"

**(அ-ரை)** முற்றும் : சுற்றியுள்ள. முந்நீர் : கடல்; படைத்தல், காத்தல, அழித்தல் ஆகிய முத்தொழிலையும் உடையது கடல என்று நச்சினார்க்கினியர் உரை கூறுவர். அண்டம் : ஆகாயம், கலுழன் : கருடன்.

**448.** அனுமான் பேருருவங் கொள்ளுதல்

**(க - ரை) :** சமுத்திரத்தைத் தாண்ட வேண்டுமென்ற எண்ணத்தோடு, உலகம் அளந்த திருமால் வானில் நீட்டிய திருவடிபோலப் பெரிய வடிவத்தோடு வானம் வரையும் உயர்ந்தான். திருவடியென்னும் பெயருடைய அனுமான் இப்பொழுது உவமையாலும் திருவடியென்னை அறியும்படி நின்றான்

**(அ-ரை).** பொரு அரு வேலை : ஒப்பற்ற கடல். புந்தி : மனம்; புவனம் : பூமி; மேக்கு : மேல் : உம்பர் : வானுலகம்.

**குறிப்பு:** அனுமானைச் சிறிய திருவடியென்றும், கருடாழ்வாரைப் பெரிய திருவடியென்றும் கூறுவது வைணவ மரபு, திருவடி : வாகனம், மூர்த்தி.

447B. 'முற்றும்நீர், உலகம் முற்றும்
விழுங்குவான் முழங்கி முந்நீர்
உற்றதே எனினும், அண்டம்
உடைந்துபோய் உயர்ந்த தேனும்,
இற்றைநும் அருளும் எங்கோன்
ஏவலும் இரண்டு பாலும்
கற்றைவார் சிறை களாகக்
கலுழனில் கடப்பல்; காண்மின்!'

448. பொருவரு வேலை தாவும்
புந்தியான், புவனம் தாய
பெருவடி(வு) உயர்ந்த மாயோன்
மேக்குறப் பெயர்த்த தாள்போல்,
உருஅறி வடிவின் உம்பர்
ஓங்கினன்; உவமை யாலும்
திருவடி என்னும் தன்மை
யாவர்க்கும் தெரிய நின்றான்.

இக்காண்டத்தில் கூறுவனவற்றில் இராமனது அழகை எடுத்துக் காட்டும் சிறப்புப்பற்றிச் சுந்தரகாண்டம் எனப் பேர் வந்தது.

அனுமான் கடலைத் தாவியதைப்பற்றிக் கூறுவது.

449. கடவுள் வாழ்த்து :

**(க - ரை)** : மாலைக்காலத்தில், வழியில் நெளிந்துகிடக்கும் ஒரு கயிற்றில், பாம்பின் உருவம் காணப்பட்டுப் பார்ப்போரை யெல்லாம் மருட்டுவதைப்போல், ஐம்பூதங்களின் இயல்பாலாகிய இவ்வுலகம் மாயையால் மூடப்பட்டுப் பரம்பொருளை அறியாத வாறு செய்கிறது. அது யாரைக் கண்டால் நீங்கிவிடுமோ?-வேதங் களின் முடிவில் எடுத்துக் கூறப்படும் பரம்பொருள் யாரோ? அப் பரம்பொருளே இலங்கையிற் பொருத ஸ்ரீ ராமர்.

**(அ-ரை)**: அலங்கல் மாலை; விலங்கிய · [அறியாதபடி] விலக்கிய, **வீக்கம்** · [மாயையின்] மிகுதி; என்ப என்பார்.

450. அனுமான் மகேந்திரமலையில் ஏறி இலங்கையைக் காண்டல்.

**(க - ரை)** அனுமான் இலங்கையின் வட்டமான மதில், கோபுரவாயில், இரத்தினங்கொண்டு இழைத்த மாடங்களை யுடைய வீதி முதலியவற்றைக் கண்டு தோள்கொட்டி ஆரவா ரித்தான்

**(அ-ரை)**: கனகம : பொன், நாஞ்சில : மதில் உறுப்புகளில் ஒன்று **கடி : மணம்**; பொழில் . சோலை; மண்டலம் · வட்டம, கொற்றம் : வெற்றி **களபம்** : கலவைச்சாந்து; [சிந்திய மாடவீதி] அண்டம் ஆகாயம.

451. கடலைத் தாவும் முன் அனுமனின் செயல்.

**(க - ரை)** : வாலை விசையோடு எடுத்து நிமிர்த்தி, காலை மடக்கி, மார்பை நிமிர்த்தி, இருதோள்களும் பூரிக்கக் கழுத்தைச் சுருக்கிக்கொண்டு காற்று வீசும்படியாகக் கையை எடுத்து, பார்ப்போர் கண்கள் தொடராதபடி அவ்வளவு வேகத்தோடு பிரமன் உலகம் தன்முடியில் உராயும்படியாக எழுந்தான்.

**(அ-ரை)**: மானம் : பெருமை; துணை : இரண்டு; கால் : காற்று; விசை · **வேகம்**; தடக்கை : விசாலமான கை; கதுவா வண்ணம் : தொடரா வண்ணம்; **விரிஞ்சன்** : பிரமன்; உரிஞ்ச : உராய.

# சுந்தர காண்டம்

## கடல் தாவு படலம்

449. அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவெனப், பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுபா(டு) உற்ற வீக்கம்
கலங்குவ(து) எவரைக் கண்டால?
அவர்,என்ப கைவில் ஏந்தி
இலங்கையில் பொருதார் அன்றே;
மறைகளுக்(கு) இறுதி ஆவார்.

450 'கண்டனென் இலங்கை மூதூர்,
கடிபொழில், கனக நாஞ்சில்,
மண்டல மதிலும், கொற்ற
வாயிலும, மணியில் செய்த,
வெண்தளக் களப மாட
வீதியும், பிறவும்' என்னை
அண்டமும் திசைகள் எட்டும
அதிரத்,தோள் கொட்டி, ஆர்த்தான்

451. வால்விசைத்(து) எடுத்து, வன்தாள
மடக்கி, மார்(பு) ஒடுக்கி,மானத்
தோள்விசைத் துணைகள் பொங்கக்,
கழுத்தினைச் சுருக்கித் தூண்டும்
கால்விசைத் தடக்கை நீட்டிக்,
கண்புலம் கதுவா வண்ணம்
மேல்விசைத்(து) எழுந்தான், உச்சி
விரிஞ்சன்நா(டு) உரிஞ்ச வீரன்.

**452.** தாவிச்செல்லும் அனுமனின் தோற்றம்.

**(க - ரை):** அனுமான் தாவிச்செல்வது கைலாயகிரியானது, 'முன் ஒருதரம் இந்த இராவணனை அழுத்தி நசுக்கினேன்; மீட்டும் ஒருமுறை இவனை அழிக்கப்போகிறேன்' என்று தன்மேல் வீற்றிருக்கும் சிவபெருமானை யின்றித் தான்மட்டும் தாவிச்செல்வது போல் இருந்தது.

**குறிப்பு:** அனுமனின் நிறத்திற்கும் வடிவத்திற்கும் கைலாய மலை ஒப்பு.

**(அ-ரை):** ஏத்த : துதிக்க; இறைஞ்ச : வணங்க; மாருதி : வாயுபுத்திரன் : அனுமான்; மாருதம் : காற்று; தத்தித்தாங்த நாமம்; உள்கூர : உள்ளத்தில் மிக; அண்ணல் வாள் : சிவபெருமான் கொடுத்த வாள்; கண்ணுதல் : சிவபெருமான்.

**453.** இதுவும் அது.

**(க - ரை):** 'அருந்தவம்செய்து இராவணன் பெற்ற தவத்தின் பயன்களெல்லாம் முடிந்துவிட்டன ; இனி அவனுக்கு அழிவு காலம் பிறந்தது' என்பதை உலகிற்கு அறிவிக்கக் கருதிச் சூரியன் தன் இயற்கையான வழியைவிட்டு வடக்கிருந்து தெற்கு நோக்கிப் போவதைப்போல் அனுமான் இலங்கை நோக்கித் தாவினன்.

**(அ-ரை)** மாகம் : ஆகாயம; பரிதி : சூரியன்; வானவன் : தேவன்.

**454.** மைந்நாகமலை கடலினின்று மேலே எழுதல்.

**(க - ரை):** அனுமான் நடுக்கடலில் தாவும்பொழுது, கடலில் மறைந்திருந்த மைந்நாகமலை அவனுக்கு எதிரே எழுந்து தோன்றியது. அது பாற்கடல் கடைந்தபொழுது நடுக்கடலினின்றும் தோன்றிய ஐராவதம் என்னும் யானையைப்போல் இருந்தது.

**(அ-ரை):** இந்நாகம அன்னன . மலையைப போனற அனுமானை; எறி வீசுகின்ற; கால் : காற்று; திந்நாகம் : திக்கு—நாகம வடமொழிச்சந்தி,—திக்கு யானை; கைந்நாகம் : துதிக்கையுடைய யானை (ஐராவதம்)

**குறிப்பு:** ஒரு காலத்தில் மலைகளுக்கு இருந்த இறகுகளை இந்திரன் அறுத்தபோது, இம்மலை கடலுள் முழுகி மறைந்து கொண்டது என்பர்.

**455.** அனுமான் இலங்கையை அடைதல்.

**(க - ரை):** இலங்கையை நோக்கிச் சென்ற அனுமான் அங்கே சோலைகளையுடைய ஒரு பவளமலையைக் கண்டு அதில் பாய்ந்தான்.

**(அ-ரை):** தசும்பு : இடம், முடி; கனகம் : பொன்; நாஞ்சில் : மதில் உறுப்பு; அசும்பு : ஊற்று; பிரசம் : தேன்; அண்மி : அருகிற்போய்; விசும்பு : ஆகாயம்; விலங்கி : நீங்கி; பசும்புடை : பசிய பக்கத்தையுடைய; வரை : மலை.

452. விண்ணவர் ஏத்த, வேத
முனிவரர் வியந்து வாழ்த்த,
மண்ணவர் இறைஞ்சச் செல்லும்
மாருதி, மறம்உள் கூர,
அண்ணல்வாள் அரக்கன் தன்னை
அமுக்குவென் இன்னம் என்னாக்
கண்ணுதல் ஒழியச் செல்லும்
கயிலைஅம் கிரியும் ஒத்தான்.

453. தடக்கைநா லைந்தும், பத்துத்
தலைகளும், உடையான் தானே,
அடக்கிஐம் புலன்கள் வென்ற
தவப்பயன் அறுத லோடும்,
கெடக்குறி யாக, மாகம்
கிழக்(கு)எழு வழக்கு நீங்கி
வடக்கெழுந்(து) இலங்கை செல்லும்
பரிதிவா னவனும் ஒத்தான்.

454. இந்நாகம் அன்னான் எறிகால்என
ஏகும் வேலைத்,
திந்நாக மாவில் செறிகீழ்த்திசை
காவல் செய்யும்
கைந்நாகம், அந்நாள் கடல் வந்ததோர்
காட்சி தோன்ற,
மைந்நாகம் என்னும் மலை, வான் உற
வந்த(து) அன்றே.

455. தசும்புடைக் கனக நாஞ்சில்
கடிமதில் தணித்து நோக்கா,
அசும்புடைப் பிரசத் தெய்வக்
கற்பக நாட்டை அண்மி
விசும்பிடைச் செல்லும் வீரன்
விலங்கி,வே(று) இலங்கை மூதூர்ப்
பசும்புடைச் சோலைத்(து) ஆங்கோர்
பவளமால் வரையில் பாய்ந்தான்.

அனுமான் இலங்கையில் பல இடங்களிலும் சீதையைத் தேடுதல்.

**456.** இலங்கையில், மாடங்களின் பெருமை.

**(க - ரை):** 'பொன்னால் செய்யப்பட்டு இரத்தினங்கள் பதிக்கப்பட்டனவோ? சூரியன் ஒளியைக்கொண்டு அமைத்து மின்னல் பதிக்கப்பட்டனவோ?' என்று பிரித்தறியமுடியாத ஒளியையுடைய மாடங்கள், மேக மண்டலத்தைத் தாண்டிச் சந்திர மண்டலம் வரையும் உயர்ந்திருக்கின்றன.

**(அ-ரை)** இழைத்த : செய்யப்பட்டவை, பொதிந்த : பதிக்கப்பட்டவை; வண்கொண்டல் : வளம் பொருந்திய மேகம்; மதி : சந்திரன்.

**457.** அனுமான் கண்ட இலங்கை மாந்தரின் நிலை.

**(க - ரை):** 'பளிங்குக் கல்லினால் செய்யப்பட்ட மாளிகையின் இடங்களிலும், ஏனைய இடங்களிலும், அங்கு அமைக்கப்பட்ட கற்பகச் சோலைகளிலும், எங்கே பார்த்தாலும் மதுவை உண்டு ஆடுகிறவர்களும் பாடுகிறவர்களுமாய் இருக்கின்றார்களே யன்றிக் கவலையுடையவர்களாக ஒருவருமே காணப்படவில்லை' என்று அனுமான் கூறினான்.

**(அ-ரை):** தண் : குளிர்ச்சி; நறும் : நறுமணமுள்ள, தேறல் : மது.

**458.** இராவணனது சேனைகளைப் பார்த்துஅனுமான் கூறுதல்.

**(க - ரை):** 'வில்லை ஏந்திய சேனையை அதிகமென்று சொல்வேனோ? வேலை ஏந்திய சேனையைப் பெரிதென்று சொல்வேனோ? மற்போர் புரியும் சேனை மிகுந்ததை என்று சொல்வேனோ? வாளாயுதத்தை ஏந்திய சேனை பெரிதென்று சொல்வேனோ? கற்பணம், தண்டு, பிண்டி, பாலம் ஆகிய ஆயுதங்கள் விளங்கப்பெற்ற சேனை பெரிதென்று சொல்வேனோ? இவைகளில் எது பெரிதென்று என் தலைவனாகிய இராமனிடம் சொல்லுவேன்?'

**(அ-ரை):** கற்பணம் : இருபால் ஆணி நெருஞ்சி முள்ளாகப் பண்ணிய ஆயுதம்; தண்டு : தண்டாயுதம்; கால்லும் விளங்கப் பெற்ற.

**459.** இலங்கையில் நிலாத்தோற்றம்.

**(க - ரை):** இலங்கை நகரத்துள் எங்கெங்கும் பரவிய நிலாவின் தோற்றமானது, இராமபிரான் எய்த அம்பானது இலங்கையின் பல இடங்களிலும் சென்று ஊடுருவியது எனவும், அனுமான் உதவியால் அவன் புகழ் எங்கும் பரவிற்று என்னும்படியாகவும் தோன்றிற்று.

**குறிப்பு:** பலவிடங்களிலும் பரந்து பாய்ந்து செல்வதற்கு அம்பும், வெண்மை நிறத்திற்குப் புகழும் உவமை கூறப்பட்டன.

**(அ-ரை):** இகழ்வரும் : இகழ்வு—அரும—புகழ்மிக்க; அரும : இல்லை என்ற பொருளில் வந்துள்ளது; 'மனக்கவலை மாற்றல் அரிது' என்ற குறளிலும் இப்பொருள் படுவதைக் காண்க. பகழி : அம்பு, பற்று : உதவி, பற்றுக்கோடு; உலாயது : உலவியது: பொலிவு : ஒளி.

ஊர்தேடு படலம்

456. பொன்கொண்(டு) இழைத்த? மணியைக் கொடு பொதிந்த?
மின்கொண்(டு) அமைத்த?வெயி லைக்கொடு சமைத்த?
என்கொண்(டு) இயற்றிய எனத்தெரி(வு) இலாத,
வன்கொண்டல் விட்டு,மதி முட்டுவன மாடம்.

457. 'பளிக்கு மாளிகைத் தலந்தொறும்,
இடந்தொறும், பசுந் தேன்
துளிக்கும் கற்பகத் தண் நறும்
சோலைகள் தோறும்,
அளிக்கும் தேறல் உண்(டு), ஆடுநர்,
பாடுநர் ஆகிக்
களிக்கின் றார்அலால், கவல்கின்றார்
ஒருவரைக் காணேன்.'

458. 'விற்படை பெரி(து)என் கேனோ?
வேற்படை மிகும்என் பேனோ?
மற்படை உடைத்(து)என் கேனோ?
வாள்படை வலி(து)என் கேனோ?
கற்பணம், தண்டு, பிண்டி,
பாலம், என்(று)இனைய காந்தும்
நற்படை பெரி(து)என் கேனோ?
நாயகற்(கு) உரைக்கும் நாளில்'

459. இகழ்வரும் பெருங்குணத்(து) இராமன் எய்த(து)ஓர்
பகழியின் செலவென, அனுமன் பற்றினல்
அகழ்புகுந்(து), அரண்புகுந்(து), இலங்கை அன்னவன்
புகழ்புகுந்(து) உலாய(து)ஓர் பொலிவும் போன்றதே.

**460.** இலங்கை நகரத் தெய்வமாகிய இலங்காதேவி அனுமனைக் கண்டு எண்ணுதல்.

**(க - ரை):** அனுமனைக்கண்ட இலங்காதேவி, 'இவன் உண்மையான குரங்கல்ல; ஏதோ வஞ்சனையாக இருக்கின்றது; இவனைக் கண்டமாத்திரத்தில் எமனும் இறந்துவிடுவான்; இவன் சிவபெருமானைப்போலச் சிரிக்கிறான்' என்று எண்ணிக் கல்லைப் போல் அசையாமல் நின்றாள்.

**(அ-ரை):** துஞ்சும் . இறப்பான்–மங்கல வழக்கு; கண்ணுதல் : சிவபெருமான்; கண்ணுதல் சிரிப்பு என்று கூறிய உவமை கருதத்தக்கது. நகுதல் : சிரித்தல்.

**461.** இலங்கணியைக் கொன்ற அனுமான், நகரில் நுழைந்து பல இடங்களையும் பார்த்தல்.

**(க - ரை):** இலங்கையில் வீடுதோறும் மகளிர் காலையில் எழுந்து, அரம்பையர் பாட இல்லுறை தெய்வங்களைப் போற்றுதலைக் கண்டான்.

**(அ-ரை):** நூல் : ஆடை–கருவியாகு பெயர், பாதசாலகம் : சிலம்பு; பாணி : தாளம்; மலர்ப்பலி : பூவினாற் செய்யும் பூசை.

**462.** அனுமான் இலங்கையில் அரக்கர் திருமணத்தைக் காண்டல்.

**(க - ரை):** அணிகலன்கள் ஒளிசெய்ய, வாத்தியங்கள் ஒலிக்க, தேவர்கள் வாழ்த்த, முனிவர்கள் மங்கலங்கூற, மகளிர் கூட்டம் சுற்ற, தேவ மகளிர் பல்லாண்டு பாடத் திருமணம் செய்கின்றவர்களை அனுமான் கண்டான்.

**(அ–ரை):** கோவை : கோத்த மாலை; கொண்டல் : மேகம்; சோபனம் : மங்கலம்; பலாண்டு : ஆகுபெயர்.

**463.** கும்பகர்ணன் தூக்கம்.

**(க - ரை):** மந்திரத்தில் கட்டுண்ட பாம்புபோலவும், பிரளய காலம் வரை கரை கடவாது அடங்கி நிற்கும் கடல்போலவும், கும்பகர்ணன் தன் வலிமையெல்லாம் அடங்கி நெடுந்தூக்கம் தூங்கிக் கொண்டிருந்தான்.

**(அ–ரை):** தகைந்த : கட்டப்பட்ட; புடைபெயரா : நிலையினின்றும் பெயராத.

460. 'வஞ்சம் கொண்டான், வானரம்
அல்லன்! வருகாலன்
துஞ்சும் கண்டால் என்னை;
இவன், சூழ் திரை ஆழி
நஞ்சம் கொண்ட கண்ணு
தலைப் போல் நகுகின்றான்'
நெஞ்சம் கொண்டே கல்என
நின்றே நினைகின்றாள்.

461. சங்கொடு, சிலம்பும், நூலும்,
பாதசா லகமும் தாழப்,
பொங்குபல் முரசம் ஆர்ப்ப,
இல்உறை தெய்வம் பேணிக்,
கொங்கலர் கூந்தல் செவ்வாய்
அரம்பையர் பாணி கொட்டி
மங்கல கீதம் பாட,
மலர்ப்பலி வகுக்கின் றாரை.

462. கோவையும் குழையும் மின்னக்
கொண்டலின் முரசம் ஆர்ப்பத்,
தேவர்நின்(று) ஆசி கூற,
முனிவர்சோ பனங்கள் செப்பப்,
பாவையர் குழாங்கள் சூழப்,
பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூறப்,
புதுமணம் புணர்கின் றாரை.

463. தடைபுகு மந்திரம் தகைந்த நாகம்போல்
இடைபுகல் அரியதோர் உறக்கம் எய்தினான்;
கடையுக முடி(வு)எனும் காலம் பார்த்(து),அயல்
புடைபெய ரா,நெடும் கடலும் போலவே.

**464.** இலங்கையில் பல இடங்களிலும் அனுமான் சீதையைத் தேடிச் செல்லல்.

(க - ரை): அனுமான் இலங்கையில் பல மாடங்கள், கூடங்கள், மேல் மாளிகைகள், நடனசாலைகள், சபைகள், கோயில்கள், இசை பாடும் மேடைகள், பட்டி மண்டபம் ஆகிய இவற்றில் எல்லாம் சீதையைத் தேடிச்சென்றான்.

(அ-ரை): ஓளிகள : வரிசைகள்; வேதிகை : மேடை; நலம் : நன்மை.

**465.** அனுமான் விபீடணனைப் பார்த்து அப்பாற் செல்லுதல்.

(க - ரை): அனுமான் விபீடணனைத் தன்னுடைய அறிவால் உணர்ந்து, இவன் குற்றமற்றவன் என்று கருதி அவனை நீங்கிக் கோடிக் கணக்கான மாடங்களையெல்லாம் ஒரு நொடியில் பாய்ந்து தேடிச்சென்று போனான்.

(அ-ரை) செற்றம் : கோபம்; பொற்றை : மலை.

**466.** அனுமான் இந்திரசித்தைக் கண்டு வியத்தல்.

(க - ரை): 'இவன் அரக்கனோ? முருகனோ? பல சிங்கங்கள் சேர்ந்து ஒன்றானாற்போல் வலிமையுடையவனாய் இருக்கின்றான்; யாவனோ? இராமனும் இலக்குவனும் இருவரும் சேர்ந்து பலநாள் வருந்தி இவனோடு போர்புரிய நேரும்; ஒருநாளில் இருநாளில் இவனை ஒழிக்க முடியாது' என்று அனுமான் இந்திரசித்தைக் கண்டு வியந்தான்.

(அ-ரை): எயிறு : பல்; கணிச்சியான் : மழுவேந்திய சிவன்; அரி : சிங்கம்; ஏந்தல : தலைவன்; உளைய : வருந்த.

**467.** இதுவும் அது.

(க - ரை): 'இவனைத் துணையாக உடைய இராவணன் மூன்று உலகங்களையும் வென்றான் என்பது ஒரு பெரிதா? சிவன், திருமால், பிரமன் இவர்கள் மூவரும் இவனை ஒப்பரென்று கூறலாமேயன்றி, இவனுக்கு வேறு நிகர்கூற முடியாது' என்று அனுமான் இந்திரசித்தை வியந்தான்.

(அ-ரை): நிகர்ப்பவர் : ஒப்பவர்.

464. மாட கூடங்கள், மாளிகை ஒளிகள், மகளிர்
ஆ(டு)அ ரங்குகள், அம்பலம், தேவர்ஆ லயங்கள்,
பாடல் வேதிகை பட்டிமண் டபம்முதல் பலவும்
நாடி ஏகினன் இராகவன் புகழ்எனும் நலத்தான்.

465. உற்று நின்(று),அவன் உணர்வைத், தன்
உணர்வினால் உணர்ந்தான்;
'குற்றம் இல்லதோர் குணத்தினன்
இவன்' எனக் கொண்டான்;
செற்றம் நீங்கிய மனத்தினன்,
ஒருசிறைச் சென்றான்;
பொற்றை மாடங்கள் கோடி ஓர்
நொடியிடைப் புக்கான்.

466. 'வளையும் வாள்எயிற்(று) அரக்கனோ?
கணிச்சியான் மகனோ?
அளையில் வாள்அரி அனையவன்
யாவனோ? அறியேன்;
இளைய வீரனும் ஏந்தலும்
இருவரும் பல நாள்
உளைய உள்ள போர் இவனொடும்
உள(து)'என உணர்ந்தான்.

467. 'இவனை இன்துணை உடைய போர்
இராவணன், என்னே,
புவனம் மூன்றையும் வென்ற(து)ஓர்
பொருள்எனப் புகறல்!
சிவனை, நான்முகத்(து) ஒருவனைத்
திருநெடு மாலாம்
அவனை அல்லவர், நிகர்ப்பவர்
என்பதும் அறிவோ!'

**468.** இன்னும் பல மாளிகைகளிலும் சீதையைத் தேடிச் செல்லல்.

**(க - ரை) :** அட்சகுமாரன் மாளிகையிலும், அதிகாயன் மாளிகையிலும், அவனுடைய தம்பிகள் மாளிகையிலும் தேடி, இராம பாணம்போல் அனுமான் விரைந்து சென்றான்.

**(அ-ரை)** தொக்க : தங்கிய; கோயில் ; அரண்மனை; சரம் · அம்பு.

**469.** அனுமான் பள்ளியறையிலிருந்த இராவணனைப் பார்த்தல்.

**(க - ரை) :** வெண்மலர் தூவிய பஞ்சணையின்மேல் கரிய நிறத்தையுடைய இராவணன் தூங்குகிறான். அது பாற்கடலில் ஆதிசேடன்மேல் பள்ளிகொண்ட திருமாலின் தோற்றத்தை அளிக்கின்றது. அதனைச் சுற்றிலும், மாளிகையின் வெளிச் சுற்றிலும் வேற்படைவீரர்கள் நெருங்கி நின்று காவல்புரிகின்றனர். இதை அனுமான் கண்டான்.

**(அ–ரை).** நுணங்கிய கேள்வி : நுட்பமான கேள்வியறிவு, 'நுணங்கிய கேள்வியரல்லார்' என்று குறளில் வருவதையும் காண்க. புடை : பக்கம.

**470.** இராவணனைக் கொன்றொழிப்பேன் என்று முயன்ற அனுமான் 'இது என் தலைவன் ஆணையன்று' எனத் தன் கோபத்தை யடக்கிக்கொள்ளல்.

**(க - ரை) :** உருத்திரபகவானைப் போன்ற கொடிய ஆற்றல் உடையவர்களாய் இருந்த போதிலும், நல்ல ஒழுக்கமுடைய வர்கள் ஒரு காரியத்தை எண்ணித் துணிவார்களேயன்றி எண்ணாது துணிவார்களா? 'இவன் தீமையை நோக்கின் இவனைக் கொல்லுதல் முறையென்றாலும் அது இப்பொழுது சரியல்ல' என்று அனுமான் தன் சினத்தை அடக்கிக் கொண்டான்.

**(அ–ரை):** ஆலம் . விடம; சீலம் : ஒழுக்கம, வேலை கடல்.

**471.** அனுமான் சீதையைக் காணாது இரங்குதல்.

**(க - ரை) :** 'இத்தனை நாளில் திரும்பி வருவேன் என்ற நாள் முடிந்தது ; இன்னும் சீதையைக் காணவில்லை ; இறக்கத் துணிந்த வானரவீரர்களைத் தடுத்து இங்கு வந்த யான் சீதையைக் காணேனாயின், என் உயிரை விட்டு விடுவேன். நன்மையைச்செய்யும் புண்ணியம் என்று ஒருபொருள் என்னிடத்தில் மட்டும் இல்லாமல் போய்விட்டது போலும்!'

**(அ—ரை):** கண்ணிய : குறித்த; கனங்குழை : கனமான காதணியை அணிந்தவள்–அன்மொழித் தொகை; என் உழை : என்னிடம்.

468. அக்கன் மாளிகை கடந்துபோய் மேல்அதி காயன்
தொக்க கோயிலும் தம்பியர் இல்லமும் துருவித்
தக்க மந்திரத் தலைவர்மா மனைகளும் தாவிப்
புக்கு நீங்கினன் இராகவன் சரம்எனப் புகழோன்.

469. நூல்பெ ருங்கடல் நுணங்கிய கேள்வியன்
நோக்கினன், மறம்கூரும்
வேல்பெ ருங்கடல் புடைபரந்(து) ஈண்டிய,
வெள்ளிடை வியன்கோயில்
பால்பெ ருங்கடல் பன்மணிப் பல்தலைப்
பாம்பணை, அதன்மீது
மால்பெ ருங்கடல் வதிந்ததே அனைய(து)ஓர்
வனப்பினன் துயில்வானை.

470. ஆலம்பார்த்(து) உளாடவன்போல்
ஆற்றல்அமைந்(து) உளர்எனினும்
சீலம்பார்க்க உரியவர்கள்,
எண்ணாது செய்பவோ?
மூலம்பார்க் குறின்,உலகை
முற்றுவிக்கும் முறைத்(து) எனினும்
காலம் பார்த்(து), இறை,வேலை
கடவாத கடல் ஒத்தான்.

471. 'கண்ணியநாள் கழிந்துள; ஆல்,
கண்டிலம்ஆல் கனம்குழையை;
'விண்அடைதும்' என்றுரை
ஆண்(டு)இருத்தி விரைந்த யான்
எண்ணியது முடிக்ககிலேன்;
யான் முடியா(து) இருப்பேனோ?
புண்ணியம்என்(று) ஒரு பொருள்என்
உழைநின்றும் போய(து); ஆல்.

472. அசோக வனத்தில் சீதையின் நிலை.

(க - ரை): அரக்கியர்கள் தன்னைச் சூழ்ந்து அச்சுறுத்த, அவர்களிடையில் இருந்த சீதை, ஓர் அரிய மூலிகைச் செடி மலைப் பாறை இடுக்கில் முளைத்து மழையின்றி வாடியிருப்பதைப்போல் இருந்தாள். அவள் உடம்பு அவள் இடையைப் போலவே தேய்ந் திருந்தது.

(அ-ரை): வன் மருங்குல் . வலிய இடை; கல் மருங்கு . மலையினிடத்தில்; துளி : மழைத்துளி; நலமருந்து : நல்ல மூலிகைச்செடி: உணங்கிய காய்ந்த: அங்கம் : உடம்பு.

473. இதுவும் அது.

(க - ரை): 'உயிர்விடுவோமென்றால் 'விதிவலி பெரிது' என்ற துக்கத்தோடு, இராமன் எனக்காக வராவிட்டாலும் சூரிய குலத்தின் பெருமையையும் தனக்கு வரும் பழியையும் கருதி யேனும் வருவான்' என்று எண்ணி எல்லாத் திக்குகளையும் நோக்கிக்கொண்டிருக்கின்றாள்.

(அ-ரை): பரிதி : சூரியன்; வானவன் : தேவன்; சுருதி நாயகன் : வேதங் களுக்குத் தலைவன்: திருமால், மாதிரம : திக்கு.

474. இராமனது சீரிய குணங்களையெல்லாம் நினைத்துச் சீதை வருந்திக்கொண்டிருத்தல்.

(க - ரை): 'அரசச் செல்வத்தை அடைக' என்று தசரதன் சொன்னபொழுதும், 'அச்செல்வத்தை நீங்கிக் காட்டுக்குப் போ' என்று கைகேயி சொன்னபோதும் முகம் மாறுபடாமல் சித்தி ரத்தில் எழுதிய தாமரைப்பூப் போல ஒருபடித்தாய மலர்ந் திருந்த அம்முகத்தை நினைப்பாள்.

(அ—ரை). திரு : செல்வம், துறந்து : நீங்கி; ஏகு : போவாய்; உன்னு; வாள் : நினைப்பாள்.

475. இதுவும் அது.

(க - ரை): கங்கையில் ஓடம் ஓட்டிய ஏழையாகிய ஒரு வேடனிடம் 'என் தம்பி உன் தம்பி; என் மனைவி உன் மைத்துனி; நீ என் தோழன்' என்று சொன்ன இராமனது ஆழ்ந்த நட்பின் குணத்தை நினைந்து வருந்துவாள்.

(அ—ரை): அம்பி : ஓடம்; எம்பி : என் தம்பி; வாழி : அசை; உன்னி : நினைத்து.

## காட்சிப் படலம்

472. வன்ம ருங்குல்வாள் அரக்கியர்
நெருக்க அங்(கு) இருந்தாள்;
கல்ம ருங்(கு)எழுந்(து) என்றும் ஓர்
துளிவரக் காணு
நல்ம ருந்துபோல், நலன் அற
உணங்கிய நங்கை,
மெல்ம ருங்குல்போல் வே(று)உள
அங்கமும் மெலிந்தாள்.

473. 'அரிது போகவோ விதிவலி கடத்தல்' என்(று) அஞ்சிப்
பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாராச்,
சுருதி நாயகன் வருமவரும் என்ப(து)ஓர் துணிவால்,
கருதி, மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணுள்.

474. மெய்த்தி ருப்பதம் மே(வு)என்ற போதினும்
இத்தி ருத்துறந்(து) ஏ(கு)என்ற போதினும்
சித்தி ரத்தின் அலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருக்கும் முகத்தினை உன்னுவாள்.

475. ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்(கு), 'எம்பிநின் தம்பி,நீ
தோழன்; மங்கை கொழுந்தி' எனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்.

**476.** இதுவும் அது.

**(க - ரை):** தனக்கு வர இருந்த அரசுரிமையை விட்டுக் காட்டிற்கு வரும்பொழுது அந்தணர் ஒருவருக்குப் பசுக்களைத் தானங்கொடுத்து அவர் பேராசையைக் கண்டு சிறிதே சிரித்த அவன் புன்முறுவலைக்கண்ட நினைவை எண்ணி அழுவாள்.

சிரிப்பை நினைந்து அழுதாள் என்பது ஒரு நயம்.

**(அ—ரை):** பரித்த : தாங்கிய, படரும் : போகும், அருத்தி : ஆசை; ஆனிரை குலம் : பசுக்கூட்டம், கரை இன்மை : அளவின்மை; இறை : அரசன், இராமன

**477.** திரிசடை யிடத்தில் சீதை கூறுதல்.

**(க - ரை):** "திரிசடையே! இதுவரையிலும் என் கண் புருவம் முதலியன வலப்பக்கம் துடித்துக்கொண்டிருந்தன. இப்பொழுது இடப்பக்கம் துடிக்கின்றன. ஆகையால் எனக்குப் பழையபடி தீமை வருமோ? அல்லது நன்மை வருமோ? அறியேன்" என்று சீதை கூறினாள்.

**(அ-ரை):** சலம் : வஞ்சனை, பொலம் : பொன், துடி : உடுக்கை, மருங்குல் : இடை; ஓர்கிலேன் : அறிகிலேன்

**478.** இதுவும் அது.

**(க - ரை):** "திரிசடையே! மிதிலைக்கு என் நாயகர் இளவலுடனும் முனிவனோடும் வந்தநாளில் துடித்தது போலவே இன்றும் புருவம், கண், தோள் ஆகியவைகள் இடப்பக்கம் துடிக்கின்றன. பலனை நீ ஆராய்ந்து சொல்வாயாக" என்று சீதை கூறினாள்.

**(அ-ரை):** துனியறு : துன்பமற்ற, நாட்டம் : கண், நனி : மிக; உரிச்சொல்

**479.** இதுவும் அது.

**(க - ரை):** "திரிசடையே! இன்னும் ஒன்று சொல்ல மறந்து விட்டேன்; கேட்பாயாக; நாங்கள் அரசைத் துறந்து காட்டிற்கு வந்த நாளிலும் வலம் துடித்தன."

**(அ-ரை):** மாற்றம் : சொல்; கான் : காடு.

476. பரித்த செல்வம் ஒழியப் படரும் நாள்,
அருத்தி வேதியர்க்(கு) ஆன்குலம் ஈந்(து) அவர்
கருத்தின் ஆசைக் கரைஇன்மை கண்(டு), இறை
சிரித்த செய்கை நினைந்(து)அழும் செய்கையாள்.

477. 'நலம்துடிக் கின்றதோ? நான்செய் தீவினை
சலம்துடித்(து) இன்னமும் தருவ(து) உண்மையோ?
பொலம்துடி மருங்குலாய்! புருவம், கண்முதல்,
வலம்துடிக் கின்றில; வருவ(து) ஓர்கிலேன்.'

478. 'முனியொடு, மிதிலையின் முதல்வன் முந்தும்நாள்
துனியறு புருவமும், தோளும், நாட்டமும்,
இனியன துடித்தன; ஈண்டும் ஆண்(டு)என,
நனிதுடிக் கின்றன, ஆய்ந்து நல்குவாய்.'

479. 'மறந்தனென்; இதுவும்ஓர் மாற்றம் கேட்டியால்;
அறம்தரு சிந்தை என் ஆவி நாயகன்
பிறந்தபார் முழுவதும் தம்பி யேபெறத்
துறந்து,கான் புகுந்தநாள் வலம்து டித்ததே.

480. இதுவும் அது.

(க - ரை): "இராவணன், காட்டில் என்னைச் சிறையெடுக்க வந்த நாளிலும் வலம் துடித்தன, இன்று இடம் துடிக்கின்றன; எனக்கு உறுதி சொல்லுவதற்கு உரிய செய்தி யாதேனும் வருமோ?" என்று சீதை கூறினாள்.

(அ-ரை): நஞ்சு : விடம்; இழைக்க : செய்ய; நண்ணிய : வந்த, எஞ்சல : ஓயாமல்; ஈண்டு : இப்பொழுது; அடுப்பது : வரக்கூடியது.

481. அனுமன் சீதையைக் கண்டு பாராட்டுதல்.

(க - ரை): 'மாசுபடிந்த இரத்தினம்போல் காணப்படுகிறாள். சந்திரன் கலை குறைந்து தேய்ந்திருப்பதைப்போல் உடல் இளைத்திருக்கிறாள்; அவளுடைய கற்பிற்கும் இராமனிடத்தில் வைத்த காதலுக்கும் குறைவில்லை; அறத்திற்கும் அழிவு உண்டோ?' என்று சீதையைக் கண்ட அனுமான் தனக்குள் சொல்லிக் கொண்டான்

(அ-ரை): மாசு : அழுக்கு; வயங்கு : விளங்குகின்ற; தேசு : ஒளி, காசு : அழுக்கு; ஏசு : இகழ்வு.

482. இதுவும் அது.

(க - ரை): 'சீதாபிராட்டியைக் கற்பு வழுவாவண்ணம் தர்ம தேவதைதான் காத்ததோ? அல்லது சனகன் செய்த நல்வினைகள் காத்தனவோ? அவளுடைய கற்பே தன்னைக் காத்துக் கொண்டதோ? இந்த இடத்தையும் சூழ்நிலையையும் நோக்கின் சீதையைப்போல யாவர் தங்கள் கற்பைக் காத்துக்கொண்டிருக்கமுடியும்? என் போன்றவர்கள் ஒரு பிறப்பு முழுவதும் சொன்னாலும் இவள் பெருமையைச் சொல்ல முடியுமா?'

(அ-ரை): கருமம் . காரியம், செயல், ஆற்றுவார் : செய்வார், ஒருமையே : ஒரு பிறப்பிலே.

· அசோகவனத்தில் தன்னிடம் வந்து தகாத வார்த்தைகளைக் கூறிய இராவணனைச் சீதை நிந்தித்தலைக் கூறுவது.

483. அங்குவந்த இராவணனையும், சீதையின் நிலையையும் அனுமான் காண்டல்.

(க - ரை): வருத்தத்தினால் ஊசலாடிக் கொண்டிருக்கும் மனத்தையுடைய அனுமான், நாணமுற்று உயிர் குலைந்து நடுங்குகின்ற சீதையையும், ஆசையை அடக்கமுடியால் உயிர் தேய்ந்து வருந்துகின்ற இராவணனையும் தன் கண்களையே சாட்சியாகக் கொண்டு பார்த்தான்.

(அ—ரை): கூசி : நாணமுற்று; ஆவிகுலைதல் : உயிர் கலங்குதல்; பற்றுக்கோடு; காசு : குற்றம்; சான்று : சாட்சி; உளையும் : வருந்துகின்ற.

480. நஞ்சுஅனை யான்,வனத்(து) இழைக்க நண்ணிய
வஞ்சனை நாள்வலம் துடித்த; வாய்மையால்
எஞ்சல ஈண்டுதாம் இடம்து டிக்கும்ஆல்;
'அஞ்சல்'என்(று)இரங்குவதற்(கு) அடுப்பதுயாது?'என்றான்.

481. 'மா(சு)உண்ட மணிஅனாள், வயங்கு வெங்கதிர்த்
தே(சு)உண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள்;
கா(சு)உண்ட கூந்தலாள் கற்பும், காதலும்
ஏசுண்ட(து) இல்லையால்; அறத்துக்(கு) ஈ(று)உண்டோ?'

482. 'தருமமே காத்ததோ? சனகன் நல்வினைக்
கருமமே காத்ததோ? கற்பின் காவலோ?
அருமையே! அருமையே! யார்இ(து) ஆற்றுவார்?
ஒருமையே எம்மனோர்க்(கு) உரைக்கற் பாலதோ?'

நிந்தனைப் படலம்

483. கூசி, ஆவி குலைவுறு வாளையும்,
ஆசை யால், உயிர் ஆ(சு)அழி வானையும்,
கா(சு)இல் கண்இணை சான்(று)எனக் கண்டனன்
ஊசல் ஆடி உளையும் உளத்தினன்.

**484.** அனுமான் வாழ்த்துதல்.

**(க-ரை):** "சீதா பிராட்டியார் வாழ்க! இராமபிரான் வாழ்க! நான்கு வேதங்களும் வாழ்க! முனிவர்கள் வாழ்க! அறம் வாழ்க!" என்று ஒவ்வொரு கற்ப காலத்திலும் உயர்ந்து உயர்ந்து மிகும் புகழையுடைய அனுமான் வாழ்த்தினன்.

**(அ-ரை):** சானகி: சனகன் மகள் — தத்திதாந்த நாமம்; இராகவன்: இரகு குலத்தில் பிறந்தவன்—தத்திதாந்த நாமம், அந்தணர்: முனிவர்; ஊழி. கற்பகாலம். சீர்த்தி: மிகுபுகழ் (உரிச்சொல்).

**485.** இராவணன் சீதையிடம் தகாதன கூறல்.

**(க-ரை):** "சீதையே! தேவர்களுடைய மனைவியரும் உன்னை வணங்க, மூவுலகுக்கும் தலைவியாக இருக்கும்படியான செல்வம் உன்னை வலியவந்து அடைய இருப்பதை, நீ உன்னுடைய பேதைமையினால் விலக்குகிறாய்; உன்னைப்போல் அறிவற்றவர்கள் உலகில் வேறு யார் உளர்?"

**(அ-ரை)** சேவடி சிவந்த பாதம். தாவில் அழிவில்லாத; தனி நாயகம்: ஒப்பற்ற தலைமை; மேவுகின்றது பொருந்துகின்றது; இலங்கு இழாய்: விளங்குகின்ற ஆபரணத்தை அணிந்தவளே.

**486.** சீதை இராவணனைப் பழித்துரைத்தல்.

**(க-ரை):** "உன்னுடைய பத்துத் தலைகளும், இருபது தோள்களும், எனது நாயகன் வில் வளைத்து, அம்பு எய்து விளையாடுவதற்கு ஏற்ற இலக்கமாக உள்ளன. நீ வலிமையுடையவன் தான்; அதனாலன்றோ அன்று சடாயுவால் அடிபட்டு நிலத்தில் வீழ்ந்தாய்!"

**(அ-ரை)** பகழி: அம்பு; வித்தகம்: திறமை, சித்திரம் புதுமை: இலக்கு: குறி; செரு: போர். "சத்தியை போலும் மேல்நாள் சடாயுவால் தரையில் வீழ்ந்தாய்!" என்பது இகழ்ச்சிக் குறிப்பு.

**487.** இதுவும் அது.

**(க-ரை):** "அன்றைக்கு ஒரு கழுகாகிய பறவைக்குத் தோற்று விட்டாய்; சிவபெருமான் தந்த வாள் கையில் இருந்ததனால் அன்று பிழைத்தாய்; இன்றேல் அன்றே இறந்திருப்பாய்! நீ செய்த தவமும் தவத்தினால் பெற்ற வரங்களும் இராமனுடைய அம்பிற்கும் மீறினவையோ?"

**(அ-ரை):** சென்னி: தலை; நோற்ற நோன்பு: செய்த தவம்; நுனித்த கூர்ந்த.

484. 'வாழி சானகி! வாழி இராகவன்!
வாழி நான்மறை! வாழியர் அந்தணர்!
வாழி நல்அறம்!' என்(று)உற வாழ்த்தினன்;
ஊழி தோறும் உயர்வுறும் சீர்த்தியான்.

485. 'தேவ தேவியர் சேவடி கைதொழும்,
தாவில் மூவுல கின்தனி நாயகம்,
மேவு கின்றது நுன்கணை; விலக்கினை;
ஏவர் ஏழையர் நின்னின்? இலங்(கு) இழாய்!'

486. 'பத்துள தலையும் தோளும்
பலஉள பகழி தூவி,
வித்தக வில்லி னாற்குத்
திருவிளை யாடற்(கு) ஏற்ற
சித்திர இலக்கம் ஆகும்;
அல்லது செருவில் ஏற்கும்
சத்தியை போலும் மேல்நாள்
சடாயுவால் தரையில வீழ்ந்தாய்!'

487. 'தோற்றனை பறவைக்(கு) அன்(று);
துள்ளுநீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய்;
அன்றெனின் இறத்தி அன்றோ?
நோற்றநோன்(பு), உடைய வாழ்நாள்,
வரம், இவை நுனித்த எல்லாம்
கூற்றினுக்(கு) அன்றே, வீரன்
சரத்துக்கும் குறித்த(து) உண்டோ?'

488. இதுவும் அது.

(க - ரை) : "பாம்புகூட மந்திரத்தைக் கேட்டுக் கட்டுப் பட்டு அடங்கி நிற்கும். அதுபோல உனக்கு, "இது தகும்; இது தகாது" என்று காரணத்தோடு உன் தீய செயல்களை விலக்கி, இடித்துக் கூறுபவர்கள் ஒருவரும் இல்லை. உன்னைச் சூழ இருப்ப வர்கள் நீ எண்ணியதையே தாங்களும் நினைத்து உன்னை ஒழிக்க இருக்கின்றார்கள் என்றால் உன் முடிவு அழிவேயாகும்" என்று சீதை கூறினாள்.

(அ-ரை): ஆனற சிறந்த; ஏது : காரணம.

குறிப்பு: முடிவு அன்றி முடிவது உண்டோ? என்பது ஓர் சொல்நயம். 'இடிப பாரை இல்லாத ஏமரா மன்னன்-கெடுப்பா ரிலானும் கெடும்' என பது குறள்.

489. இராவணனது சீற்றமும் காதலும்.

(க - ரை) : 'இவளைப் பிளந்து தின்பேன்' என்று இராவணன் தன்னுடைய பெரிய வடிவங்கொண்டு சீதையின் அருகே போய், அவள்மேல் வைத்த காதலால் ஒன்றும் செய்ய முடியாமல், திரும் பினன். இவ்வாறு அவன், மனத்தில் கோபம் ஒரு பக்கமும் காதல் ஒரு பக்கமும் இழுக்கும்படியாக இருந்தான்.

(அ-ரை) மாதிரம் . திசை; அனல் நெருபபு, உடன்றனன கோபித தான்; பெயர்ந்தனன் மீண்டான்.

490. இராவணன் சீதையை அச்சுறுத்தல்.

(க - ரை) : "சீதையே! இதோ, இப்படியே அயோத்திக் குப் போய் அங்குள்ள பரதன் முதலியோருடைய உயிர்களைக் குடித்து, அங்கிருந்து அப்படியே மிதிலைக்குப் போய் அங்குள்ள வர்களை யெல்லாம் வேரற ஒழித்து விட்டு, இங்கே வந்து உன்னை யும் கொல்வேன். உனக்குக் காலம் கிட்டிவிட்டது" என்றான்.

(அ—ரை) நண்ணி . அடைந்து; ஊழித்தீ : கற்பகாலத்தில் உண்டாகும் தீ.

491. காவலுக்கிருந்த அரக்கியர் சீதையை அச்சுறுத்தல்.

(க - ரை) : "சீதையே! நீ பிறந்த குலம், புகுந்த குலம் ஆகிய இரு குலத்தோரையும் ஒழிக்க நெருப்பை வாரி இறைக் கின்றாய்; இந்த நிமிடத்திலே நீ செத்தாய்; உன் இனத்தாரெல் லாம் இனி உயிருடன் இருக்க மாட்டார்கள்; உறுதியாகக் கூறி னோம்" என்று சில அரக்கியர்கள் அதட்டிக் கூறினர்.

(அ—ரை): வழி : குலம; இற்றாய் : அழிந்தாய்; சிக்க · உறுதியாக; தெழித்தார் : அதட்டினர்.

488. 'கடிக்கும்வல் அரவும் கேட்கும
மந்திரம்; களிக்கின் றேயை,
அடுக்கும்ஈ(து), அடா(து), என(று) ஆன்ற
ஏதுவோ(டு) அறிவு காட்டி,
இடிக்குநர் இல்லை; உள்ளார்,
எண்ணிய(து) எண்ணி, உன்னை
முடிக்குநர், என்றபோது. முடி(வு)
அன்றி முடிவ(து) உண்டோ?'

489. வளர்ந்த தாளினன்; மாதிரம
அனைத்தையும் மறைவித்(து)
அளந்த தோளினன், அனல்சொரி
கண்ணினன் 'இவளைப்
பிளந்து தின்பென்' என்(று) உடன்றனன்;
பெயர்ந்தனன்; பெயரான்,
கிளர்ந்த சீற்றமும் காதலும்
எதிர்எதிர் கிடைப்ப.

490. 'பள்ளநீர் அயோத்தி நண்ணிப்,
பரதனே முதலினோர் ஆன(டு)
உள்ளவர் தம்மை யெல்லாம
உயிர்குடித்(து), ஊழித் தீயின்
வெள்ளநீர் மிதிலை யோரை
வேர்அறுத்(து), எளிதின் எய்திக
கொள்வென் நின்உயிரும்; என்னை
அறிந்திலை குறைந்த நாளோய்!'

491 'புக்க வழிக்கும், போந்த வழிக்கும், புகைவெம்தீ
ஒக்க விதைப்பான் உற்றனை அன்றோ உணர்(வு)இல்லாய்!
இக்கணம் இற்றாய்! உன்இனம் எல்லாம் இனிவாழா!
சிக்க உரைத்தேம்!' என்று தெழித்தார் சிலர்எல்லாம்.

சீதைக்கு அனுமான் தன் வடிவைக் காட்டுதல்.

**492.** தன்னுயிரை விடத் துணிந்த சீதை கூறுவன.

(க - ரை): 'என் அறிவே! என் உயிரே! பல நாட்களாக நாணமில்லாமல் என்னுடனேயே உழன்று கொண்டிருக்கின்றீர்களே; எனது நாயகன் என்னைக் காணும்வரையும் நீங்கமாட்டீர்கள் போலும்; நான் பழியோடு வாழ்ந்து கொண்டிருப்பதா?'

(அ—ரை): பேணும் : பாதுகாக்கின்ற; உழல்வீர் : சுழன்று கொண்டிருப்பீர்கள்.

**493.** இதுவும் அது.

'வஞ்சனையாக வந்த மானின் பின்னே என் மன்னனைப் போக்கி, எனக்குக் காவலாக இருந்த எனது மைந்தனைப் போன்ற இலக்குவனை வைது இராமன் பின்செல்வாய் என்று போக்கிவிட்டு, இந்த இராவணன் இடத்திற்கு வந்த நான் உயிரோடிருப்பதை இவ்வுலகம் ஏற்றுக் கொள்ளுமா?'

(அ—ரை): மைந்தன் : மஞ்சன்–போலி; அகம் . இடம்; உஞ்சனென் : உய்ந்தனென்–போலி, முற்றெச்சம்.

**494.** இதுவும் அது.

(க - ரை): 'இராமன் இலங்கை வந்து அரக்கரை அடியோடு அழித்து என்னை மீட்கின்ற நாளில் என்னைப் பார்த்து, 'அரக்கரோடு பலநாள் இருந்த நீ என் வீட்டிற்கு வரத் தகுதியற்றவளாயினை' என்று கூறினால் நான் கற்புநிலை தவறாதவள் என்பதை எவ்விதத்தினால் அவனுக்கு நிரூபித்துக் காட்டுவேன்?'

(அ—ரை): அற்புதன் : வியக்கத்தக்க போர்வலியை உடைய இராமன்; ஆசு : பற்று; இல் : வீடு; தக்கலை : தகுதியற்றவளாயினை; எப்பரிசு : என்ன மாதிரி; இழைதது : செயல் செய்து; காட்டுவேன் : காட்டவல்லேன்.

**495.** இனி இறப்பதே நல்ல வழியென்று ஒரு மாதவிக் கொடியின் அருகே சென்ற சீதையின்முன் அனுமன் வருதல்.

(க - ரை): சீதையின் முயற்சியைக் கண்ட அனுமன் நடுக்கமுற்று அவளைத் தொட்டுத் தடுப்பதற்கும் அஞ்சி, "நான் இராமனது தூதன்" என்று சொல்லியவண்ணம் அவள்முன் நின்றான்.

(அ-ரை): துணுக்கம் : நடுக்கம்; அண்டர் நாயகன் : தேவர்களுக்குத் தலைவனான இராமன்; தொண்டைவாய் : கொவ்வைப் பழம் போன்ற வாயையுடைய.

## உருக் காட்டு படலம்

492. 'பேணும் உணர்வே! உயிரே! பெருநாள்
நாண் இன்(று) உழல்வீர்; தனிநாயகனைக்
காணும் துணையும் கழிவீர் அலிர்! நான்
பூணும் பழியோடு பொருந்(து)வதோ?'

493. 'வஞ்சனை மானின்பின் மன்னனைப் போக்கி, என்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாய், என
நஞ்சு அனை யான் அகம் புகுந்த நங்கையான்
உஞ்சனென் இருத்தலும உலகம் கொள்ளுமோ?'

494 'அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
வில்பணி கொண்(டு) அரும சிறையின் மீட்ட நாள
'இல்புகத் தக்கலை' என்னின், யான் உடைக்
கற்பினை எப்பரி(சு) இழைத்துக் காட்டுகேன்?'

495. கண்டனன் அனுமனும கருத்தும் எண்ணினன்;
கொண்டனன் துணுக்கம்; மெய் தீண்டக் கூசுவான்
'அண்டர்நாயகன் அருள் தூதன் யான்' என,
தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினன்

496. அப்பொழுது சீதை தனக்குள் எண்ணுவது.

(க - ரை) : 'இவன் அரக்கனாக இருந்தாலும் சரி; அல்லது வேறு தேவனாக இருந்தாலும் சரி; குரங்காயிருந்தாலும் சரி; இவன் இங்கு வந்தது எனக்கு நன்மையாயினும் சரி; தீமையாயினும் சரி; இப்பொழுது வந்து என் நாயகனது பெயரைக் கூறி, நெஞ்சை உருக்கி, அழிந்து போகும் என் உயிரைத் தந்தான்; இதைவிட எனக்குச் சிறந்த நன்மை உண்டோ?'

(அ-ரை) அமரன் : தேவன்; உணர்வு : (இங்கே) நெஞ்சு.

497. அனுமன், இராமன் தந்த கணையாழியைச் சீதையிடம் காட்டுதல்.

(க - ரை): இனிச் சொல்ல வேண்டியது ஒன்றும் இல்லையென்று தான் கொண்டுவந்த இராமன் பெயரெழுதிய கணையாழியை, "இது இராமபிரான் தந்தது" என்று சீதைக்கு அனுமன் காட்டினான். அதைச் சீதை கண்டாள்.

(அ-ரை): மெய்ப்பேர் உண்மையான பெயர்; தீட்டியது : எழுதியது; செவ்வே : நேராக, கணையாழி : மோதிரம்; வாளநுதலி : ஒளி பொருந்திய நெற்றியை உடையவள்.

498. அதைக் கண்ட சீதையின் நிலை.

(க - ரை) : செத்தவர் பிழைத்தனர் என்று சொல்லவோ? ஒன்றை மறந்தவர் அது நினைப்புக்கு வரப் பெற்றார் என்று சொல்லவோ? உடலை விட்டு நீங்கிய உயிர் மறுபடியும் உடலை அடைந்தது என்று சொல்லவோ? இந்த நிலையில் சீதை அடைந்த மகிழ்ச்சியை என்னவென்று சொல்வது?

(அ—ரை): என்கோ : என்பேனோ; துறந்த : நீங்கிய; திறம் : தன்மை; நன்னுதல் : நல்ல நெற்றியையுடையவள்.

499. இதுவும் அது.

(க - ரை) : அந்தக் கணையாழி மிக்க பசியால் வருந்தினவர்களுக்கு உண்ணக்கிடைத்த தேவாமிர்தம் போன்றிருந்தது; அறம் செய்பவர்களை அடைந்த விருந்தாளிகளை ஒத்திருந்தது; செத்த உயிரைத் திருப்பித் தரவல்ல மருந்தையும் போன்றிருந்தது.

(அ-ரை): அண்மும் : அடைந்த; வீயும் : செத்த; வாழி : அசை.

496. 'அரக்கனே ஆக, வேறோர்
அமரனே ஆக, அன்றிக்
குரக்கினத்(து) ஒருவ னேதான்
ஆகுக; கொடுமை ஆக;
இரக்கமே ஆக; வந்(து) இங்(கு)
எம்பிரான் நாமம் சொல்லி
உருக்கினன் உணர்வைத்; தந்தான்
உயிர்; இதின் உதவி உண்டோ?'

497. 'மீட்டும்உரை வேண்டுவன இல்லைஎன மெய்ப்போ
தீட்டியது, தீட்டரிய செய்கையது, செவ்வே
நீட்டு(இ)(து),என நேர்ந்தனன் எனு'நெடிய கையால்,
காட்டினன்ஓர் ஆழி;அது வாள்நுதலி கண்டாள்.

498. இறந்தவர் பிறந்தபயன்
எய்தினர்கொல் என்கோ?
மறந்தவர் அறிந்(து)உணர்வு
வந்தனர்கொல் என்கோ?
துறந்தஉயிர் வந்(து)இடை
தொடர்ந்ததுகொல் என்கோ?
திறம்தெரிவ(து) என்னைகொல்இந்
நன்னுதலி செய்கை!

499. இருந்து,பசி யால்இடர் உழந்தவர்கள் எய்தும்
அருந்தும்அமு(து) ஆகிய(து); அறத்தவரை அண்மும்
விருந்தும்எனல் ஆகியது; வீயும்உயிர் மீளும்
மருந்தும்எனல் ஆகியது; வாழி! மணிஆழி!

**500.** *சீதை அனுமனைப் புகழ்ந்து கூறுதல்.*

**(க - ரை) :** "மூன்று உலகங்களையும் படைத்த பிரமனுக்குத் தந்தையாகிய என் நாயகன் விட்ட தூதாய் வந்து, எனக்கு உயிரைக் கொடுத்த உனக்கு நான் சுலபமாகச் செய்யும் சிறிய கைம்மாறும் உண்டோ? எனக்குத் தாய் போலவும் தந்தை போலவும் வந்தவனே! எனக்கு இம்மை மறுமை இன்பங்களைப் புகழோடு கொடுத்தாய்" என்று சீதை அனுமனைப் புகழ்ந்தாள்.

**(அ-ரை)** உணவே. உண்டோ? ஏகாரம் வினைப் பொருளில் வந்தது. நல்கினை . கொடுத்தாய். இசை புகழ்

**501.** *சீதை அனுமனை வாழ்த்துதல்.*

**(க - ரை) :** "பெருமை பொருந்திய திரண்ட தோளையுடையவனே! துணையற்ற எனது துன்பத்தை நீக்கிய வள்ளலே! நான் களங்கமற்ற மனத்தை யுடையவள் என்பது உண்மையேயானால், எல்லா உலகங்களும் அழியும் கற்ப காலத்திலும் நீ அழியாமல் என்றும் சிரஞ்சீவியாக இருப்பாயாக" என்று வாழ்த்தினாள்.

**(அ-ரை)** பாழிய · பெருமை பொருந்திய; பனை . பருத்த; மறு : குற்றம், பகல் : நாள்; வீவுற்ற · அழிந்த, ஞான்றும் · பொழுதும், காலத்தும்.

**502.** *அனுமன் சீதைக்குத் தன் பேருருவைக் காட்டுதல்.*

**(க - ரை) :** அனுமன் சீதையைக் கும்பிட்ட கைகளை உடையவனாய், உயர்ந்த தோள்களை உடையவனாய் வானம் வரை வளர்ந்து, மேல் சென்றால் அது முட்டும் என்று வளைந்த வடிவை உடையவனாய்த் தோன்றினான்.

**(அ—ரை).** விசும்பு · ஆகாயம், மேக்கு : மேல், முகடு : உச்சி; விட்டு உயர் : வெளிப்பட்டு உயர்ந்த; மூர்த்தியான் . வடிவத்தை உடையவன.

**503.** *அனுமனது பேருருவைக் கண்ட சீதை புகழ்தல்.*

**(க - ரை) :** "அனுமனே! எனது நாயகனது அருளும் புகழும் பல கற்ப காலங்களிலும் அழியாமல் நிலைநிற்றற்கு நீ ஒருவனே உற்ற துணையாயினாய். உன்னுடைய பெருமைக்கேற்ப இந்த இலங்கை ஏழு கடலுக்கு அப்பால் அல்லவா இருந்திருக்க வேண்டும்! அவ்வாறு இல்லாதது உன் பெருமைக்கு ஒரு குறைவு தான்."

**(அ—ரை):** பாழி : பெருமை; ஆழி : சக்கராயுதம்; ஆண் மகன் : இங்கு இராமன்; ஊழி : கற்பகாலம்.

500. ‘மும்மையாம் உலகம் தந்த
முதல்வற்கும் முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர்தந் தாய்க்குச்
செயல்என்னால் எளிய(து) உண்டோ?
அம்மையாய் அத்தன் ஆய
அப்பனே! அருளின் வாழ்வே!
இம்மையே, மறுமை தானும்
நல்கினை இசையோ(டு)’ என்றாள்.

501. ‘பாழிய பணைத்தோள் வீர! துணையிலேன், பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே, யான் மறுஇலா மனத்தேன் என்னின்,
ஊழிஓர் பகலாய் ஓதும் யாண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்(று)என இருத்தி!’ என்றாள்.

502. சுட்டினன்; நின்றனன்; தொழுத கையினன்;
விட்(டு)உயர் தோளினன்; விசும்பின் மேக்(கு)உயர்
எட்டரும் நெடுமுக(டு) எய்த; நீளுமேல
முட்டும்என்(று), உருவொடு வளர்ந்த மூர்த்தியான்.

503. ‘ஆழி நெடுங்கை ஆண்தகைதன்
அருளும் புகழும் அழி(வு)இன்றி
ஊழி பலவும் நிலைநிறுத்தற்(கு)
ஒருவன் நீயே உளைஆனாய்!
பாழி நெடுந்தோள் வீரா! நின்
பெருமைக்(கு) ஏற்பப் பகைஇலங்கை,
ஏழு கடற்கும் அப்புறத்த(து)
ஆகா(து) இருந்தது இழி(வு) அன்றோ?’

504. அனுமன் சீதையை நோக்கிக் கூறுதல்.

(க - ரை) : "அருந்ததி போன்ற அன்னையே! கடல் மணலினும் அதிகமான வானர சேனை வீரர்கள் இராமன் இட்ட வேலைகளைச் செய்யக் காத்திருக்கிறார்கள். அவர்கள் கூட்டத்தில் ஒருவனை என்னை இங்கு அனுப்ப, நான் வந்தேன்; நீங்கள் இப்பொழுது ஏதேனும் கட்டளை இடுவீர்களானால் அதைச் செய்ய உரியவனாய் இருக்கின்றேன்" என்றான்.

(அ-ரை). அண்ணல் : தலைவன், இராமன், வண்ணம் : நிறம்; பண்ணை : கூட்டம்; பணி : வேலை.

சீதை சூடாமணியை அனுமனிடம் கொடுத்தனுப்பியதைக் கூறுவது. சூடாமணி : தலை உச்சியில் அணியும் ஓர் இரத்தினம்.

505. அனுமன் சீதாபிராட்டியாருக்குக் கூறுதல்.

(க - ரை) 'அருந்ததி போன்ற தாயே! நான் இராமனிடத்தில் போய் உலகுடைய தேவியார் அரக்கர் வைத்த கொடுஞ் சிறைக்குள் துன்பத்தோடு இருக்கின்றாள்' என்று சொல்வேனாயின் என் அடிமைத் தொழில் என்னாகும!"

(அ—ரை)· உரைத்தி சொல்லுவாய், வைபபு : இடம, பகரின் · சொன்னால்.

506. சீதை அனுமன் கருத்தை மறுத்தல்.

(க - ரை) : "அனுமனே! என்னைத் தூக்கிக்கொண்டுபோய் இராமனிடத்தில் வைப்பது, உன்னுடைய ஆற்றலுக்கு ஏற்றதே; உனக்கு இது ஓர் அரிய காரியம் அல்ல; முற்றிலும் ஆராய்ந்து பார்த்துத்தான் இதைச் சொல்லியிருக்கின்றாய்; அவ்வாறு செய்தலும் செய்வாய்; ஆனால் அது தகுதியன்று என்று என்னுடைய அறியாமையுடைய சிற்றறிவுக்குத் தோன்றுகிறது. ஆகையால் அந்த எண்ணத்தைத் தவிர்வாயாக" என்றாள்.

(அ—ரை): தெரிய : தெளிய; ஓர்கின்றது : நினைக்கின்றது; பேதைமை : அறியாமை; சில்மதி : சிற்றறிவு.

507. இதுவும் அது.

(க - ரை) : "இன்னும் இந்த இலங்கையை மட்டுமல்ல; எல்லா உலகங்களையுமே சாபம் கொடுத்து ஒரு சொல்லினாலே அழித்து விடுவேன். அது என் கணவனது வில்லின் வலிமைக்குக் குறைவாகுமே என்றுதான் அவ்வெண்ணத்தை விட்டிருக்கிறேன்.

"தன் மனைவியை மீட்க வலி இல்லாதவன் ஆனான் இராமன்; அவளே, தன் ஆற்றலால் பகையை அழித்துவிட்டு இராமனை வந்தடைந்தாள் என்னும் பழிவருமே என்பதை நினைத்துப் பார் என்பது குறிப்பு."

(அ-ரை)· அல்லல் : துன்பம்; நீத்த : கடந்த; மாசு : குற்றம்.

504. அண்ணல் பெரியோன், அடிவணங்கி,
அறிய உரைப்பான் 'அருந்ததியே!
வண்ணக் கடலின் இடைக்கிடந்த
மணலின் பலரால் வானரங்கள்;
எண்ணற்(கு) அரிய படைத்தலைவர்
இராமற்(கு) அடியார்; யான்அவர்தாம்
பண்ணைக்(கு) ஒருவன் எனப்போந்தேன்;
ஏவக் கடவ பணிசெய்வேன்.'

சூடாமணிப் படலம்

505 'அருந்ததி உரைத்தி' அழகற்(கு)அருகு சென்(று)உன்
மருந்தனைய தேவி,நெடு வஞ்சர் சிறை வைப்பில்
பெருந்துயரி னோடும்ஒரு வீடுபெறு கில்லாள்
இருந்தனள்' எனப்பகரின், என் அடிமை என் ஆம்?'

506. அரிய(து) அன்றுநின் ஆற்றலுக்(கு); ஏற்றதே
தெரிய எண்ணினை; செய்வதும் செய்தியே;
உரிய(து) அன்(று)என ஓர்கின்ற(து)உண்(டு); அ(து)என்
பெரிய பேதைமைச் சில்மதிப் பெண்மையால்.

507. 'அல்லல் மாக்கள் இலங்கைய(து) ஆகுமோ,
எல்லை நீத்த உலகங்கள் யாவும்என்
சொல்லி னல்சுடு வேன்,அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு(சு)என்று வீசினேன்.'

508. இதுவும் அது.

(க - ரை) : "இன்னும் கேள்! நீ ஐம்பொறி அடக்கியவன் தான்; அதனால் நீ என்னைத் தொட்டுத் தூக்கிச் செல்வதில் குற்றமில்லை. எனினும் நீயும் ஆண் இனத்தில் சேர்ந்தவன் தானே. உன் மேனி என்னைத் தீண்டலாகுமா? யோசித்துப் பார்."

(அ-ரை) ஏறுசேவகன் : உயர்ந்த வீரன், இராமன்

509. சீதை இராமனுக்குச் சொல்லியனுப்பும் செய்தி.

(க - ரை) : "அவர் என்னை மனைவி என்று மீட்காவிட்டா லும் அல்லது கருணையினால் மீட்கா விட்டாலும் தன் வீரத்தைக் காத்தற்காவது வந்து மீட்கச் சொல்" என்று சீதை அனுமா னிடம் கூறினாள்.

(அ-ரை) ஆரம் : மாலை, தாழ : தொங்குகின்ற, தயா : கருணை ஈரம் : அன்பு.

510. சீதை இலக்குவனுக்குச் சொல்லியனுப்பிய செய்தி

(க - ரை) : "இலக்குவனிடம், 'என்னைப் பாதுகாப்பதைக் கடமையாகக் கொண்ட உனக்கு என்னை விடுவிப்பதும் உரிய கடமையாகும்' என்று, நான் சொன்னதாகச் சொல்வாயாக" என அனுமனிடம் சீதை கூறினாள்.

(அ-ரை). ஏத்தும் : துதிக்கும். வென்றி : வெற்றி, தனக்கே ஏகாரம் பிரிநிலை; வெம்சிறைவீடு கொடிய சிறையினின்றும் விடுவிப்பது.

511. சீதை மறுபடியும் இராமனுக்குச் சொல்லியனுப்புதல்

(க - ரை) : "இன்னும் ஒரு மாதத்திற்குள் வந்து அவர் என்னை மீட்காவிட்டால் என்னுயிர் இங்கேயே மடிந்துவிடும் ஆகையால், அப்படியே திரும்பிச் சென்று கங்கையாற்றங்கரை யில் எனக்குச் செய்தற்குரிய நீர்க்கடன்களை யெல்லாம் செய்து விடச் சொல்" என்று அனுமனிடம் சீதை, இராமனுக்குச் செய்தி சொல்லி யனுப்பினாள்.

(அ-ரை): திங்கள் : மாதம்; யாணர் : புதுமை.

508. 'வேறும் உண்(டு)உரை, கேள்,அது மெய்ம்மையோய்!
ஏறு சேவகன் மேனிஅல் லால்,இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும் ஆண்எனக்
கூறும்; இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ?'

509. 'ஆரம் தாழ்திரு மார்பற்கு அமைந்த(து)ஓர்
தாரம் தான்அலளேனும், தயாஎனும்
ஈரம் தான்அகத்(து) இல்லைஎன் றாலும்,தன்
வீரம் காத்தலை வேண்(டு)என்று வேண்டுவாய்.'

510. 'ஏத்தும் வென்றி இளையவற்(கு) ஈ(து)ஒரு
வார்த்தை கூறுதி;மன் அருளால்எனைக்
காத்திருந்த தனக்கே கடன்,இடை
கோத்த வெம்சிறை வீ(டு)' என்று கூறுவாய்!'

511. 'திங்கள் ஒன்றின்என் செய்தவம் தீர்ந்த(து)ஆல்
இங்கு வந்திலனேஎனின், யாணர்நீர்க்
கங்கை ஆற்றங் கரை,அடி யேற்கும்தன்
செங்கை யால்கடன் செய்கென்று, செப்புவாய்!'

512. இதுவும் அது.

(க - ரை): "என் கணவர் அயோத்திக்குச் சென்றால், இலங்கையில் இறக்கின்ற சீதை உங்கள் மூவரையும் தொழுதாள் என்று என் மாமியார் மூவருக்கும் சொல்லச் சொல். என் மேல் கருணையில்லாத அவர் மறந்தாலும், நீ நினைப்பூட்டு" என்று கூறினாள்.

(அ-ரை). சிறக்கும் சிறப்பையுடைய, மேன்மையுடைய.

513. இதுவும அது.

(க - ரை :) "மிதிலைக்கு வந்து என்னைக் கைப்பற்றி மணம் புரிந்த நாளில், 'இப்பிறவியில் உன்னைத் தவிர வேறொரு பெண்ணை மனத்தினாலும் நினைக்க மாட்டேன்' என்று அவர் கூறியதை, அவர் காதில் இரகசியமாகக் கூறுவாயாக" என்று அனுமனிடம் சீதை கூறினாள்.

(அ-ரை) வைகல் நாள.

514. இதுவும் அது.

(க - ரை): "என்னை அவர் மீட்காமையினால், நான் இங்கேயே இறந்து விடுவேனாயினும், அடுத்த பிறவியிலாவது அவருக்கு நான் மனைவியாக ஆகும்படி ஒரு வரம் வேண்டினாள் என்று கூறுவாயாக" என்று சீதை அனுமனிடம் கூறினாள்.

515. இதுவும் அது.

(க - ரை): "கொலு மண்டபத்திலிருந்து அரசு செய்யும் சிறப்பையும், யானைமேல் ஏறி உலாப் போகும் சிறப்பையும், இன்னும் பலவிதத்திலும் அவருடைய அழகைக் கண்டு மகிழும் விதியில்லாத நான் பேசி என்ன பயன்? என் வினையை நினைத்துக் கொள்கிறேன்" என்று சீதை அனுமனிடம் இரங்கிக் கூறினாள்.

(அ-ரை): புரசை : யானையின் கழுத்திலிடும் கயிறு, விரசு : பொருந்திய; கோலங்கள் : அழகுகள்; உன்னுவேன் : நினைப்பேன்.

512. 'சிறக்கும் மாமியர் மூவர்க்கும், 'சீதைஆண்(டு)
இறக்கின் றாள்,தொழு தாள்,'எனும் இன்னசொல்,
அறத்தின் நாயகன் பால்அருள் இன்மையால்,
மறக்கும் ஆயினும், நீமற வேல்ஐயா!'

513. 'வந்(து)எனைக்கரம் பற்றிய வைகல்வாய்,
'இந்த இப்பிற விக்(கு), இரு மாதரைச்
சிந்தை யாலும் தொடேன்'என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்!'

514. 'ஈண்டு நான்இருந்(து) இன்னுயிர் மாயினும்,
மீண்டு வந்து பிறந்து,தன் மேனியைத்
தீண்டல ஆவ(து)ஓர் தீவினை தீர்வரம்
வேண்டி னாள்தொழு(து) என்று விளம்புவாய்.'

515. 'அரசு வீற்றிருந்(து) ஆளவும், ஆய்மணிப்
புரசை யானையில் வீதியில் போதவும்,
விரசு கோலங்கள் காண விதியிலேன்;
உரைசெய்(து) என்னை?என் ஊழ்வினை உன்னுவேன்.

**516.** இதுவும் அது.

**(க - ரை):** "அங்கே தன்னைப் பிரிந்து உலகம் வருந்துதலை நீக்கவும், தன் தாயின் துயரம் நீக்கவும், பரதனுடைய துன்பத்தை நீக்கவும், அவர் அயோத்திக்குச் செல்வாரே அல்லாமல் என் ஒருத்தியின் துயரை ஒழிப்பதற்காக இங்கு வருவாரோ?" என்று வருந்தினாள்.

**(அ-ரை).** ஆற்றுறும: பொறுததுக் கொண்டிருக்கின்ற; இன்னல்: துன்பம்; தளர்தல் : வருந்துதல்; ஏகுவது : செல்வது, அன்றியே: அல்லாமல், எய்துமோ : அடைவாரோ, வருவாரோ.

**517.** இதுவும் அது.

**(க - ரை):** "அனுமனே! நீ மிதிலைக்குச் சென்று என் தாய், தந்தை, சுற்றம் முதலியோருக்கு எனது வணக்கத்தைத் தெரிவி; மற்றும் உங்கள் வானர அரசனாகிய சுக்கிரீவனிடம், 'நீ இராமனைக் காத்துநின்று அயோத்திக்குச் சென்று அவருக்கு முடிசூட்டி வை' என்று சொல்" என்று சீதை கூறினாள்.

**(அ-ரை).** எந்தை : எனது தந்தை, யாய் : தாய், கிளைஞர் : சுற்றம், சுந்தர: அழகு; அந்தமஇல்: அழிவில்லாத.

**518.** அனுமன் சீதைக்கு உறுதி கூறுதல்.

**(க - ரை):** "தாயே! குறித்த நாளிறகுள் இராமன் உன்னை மீட்காவிட்டால் அவன் இராவணன் ஆவான், இந்த இராவணன் இராமன் ஆவான்" என்றான் அனுமன். [சீதையை மீட்காத பாவம் பழிகளுக்கு ஆளாவதால் இராவணன் ஆவான், என்பது கருத்து.]

**(அ-ரை):** குராவரும குழலி: குராமலரையணிந்த கூந்தலையுடையவள். விராவரும் : பொருந்திய, பராவரும : பரவிவரும.

**519.** சீதை சூளாமணியை அனுமனிடம் இராமனுக்குக் கொடுத்தனுப்புதல்.

**(க - ரை):** "அனுமனே! நான் தலை உச்சியில் அணியும இந்த மணி கண்மணியைப் போன்றது; பல நாட்களாக ஆடையில் முடிந்து மறைத்து நான் வைத்திருந்தது. இங்கு வந்து என்னைக் கண்டு சென்றதற்கு அடையாளமாக இதை இராமனிடம் கொடுப்பதற்குப் பெற்றுக் கொள்" என்று சீதை சூளாமணியை அனுமனிடம் கொடுத்தாள்.

**(அ-ரை):** சூடை : உச்சி; தொல்நாள் : பழமையான நாள்; கோபு: கொள்வாயாக; நல்கினை : கொடுத்தாய்.

516. ‘தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்
அன்னை நோய்க்கும், பரதன் அங்(கு) ஆற்றும்
இன்னல் நோய்க்கும் அங்(கு) ஏகுவ(து) அன்றியே
என்னை நோக்கிஇங்(கு) எங்ஙனம் எய்துமோ?’

517. ‘எந்தை யாய் முதலிய கிளைஞர் யார்க்கும்,என்
வந்தனை விளம்புதி; கலியின் மன்னனைச்
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போய்
அந்தம்இல் திருநகர்க்(கு) அரசன் ஆக்(கு)என்பாய்.

518. ‘குராவரும் குழலி!நீ, குறித்த நாளினே,
விராவரு நெடும்சிறை மீட்க லான்எனில்,
‘பராவரும் பழியொடு பாவம பற்றுதற்(கு)
இராவணன் அவன், இவன் இராமன்’ என்றனன்.

519. ‘சூடை யின்மணி கண்மணி ஒப்பது; தொல்நாள்
ஆடை யின்கண் இருந்தது; பேர்அடை யாளம்;
‘நாடி வந்(து) என(து) இன் உயிர் நல்கினை! நல்லோய்!
கோடி!’ என்று, கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்.

**520.** *அனுமன் சீதையிடம் விடை பெற்றுச் செல்லல்.*

**(க - ரை):** அனுமான் அச்சூளாமணியைச் சீதையிடம் தொழுது வாங்கினன்; அதை நன்கு தன் ஆடையில் முடிந்து பத்திரம் செய்து கொண்டான். பின் சீதையை மூன்று முறை வலம் வந்து வணங்கச் சீதையும் அவனை வாழ்த்தி விடை கொடுக்க, அனுமன் புறப்பட்டான்.

**(அ-ரை)** தாக ஆடை: பந்தனை கட்டுதல், வந்தித்து: வணங்கி; எழுது பாவை சித்திரத்தில் எழுதிய பாவை போன்றவள். இப்பாடலால் மும்முறை வலம் வரல் வணங்கும் என்பதும், பெரியோரிடம் வாங்கும் பொழுதும் கொடுக்கும் பொழுதும் தொழுத வேண்டும் என்பதும் மரபு என்பதை அறியலாம்.

அனுமான் அசோக வனத்தை அழித்த செய்தியைக் கூறுவது.

**521.** *அனுமனால் அழிக்கப்பட்ட சோலையின் நிலை.*

**(க - ரை)** சில மரங்கள் வேரோடு பறிக்கப்பட்டன; சில நெருப்புப்பற்றி எரிந்தன; சில மேகம் வரைக்கும் வீசி எறியப்பட்டன; சில காற்று வேகத்தினால் தாமே பறிக்கப்பட்டுக் கடலில் விழுந்தன; சில வண்டுகள் மொய்க்கும் பூக்களோடு தேவர் உலகில் போய் மோதின; சில உதிர்ந்து விட்டன; சில தூளாகி விட்டன; சில துகளாகி விட்டன.

**(அ-ரை)** மறிந்த: மடங்கிக் கிடந்தன, செறிந்த நெருங்கின; கார்: மேகம்; கால: காற்று; வேலை கடல், தூர் வேர், பறிந்த. பறிக்கப்பட்டன, மலைந்த: மோதின; உக்க: பொடிப் பொடியாக உதிர்ந்தன; நெக்க: நொறுங்கின.

**522.** *இதுவும் அது.*

**(க - ரை):** அனுமான் தான் பறித்த மரங்களை இலங்கை நகரின்மேல் விட்டெறிந்தான். அதனால் வானம்வரை ஓங்கிய மாடங்கள் எல்லாம் இடிந்து தூளாயின; பக்கத்தில் நின்ற மாடங்கள் எல்லாம் பிளந்தன; மதிலில் அமைத்த எந்திரங்களெல்லாம் ஒன்றோடொன்று மோதி எரிந்தன. அதனால் நடுங்கின அரக்க வீரர்கள் இறந்தனர். பிறருக்குக் கேடு நினைப்பவர்கள் பிழைப்பார்களா?

**(அ-ரை)** பகுத்தன. பிளந்தன; துளங்கினர் நடுங்கினர். இப்பாடல் வேற்றுப் பொருள் வைப்பணி ஆகும்

படைத் தலைவர்களைக் கொன்றமைபற்றிக் கூறுவது.

**523.** *அனுமன் செயல்.*

**(க - ரை):** காற்றாடியைப் போலச் சுழன்று திரியும் அனுமான் ஓடிச்சென்று, பற்றிச் சிலரைக் கொன்றான்; ஓர் உடம்பை மற்றோர் உடம்புடன் மோதவிட்டுச் சிலரைக் கொன்றான்; மரங்களைப் பிடுங்கி யடித்துச் சிலரைக் கொன்றான்; ஒளிந்திருக்கும் சிலரைத் தேடிச் சென்று பற்றிக் கொன்றான்.

**(அ-ரை):** சாடி: அடித்து; கூடி: கூட்டி; பிறவினைப் பொருள் தந்தது. கறங்கு: காற்றாடி.

520. தொழுது வாங்கினன், சுற்றிய தூசினில் முற்றப்
பழு(து) உருவகை பந்தனை செய்தனன்; வந்தித்(து),
அழுது, மும்மை வலம் கொ(டு) இறைஞ்சினன் அன்போ(டு)
எழுது பாவையும் ஏத்தினள்; ஏகினன் இப்பால்.

## பொழில் இறுத்த படலம்

521. வேரொடு மறிந்த சில; வெந்த சில; விண்ணினில்
காரொடு செறிந்த சில; காலினொடு வேலை
தூரொடு பறிந்த சில; தும்பியொடு வானோர்
ஊரொடு மலைந்த சில, உக்க சில நுக்க.

522. விட்டனன் இலங்கை தன்மேல்,
விண்உற விரிந்த மாடம்
பட்டன; பொடிகள் ஆன;
பகுத்தன பாங்கு நின்ற;
சுட்டன பொறிகள் வீழத்;
துளங்கினர் அரக்கர் தாமும
கெட்டனர் வீரர் அம்மா!
பிழைப்பரோ கேடு சூழ்ந்தார்?

## கிங்கரர் வதைப் படலம்

523. ஓடிக் கொன்றனன் சிலவரை;
உடல்உடல் தோறும்
கூடிக் கொன்றனன் சிலவரைக,
கொடிநெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரைப;
பிணந்தொறும் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரைக்;
கறங்(கு) எனத் திரிவான்.

524. அனுமன் போர்த் திறம்.

(க - ரை): அனுமனோடு போர் புரியவந்த அரக்க வீரர்கள் ஒரு நிமிடத்தில் மடிந்தனர்; ஏனைப் படைத் தலைவர்களெல்லாம் அருகிலிருந்த நந்தவனத்தில் ஓடி ஒளிந்தனர். ஏனைய வீரர்கள் ஓடும் வேகத்தினால் அங்கே கிடக்கும் பிணக்குவியல்களில் கால் இடறி, அவற்றின்மேல் விழுந்து வருந்தினார்கள்.

(அ-ரை) பிந்து: பிற்பட்ட, உந்த: தள்ள, உளைவார்: வருந்தினர், காலவழுவமைதி.

சம்புமாலி என்பவனது வருகையைப்பற்றிக் கூறுவது.

525. அனுமன் பேராரவாரம் செய்தல்.

(க - ரை): இடியோடு மேகம் சிதறவும், கடலோசை அடங்கவும், மலைக்குகைகளிலிருந்த பாம்புகளெல்லாம் விடத்தோடு உயிரைக் கக்கி இறக்கவும், அரக்கர்களெல்லாம் அச்சம் கொள்ளவும், தேவர்கள் நடுங்கவும் இராமனது வில்லின் நாணோசையைப் போல அனுமான் பேராரவாரஞ் செய்து முழங்கினான்.

(அ-ரை) செல்: இடி; சிலைப்பு: ஓசை; அளை: புற்று; கொல்இயல்; கொல்லுந்தன்மையுடைய, இடிக்க: முழக்கமுண்டாக்க.

526. அனுமான் நிலை.

(க - ரை) அனுமனது போர்த் திறங் கண்டு அஞ்சிய அனைவரும் எங்கே அவன் தன்னைக் கொல்ல வருவானோ என்று பயந்து எங்கே பார்த்தாலும் அவன் உருவமே தங்கள் கண்ணுக்குத் தோன்ற நடுங்கினார்கள். எங்கும் நிறைந்த கடவுளின் தன்மை, அவனைச் சார்ந்த அடியார்களுக்கும் உண்டு என்னும் உண்மையை இது விளக்கிற்று.

(அ-ரை). நண்ணுவர் . அடைவர்; நவை அற: குற்றம்அற; விசும்பு: ஆகாயம்; மருங்கு · பக்கம்.

527. அனுமான் சம்புமாலியிடம் இரக்கங் காட்டுதல்.

(க - ரை) "சம்புமாலியே! உன் கையில் உள்ள அம்புகளெல்லாம் தீர்ந்துவிட்டன; ஓர் அம்பு வைத்திருக்கின்றாய்; தேரும் அப்படியே; உன்பின் வந்தவர்களைக் காக்க வலியற்ற நீ என்னால் மடிகின்றாயா? வலியற்ற உன்னைக் கொல்வது அறமன்று; அதனால் நீ உயிரோடு திரும்பிப் போ; அன்றி என்னை எதிர்த்தால் நீ சாவதைத் தவிர என்ன செய்வாய்?" என்று பூத்த மரத்தைப்போல மேலெல்லாம் எதிரிகள் அம்பினால் புண்பட்ட உடம்பையுடைய அனுமான் கூறினான்.

(அ-ரை): ஏதி: ஆயுதம்; சாதி: சாவாய்; போதி: போவாய்; பொலிகின்றான்: விளங்குகின்றான்.

524. வந்த கிங்கரர், ஏ எனும் மாத்திரை மடிந்தார்
நந்த, வானத்து நாயகர் ஓடினர்; நடுங்கிப்
பிந்து காலினர், கையினர், பெரும்பயம் பிடரின்
உந்த, ஆயிரம் பிணக்குவை மேல்விழுந்(து) உளைவார்.

## சம்புமாலி வதைப் படலம்

525. செல்லொடு மேகம் சிந்தத்,
திரைக்கடல் சிலைப்புத் தீரக்,
கல்அளைக் கிடந்த நாகம்
உயிரொடு விடமும் கால்க,
கொல்இயல் அரக்கர் நெஞ்சில்
குடிபுக அச்சம், வீரன்
வில்என இடிக்க, விண்ணோர்
நடுக்குற வீரன் ஆர்த்தான்.

526. அண்ணல் அவ் அரியினுக்(கு) அடியவர், அவன்நீர்
நண்ணுவர் எனும்பொருள் நவை அறத் தெரிப்பான்;
மண்ணினும் விசும்பினும், மருங்கினும் வலித்தார்
கண்ணினும், மனத்தினும், தனித்தனிக் கலந்தான்.

527. 'ஏதி ஒன்றால்; தேரும் அஃதால்;
எளியோர் உயிர்கோடல்
நீதி அன்றால்; உடன்வந் தாரைக்
காக்கும் நிலையில்லாய்,
சாதி! அன்றேல் பிறி(து) என்செய்தி!
அவர்பின் தனிநின்றாய்;
போதி!' என்றான் பூத்த மரம்போல்
புண்ணால் பொலிகின்றான்.

528. சம்புமாலி இறந்தமையை, அரக்க ஒற்றர் இராவணனுக்கு அறிவித்தல்.

(க - ரை.) : இராவணன் மனைக்குச் சென்ற அரக்க ஒற்றர்கள், தம்மினத்தவர் தோற்று ஒழிந்தமையைக் கூற அஞ்சிக் கூசிச் சொல்ல முடியாமல் விக்கி விம்மி யழுதார்கள். இதை யறிந்த இராவணன் சிரித்து, ''அஞ்சாமல் சொல்லுங்கள்'' என, "ஒரே ஒரு குரங்கினால் நம்மவர் பலர் அழிக்கப்பட்டனர்; சம்புமாலியும் அழிந்தான்'' என்று கூறினர்.

(அ-ரை). பொலந்தார் : பொன்னாலாய மாலை; பொருஇல் : ஒப்பில்லாத; கோயில் : அரண்மனை, வெருவி பயந்து; நக்கான் : சிரித்தான்; உக்கார் : பொடியாயினர், உலந்தான் அழிந்தான்.

ஐந்து சேனாதிபதிகள் இறந்தமை பற்றிக் கூறல்.

529. அனுமான் செய்த போர்.

(க - ரை) : அனுமான் யானைகளை உதைத்துக் கொல்லுவான்; தேர்களைக் கலக்கி முறிப்பான்; குதிரைகளை மிதித்துக் கொல்லுவான்; இரும்புத் தூண்களைப் பிடுங்கி வீரரைத் தரையில் விட்டு அரைப்பான். இன்னும் சில வீரர்களைக் கையால் குத்திக் கொல்லுவான்; சிலருடைய தலைகளைக் கடித்துக் கொல்லுவான்.

(அ-ரை). கரி : யானை, உழக்கும் : கலக்கும், புரவி : குதிரை; அதுக்கும் : அழிக்கும்.

530. ஐந்து சேனாபதிகள் இறந்ததைச் சோலை காப்போர் இராவணனிடம் தெரிவித்தல்.

(க - ரை) : ''சேனையும் இறந்தது; போர் புரிய எதிர்த்து வந்த சேனாபதிகள் ஐவரும் இறந்தனர்; போர் செய்ய எதிர்த்துப் போனவர்களில் நாங்கள் மட்டும் மீண்டு வந்தோம்; தேவர்களையும் வென்ற அரக்கர்கள் அனைவரையும் கொன்று, எதிர்ப்பவர் இன்மையால் அந்தக் குரங்கு சோம்பலுடன் இருக்கிறது.''

(அ-ரை). தானை : சேனை; உலந்தது : அழிந்தது; அமர் : போர், நூறி : அழித்து.

இராவணனது குமாரனான அட்சகுமாரன் வதையைப்பற்றிக் கூறுவது.

531. அட்சகுமாரனைக் கண்ட அனுமான் கூறுதல்.

(க - ரை) ' ' இவன் எண்ணப்பட்ட இராவணன், இந்திரசித்து என்னும் இருவருள் ஒருவனாக இருக்க வேண்டும். அப்படியிருந்தால் நான் முன்செய்த புண்ணியம் எனக்குக் கைகொடுக்கிறது; எனது தலைவனாகிய இராமனும் தவப்பயன் பெற்றவனாவான். இங்கு வந்த நானும் இருக்கின்றேன்; யமனும் நிற்கின்றான்; ஆகையால் நான் நினைத்த காரியத்தை இன்றே விரைவில் முடித்து விடுவேன்.'

(அ-ரை): நண்ணிய : அடைந்த; காலன் : எமன்; கண்ணிய : கருதிய, கடிதின் : விரைவில்.

528. புக்கார் ஒற்றர் பொலந்தார் அரக்கன்
பொருஇல் பெரும்கோயில்;
விக்கா நின்றார்; விளம்பல் ஆற்றார்;
வெருவி விம்முவார்;
நக்கான் அரக்கன் 'நடுங்கல்' என்றான்;
'ஐய நமர்எல்லாம்
உக்கார், சம்பு மாலி உலந்தான்;
ஒன்றே குரங்(கு)' என்றார்.

## பஞ்ச சேனாபதிகள் வதைப் படலம்

529. உதைக்கும்வெம் கரிகளை; உழக்கும் தேர்களை;
மிதிக்கும்வன் புரவியைத், தேய்க்கும் வீரரை
அதுக்கும்வல் எழுவினால் அரைக்கும்; மண்இடைக்
குதிக்கும்;வன் தலையிடைக் கடிக்கும் குத் நுமால்.

530. 'தானையும் உலந்த(து); ஐவர்
தலைவரும் சமைந்தார்;தூக்கப்
போனவர் தம்மில் மீண்டோம்
யாம், அமர் புரிகி லாமை;
வானையும் வென்று ளோரை
வல்லையின் மடிய நூறி,
ஏனையர் இன்மை சோம்பி
இருந்த(து)அக் குரங்கும்' என்றார்.

## அட்ச குமாரன் வதைப் படலம்

531. 'எண்ணிய இருவர் தம்முள்
ஒருவனேல், யான்முன் நோற்ற
புண்ணியம் உளதாம்; எம்கோன்
தவத்தொடும் பொருந்தினானே!
நண்ணிய நானும நின்றேன்;
காலனும் நணுகி நின்றான்;
கண்ணிய கருமம் இன்றே
முடிக்குவென் கடிதின்' என்றான்.

**532. அனுமனோடு அரக்கர் போர்.**

(க-ரை): அரக்கர் சேனையானது ஆரவாரித்துக் கிளம்பி அனுமானைச் சுற்றிக் கொண்டது. பருவ கால மழையைப்போல அனுமான் மீது அம்புமாரி எய்தனர். அதைக்கண்டு அட்டதிக்குப் பாலகர்களும், 'அனுமானுக்கு என்ன நேருமோ' என்று அஞ்சினார்கள்; வானும் பூமியும் நடுங்கின. அனுமான், தான் ஒருவனே யாக அச்சேனையோடு போர்புரியத் தொடங்கினான்.

(அ-ரை). அஞ்சனைக்கு உரிய குன்றை அஞ்சனாதேவிக்கு மகனாதற்குரிய குன்றுபோன்ற அனுமனை. பொருபடை: போராயுதங்கள்; தார்: மாலை வேர்த்தனர் அஞ்சினார்கள்; சலித்தல்: நடுங்குதல.

**533. அனுமான் அட்சகுமரனை வதைத்தல்.**

(க-ரை): நதியைப்போல் ஓடுகின்ற இரத்த வெள்ளத்தைத் தண்ணீராகவும், போர்க்களத்தை ஓர் அம்மியாகவும், சிதறின அட்சகுமரனின் சதைகளை அம்மியில் அரைத்தற்கு வைத்த அரிசியாகவும், அவனது உடலைக் குழவிக்கல்லாகவும் கொண்டு அனுமான் அரைத்துத் தீர்த்தான்.

(அ-ரை) சீததம்: வெள்ளம், சில்: கல—இங்கு அம்மிக்கல் பா நிலம்; இங்கே போர்க்களம். செறி மிகுந்த, அரி: அரிசி—கடைகுறை, இறை: சற்றும், சிறிதும.

குறிப்பு: தேயாதான் தேய்த்தான் என்பது ஒரு சொல் நயம். இப்பாடல் ஏகதேச உருவக அணியாகும்.

அனுமனைக் கயிறு கட்டி இழுத்துச் சென்றதைப்பற்றிக் கூறுவது. பாசம்: கயிறு

**534. அட்சகுமாரன் இறந்ததுபற்றி இந்திரசித்தின கலக்கம்**

(க-ரை): தன் தம்பியை நினைக்குந்தோறும் கண்ணீர் தாரைதாரையாக வழிந்தோடும் கண்களோடு தன்னுடைய வில்லை நோக்கி, வாயை மடித்து ஒரு சிரிப்புச் சிரித்தான்; 'மரக் கொம்புகளில் ஏறித் திரிகின்ற ஒரு குரங்கினால் என் தம்பியா இறந்தான்? என் தந்தையின் புகழல்லவா தேய்ந்தது!' என்று இந்திரசித்து கலங்கினான்.

குறிப்பு: இப்பாடல் வீரங் கலந்த அவலச் சுவை நிரம்பியது,

(அ-ரை): உன்னும: நினைக்கும்; வம்பு: வில்நாண், நக்கான்: சிரித்தான. குரங்கா ஆற்றல்: தளராத ஆற்றல்; எம்பி: என் தம்பி, எந்தை: என தந்தை

**535. இந்திரசித்தின் வீர உரை.**

(க-ரை): 'இரண்டு மானிடர், ஒரு குரங்கு இவர்களால் காட்டில் என் அத்தையாகிய சூர்ப்பணகைக்கு அவமானமும் கரன் முதலியோர் இறப்பும், எனது சொந்தத் தம்பியான அட்சகுமாரன் இறந்த துன்பமும், பிறவும் எங்களுக்கு உண்டாயின என்றால் என்னுடைய வீரம் அழகை யுடையதா?' என்று இந்திரசித்து உரை பகர்ந்தான்.

(அ-ரை): கான்: காடு; பாடும்: படுதல்–இறத்தல்; முதனிலை திரிந்த தொழிற்பெயர். வீந்த: இறந்த; அம்ம: வியப்பிடைச்சொல்.

532. ஆர்த்(து) எழுந்து அரக்கர் சேனை,
அஞ்சனைக்(கு) உரிய குன்றைப்
போர்த்தன; பொழிந்த(து) அம்மா!
பொரு படைப் பருவமாரி!
வேர்த்தன திசைகாப் பாளர்;
சலித்தன விண்ணும் மண்ணும்;
தார்த்தனி வீரன், தானும்
தனிமையும் அவர்மேல் சார்ந்தான்.

533. நீத்தாய் ஓடின உதிரப் பெருநதி
நீரா கச, நிலை பாராகப்
போய்த் தாழ் செறிதலை அரியின் திணைபடி
பொய்ப்ப, பொரும் உயிர் போயாமுன்
மீத்தாம் திமிர்கூர் வயிரக் கைகொடு
பிடியா, விண்ணொடு மண்காணத்
தேய்த்தான்; ஊழியின் உல(கு)ஏழ் தேயினும்
ஒருதன் புகழ்நிறை தேயாதான்.

## பாசப் படலம்

534. தம்பியை உணர்வும் தோற்றும்
தாரைநீர் ததும்பும் கண்ணன்,
வம்(பு) இயல் சிலையை நோக்கி
வாய் மடித்(து) உருத்து நக்கான்.
'கொம்(பு) இயல் மாய வாழ்க்கைக்
குரங்கினை, குரங்கா ஆற்றல்
எம்பியோ தேய்ந்தான்? எந்தை
புகழ் அன்றோ தேய்ந்த(து)!' என்றான்.

535. 'கான இடை, அத்தைக(கு) உற்ற
குற்றமும், கரனார் பாடும்,
யான் உடை எம்பி விந்த
இடுக்கணும், பிறவும் எல்லாம்
மானிடர் இருவ ராலும்,
வானரம் ஒன்றி னாலும்,
ஆனதே உள;என் வீரம்
அழகிற்றே அம்ம!' என்றான்.

**536.** *இந்திரசித்து இறந்த தம்பியை நோக்குதல்.*

**(க - ரை):** இரத்த வெள்ளமானது இலங்கையைச் சுற்றி யுள்ள கடலிற்பாயவும், தன் காலில் பிணக்குவியல்கள் இடறவும் போர்க்களம் சென்று இறந்த தன் தம்பியைக் கண்ணிற் கண் டான். கோபத்தால் கண்கள் சிவந்தன; மனத்தில் கோபக் கொதிப்பு உண்டாயிற்று.

**(அ—ரை):** நீப்பு : நீத்தம், நீந்துதல், வாரி : வெள்ளம்; திரை அலை, புணரி : கடல்; குவடு : மலை; கறுப்பு : கோபம், உரிச்சொல்.

**537.** *இந்திரசித்தைப் பார்த்த அனுமன் யோசனை.*

**(க - ரை):** "நல்ல மலர் மாலையை யணிந்த வீரனாகிய இந்திரசித்தை நான் கொல்லுவேன். அவன் கொல்லப்பட்டால், அச்செயலே இராவணனைக் கொன்றதும் ஆகும். இதனாலன்றோ கெட்டோம்' என்று இராவணன் எண்ணிச் சீதா பிராட்டியாரை, இராமனிடம் விட்டுத் திரும்புவான். அரக்கர்களும் தங்கள் கொடுந்தொழிலை விட்டு விடுவார்கள்."

**(அ—ரை).** கட்டேறு : (பூக்களைத்) தொடுத்தல் பொருந்திய; கண்ணி மாலை; பாடும் : படுதல், இறப்பு, கேடுஅறும் . கெடுதல் இல்லாத; வெம்மை கொடுமை

**538.** *அனுமானது போர்த் திறம்*

**(க - ரை):** அனுமனோடு எதிர்த்த அரக்க வீரர்களில், அனுமனால் பிடித்து நசுக்கப்பட்டவர்கள் சிலர்: உடல் இரண் டாகப் பிளக்கப்பட்டவர்கள் சிலர்; தோள் ஒடிக்கப்பட்டவர்கள் சிலர்; தலையுடைந்தவர்கள் சிலர்; உடம்பின் பல பாகங்கள் கடிக்கப்பட்டவர்கள் சிலர், கழுத்தை இழந்தவர்கள் சிலர் கையினால் அடிக்கப்பட்டவர்கள் சிலர்; பயத்தினால் ஓடின வர்கள் சிலர்.

**(அ—ரை):** உருவம் : உடம்பு

**539.** *அனுமன் பெருவடிவத்தைக் கண்ட இந்திரசித்தின் திகைப்பு.*

**(க - ரை):** தேவேந்திரனைத் தோள்களில் கட்டி இழுத்த இந்திரசித்து, அனுமனின் பேருருவில் ஒரு பகுதியைக் கண்டவ னன்றி முழு வடிவையும் காண முடியாதவனாய்த் தன்னை மறந்த தவனாகி வியப்புற்றான்.

**(அ—ரை):** பாகம் : ஒரு பகுதி; மாகம் : வானம்; ஏகம் : ஒன்று; ஏறுழ வலி : மிக்க வலிமை—ஒருபொருட் பன்மொழி; பிணித்து : கட்டி; ஈர்த்த : இழுத்த.

536. நீப்(பு)உண்ட உதிர வாரி,
நெடுந்திரைப் புணரி தோன்ற,
ஈர்ப்(பு)உண்டற்(கு) அரிய வாய
பிணக்குவடு இடறச் செல்வான்;
தேய்ப்(பு)உண்ட தம்பி யாக்கை,
சிவப்புண்ட கணைகள், தீயில்
காய்ப்(பு)உண்ட செம்பில் தோன்றக்,
கறுப்புஉண்ட மனத்தன் ஆனான்.

537 'கட்டேறு நறுமகமழ் கண்ணி இக் காளை, என்கைப்
பட்டால், அதுவே அவ் விராவணன் பாடும் ஆகும்;
'கெட்டோம்'என எண்ணி, இக்கே(டு)அரும் கற்பினளை
விட்(டு)ஏகுதும, அ(து)அன்றி அரக்கரும வெம்மை தீர்வார்.'

538. பிடிஉண் டார்களும், பிளத்தல்உண்
டார்களும், பெருந்தோள்
ஒடிஉண் டார்களும, தலைஉடை ந்
தார்களும, உருவக்
கடிஉண் டார்களும், கழுத்(து)இழந்
தார்களும், கரத்தால்
அடிஉண் டார்களும் அச்சமஉண
டார்களும் அரக்கர்.

539. பாகம் அல்லது கண்டிலன், அனுமனைப் பார்த்தான்,
மாக வன்திசை பத்தொடும் வரம்(பு)இலா உலகிற்(கு)
ஏக நாதனை எறுழ்வலித் தோள்பிணித்(து) ஈர்த்த
மேக நாதனும், மயங்கினன் ஆம்என வியந்தான்

540. இந்திரசித்தின் நாகபாசத்தால் அனுமன் கட்டுண்ணல்.

(க - ரை) : இந்திரசித்து விட்ட பிரமாஸ்திரம் பெரிய பாம்பின் வடிவத்தோடு சென்று கருடாழ்வாரும் நடுங்கும்படியாகப் பெரிய அனுமனது தோள்களைக் கட்டியது.

(அ-ரை). தணிப்பரும : தணிப்பு—அரும : அடக்கமுடியாத, தழல் நெருப்பு; தறுகண் . அஞ்சாமை, பணிக்குலம் · பாம்பின்கூட்டம் துணுக்குற நடுக்கமுற; கலுழன் : கருடன், பிணித்து . கட்டி, மாருதி : அனுமன் பிறங்க : நன்றாக.

குறிப்பு. கருடனைக் கண்டு பாம்பு நடுங்குவது இயல்பாயிருக்க, பாம்பைக் கண்டு கருடனும் நடுங்கிற்று என்பதில் உம்மை உயர்வு சிறப்பு ஆகும்.

541. அப்பொழுது அனுமான் உற்ற நிலை.

(க - ரை) : அஸ்திரத்தாற் கட்டுண்ட அனுமன் 'இது பிரமன் அம்பு; இதன் ஆணையை மீறலாகாது' என்று தனது பழைய வடிவோடு கண்ணை மூடிக்கொண்டிருந்தான். 'இந்தக் குரங்கினுடைய வலிமை ஓய்ந்து விட்டது' என எண்ணி இந்திரசித்து அவன் அருகில் சென்றான்.

(அ-ரை) சதுமுகன் நான்முகன், பிரமன்; ஏயந்தது நக்க்க முகிழ்த்தது · குவித்து

. கட்டிலிருந்து அனுமான் விடுவித்துக் கொண்டதைப்பற்றிக் கூறுவது.

542. அனுமனைக் கண்ட அரக்கர் கூறுவன

(க - ரை) : "கைலாய மலையில் இருக்கின்ற உருத்திர பகவானே, சீதாபிராட்டியாரின் கற்பின் மேன்மையால் இந்தக் குரங்கு வடிவாகி நமது இலங்கை நகரை அழிக்க வந்திருக்கிறான்" என்று பல அரக்கர்கள் கூறினர்.

(அ-ரை): கணிச்சி : மழுவாயுதம்; மாட்சி . பெருமை; எயில் மதில் அயில் : கூர்மை.

குறிப்பு: சிவனுடைய ஓர் அம்சம் அனுமன் என்பது பாலகாண்டத்திலேயே அறியப்பட்டது.

543. அரக்கர் கயிற்றில் கட்டி இழுத்துக்கொண்டு செல்லும்பொழுது அனுமான் நினைப்பு.

(க - ரை) : 'ஆகையினால் இராவணனை அடைந்து, நமது வலிமையையும், அவன் நடந்துகொள்ள வேண்டிய நீதியையும் அவன் மனத்தில் படும்படியாகக் கூறி, நம்மால் அழிக்கப்படாத பாதி இடங்களையும் அழித்துவிட்டு இராமனிடம் திரும்பிப் போவதுதான் என் கடமை' என்று அனுமான் சென்றான்.

(அ-ரை): கருமம் : காரியம், கடமை; நூறி : அழித்து; பைப்பய மெல்ல மெல்ல.

540. தணிப் பரும்பெரும் படைக்கலம், தழல்உமிழ் தறுகண்
பணிக் குலங்களுக்(கு) அரசின(து) உருவினைப் பற்றித்,
துணுக்கம் உற்(று)உயர் கலுழனும் துணுக்குறச் சுற்றிப்
பிணித்த(து), அப்பெரு மாருதி தோள்களைப் பிறங்க.

541. சாய்ந்த மாருதி, சதுமுகன்
படைஎனும் தன்மை
ஆய்ந்து, ‘மற்(று)இதன்
ஆணையை அவமதித்(து) அகறல்
ஏய்ந்த(து) அன்(று)’என்(று)
எண்ணினான்; கண்முகிழ்த்(து) இருந்தான்;
‘ஓய்ந்த(து) ஆம்இவன் வலி’என
அரக்கன்வந்(து) உற்றான்.

## பிணிவீட்டு படலம்

542. ‘கயிலையின் ஒருதனிக் கணிச்சி வானவன்,
மயில்இயல சீதைதன் கற்பின் மாட்சியால்,
எயில்உடைத் திருநகர் சிதைப்ப, எய்தினன்
அயில்எயிற்(று) ஒருகுரங் காய்’என் பார்பலர்.

543. ‘ஆதலால் அரக்கனை எய்தி, ஆற்றலும்
நீதியும் மனக்கொள நிறுவி, நின்றதில்
பாதியின் மேல்செல நூறிப் பைப்பயப்
போதலே கருமம்’ என்(று) அனுமன் போயினான்.

**544.** *அனுமன் கட்டப்பட்ட செய்தியைத் திரிசடை வாயி லாக அறிந்த சீதை வருந்துதல்.*

**(க - ரை):** '*நீ பேருருவெடுத்து ஆகாயத்தை ஊடுருவி நிற்பாய்; எல்லாக் கலைகளையும் கற்றிருக்கின்றாய்; அத்தகைய நீ, ஒரு கள்ள அரக்கனால் கட்டுண்டாய்; தருமத்தின் பயன் இது தானோ?' என்று சீதை வருந்தினாள்.*

**(அ-ரை).** *உறறு முழுவதும், விசும்பு . ஆகாயம்; பற்றுண்டாய் பிடிக்கப்பட்டாய்.*

**545.** *இதுவும் அது.*

(க - ரை): *"உயிர்விட இருந்த சமயத்தில் எனக்குக் கணை யாழியைத் தந்து என் உயிரைக் காப்பாற்றினாய்; அப்பொழுது நீ 'ஊழிக்காலம் வரைக்கும் ஆயுளுடையவனாக இருப்பாய்' என்று வாழ்த்தினேன்; அது தவறாகாது; இலங்கையில் உன் தோள் வலிமையைக் காட்டிப் பழியைத் தேடிக்கொண்டாயே!" என்று சீதாபிராட்டி வருந்தினாள்.*

**(அ-ரை)** *ஆழி கணையாழி, மோதிரம், ஊழி கற்பகாலம், பாழ் வலிமை.*

குறிப்பு. *இப்பாடலில் காட்டி என்ற சொல் பன்முறை வருவது சொற் பின்வருநிலை அணியாகும்.*

**546.** *இராவணன் அந்தப்புரத்துச் செய்கை.*

**(க - ரை):** *அந்தப்புர மகளிரில் தன்னோடு பிணங்கிக் கொண்ட ஒரு மாதினுடைய இதழின் தேனை ஒருமுகம் உண்ணவும், தன்னைத் தழுவிக் கொண்ட ஒரு மாதின் இதழமுதத்தை ஒருமுகம் குடிக்கவும், மகிழ்ச்சியால் பாடிய ஒரு மாதின் இதழமுதத்தை ஒருமுகம் பருகவும், நடிக்கின்ற ஒரு மாதின் இதழமுதத்தை ஒருமுகம் அருந்தவும் இராவணன் இருந்தான்.*

**(அ-ரை):** *ஊடினார் : பிணங்கினவர், நறை : தேன்.*

**547.** *இராவணன் கொலு வீற்றிருந்த நிலை.*

**(க - ரை):** *ஒருமுகம் தேவர் பக்கம் திரும்பி அரசு முறை யைப்பற்றிப் பேசவும், ஒரு முகம் மந்திரிகள், பிரதானிகள் சேனைபதிகள் என்னும் முத்திறத்தாரோடு பேசவும், ஒரு முகம் தனது தீய சிந்தனைகளை அதற்கேற்றவர்களிடத்தில் குறிப்பாகச் சொல்லவும், ஒருமுகம் சீதையின்மேல் வைத்த ஆசையை நினைத்துப் பொருந்தவும் இராவணன் இருந்தான்.*

**(அ-ரை);** *மந்திரம் : ஆலோசனை; பாவகாரி : பாவஞ்செய்பவன்; பாவ கம் : சிந்தனை; பூவை : நாகணவாய்ப்புள், மைனாக்குருவி.*

544. 'உற்(று)உண் டாய விசும்பை உருவினய்;
முற்றுண் டாய்கலே யாவையும் முற்(று)உறக்
கற்(று)உண் டாய்!ஒரு கள்ள அரக்கனல்
பற்(று)உண் டாய்;இது வோஅறப் பான்மையே!'

545. 'ஆழி காட்டிஎன் ஆர்உயிர் காட்டி னய்க்கு
ஊழி காட்டுவென்; என்(று)உரைத் தேன்;அது
வாழி காட்டுவ(து) உண்(டு);உன் வரைப்புயப்
பாழி காட்டிப் பழியையும் காட்டினய்.'

546. ஊடி னர்முகத்(து) உறுநறை ஒருமுகம்உண்ணக்,
கூடி னர்முகக் களிநறை ஒருமுகம் குடிப்பப்,
பாடி னர்முகத்(து) ஆர்அமு(து) ஒருமுகம் பருக,
ஆடி னர்முகத்(து) அணிஅமு(து) ஒருமுகம் அருந்த.

547. தேவ ரோ(டு)இருந்(து) அரசியல் ஒருமுகம் செலுத்த,
மூவ ரோடுமா மந்திரம் ஒருமுகம் முயலப்,
பாவ காரிதன் பாவகம் ஒருமுகம் பயிலப்,
பூவை சானகி நினைப்பொடும் ஒருமுகம் பொருந்த.

**548.** *இராவணன் செய்கைகளிற் சில.*

(க - ரை): *சானகியின் கற்பாகிய கடலை நீந்தி ஏறுவது எவ்வாறு எனச் சிந்திப்பதை ஒருமுகம் காட்டவும், மயிற்சாந்து பூசிய கூந்தலையுடைய மகளிர் தன்னைச் சூழ்ந்து ஏந்திய கண்ணுடியில் ஒருமுகம் அழகைப் பார்த்துக் கொண்டிருக்கவும் இராவணன் வீற்றிருந்தான்.*

(அ-ரை): *சாந்து : மயிற் சாந்து; அளாவிய : பூசிய; கோதை : கூந்தல்; ஆடி : கண்ணுடி; இலங்க : விளங்க.*

**549.** *கட்டுண்ட அனுமான் இராவணன் அவையை அடைதல்.*

(க - ரை): *அனுமன், ' இப்பொழுது நான் இவர்களோடு போர் புரிதல் நல்லதல்ல; நாம் ஒரு தூதுவனைப்போல் நடந்து கொள்வதே தகுதி ' என்று நினைத்து, இராவணன் இடத்திற்குச் சென்றான்.*

(அ-ரை): *அமர் . போர்; உன்னினன் : நினைத்தான்; வேதநாயகன் : இராமபிரான்; வென்றி : வெற்றி; ஏது : காரணம்; இருக்கை · இருக்குமிடம்*

**550.** *இராவணன் அனுமனை வினவுதல்.*

(க - ரை): *" உன்னைப் பார்த்தால் உனக்குரிய வடிவத்தையும் பெயரையும் மாற்றிக்கொண்டு போர் செய்து அழிக்கும் பொருட்டு வந்தவன்போல் தோன்றுகிறாய்! நீ உண்மையில் திருமாலோ? இந்திரனோ? உருத்திர பகவானோ? பிரமனோ? ஆதிசேடனோ? இவருள் நீ யார்?" என்று இராவணன் அனுமனை வினவினன்.*

(அ-ரை): *நேமி : சக்கராயுதத்தையுடைய திருமால்; குலிசி : வச்சிராயுதத்தையுடைய இந்திரன்; கணிச்சி : மழுவாயுதத்தையேந்திய உருத்திரன்; தறுகண் : அஞ்சாமை; பொருது : போர் செய்து; கரந்து : மறைத்து.*

**551.** *இதுவும் அது.*

(க - ரை): *" முனிவர்கள் ஒரு யாகம் செய்து அந்த யாகத்தில் தோற்றுவித்து இங்கே அனுப்பிய ஒரு பூதமோ? அல்லது முன்னை நாளில் பிரமன் ' இலங்கை முழுவதையும் நீ அழி ' என்று புதிதாகப் படைத்து அனுப்பிய ஒரு தெய்வமோ? நீ யார்?" என்று இராவணன் அனுமனை வினவினன்.*

(அ-ரை): *வய வெம் பூதமோ : வலிமை வாய்ந்த கொடிய பூதமோ; மலர் உளோன் : தாமரை மலரிலுள்ள பிரமன்.*

548. காந்தள் மெல்விரல் சனகிதன் கற்(பு)எனும் கடலை
நீந்தி ஏறுவ(து) எங்ஙன்என்(று) ஒருமுகம் நினையச்,
சாந்(து) அளாவிய கோதைநன் மகளிர்தற் சூழ்ந்தார்
ஏந்தும் ஆடியின் ஒருமுகம் இயல்புடன் இலங்க.

549. 'ஆதலால் அமர்த்தொழில் அழகிற்(று) அன்(று);அரும்
தூதன் ஆம் தன்மையே தூய்(து)'என்(று)உன்னினன்
வேதநா யகன்தனித் துணைவன், வென்றிசால்
ஏதில்வாள் அரக்கன(து) இருக்கை எய்தினன்.

550. 'நேமியோ! குலிசியோ! நெடுங்க ணிச்சியோ!
தாமரைக் கிழவனோ! தறுகண் பல்தலைப்
பூமிதாங்(கு) ஒருவனோ! பொருது முற்றுவான்,
நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்!'

551. 'அந்தணர், வேள்வியின் ஆக்கி, ஆணையின்
வந்(து)உற விடுத்த(து)ஓர் வயவெம் பூதமோ?
முந்(து)ஒரு மலர்உளோன் 'இலங்கை முற்றுறச்
சிந்(து)'எனத் திருத்திய தறுகண் தெய்வமோ?'

**552.** இராவணன் வினக்களுக்கு அனுமன் பதில்.

**(க - ரை)**: "நான் நீ சொல்லிய அவர்களில் ஒருவனும் அல்லன்; அந்த அற்பர்கள் ஏவிய ஏவலின்படி வந்தவனும் அல்லன்; பின் யாரென்ருல் தாமரை மலர் போன்ற கண்ணையுடையவனும், வில்லேயேந்தியவனுமாகிய இராமபிரானது தூதன். இங்கே இலங்கைக்கு வந்தேன்" என்று அனுமான் இராவணனுக்கு விடை யளித்தான்.

**(அ-ரை)**: புல்லிய வலியினேர் அற்ப வலிமையோர், அல்லி . அகவிதழ்: கமலம் : தாமரை; வில்லி · வில்லேயேந்தியவன், மேயினேன் : அடைந்தேன்.

**553.** இதுவும் அது.

**(க - ரை)**: "என்ருல் கூறப்பட்ட வில்லேயேந்தியவனை, உனக்குக் குற்றேவல் செய்கின்ற தேவராகவோ, பிறராகவோ நீ நினைக்க முடியாது. அவன் உன்னேடு போர் புரிந்து தோற்ற திக்கு யானைகளும் அல்லன்; திக்குப் பாலகரும் அல்லன்; நீ வேரோடு பெயர்த்த கயிலேமலேயும அல்லன்; திரிமூர்த்திகளும் அல்லன்; உன்ருல் துன்புறுத்தப்படும் முனிவர்களும் அல்லன்; உலகத்தை ஆண்ட தசரதச் சக்கரவர்த்தியினது மகன் ஆவன்"

**(அ-ரை)**: களிறு · யானை, பூவலயம . பூமண்டலம; புரவலன் : அரசன்.
**குறிப்பு**: 'அல்லன்' என்று சுட்டப்பட்ட அனைத்தையும வென்ற நீ, அவனை வெல்லமுடியாது என்ற கருத்துப்பட வந்ததால 'கருத்துடையணி' ஆகும்.

**554.** இராமனுக வந்தவன் பரம் பொருளே என்று கூறுதல்.

**(க-ரை.)**: "வேதத்தினுலும், வேதத்தின் முடிந்த முடிபாகிய உபநிடதங்களாலும் இத்தகையவன் என்று காட்டப்படாத தன்மையுடையவனும், உயிர்களின் அறிவிற்கும் ஓர் அறிவாயுள்ளவனும், நீரில் முதலேபற்றி இழுக்கும்பொழுது முழுமுதற் கடவுளே என்று கூப்பிட்ட கஜேந்திரன் என்னும் யானையைக் காப்பாற்றும் பொருட்டு வந்தவனும் ஆகிய அந்தப் பரம்பொருளே தேவர்களைக் காக்கும் பொருட்டு இராமனுக அவதாரம் எடுத்துள்ளான்."

**(அ-ரை)**: கடையிலா மறை : அழிவிலா வேதம்; ஆரணம் . உபநிடதங்கள்; போர் அணங்கு இடங்கர் : போரில் துன்புறுத்தி வருத்துகின்ற முதலே; அமரர் : தேவர்.

**555.** இராமனுடைய பெருமையை அனுமான் இராவணனுக்கு உரைத்தல்.

**(க - ரை)**: முதல், நடு, கடை இல்லாததாகி, முக்காலங்களுக்கும் கணக்கிற்கும் அப்பாற்பட்டதாகிய பரம்பொருளாகி, அரன், திருமால், அயன் என்னும் மூன்றுருவிலும் முறையே சூலாயுதமும், சங்கு சக்கரங்களும், கமண்டலமும் தரிக்காமல் வில்லொன்றையே ஏந்தித் தனக்கு முறையே உரிய கைலேமலேயும், ஆலிலேயும், தாமரை மலரும் ஆகிய இடங்களை விட்டுவிட்டு அயோத்தி இடமாக வந்து அவதரித்தான்.

**(அ-ரை)**: கணககு : அளவு; வெள்ளிப் பொருப்பு : கைலேமலே. சூலம் கைலேமலே அரனுக்கும், திகிரிசங்கு ஆலந்தழை திருமாலுக்கும், கரகம் தாமரை அயனுக்கும் உரியன.

552. 'சொல்லிய அனைவரும் அல்லென்; சொன்னஅப்
புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலென்;
அல்லிஅம் கமலமே அனைய செங்கணோர்
வில்லிதன் தூதன்யான்; இலங்கை மேயினேன்.'

553. 'தேவரும் பிறரும அல்லன்; திசைக்களிறு அல்லன், திக்கின்
காவலர் அல்லன்; ஈசன் கைலைஅும் கிரியும் அல்லன்;
மூவரும் அல்லன்; மற்றை முனிவரும் அல்லன்; எல்லைப்
பூவல யத்தை ஆண்ட புரவலன் புதல்வன் ஆவான்.'

554. 'காரணம் கோடி ஆயின்,
கடையிலா மறையின் கண்ணும்
ஆரணம் காட்ட மாட்டா
அறிவினுக்(கு) அறிவும் அன்னான்;
போர்அணங்(கு) இடங்கர் கவ்வப்
பொது நின்று, முதலே என்ற
வாரணம் காக்க வந்தான்,
அமரரைக் காக்க வந்தான்.'

555. 'மூலமும் நடுவும் ஈறும்
இல்ல(து)ஓர் மும்மைத்(து) ஆய
காலமும் கணக்கும் நீத்த
காரணன், கையில் ஏந்திச்
சூலமும், திகிரி சங்கும்,
கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும், மலரும், வெள்ளிப்
பொருப்பும் விட்(டு), அயோத்தி வந்தான்.

**556.** *அனுமான் தான்வந்த காரணத்தைக் கூறுதல்.*

**(க - ரை):** "நான் அந்த இராமனுக்கு அடிமை வேலை செய்பவன்; என் பெயர் அனுமன் என்பது; சீதாபிராட்டியாரைத் தேடிக்கொண்டு நான்கு திக்குகளிலும் சென்ற வானர வீரரில் தெற்குத் திசையை நாடிவந்த சேனைத் தலைவனாகிய வாலியின் மகனான அங்கதனுடைய தூதன் நான்; தனியாக வந்திருக்கிறேன்" என்று அனுமன் இராவணனிடம் கூறினான்.

**(அ—ரை):** நல்நுதல் : நல்ல நெற்றியையுடைய சீதை, அன்மொழித் தொகை; போந்த : வந்த; தானை : சேனை. வாலி இராவணனுக்குத் தெரிந்தவன் ஆகையால் அங்கதனை, வாலி மகனென்று அனுமன் சுட்டினான்.

**557.** *அதைக் கேட்ட இராவணன் செயல்.*

**(க - ரை):** தூதனென்று அனுமான் சொன்ன அளவில் இராவணன் சிரித்து, "வாலி மகன் அனுப்பிய தூதனே! வாலி நலமாக இருக்கிறானா? அவனது அரசாட்சி நன்கு நடைபெறுகிறதா?" என்று வினவ, அதைக் கேட்ட அனுமன் சிரித்தான்.

**(அ—ரை):** எயிற்றினம் : பல்வரிசை, எழிலி: மேகம், நாப்பண் : நடுவில்; மின் : மின்னல்; நக்கு : சிரித்து; சேய் : மகன்; வன்திறல் : மிக்க வலிமை; கொல் : வினைப்பொருளில் வந்த இடைச் சொல். மின்னல் சிரிப்பிற்கு உவமை.

**558.** *அனுமான் வாலியைப் பற்றி இராவணனிடம் கூறுதல்.*

**(க - ரை):** "அரக்கனே! முன்புபோல் உன்னைக் கட்டியிழுக்க வாலி வருவானென்று அஞ்சற்க. எங்கள் இராமபிரான் எய்த ஒரு அம்பினாலே இறந்து வானகம் அடைந்தான்; திரும்பி வாரான். உன்னை வாலிற்கட்டி இழுத்துச் சென்ற அந்த வாலியோடு அவன் வாலும் போயிற்று. சூரியன் மகனாகிய சுக்கிரீவன் வானரங்களாகிய எங்களுக்கு அரசனாயிருக்கிறான்" என்று அனுமன் இராவணனிடம் கூறினான்.

**(அ—ரை):** அந்தரம் : வீரசுவர்க்கம்; விளிந்தது : இறந்தது; அஞ்சனம் : மை, இங்கே கருமை, மாழ்கி : மயங்கி; துஞ்சினன் : இறந்தான்; மங்கல வழக்கு; தோன்றல் : மகன். 'வெஞ்சின வாலி மீளான்! அவன் வாலும் விளிந்தது அன்றே' என்பது ஓர்நயம். இப்பாடல் நகைச்சுவையமைந்தது.

**559.** *அனுமன் சொல்லால் சினமுற்ற இராவணன் அவனைக் கொல்ல முயலும்போது, அருகிலிருந்த விபீடணன் அவனைத் தடுத்தல்.*

**(க - ரை):** "வேதங்களில் வல்லவனான அண்ணனே! நீ செய்த அரிய தவத்தின் நிலையை உணர்ந்த பிரமன் தந்த வரத்தினால் தேவராசனாகிய இந்திரனும் நீ இட்ட வேலைகளைச் செய்யும்படியான அவ்வளவு உயர்நிலையில் இருக்கின்ற நீ, 'தூதுவனாகி வந்தேன்' என்று அவன் சொன்ன பின்பும் அவனைக் கொல்லலாகுமோ?"

**(அ—ரை):** அந்தணன் : பிரமன்; ஆன்ற : சிறந்த; இயம்பு : சொல்லுதல். மறைகள் வல்லோய், தக்கோய் என்று இராவணனை விளித்தது கருத்துடையணி ஆகும்.

556 அன்னவற்(கு) அடிமை செய்வேன்;
நாமமும் அனுமன் என்பேன்;
நல்நுதல் தன்னைத் தேடி
நால்பெரும் திசையும் போந்த
மன்னரில், தென்பால் வந்த
தானைக்கு மன்னன், வாலி
தன்மகன்; அவன்தன் தூதன்,
வந்தனென் தமியேன்' என்றான்.

557. என்றலும் இலங்கை வேந்தன்,
எயிற்(று) இனம் எழிலி நாப்பண்
மின்திரிந்(து) என்ன நக்கு,
'வாலிசேய் விடுத்த தூத!
வன்திறல் ஆய வாலி
வலியன்கொல்? அரசின் வாழ்க்கை
நன்றுகொல்?' என்ன லோடும்
நாயகன் தூதன் நக்கான்.

558. 'அஞ்சலை அரக்க! பார்விட்(டு)
அந்தரம் அடைந்தான் அன்றே;
வெம்சின வாலி மீளான்! வாலும்
போய் விளிந்த(து) அன்றே;
அஞ்சன மேனி யான்தன்
அடுகணை ஒன்றால் மாழ்கித்
துஞ்சினன்; எங்கள் வேந்தன்
சூரியன் தோன்றல்!' என்றான்.

559. 'அந்தணன், உலகம் மூன்றும்
ஆதியின் அறத்தின் ஆற்றல்
தந்தவன் அன்புக்(கு) ஆன்ற
தவநெறி உணர்ந்து, தக்கோய்,
இந்திரன் கருமம் ஆற்றும்
இறைவன் நீ! 'இயம்பு தூது
வந்தனென்'என்ற பின்பும்
கொல்லியோ மறைகள் வல்லோய்!'

**560.** இராவணன் ஏவலால் அனுமன் வாலில் பற்றவைத்த தீ சுடாது நின்றபொழுது அனுமான் மகிழ்ச்சியடைதல்.

**(க - ரை):** அரக்கர்கள் தன் வாலில் நெருப்பை வைத்த போதும், அவ்வாலைத் தான் வாயினுள் வைத்துக்கொண்ட போதும், அது தன்னைச் சுடாமல் இருப்பதை யறிந்த அனுமான், "சீதாபிராட்டியாரின் கற்பின் மேன்மையால் இங்ஙனம் ஆறி நின்றது போலும்' என்ற மகிழ்ச்சியுடையவனானன்.

**(அ-ரை):** வெற்பு : மலை; நீர்மை : தன்மை; அற்பு : அன்பு, வலித்தல் : விகாரம்; சனகன்பாவை : சீதை; பாவை : பதுமைபோன்றவள். உவம ஆகுபெயர்.

**561.** அனுமான் தன் வாலை நீட்டி இலங்கையை எரியூட்டத் தொடங்குதல்.

**(க - ரை):** முற்காலத்தில் திரிபுரங்களை எரித்த சிவபெருமானும், அவர் அது செய்தற்கு உதவியாயிருந்த தேர் முதலிய பொருள்களும் நாணமடையும்படி, ' முதலில் இராமனை வணங்கிக் கொண்டு பின், பாவிகளாகிய அரக்கர் இருப்பிடமான இலங்கை, பற்றியெரியும்படி சுடுவேன்' என்று தீர்மானித்து, நெருப்புச் சுற்றிய தன் வாலை நீட்டினான்.

**(அ—ரை).** துன்னலர் : பகைவர்; பாதகர் : பாவிகள்; இருக்கை : இருப்பிடம்; வயங்கு எரி . விளங்குகின்ற நெருப்பு.

அனுமான் இலங்கை நகரைத் தீயால் கொளுத்தியதைப் பற்றிக் கூறுவது.

**562.** அனுமன் இட்ட தீ, பற்றிய விதம்.

**(க - ரை):** அனுமனின் வாலில் பற்றிய நெருப்பானது மாளிகைகளை மூடும்படித் தாவி, நகரமுழுவதையும் அழித்தலினாலே, அந்நகர மக்கள் அங்குமிங்கும் அலைந்து குலைந்து, துன்பத்தினால் ஆரவாரம் இட்டனராகி ஓடினர்.

**(அ-ரை):** வாசல் வாயில்—போலி; எரி : நெருப்பு; மூச : மூட; முட்டி : தாவி; முருக்கல் : அழித்தல்; உலைந்து : குலைந்து; உளை : துன்பம்; பூசல் : ஆரவாரம, இரிய : ஓட; புரம : நகரம்; இடவாகுபெயராய் மாந்தரைக் குறித்தது.

**563.** தீப்பற்றிய இலங்கையின் நிலை.

**(க - ரை):** பெரிய மாடங்களில் நெருப்புப்பற்றுதலாலே அவை வெடித்துத் துண்டு துண்டுகளாக நெருப்புமயமாய் இடி விழுவதைப் போல் கடலில் விழுந்தன. அதனால் கடல் கொதித்து அதிலுள்ள மீனின் கூட்டங்கள் வெப்பத்தினால் கருகி, வெந்து, துடித்து உலர்ந்து இறந்தன.

**(அ-ரை):** பொடித்து : சிதறி; இடிக்குலங்களின் : இடிக்கூட்டங்களைப் போல; இன் : ஒப்புப்பொருளில் வந்தது. வேலை : கடல்; புலர்ந்து : உலர்ந்து.

560. வெற்பினுல் இயன்ற(து) அன்ன
வாலினை விழுங்கி, வெம்தீ
நிற்பினும், சுடாது நின்ற
நீர்மையை நினைவில் நோக்கி
அற்பினுல் அருத சிந்தை
அனுமனும், 'சனகன் பாவை
கற்பினுல் இயன்ற(து)' என்னப்
பெரிய(து) ஓர் களிப்பன் ஆனன்.

561. துன்னலர் புரத்தை முற்றும்
சுடுதொழில் தொல்லை யோனும்,
பன்னின பொருளும் நாணப்,
பாதகர் இருக்கை பற்ற,
'மன்னனை வாழ்த்திப், பின்னை
வயங்(கு)எரி மடுப்பன்' என்னுப்
பொன்னகர் மீதே தன்போர்
வாலினைப் போக விட்டான்.

இலங்கை எரியூட்டு படலம்

562. வாசல் இட்ட எரி,மணி மாளிகை
மூச முட்டி, முழுதும் முருக்கலால்
ஊசல் இடடென ஓடி உலைந்(து),உளைப்
பூசல் இட்ட இரியப் புரம் எலாம்.

563. பொடித்(து) எழுந்து பெரும்பொறி போவன
இடிக்கு லங்களின் வீழ்தலும், எங்கணும்
வெடித்த; வேலை வெதும்பிட, மீன்குலம்
துடித்து வெந்து புலர்ந்(து)உயிர் சோர்ந்தவால்.

**564.** இலங்கையில் பற்றிய தீ தணிதல்.

**(க - ரை):** உடனே அனுமான் அவ்விடத்தை விட்டுச் சென்றான். அப்பொழுது அக்கினி தேவன், 'இராவணனது ஆணையை மீறி இலங்கையைப் பற்றிய என்னை அரக்கர்கள் கண்டால் எளிதில் பற்றித் துன்புறுத்துவர்' என்றெண்ணித் தானும் தணிந்தான்.

**(அ-ரை):** மாருதி : அனுமான்; எள்ளுவர் : அலட்சியம் செய்பவராய்—முற்றெச்சம். ஒள் எரியோன் : ஒளிவிடுகின்ற அக்கினிதேவன்.

அனுமான் இலங்கையினின்று இராமபிரானிடம் வந்து திருவடிகளை வணங்கியதைப் பற்றிக் கூறுவது.

**565.** வானர வீரர்களிடம் வந்த அனுமான் செயல்.

**(க - ரை):** அனுமான் முதலில் அங்கதனை வணங்கி, சாம்பவானைக் காலில் விழுந்து வணங்கி, மற்றவர்களுக்கெல்லாம் அவரவர் தகுதிக்கேற்பச் செய்யத் தகுவன செய்து, "உங்கள் அனைவருக்கும் சீதாபிராட்டியார் வாழ்த்துரை கூறினார்" என்று சொன்னான்.

**(அ-ரை)** வாலி காதலன் அங்கதன, முந்தை : முதலில்; எண்கு கரடி, **ஆங்கண்** . அவ்விடம, இவண இங்கு; ஞாலநாயகன் திருமால, ஞாலம : பூமி.

**566.** இதுவும் அது.

**(க - ரை):** அனுமான் அவ்வானர வீரர்களிடம், இலங்கையில் சீதா பிராட்டியாரின் தவம் செய்வதைப் போன்ற உள்ளத்தின் நிலைமையையும், சீதாபிராட்டியாரைக் கண்டதற்கு அடையாளமாகச் சூளாமணி பெற்று வந்ததையும் கூறினான். அதைத் தவிர அரக்கரோடு போர்புரிந்து அவர்களைக் கொன்றமை, இலங்கையைத் தீவைத்து எரித்தமை முதலியவற்றைக் கூறவில்லை. ஏனென்றால் தான் செய்த வெற்றி முதலிய புகழ்ச்செயல்களைத் தானே கூறுவது முறைமையின்மையின் ஆகும்.

**(அ-ரை)** ஆண் தகை : ஆண்மைகுணமுடைய அனுமான, அன்மொழித் **தொகை.** அமைப : முழுவதும; புகன்று : சொல்லி; விளம்பான் : சொல்ல **மாட்டான்**; வென்றி : வெற்றி; வெள்கி : வெட்கமடைந்து.

**குறிப்பு:** கம்பன், தமிழ மாந்தரின் பண்பாடுகளைப் பற்றிக் கூறிய இடங்களில் இதுவுமொன்று.

**567.** வானர வீரர்கள் இராமனிடம் செல்லல்.

**(க - ரை):** 'இனிச் செய்யவேண்டிய குறை ஒரு சிறிதும் இல்லை; அடுத்தபடி நாம் செய்ய வேண்டியது, இராமபிரானிடம் விரைவிற் சென்று பிராட்டியாரின் நிலைமையைக் கூறி, அவர் மனத் துயரை ஆற்றுவதேயாம். உடனே செல்வது அறிவுடைமையாகும்' என்று விரைவிற் சென்றனர்.

**(அ-ரை):** இறை : சிறிதும், செப்பி : சொல்லி; புலமை : அறிவுடைமை; பொருக்கென : விரைவுப் பொருளைக் குறிப்பது; குறிப்பிடைச் சொல் என்பர்.

564. தெள்ளிய மாருதி சென்றான்;
'கள்ள அரக்கர்கள் கண்டால்
எள்ளுவர், பற்றுவர்' என்னா
ஒள்எரி யோனும் ஒளித்தான்

### திருவடி தொழுத படலம்

565. வாலிகா தலனை முந்தை
வணங்கினன்; எண்கின் வேந்தைக்
கால்உறப் பணிந்து, பின்னைக்
கடன்முறை கடவோர்க் கெல்லாம்
மேல்உற இயற்றி 'ஆங்கண்
இருந்(து)இவண் இருந்தோர்க்(கு) எல்லாம்
ஞாலநா யகன்தன் தேவி
சொல்லினள் நன்மை' என்றான்.

566. ஆண்தகை தேவி உள்ளத்(து)
அருந்தவம் அமையச் சொல்லிப்,
பூண்டபேர் அடையா ளம்கைக்
கொண்டதும் புகன்று, போரில
நீண்டவாள் அரக்க ரோடு
நிகழ்ந்ததும், நெருபபுச் சிந்தி
மீண்டதும் விளம்பான், தான்தன்
வென்றியை உரைப்ப வெள்கி.

567. 'யாவதும் இனிவே(று) எண்ணல்
வேண்டுவ(து) இறையும் இல்லை;
சேவகன் தேவி தன்னைக்
கண்டமை விரைவின் செப்பி
ஆவ(து)அவ் அண்ணல் உள்ளத்(து)
அருந்துயர் ஆற்ற லேயாம்;
போவது புலமை' என்னப்
பொருக்கென எழுந்து போனார்.

568. இராமனை யடைந்த அனுமான் செயல்.

(க - ரை): இராமபிரானை அணுகிய அனுமான் அவனை வணங்காமல் வடக்கே கால் நீட்டிச் சீதை இருக்கும் திசையாகிய தெற்குத் திசையில் தலையை வைத்துக் கையை நீட்டி, பூமியில் விழுந்து பலமுறை வணங்கி, "சானகியார் வாழ்க" என்று பல முறை வாழ்த்தி எழுந்தான்.

(அ-ரை): எய்தினன் : அடைந்தான்; ஏந்தல் : தலைவன், இராமபிரான், மொய்கழல் : நெருங்கிய வீரகண்டையை யணிந்த கால்கள்; முளரி : தாமரை, வையகம் தழீஇ: பூமியில் விழுந்து; இறைஞ்சி: வணங்கி; நெடிது என்ற அடைமொழியை வாழ்த்தினன் என்ற இடத்திலும் சேர்க்க.

569. அனுமன் செய்கையால் இராமன் சீதையின் நிலையை உணர்தல்.

(க - ரை): அனுமன் செயலை நன்கு நோக்கிய இராமன், 'சீதை நன்கு உள்ளாள்: இவன் அவளைக் கண்டதும் உண்மை, அவள் கற்பும் நன்று' என உணர்ந்தான்.

(அ-ரை) திண்திறல் மிகக வலிமையுடையவன்; இராமன்;—அன மொழித் தொகை. தெரிய : விளங்க; வண்டு அறல் ஓதி . வண்டுகள மொய்க்கின்ற கருமணல் போன்ற கூந்தலையுடையவள்; சீதை; அன்மொழித் தொகை.

570 அனுமான் சீதையைப் பற்றி இராமனிடம் கூறுவது.

(க - ரை): "கடலால் சூழப்பட்ட இலங்கையிலே, கற்பினுக்கு அணிகலனாகிய பிராட்டியாரை என் கண்களால் நேரே கண்டு வந்தேன்; தேவநாயகனே! இனிப்பிராட்டியாரைப் பற்றிய ஐயமும் துயரமும் நீங்குவீராக" என்று சொல்லுவானானான்.

(அ-ரை): தெண்திரை : தெளிவான நீர் அலைகள்; தொன்னகர் : பழமையான நகர்; அண்ட நாயக : தேவர்களுக்குத் தலைவனே; துறத்தி : நீங்குவாய பண்டு : முன்பு; பன்னுவான் : சொல்லுவானானான்.

குறிப்பு: இப்பாடலின் சொற்கள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிய பொருள நயத்தை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

571. இதுவும் அது.

(க - ரை): "ஐயனே! உனது சிறந்த தேவியென்பதற்கும், உன் தந்தையாகிய தசரதனது மருமகள் என்று கூறப்படுவதற்கும், சனகராசனது மகள் என்கின்ற தன்மைக்கும் முதன்மையான இடத்தில் இருக்கின்றாள்; அவள் என் குல தெய்வம்; இன்னும் கேட்பீராக" என்று மீட்டும் அனுமான் சொல்லத் தொடங்கினான்.

(அ-ரை). மன் : அரசன்; வாய்மை : உண்மையான வார்த்தை; தனயை : மகள்; தகைமை : பண்பு; தலைமை சான்றாள் : முதன்மையான இடத்தில் இருக்கின்றாள்.

568. எய்தினன் அனுமனும், எய்தி, ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன், முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்;
வையகம் தழீஇ நெடிது(து) இறைஞ்சி வாழ்த்தினன்.

569. திண்திறல் அவன்செயல் தெரிய நோக்கினன்,
'வண்(டு) அறல் ஓதியும் வலியள்; மற்(று)இவன்
கண்டதும உண்(டு); அவள் கற்பும் நன்(று)!' எனக்
கொண்டனன், குறிப்பினால் உணரும் கொள்கையான்.

570. 'கண்டனென் கற்பினுக்(கு) அணியைக் கண்களால்
தெண்திரை அலைகடல் இலங்கைத் தொன்னகர்;
அண்டநாயக! இனித் துறத்தி ஐயமும்,
பண்டுள துயரும்' என்று அனுமன் பன்னுவான்.

571. 'உன்பெரும் தேவி என்னும்
உரிமைக்கும், உன்னைப் பெற்ற
மன்பெரு மருகி என்னும்
வாய்மைக்கும், மிதிலை மன்னன்
தன்பெரும் தனயை என்னும்
தகைமைக்கும் தலைமை சான்றாள்;
என்பெரும் தெய்வம் ஐயா!
இன்னமும் கேட்டி' என்பான்.

**572.** இதுவும் அது.

**(க - ரை)**: "எமது அன்னை, உன் குலத்தின் பெருமை உனக்குரியதாகவும், தன் குலத்தின் பெருமை தனக்குரியதாகவும், தனக்கு இத்தகைய தீங்கை விளைவித்தவனாகிய இராவணனது குலத்திலுள்ளாரை யெல்லாம் எமனுக்குரியவராகவும் செய்து, தேவகூட்டத்தார்கள் வாழும்படி செய்து, என் குலத்தின் பெருமை எனக்குரியதாகும்படி தந்தனள். இனிச் செய்தற்குரிய கடமை யாதுளது?"

**(அ-ரை)**: கூற்று : எமன்; வானவர் : தேவர்; மோய் : தாய்.

**573.** இதுவும் அது.

**(க - ரை)**: "ஐயனே! கடலாற் சூழப்பட்ட இலங்கையிற் சென்று, தவவடிவிலிருந்த சீதையை நான் பார்க்கவில்லை, பின் எதைக் கண்டேனென்றால் உயர்குடிப் பிறப்பும், பெரிய பொறுமையும், கற்பும் ஆகிய மூன்றும் கலந்து களிப்பினால் நடம்புரிவதைப் பார்த்தேன்."

**(அ-ரை)**: வீங்குநீர் : மிக்கதண்ணீரையுடைய கடல்; வெற்பு : மலை, இற்பிறப்பு : உயர்குடிப் பிறப்பு; இரும்பொறை : பெரிய பொறுமை, களிநடம் களிப்பால் ஆடும் கூத்து.

**574.** இதுவும் அது.

**(க - ரை)**: "பிரமன் கொடுத்த சாபத்திற்கு அஞ்சிய இராவணன், பிராட்டியிருந்த இடத்தோடு மண்ணைத் தோண்டி, அந்த மண்ணோடு அவளை எடுத்துச் சென்றான்" என்று அனுமான் இராமனிடம் கூறினான்.

**(அ-ரை)**: வான்உயர் : மிகவுயர்ந்த, பூத்த : படைத்த, கண்ணகன் இடமகன்ற; கமலம் : தாமரை; அண்ணல் : தலைவன், பிரமன்; மாயத் இறப்பாய்.

**575.** இதுவும் அது.

**(க - ரை)**: "பிரம அண்டம் வெடிக்க வில்லை; ஆதிசேடன் உச்சி பிளக்கவில்லை; கடல்கள் உலகை அழிக்கவில்லை; வானிலுள்ள சூரியன் முதலிய ஒளியுடைப் பொருள்கள் எல்லாம் பூமியில் விழவில்லை; வேத முறைமை அழியவில்லை; ஆகவே இராவணன் சீதாபிராட்டியாரைத் தீண்டவில்லை யென்பதற்கு இந்தச் சான்றுகளே போதும்" என்று அனுமான் இராமனிடம் கூறினான்.

**(அ-ரை)**: வாய்மை: உண்மை; கீண்டிலது: வெடிக்கவில்லை; அநந்தன ஆதிசேடன்; கிழிந்திலது : பிளக்கவில்லை; வேலை : கடல்; மன், ஓ : இரண்டும் அசைச் சொற்கள்.

572. 'உன்குலம் உன்ன(து)ஆக்கி,
உயர்புகழ்க்(கு) ஒருத்தி ஆய
தன்குலம் தன்ன(து) ஆக்கித்,
தன்னை இத் தனிமை செய்தான்
வன்குலம் கூற்றுக்(கு) ஈந்து,
வானவர் குலத்தை வாழ்வித்(து)
என்குலம் எனக்குத் தந்தாள்;
என்இனிச் செய்வ(து) எம்மோய்!'

573. 'வில்பெருந் தடந்தோள் வீர!
வீங்குநீர் இலங்கை வெற்பில்
நற்பெரும் தவத்தள் ஆய
நங்கையைக் கண்டேன் அல்லேன்;
இற்பிறப்(பு) என்ப(து) ஒன்றும்,
இரும்பொறை என்ப(து) ஒன்றும்,
கற்(பு)எனும் பெயர(து) ஒன்றும்,
களிநடம் புரியக் கண்டேன்.'

574. "மண்ணொடும் கொண்டு போனான்;
வான்உயர் கற்பி னாள் தன்
புண்ணிய மேனி தீண்ட
அஞ்சுவான்; உலகம் பூத்த
கண்ணகன் கமலத்(து) அண்ணல்
'கருத்திலாள் தொடுதல் கண்ணின்
எண்ணரும் கூறாய் மாய்தி'
என்ப(து) ஓர் மொழிஉண்(டு)" என்பான்.

575. 'தீண்டிலன் என்னும் வாய்மை,
திசைமகன் செய்த முட்டை
கீண்டில(து); அநந்தன் உச்சி
கிழிந்திலது; எழுந்து வேலை
மீண்டில; சுடர்கள் யாவும்
விழுந்தில; வேதம் செய்கை
மாண்டில(து); என்னும் தன்மை
வாய்மையால் உணர்தி மன்னே!'

**576.** சூளாமணியைப் பெற்ற இராமன் நிலை.

**(க - ரை):** அனுமனிடம் சீதையைப் பற்றிக் கேட்ட இராமன் மனத்திலெழுந்த காதல் மிகுதி, அவள் அடையாளத்திற்குக் கொடுத்தனுப்பிய சூளாமணியைப் பெற்றதும் தணிந்தது. அந்தச் சூளாமணியைக் கையில் பற்றியது, திருமணத்தில் சீதையின் கையைப் பற்றியது போல் இராமனுக்கு இருந்தது.

**(அ-ரை):** பையப்பைய : மெல்ல மெல்ல; அங்கி : அக்கினி.

**577.** இதுவும் அது.

**(க - ரை):** அப்பொழுது இராமன் மேனியில் மயிர்க்கூச் செறிந்தது; கண்களில் ஆனந்தக் கண்ணீர் வந்தது; மார்பும் தோள்களும் துடித்தன; உடம்பில் வியர்வைத் துளிகள் வெளிப்பட்டன; அழகிய உதடுகள் மடிந்தன. இறுதியில் பெருமூச் செறிந்தான். இராமன் நிலையின் தன்மையை யாரால் அறிய முடியும்?

**(அ-ரை):** பொடித்தன தோன்றின, போந்து வழிந்து; துள்ளி துளி மணிவாய் : அழகிய வாய், ஆவி . உயிர்.

576. பைப்பையப் பயந்த காமம்
பரிணமித்(து) உயர்ந்து பொங்கி,
மெய்உற வெதும்பி, உள்ளம்
மெலி(வு)உறும் நிலையை விட்டான்;
அய்யனுக்(கு) அங்கி முன்னர்
அங்கையால் பற்றும் நங்கை
கைஎனல் ஆயிற்(று) அன்றே
கைபுக்க மணியின் காட்சி.

577. பொடித்தன உரோமம்; போந்து
பொழிந்தன கண்ணீர்;பொங்கித்
துடித்தன மார்பும் தோளும்;
தோன்றின வியர்வின் துள்ளி;
மடித்தது மணிவாய்; ஆவி
வருவது போவ(து) ஆகித்
தடித்தது மேனி; என்னோ
யார் உளர் தன்மை தேர்வார்?

இலங்கையில் நடந்த போரைக் குறிப்பது.

**578.** கடவுள் வாழ்த்து.

**(க - ரை):** இறைவன் ஒரே பொருள் என்று கூறுவார்க்கு அவ்வாறே தோற்றுவான்; பல வடிவில் இருப்பானென்று நினைப் பவர்க்குப் பல பொருளாகவே தோற்றுவான்; கண்ணிற் காணும் பொருள்கள் எல்லாம் அவன் அல்லன் என்பார்க்கு அவ் வாறே தோற்றுவான்; அவன் எங்கும் நிறைந்த பரம்பொருளா கையால் காணப்படும் பொருள்களெல்லாம் அவனே என்பார்க்கு அவ்வாறே தோற்றுவான்; கடவுள் ஒருவன் இல்லையென்பார்க்கு அவ்வாறு சாதிக்குமாறு நிற்பான்; கடவுள் என்றும் அழியாத உள்பொருள் என்பார்க்கு அவ்வாறே சாதிக்க நிற்பான்; அத்த கையனாகிய முழுமுதற் கடவுளே! உன்னை நம்பி நாங்கள் எவ் வாறு கடைத்தேறிப் பிழைப்போம்?

**(அ-ரை):** குடிவாழ்க்கை : இங்கு, தன்மையென்று பொருள்.
குறிப்பு: உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் அறியமுடியாதவன்.

**579.** இராவணன் தன் மந்திரிமார்களோடு ஆலோசித்தல்.

**(க - ரை):** இராவணன், பொன்னினாலும மணிகளாலும் இயற்றப்பட்டு நல்ல முறையில் அமைந்த தன் நகரை நோக்கித் தேவலோகத்தையும் நோக்கி, 'இது குரங்கினால் சுடப்படுவதற்கு முன்னிருந்த நகரைவிட அழகாயிருக்கிறது' என்று மகிழ்ந்து தன் கோபம் ஆறினன்.

**(அ-ரை).** முனிவு · கோபம்; மொய்கழல் . நெருங்கிய வீரகழலை, பொற்பு : அழகு; நாகம : தேவலோகம்.

**580.** இராவணன் மந்திரிகளுடன் வீற்றிருத்தல்.

**(க - ரை):** இரு பக்கமும் அரம்பையர் கவரி வீச, அரையும மாலையணிந்தவனாகிய இராவணன், தன் சுற்றத்தார்களும், மந்திர ஆலோசனையில் மிகுந்தவர்களாகிய மந்திரிமார்களும், சேனைத் தலைவரும் தன்னைச் சுற்றியிருக்கும்படியாகச் சிங்காதனத்தில் வீற்றிருந்தான்.

**(அ-ரை):** தரம்பெறும் : தகுதிபெற்ற; தாரினன் : மாலையணிந்தவன்; சேனைநீள்கடல் : சேனையாகிய கடல்—உருவகம்.

**581.** இராவணன் மந்திரிமார்களிடம் கூறுதல்.

**(க - ரை):** "ஒரு சிறிய குரங்குவந்து நமது பெரிய நகரத் தைச் சுட்டு எரித்தது. அக்கினி சூறையாட நமது நகரம் அழிந்து விட்டது. அதுமவுன்றி என் உறவினர்களும் நண்பர்களும் இறந்தார்கள். இந்த அவமானம் உலகமெங்கும் பரவிற்று. இந்தச் சிம்மாசனத்தில் இராவணனா இருக்கிறேன்? என்வெற் றுடலன்றோ இருக்கின்றது!"

**(அ-ரை):** கிளை : சுற்றம்—உவமையாகு பெயர்; பரிபவம் : அவமானம, அரியணை : சிம்மாசனம்.

# யுத்த காண்டம்

578. ஒன்றே என்னின் ஒன்றேயாம்;
பலவென்(று) உரைக்கின் பலவேயாம்;
அன்றே என்னின் அன்றேயாம்;
ஆமே என்னின் ஆமேயாம்;
இன்றே என்னின் இன்றேயாம்;
உள(து)என்(று) உரைக்கின் உளதேயாம்
நன்றே நம்பிக குடிவாழ்க்கை;
நமக்(கு)இங்(கு) என்னே பிழைப்(பு)அம்மா!

## இராவணன் மந்திரப் படலம்

579. பொன்னினும் மணியினும் அமைந்த பொற்புடை
நன்னகர் நோக்கினன்; நாகம் நோக்கினன்;
'முன்னையின் அழகுடைத்து' என்று மொய்கழல்
மன்னனும் உவந்து,தன் முனிவும் ஆறினன்.

580 வரம்பெறு சுற்றமும், மந்திரத்தொழில்
நிரம்பிய முதியரும், சேனை நீள்கடல்
தரம்பெறு தலைவரும் தழுவத் தோன்றினன்
அரம்பையர் கவரியோ(டு) ஆடும் தாரினன்.

581. 'சுட்டது குரங்(கு),எரி சூறை ஆடிடக்,
கெட்டது கொடிநகர்; கிளையும் நண்பரும்
பட்டனர்; பரிபவம் பரந்த(து) எங்கணும்;
இட்டஇவ் அரியணை இருந்த(து) என்உடல்.'

**582.** "ஒரு சேனைத் தலைவன் இராவணனிடம் தன் கருத்தைத் தெரிவித்தல்.

**(க - ரை)** : "அறிவுடையவனாகிய தலைவனே! சாதாரணமான இரு மனிதர்களுக்கு வஞ்சனை செய்து, அவர்களுக்குரிய ஒரு பெண்பிள்ளையைக் கவர்ந்து வருதல், பயந்தவர் செய்யும் தொழிலென்று அன்றே கூறினேன். என் சொல் உறுதியுடையதென்று நீ உணர்ந்தாயில்லை."

**(அ-ரை)**: வாள் நுதல் : ஒளிபொருந்திய நெற்றி; பயில் : உவமையாகு பெயர்; தஞ்சு : தஞ்சம்—பற்றுக்கோடு. உணரும் தன்மையோய் என விளித்துக் கூறியது கருத்துடையணி ஆகும்.

**583.** இதுவும் அது.

**(க - ரை)** : "இங்குத் தீங்கு செய்துபோன குரங்கினைப் பின் பற்றிச் சென்று, அதை அனுப்பியவர்களின் உயிரை நமது தாகம் தீரக் குடித்து நமக்கு வந்த பழியை நீக்காமல் இருக்கின்றோம்: வெறும் வாய்ப்பேச்சாலும், வெறும் நினைப்பாலும் நமது பகைவரை வெறுத்துச் செய்கையால் ஒன்றும் காட்டாமல் நாம் வாழ்ந்திருப்போமானால் நமது வலிமை தேய்ந்ததே ஆகும்" என இராவணனிடம் எடுத்துக் கூறினான்.

**(அ-ரை)**: இவண : இங்கே; ஏயினர் : அனுப்பியோர்; எவ்வம் : பழி. தீர்கலம் : நீங்கினோமில்லை, ஓயும் நம்வலியென்பது : வலியற்றவராகையால் எதிரிகளை ஒன்றும் செய்யாமல் இருக்கின்றனர் என்னும் கருத்து.

**584.** அப்பொழுது கும்பகர்ணன் கூறுதல்.

**(க - ரை)**: அப்பொழுது ஒருவரோடொருவர் வீரவுரை பேச வந்த அரக்கர்களையெல்லாம் விலக்கிவிட்டுக் கும்பகர்ணன், இராவணன் முன்னால் நின்று "அண்ணா! என்னை இப்பொழுது ஒரு தம்பியாகவே பாவிப்பீரென்றால் நன்மை பயக்கும் சில உரைகளைச் சொல்லுகிறேன்" என்றான்.

**(அ-ரை)**: வெம்பு : கோபிக்கின்ற; இகல் : மாறுபட்ட; இதம் : நன்மை; உரை செய்வல் : சொல்வேன்.

**585.** இதுவும் அது.

**(க - ரை)** : "அண்ணா! பிரமதேவனுடைய வம்ச பரம்பரையில் முதல்வனாக நிற்கின்றாய்; ஆயிரமாயிரமாக விரிந்த வேதங்களை, அவற்றின் பொருளோடும் உணர்ந்து நல்லறிவு படைத்திருக்கின்றாய்; அத்தகைய உயரிய நிலையில் இருக்கின்ற நீ செய்யத் தகுங்காரியங்களில் நெருப்பை விரும்புதலும் ஆகுமென்று விரும்பினாய். இப்பொழுது நமக்கு நேர்ந்த அவமானங்களும் கெடுதிகளும் இவ்வளவோடு நிற்குமா? இன்னும் எத்தனை ஆபத்துகளுக்கு நாம் உள்ளாக வேண்டியிருக்குமோ?"

**(அ-ரை)**: அயன் : பிரமன்; நயப்பு : விருப்பம்; தீயினை நயப்புறுதல் என்றது சீதையை விரும்பினது ஆகும். தீ, 'சேர்ந்தாரைக்கொல்லி' யாகையால் விரும்பத்தகாத பொருள்.

582. 'வஞ்சனை மனிதரை இயற்றி, வாள் நுதல்
பஞ்(சு)அன மெல்அடி மயிலைப் பற்றுதல்,
அஞ்சினர் தொழில்என அறிவித் தேன்; அது
தஞ்சென உணர்ந்திலை உணரும் தன்மையோய்!'

583. 'போயின குரங்கினைத் தொடர்ந்து போய், இவண்
ஏயினர் உயிர்குடித்(து), எவ்வம் தீர்கலெம்;
வாயினும், மனத்தினும், வெறுத்து வாழ்துமேல்
ஓயும்நம் வலி' என உணரக் கூறினான்

584. வெம்(பு)இகல் அரக்கரை விலக்கி, 'வினை நேரா
நம்பியர் இருக்க,' என நாயகனை முன்னா,
'எம்பிஎன கிற்கில் உரை செய்வல்: இதம்' என்னா
கும்பகரு ணப்பெயரி னான் இவை குறித்தான்.

585. 'நீஅயன் முதற்குலம் இதற்(கு) ஒருவன் நின்றாய்!
ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்(து) அறிவுஅமைந்தாய்!
தீயினை நயப்புறுதல் செய்வினை தெரிந்தாய்!
ஏயின உறத்தகைய இத்துணைய வேயோ?'

586. இதுவும் அது.

(க - ரை): "புகழுடைய வேண்டுமென்று விரும்புவோம்; குற்றமற்ற பிறன் மனைவியைச் சிறையில் வைப்போம். அடுத்துப் பேசுவது நமது மானமுடைமையை; இடையிலே மனமார விரும்புவது காம இச்சையை; இப்பொழுது நாம் கூசிநிற்பது இரண்டு மனிதர்களை;. இவற்றை நினைத்துப் பார்த்தால் நமது வெற்றியின் பெருமை நன்றாக இருக்கிறது!"

(அ-ரை): ஆசு : குற்றம்; பரதாரம் : பிறன்மனைவி; மாசு : களங்கம்; காதல் உறுவோம் : விரும்புவோம்; கொற்றம் . வெற்றி. இப்பாடல் ஒன்றற் கொன்று எதிர்மறையான பொருள் தருவதையறிக. நன்று : இகழ்ச்சிக்குறிப்பு.

587. இதுவும் அது.

(க - ரை): "எதிரிகளுடைய சேனை பெருகுவற்கு முன்பேயே, ஒரே நாளில் கடலைக் கடந்து சென்று. மனிதர் வானரர்கள் இவர்கள் எல்லாரையும் அப்புறம் இப்புறம் அசையாதபடி முற்றுகையிட்டு, அடியோடு அவர்களை அழித்து ஒழிப்பதே நமது கடமை" என்று கும்பகர்ணன் இராவணனிடம் இறுதியாகக் கூறினன்.

(அ-ரை): ஊறுபடை . பெருகும் சேனை, நரகர் · மனிதர்; நூறுவது · அழிப்பது; நுவன்றனை : சொன்னன்.

குறிப்பு: ஊறுபடை ஊறுவதன் முன்னம் என்பது "இளைதாக முள்மரங் கொல்க களையுநர் — கைகொல்லுங் காழ்த்த இடத்து" என்னும் குறட் கருத்தமைந்தது.

588. இந்திரசித்து இராவணனிடம் வீரவுரை பகர்தல்.

(க - ரை): "தந்தையே! மூன்றுலகங்களும் நம் எதிரிகளோடு சேர்ந்து நம்முடன் போர்புரிய வரினும், நான் போரிற் சென்று அவர்களையெல்லாம் ஒழித்து, அவர்களை வென்ற சிறப்பையும் வெற்றியையும் உனக்குத் தருவேன்; அப்படிச் செய்யாவிடில் நீ என்னைப் பெற்ற தந்தையாகாய்; நான் உனக்குப் பிறந்த மகனும் ஆகேன்" எனச் சூளுரை பகன்றான்.

(அ-ரை)· செற்றம் : கோபம்; செறுத்தது . அழித்தது; நெறி : முறைமை.

589. இதுவும் அது.

(க - ரை): "நமது பகைவர் நம்மைப்போல் யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை இவற்றில் ஒன்றும் இல்லாதவர்; நம்மைப்போல் தவஞ்செய்து வரம் பெற்றவரு மல்லர்; கூன் முதுகினையுடைய சிறு குரங்குப் படையைக் கொண்டு நம்மோடு போர்செய்து நம்மை வெல்லப் போகிறவர் கள் இரண்டு மானிடர்கள் என்றால் நம் ஆண் தன்மை அழகியது" என்று இந்திரசித்து வீரவுரை பகர்ந்தான்.

(அ-ரை): புரவி : குதிரை; தானை:சேனை—இங்கே காலாட்படை. 'அழகு அன்றோ?' என்பது இகழ்ச்சிக் குறிப்பு.

586. 'ஆசில்,பர தாரம்அவை அம்சிறை அடைப்பேம்!
மாசில்புகழ் காதல்உறு வேம்!வளமை கூரப்
பேசுவது மானம்!இடை பேணுவது காமம்;
கூசுவது மானுடரை! நன்றுநம கொற்றம்!'

587. 'ஊறுபடை ஊறுவதன் முன்னம, ஒரு நாளே
ஏறுகடல் ஏறி,நரர் வானரரை எல்லாம
வேறுபெய ராதவகை, வேரொடும் அடங்க
நூறுவது வேகருமம்' என்பது நுவன்றான்.

588. 'முற்றும்உள தாம்உலகம் மூன்றுமஎதிர் தோன்றிச்
செற்றமுத லாரொடு செறுத்த(து)ஓர் திறத்தும்,
வெற்றிஉன தாகவினை யா(து)ஒழியின், என்னைப்
பெற்றும்இலை; யான்நெறி பிறந்தும்இலன்' என்றான்.

589. 'யானையிலர்; தேர்,புரவி யாதும்இலர்; ஏதும்
தானைஇலர்; நின்றதவம் ஒன்றும்இலர்; தாமோ
கூனல்முது கின்சிறு குரங்குகொடு வெல்வார்
ஆனவரும் மானுடர்!நம் ஆண்மைஅழ(கு) அன்றோ?'

**590.** விபீடணன் இராவணனுக்கு அறவுரை கூறத் தொடங்குதல்.

(க - ரை): "அறியாதவனாகி உன்னுடைய இளமைத் தன்மையினால் இவ்வாறு கூறினாய்" என்று இந்திரசித்தை அடக்கி விபீடணன் இராவணனை நோக்கி, "அண்ணா! என் வார்த்தையை அலட்சியம் செய்யாமல் கேட்பாயேயானால் சில சிறந்த கருத்துக்களைக் கூறுவேன்" என்று கூறத்தொடங்கினான்.

(அ-ரை): ஒள்ளிய : சிறந்த; உரப்பி : கடுஞ்சொல்லால் அதட்டி; தெள்ளிய பொருள் : மேலான கருத்துக்கள்.

**591.** இதுவும் அது.

(க - ரை): "எனக்குத் தந்தையும், தாயும், அண்ணனும், தவத்தோடு நாள்தோறும் நான் வழிபட்டுவரும் தெய்வமும், மற்றுள்ள நான் பேணுகின்ற எல்லாப் பொருளும் நீயே. இப பொழுது நிகழ்ந்தவற்றை நோக்கினால், 'இந்திரனது செல்வம் போன்ற இத்தனை செல்வங்களையும் நீ இழப்பாய்' என நான் வருந்தியதால் சொல்லத் தொடங்கினேன்."

(அ-ரை). யாய : தாய்; எம்முன் : என் அண்ணன்; நுவல்வது : சொல்லுவது.

குறிப்பு: தந்தை, தாய், அண்ணன் இவர்களுக்கு யாராவது துரோகம் நினைப் பார்களா? அவையெல்லாம் ஆகிய உனக்கு நான் தீமை விளைவிப் பன கூறுவேனா? என்ற கருததுத தருவதால் 'கருத்துடை அடை கொளியணி' ஆகும.

**592.** இதுவும் அது.

(க - ரை) "இந்த இலங்கை நகரம் முழுவதும், உனது வெற்றியும் ஒரு குரங்கினால் சுடப்பட்டு அழிக்கப்பட்டன. இவ்வாறு அழிந்தது குரங்கினாலென்று நினைக்கின்றாய்? உலக மாதா வாகிய சானகியின் கற்பினால் அழிந்ததென்று நினைக்க வேண்டும்."

(அ-ரை): கோநகர் : சிறந்த நகரம்; கொற்றம் : வெற்றி; தம்மனை : தாய்; மாட்சி : பெருமை.

**593.** இதுவும் அது.

(க - ரை): "அண்ணா! நமது வலிமையோடு எதிரிகளின் வலிமையையும் ஒத்துணர வேண்டுமல்லவா! ஒரு காலத்தில், கோசிகன் என்னும் பெயருடைய சிறந்த முனிவன், பிரமனோடு மாறுபட்டு உன்னைப்போல நான் ஒரு வேறு உலகம் படைக்கின் றேன் என எழுந்த தவ வலிமையுடையவன்; அத்தகையவனால் உருத்திர பகவானைப்போல மூன்றுலகங்களையும் ஒரு நொடியில் அழிப்பனவாகிய பெரிய படைக்கலங்கள் கொடுக்கப்பெறறு, அவைகளைத் தம்மிடத்தில் உடையோர்கள் நமது எதிரிகளாகிய இராம இலக்குவர்கள்."

(அ-ரை): நம்ப : விரும்பத்தகுந்தவனே.

குறிப்பு: 'வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்-துணைவலியும் தூக்கிச் செயல்' என்ற முறையின், மாற்றான்வலியும் அறியவேண்டுமென்றான்.

590. 'பிள்ளைமை விளம்பினை பேதை நீ'என
ஒள்ளிய புதல்வனை உரப்பி 'என்உரை
எள்ளலை யாம்எனின், இயம்பல் ஆற்றுவென்,
தெள்ளிய பொருள்'என அரசற் செப்பினான்.

591 'எந்தைநீ! யாயும்நீ! எம்முன் நீ!தவ
வந்தனைத் தெய்வமநீ! மற்றும் முற்றும்நீ!
இந்திரப் பெரும்பதம் இழக்கின் றாய், என
நொந்தனென் ஆதலின், நுவல்வ(து) ஆயினேன்.'

592. 'கோநகர் முழுவதும், நினது கொற்றமும்,
சானகி எனும்பெயர், உலகின் தம்மனை
ஆனவள் கற்பினால் வெந்த(து) அல்ல(து),ஓர்
வானரம் சுட்ட(து),என்று உணர்தல் மாட்சியோ?'

593. 'கோசிகப் பெயர்உடைக் குலமுனித்
தலைவன்,அக் குளிர்மலர்ப்பேர்
ஆசனத் தவனொ(டு), எவ் வுலகமும்,
தருவன் என்(று) அமையல் உற்றான்;
ஈசனின் பெறும்படைக் கலம், இமைப்
பளவில்எவ் வுலகம் யாவும்
நாசம்உற் றிட நடப் பனகொடுத்(து,)
அவை பிடித்(து) உடையர் நம்ப!'

594. இதுவும் அது.

(க - ரை): "அண்ணா! இப்பொழுது நமக்கு நேர்ந்த நிலை புகழும், பெருஞ்செல்வமும், உயர்குடிப்பிறப்பும் ஆகிய இவை நீங்க, அவற்றிற்கு மாறாகப் பழியும் பாவமும் மேற்பட்டு அடைய நிற்கின்றது. ஆகையினால் நாமும் நமது சுற்றத்தவரும் அநியாயமாக இறக்காத வண்ணம் அந்த அழிக்க முடியாத கற்பையுடைய சானகியை உரியவரிடம் விட்டருள்வாயாக! அப்படிச் செய்வாயானால் அதுவே பெரிய வெற்றியாகும்" என்றான்.

குறிப்பு: எளிதில் வெற்றியடையும் வழியைவிட்டு இத்தனை பேரையும் கொன்று தோல்வியுற்று நீயும் அழிவை என்பது ஆகும் 'அதன் மேல் விசையம் இல்' என்பதன் குறிப்பு.

(அ-ரை): இசை : புகழ்; எஞ்ச : அழிய, வசை : பழி; மீக்கொள : மேற்பட.

595. அதற்கு இராவணன் மறுப்புரை

(க - ரை): இராவணன் வீபீடணனைப்பார்த்து, "ஐயனே! நீ விரும்பிய நல்ல பொருள்களை எனக்கு உறுதி தருவன என்று எண்ணிச் செல்லுவேனென்று முன் வந்தாய். அந்தச் சொல் பைத்தியம் பிடித்தவர்கள் பேசுவதுபோல் இருந்தது; அறிஞர் சொல்லாக இல்லை. எனது பெரிய வெற்றியை, இகழத்தக்க மனிதர்கள் வென்று விடுவார் என்று சொன்னாய்! நீ இவ்வாறு சொல்லத் துணிந்தது, அவர்களால் இறந்துவிடுவோமென்ற அச்சமா? அல்லது அவர்கள்பால் வைத்த அன்பின் மிகுதியா? மற்று யாதோ?" என்று வினவினான்.

(அ-ரை): இசை : விருப்பம். இசைக்குவன : சொல்லுவேன், பிச்சர் : பித்தர்—போலி, விறல் : வெற்றி; கொச்சை : இகழத்தக்க.

596. இதுவும் அது.

(க - ரை): "ஒரு சொற்றைவில்லை ஒடிந்து, ஓட்டை மரா மரத்தில் அம்பு செலுத்தி, ஒரு கூனியினுடைய உபாயத்தால் அரசிழந்து, வெப்ப மிகுந்த காட்டையடைந்து, நான் ஒரு சிறு சூழ்ச்சியைச் செய்ய மனைவியையும் இழந்துவிட்டு, மானங்கெட்டு உயிரைச் சுமந்து திரிகின்ற அந்த மானிடனுடைய வலிமையைப் பேரறிஞனாகிய நீதான் அறிவாய்! வேறு யார்தான் அறிவார்?"

(அ-ரை): இறுத்து : ஒடித்து; இல் : மனைவி.

597. வீபீடணன் இராவணனிடத்தில் இராமன் வரலாறு கூறத் தொடங்குதல்.

(க - ரை): "ஐயனே! இன்னும் ஒன்று நான் சொல்ல உள்ளது; கேட்பாயாக. முற்காலத்தில் உன் தகுதியினும் மேற்பட்ட வலிமையுடையவராகிய பலர், இவ்விராமன் வடிவில் வந்த திருமால் கோபிக்கக் கிளையோடும் பட்டொழிந்தனர். அதற்குச் சான்றாக இரணியன் என்பவனது வரலாறு ஒன்று உள்ளது. அதனைச் சொல்கிறேன். கேட்பாயாக" என்று கூறத் தொடங்கினான்.

(அ-ரை): நின்தரம் : உன் தகுதி; முனிந்திட : கோபிக்க; கிளையொடும் : சுற்றத்தோடும்; சமைந்தான் : இயைந்தான்.

594. 'இசையும் செல்வமும் உயர்குலத்(து)
இயற்கையும் எஞ்ச,
வசையும் கீழ்மையும் மீக்கொளக்,
கிளையொடும் மடியா(து),
அசைவில் கற்பின்அவ் அணங்கைவிட்(டு)
அருளுதி! அதன்மேல்
விசையம் இல்'எனச் சொல்லினன்
அறிஞரின் மிக்கான்.

595. 'இச்சை நல்லன உறுதிகள் இசைக்குவென் என்றாய்!
பிச்சர் சொல்லுவ சொல்லினை! என்பெரு விறலைக்
கொச்சை மானுடர் வெல்குவர் என்றனை; குறித்த(து)
அச்சமோ! அவர்க்(கு) அன்பினோ! யாவதோ! ஐயா?'

596. 'ஊன வில் இறுத்(து) ஓட்டைமா மரத்துள் அம்(பு)ஓட்டிக்
கூனி சூழ்ச்சியால் அரசிழந்(து), உயர்வனம் குறுகி,
யான்இழைத்திட இல்இழந்(து), இன்உயிர் சுமக்கும்
மானிடன்வலி நீஅலா(து) ஆர்உளர் மதிப்பார்?'

597. பின்னும் வீடணன் 'ஐயநின்
தரம்அலாப் பெரியோர்
முன்னை நாள்இவன் முனிந்திடக்
கிளையொடும் முடிந்தார்
இன்னம் உண்டு;யான் இயம்புவ(து)
இரணியன் என்பான்
தன்னை உள்ளவா கேட்டி'என்(று)
உரைசெயச் சமைந்தான்.

598. இரணியன் சிறப்பு.

(க - ரை): இரணியன் என்னும் அசுரன், பிரமன் திருமால் உருத்திர பகவான் என்ற மும்மூர்த்திகளாலேயும் முறையே படைத்து, காத்து, அழிக்கப்படும் இந்த அண்டத்திலுள்ளவர்களும், அதற்கப்பாற்பட்ட அண்டத்திலுள்ளவர்களும், கடவுளை வணங்கும்போதும், வேதம் முதலியன ஓதும்போதும் முதலில் 'இரணியாய நம:' என்று தன் பெயரையே சொல்லிப் பிறகு ஏனைய மந்திரங்களைச்சொல்லி வணங்குமாறு ஆணைபுரிந்து ஆட்சி செய்து வந்தான்.

(அ-ரை): எறறை : என்றை; வலித்தல் விகாரம்; அண்டம் . உலகம.

599. இரணியனது புதல்வன் சிறப்பு.

(க - ரை): அவனுக்கு ஒரு அருமையான புதல்வன் தோன்றினான். அவன் எத்தகையனென்றால், அறிவுடையவர்க்கும் சிறந்த அறிவுடையவன்; தூய்மையான உள்ளமுடையவர்கள் அனைவரினும் தூய்மையான உள்ளமுடையவன்; வேதங்களிலும் தூயவன், அனைவருக்கும் தலைவனாகத் தக்கவன்; ஒப்பற்ற ஞானவான், தருமத்திற்குத் தலைவன்; உயிர்களிடத்தில் தாயைப் போன்று அன்பு செலுத்துபவன்; ஒப்பற்ற சான்றோன் அவன்.

(அ-ரை): ஆயவன . அவன; நாயகன், நாதன் : தலைவன்; மன் நிலை பெற்ற.

600. பிரகலாதன் செயலைக் கண்டு குரு அஞ்சுதல்.

(க - ரை): பிரகலாதன் தனக்குக் கற்பிக்க வந்த ஆசிரியன் சொல்லிய 'ஓம் இரணியாய நம:' என்ற மந்திரத்தைக் கூறாமல், 'ஓம் நமோ நாராயணய' என்ற மந்திரத்தைச் சொல்லி மனம உருகி, இரு கைகளையும் தலைமேற் குவித்துக் கண்ணீர் வார, உடம்பில் மயிர்க்கூச்செறியக் கடவுளைத் தியானித்துத் நன ஆசிரியன் நடுங்கும்படியாக இருந்தான்.

(அ-ரை): நாராயணய என்பதை நாராயணாய என்றார் செய்யுளோசைக்காக. தடக்கை : விசாலமான கை; புனல் : நீர், பொடிப்ப : தோன்ற, அந்தணன் : ஆசிரியன்.

601. பிரகலாதனைப் பார்த்து ஆசிரியன் கூறுதல்.

(க - ரை): "அட பாவியே! என்னையுங் கெடுத்து உன்னையுங் கெடுத்துக்கொண்டாயே! நாசமாகும் வழியில் உன்னைச்செலுத்தி ஒழிந்தாய்; தேவர்களும் சொல்லுவதற்கு அஞ்சுவரே; அந்தச் சொல்லத்தகாததாகிய தொடரைச் சொல்ல, உன் அறிவிற் நந்த தோன்றியது என்ன? என்ன செய்ய நினைத்தாய்?" என்று ஆசிரியன் கேட்டான்.

(அ-ரை): பகர்தற்கு அடுத்தது அன்றி : சொல்லத் தகாதது; அயல் ஒன்று : மற்றொரு (மந்திரம்), பகர : சொல்ல.

## இரணியன் வதைப் படலம்

598. ‘எற்றை நாளினும் உளன்எனும்
இறைவனும், அயனும்,
கற்றை அம்சடைக் கடவுளும்
காத்(து), அளித்(து), அழிக்கும்
ஒற்றை அண்டத்தின் அளவினோ!
அதன்புறத்(து) உலவா
மற்றை அண்டமும் தன்பெய
ரேசொல வாழ்ந்தான்.

599. ‘ஆய வன்தனக்(கு) அருமகன்; அறிஞரின் அறிஞன்;
தூயர் என்பவர் யாரினும், மறையினும் தூயன்;
நாய கன்;தனி ஞானி;நல் அறத்துக்கு நாதன்;
தாயின் மன உயிாக்(கு) அன்பினன், உளன் ஒரு தக்கோன்.

600. ‘ஓம்நமோநரா யணய’என்(று)
உரைத்(து), உளம் உருகித்,
தான்அமைந்(து)இரு தடக்கையும்
தலைமிசைத் தாங்கிப்,
பூநிறக்கண்கள் புனல்உக,
மயிர்ப்புறம் பொடிப்ப,
ஞான நாயகன் இருந்தனன்;
அந்தணன் நடுங்க.

601. ‘கெடுத்(து) ஒழிந்தனை என்னையும், உன்னையும்; கெடுவாய்
படுத்(து) ஒழிந்தனை பாவி;எத் தேவரும் பகர்தற்(கு)
அடுத்த(து) அன்றியே, அயல்ஒன்று பகர,நின் அறிவில்
எடுத்த(து)என் அது? என்செய எண்ணினை?’ என்றான்.

602. பிரகலாதன் ஆசிரியனுக்கு எட்டெழுத்தின் மகிமையைக் கூறுதல்.

(க - ரை): "என்னையும் ஈடேறச் செய்துகொண்டேன்; என் தந்தையையும் ஈடேறச் செய்தேன்; இத்தகைய உன்னையும், இந்த உலகத்தையும் ஈடேற்ற அமைந்து பழமையான வேதங்களில் முதற்கண் எடுத்துக்கூறும் மந்திரம் எதுவோ அதைச் சொன்னேன்; இதில் நான் செய்த குற்றம் என்ன? சொல்வாய்" என்றான்.

(அ-ரை): உய்வித்தேன் : ஈடேறச்செய்தேன்; இயம்பியது : சொன்னது; எந்தை : எனதந்தை.

603. இரணியன் பிரகலாதனை வினவுதல்.

(க - ரை): "பிரகலாதனே! நீ சொன்னபடி இந்த உலகத்தைப் படைத்தவன் யார்? என் பெயராகிய மந்திரத்தைச் சொல்லி வாழும் திரிமூர்த்திகளா? அல்லது முனிவர்களா? எனக்குத் தோற்றோடிப்போன தேவர்களா? இவரின் வேறானவர்களா? எனக்கு விளங்கும்படி அவனைச் சொல்வாயாக" என்று அவனைக் கொல்ல எழுந்த கோபத்தை அடக்கிக்கொண்டு, அவனால் காட்டப்படுபவனைக் காணலாமென்ற எண்ணத்தோடு அவனைக் கொல்லாமல் இரணியன் வாளா இருந்தான்.

(அ-ரை): ஏவரே : யார், தந்தார் : படைத்தவர், செப்புதி : சொல்வாயாக. ஏகாரங்கள் வினாப்பொருளில் வந்தன.

604. இரணியனுக்குப் பிரகலாதன் பதில்.

(க - ரை): "அப்பா! உலகத்தைப் படைத்தவனும், அவ்வுலகில் பல உயிர்களைப் படைத்தவனும், உலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் தானோர் உயிராய் அங்கங்கே இருக்கின்றவனும், மலரில் மணமும் எள்ளில் எண்ணெயும்போல எல்லாவிடத்திலும் உள்ள அளவற்ற பொருள்களிலெல்லாம் முழுதும் பரவி இருக்கின்றவனும் ஆகிய அந்தத் திருமால்தான்."

(அ-ரை): அலகிலா : அளவற்ற, அத்தா : தந்தையே.

605. இதுவும் அது.

(க - ரை): "அவன் குணங்கள் மூன்று; தொழில்கள் மூன்று; வடிவம் மூன்று; உலகத்திற்கு ஒளி வழங்கும் மூன்று சுடர்களும் அவன் கண்கள்; அவனுடைய உலகங்கள் மூன்று, எல்லாப் பொருள்களுக்கும் முதல், நடு, கடை என்ற மூன்று நிலைகளும் அவனே; வேதத்தின் முடிந்த பொருளாகக் கூறுவது இதுவே. இது சத்தியம்" என்று பிரகலாதன் பதிலுரைத்தான்.

குறிப்பு: மூன்று குணங்கள் : சாத்துவிகம், ராஜஸம், தாமஸம். முத்தொழில் : படைத்தல், காத்தல், அழித்தல். மூன்று வடிவம் : அயன், அரி, அரன். முச்சுடர் : சூரியன், சந்திரன், அக்கினி. மூன்று உலகம் : சுவர்க்கம், மத்தியம், பாதாளம்.

(அ-ரை): சரதம் : சத்தியம்; செய்கை : தொழில்.

602. 'என்னை உய்வித்தேன்; எந்தையை
உய்வித்தேன்; இனைய
உன்னை உய்வித்(து),இவ் உலகையும்
உய்விப்பான் அமைந்து
முன்னை வேதத்தின் முதற்பெயர்
மொழிவது மொழிந்தேன்;
என்னை குற்றம்நான் இயம்பிய(து),
இயம்புதி?' என்றான்.

603. 'ஏவரே உலகம் தந்தார்?
என்பெயர் ஏத்தி வாழும்
மூவரே? அல்லர் ஆகில்
முனிவரே? முழுதும் தோற்ற
தேவரே? பிறரே? யாரே?
செப்புதி! தெரிய' என்றான்
கோவம் மூண்(டு) எழுந்தும் கொல்லான்,
காட்டுமேல் காட்சி கொள்வான்.

604. 'உலகுதந் தானும், பல்வே(று)
உயிர்கள்தந் தானும், உள்உற்(று)
அலகிலா உயிர்கள் தோறும்
அங்கங்கே உறைகின் றானும்,
மலரினில் மணமும், எள்ளில்
எண்ணெயும், போல எங்கும்
அலகில்பல் பொருளும் பற்றி,
முற்றிய அரிகாண்! அத்தா.'

605. 'மூன்(று)அவன் குணங்கள்; செய்கை
மூன்(று);அவன் உருவம் மூன்று
மூன்றுகண் சுடர்கள் சோதி
மூன்று;தன் உலகம் மூன்று
தோன்றலும், இடையும், ஈறும்,
தொடங்கிய பொருள்கட் கெல்லாம்
சான்(று)அவன்; இதுவே வேத
முடி(வு) இது சரதம்' என்றான்.

606. தூணிற் காட்டென்ற இரணியனுக்குப் பிரகலாதன் பதில்.

(க - ரை): "ஒருசாண் அளவான இடத்திலும் இருக்கின்றான்; ஒரு அணுவை நூறு கூறிட்ட அந்தச் சிறு அணுவிலும் இருக்கின்றான்; பெரிய மகாமேரு மலையிலும் இருக்கின்றான்; இங்கே உள்ள இந்தத் தூணிலும் இருக்கின்றான்; நீ சொன்ன சொல்லிலும இருக்கின்றான்; இந்தத் தன்மையை நீ விரைவில் பரிட்சித்துப் பார்க்கலாம்" என்று கூறியதைக் கேட்ட இரணியன், "நீ கூறுவது நன்றாயிருக்கிறது" என்று சிரித்தான்.

(அ-ரை) சதம : நூறு, கோண குறுகிய பொருள்; நககான் . சிரித்தான் கனகன : இரணியன்; கனகம்: இரணியம . பொன.

607. இரணியன் கூற்று.

(க - ரை): "தேவர்க்கும் உனக்கும் ஏற்றுக்கொள்ளத் தகுந்தவனாய் உலகெங்கும் பரந்துள்ளவனாகிய அவனை இந்தத் தூணின் இடத்தில் நான் காணும்படிக் காட்டுவாயாக. அப்படிக் காட்டாவிடில் ஒரு யானையை ஒரு சிங்கம் பற்றிக் கொல்வதைப போல உன்னைக் கொன்று, இரத்தத்தைக் குடித்து, உன் உடலையும் தின்பேன்" என்று பிரகலாதனிடம் இரணியன் கூறினான்.

(அ-ரை): உப்பர் . தேவர்; கரி . யானை, கோள் : கொலை, மா : சிங்கம

608. அதற்குப் பிரகலாதன் கூறுதல்.

(க - ரை): "உன்னால் கொல்லத்தக்க எளிய பொருளல்ல என்னுயிர்; என்னால் சொல்லப்பட்டவன், தொட்ட தொட்ட இடங்களிலெல்லாம தோன்றுவான்; அப்படித் தோன்றாவிடில் என்னுயிரை நானே மாய்த்துக்கொள்வேன். அதற்குமேல உயிரோடு வாழ விரும்புவேனானால் நான் அவனுக்கு உண்மையான அடியனும் அல்லன்" என்று பேரறிஞனாகிய பிரகலாதன் கூறினான்.

(அ·ரை): கோறல் : கொல்லுதல்; உகப்பன் : விரும்புவேன்.

609. இரணியன் தூணை அறைய அதனுள் நரசிங்கமூர்த்தி சிரித்தல்.

(க - ரை): விருப்பமுற்றுக் கிளம்பி 'நன்று நன்று!' எனச் சிரித்து, மிக்க வேகத்தோடு ஒரு இடி வீழ்ந்ததைப்போல், தன் முன்னால் நின்ற ஒரு தூணைக் கையால் ஓங்கியறைந்தான். அப்படி அறைந்த அளவில் திசைகளுக்கு அப்பால் அண்டங்களைப் பிளக்கும்படியாகச் சிவந்த கண்களையுடைய ஒரு சிங்கம் சிரித்துத் தோன்றியது.

(அ-ரை): நகை : விருப்பம்; இலங்க : விளங்க; நக்கு : சிரித்து; உரும் : இடி; வென்றி : வெற்றி; எற்றினான் : அறைந்தான்; கீற : பிளக்க; சீயம : சிங்கம்.

606. 'சாணினும் உளன்ஓர் தன்மை
அணுவினைச் சதகூ(று) இட்ட
கோணினும் உளன்;மா மேருக்
குன்றினும் உளன்;இந் நின்ற
தூணினும் உளன்;நீ சொன்ன
சொல்லினும் உளன்;இத் தன்மை
காணுதி விரைவின்'என்றான்;
'நன்(று)'எனக் கனகன் நக்கான்.

607. 'உம்பர்க்கும், உனக்கும் ஒத்(து),இவ்
உலகெங்கும் பரந்து ளானைக்
கம்பத்தின் வழியே காணக்
காட்டுதி! காட்டி டாயேல்,
கும்பத்தின் கரியைக் கோள்மாக்
கொன்றென, நின்னைக்கொன்(று),உன்
செம்(பு)ஒத்த குருதி தேக்கி,
உடலையும் தின்பென்' என்றான்.

608. 'என்உயிர் நின்னால் கோறற்(கு)
எளியது ஒன்(று) அன்று; யான்முன்
சொன்னவன், தொட்ட தொட்ட
இடந்தொறும் தோன்றான் ஆயின்,
என்உயிர் யானே மாய்ப்பல்;
பின்னும் வாழ்(வு)உகப்பன் என்னில்
அன்னவற்(கு) அடியேன் அல்லேன்'
என்றனன்; அறிவின் மிக்கான்.

609. நகைதிறந்(து) இலங்கப் பொங்கி,
'நன்று!நன்(று)' என்ன நக்கு
விசைபிறந்(து) உருமு வீழ்ந்த(து)
என்ன, ஓர் தூணின், வென்றி
இசைதிறந்(து) அமர்ந்த கையால்
எற்றினன்; எற்ற லோடும்,
திசைதிறந்(து), அண்டம் கீறச்
சிரித்தது செங்கண் சீயம்.

610. *இரணியன் வதை.*

(க - ரை): *இரணியனைத் திருமால் மாலைக்காலத்தில், அவன் வீட்டு வாயிலில் பற்றித் தன் தொடையின்மேல் கிடத்தி, தன் நகத்தினால் அவன் மார்பைப் பிளந்து அவனைக் கொன்று, தேவர் களுடைய துன்பத்தை நீக்கினான்.*

(அ-ரை): மாயன் : திருமால்; அந்தி : மாலைக்காலம்; கோயில் : அரண் மனை; மணிக் கவான் : அழகிய தொடை; உகிர் : நகம்: வெயில்விரி : ஒளி பொருந்திய; இடுக்கண் : துன்பம்.

611. *பிரகலாதன் வரம் வேண்டுதல்.*

(க - ரை) : *"ஐயனே! உனது திருவருளால் நான் பெற்ற நன்மைகளுக்கு அளவில்லை; இன்னும் வேறு பேறும் உண்டோ? அப்படி ஒரு வரம் வேண்டுவனேயானால், நான் புழுவாகப் பிறந் தாலும், உன்னிடத்தில் அன்பு பெறும்படியான ஒருவரம் எனக்கு அருள்க" என்று பிரகலாதன் நரசிங்கமூர்த்தியிடம் வரம் வேண்டினான்.*

(அ-ரை): பேறு : நன்மை; என்பு : எலும்பு; என்பு பெறாத இழிபிறவி : புழுவாய்ப் பிறத்தல்.

612. *நரசிங்கப் பெருமான் பிரகலாதனுக்கு வரம் தருதல்.*

(க-ரை): *"நல்ல தருமமும், உண்மையும், நான்கு[1] வேதங் களும், நல்ல கிருபையும், அளவில்லாத அறிவும், எல்லையற்ற எல் லாப் பொருள்களும், எட்டுக் குணங்களும் நீ சொன்ன சொற்படி தொழிலைச் செய்வனவாக. நீ என்னைப் போலவே சிறப்புற்று வாழ்வாயாக."*

(அ-ரை): மல்லல் : வளம்; உரு : வடிவம்; தொல்லைசால் : பழமை பொருந்திய.

613. *விபீடணன் முடிவுரை.*

(க - ரை): *"எமது தலைவனே! இது முன் நிகழ்ந்த வரலாறு ஆகும். என் சொல்லை ஏற்றுக் கொண்டாலும் சரி; எறிந்து விட்டா லும் சரியே; இதை யோசித்துப் பார்க்காமல் என்னை அலட்சியம் செய்வாயானால் உன் காரியங்களெல்லாம் தீமையே விளைவிக்கும் என்பது உறுதி" என்று பெரிய ஞானிகளுக்கெல்லாம் மேலான மேன்மை பொருந்தியவனாகிய விபீடணன் இராவணனிடம் கூறினான்.*

(அ-ரை): மாற்றம் : சொல்; நனிதிண்ணம் : மிக்க உறுதி; மேதாவி : ஞானி; செப்பினன் : சொன்னான்.

610. ஆயவன் தன்னை, மாயன்,
அந்தியின், அவன்பொன் கோயில்
வாயிலின், மணிக்க வான்மேல்,
வயிரவாள் உகிரின் வாயின்,
மீயெழு குருதி பொங்க,
வெயில்விரி வயிர மார்பு
தீஎழப் பிளந்து நீக்கித்
தேவர்தம் இடுக்கண் தீர்த்தான்.

611. 'முன்பு பெறப்பெற்ற பேறோ முடிவில்லை;
பின்பு பெறும்பேறும் உண்டோ? பெறுகுவனேல்,
என்பு பெறாத இழிபிறவி எய்தினும்,நின்
அன்பு பெறும்பேறு அடியேற்(கு)அருள்' என்றான்.

612. 'நல்லறமும், மெய்ம்மையும்,
நான்மறையும், நல்அருளும்,
எல்லையில் ஞானமும்,
ஈ(று)இலா எப்பொருளும்,
தொல்லைசால் எண்குணமும்,
நின்சொல் தொழில்செய்க
மல்லல் உருஒளியாய்
நாளும் வளர்கநீ!'

613. 'ஈ(து)ஆகும் முன்நிகழ்ந்த(து); எம்பெருமான்! என்மாற்றம்
யாதானும் ஆக, நினையாது இகழ்தியேல்,
தீதாய் விளைதல்நனி திண்ணம்'எனச் செப்பினான்
மேதாவி கட்கெல்லாம் மேலாய மேன்மையான்.

**618.** *விபீடணனை ஏற்றுக் கொள்வது பற்றி இராமனது கருத்து.*

**(க - ரை):** *"இனிச் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது. அனுமான் வடித்துக் கூறிய கொள்கையே ஏற்றுக் கொள்ளத் தக்கதாகும். அன்றேல் வெற்றி பெற்றாலும் சரி; தோல்வியுற்றாலும் சரி; இறந்தாலும் சரி; பிழைத்தாலும் சரி; எதுவரினும் நம்மை அடைக்கலமென்றடைந்தவனை ஏற்றுக் கொள்வதே முறை."*

**(அ-ரை):** மாருதி : அனுமான்—தத்திதாந்தபதம்; பெற்றி : தன்மை; வீதல : சாதல்.

குறிப்பு. விபீடணனைச் சேர்க்கலாம், சேர்க்கக்கூடாது என்ற வாதப் பிரதி வாதங்களைக் கேட்ட இராமன், ஆராய்தலும் (Argument), பின் முடிவு கூறுதலும் (Judgement) இங்கு அறிந்து மகிழத்தக்கது.

**619.** *இதுவும் அது.*

**(க - ரை):** *"புறாவின் பொருட்டுத் தன் உடலை அறுத்துத் தானும் தராசில் ஏறிய சிபிச்சக்கரவர்த்தியின் பெருமையை இவ்வுலகத்து மனிதர்கள் மறந்த நாளும் உண்டோ? ஆகையினால் என்னைச் சரணமடைந்தவனை ஏற்றுக் கொள்ளாமல் நீக்குவேனேயானால், அதுவே நான் இறந்த நாளுக்கு ஒப்பாகும். ஒருவேளை நம்மைச் சரணமென்றடைந்தவன் சூழ்ச்சியால் எனக்குச் சாவு நேருமேல், அவ்வாறு இறந்த நாளே என்றும் அழியாது புகழுடம்போடு இருந்த நாளாகும்."*

**(அ-ரை):** துலை : தராசு; துன்னினன் : அடைந்தவன்.

**620.** *சுக்கிரீவனும் விபீடணனும் ஒருவரையொருவர் தழுவிக் கொள்ளல்.*

**(க - ரை):** *நெடுங்காலம் பழகினாலும் தொடர்தற்குரிய பண்பில்லாதவர்கள் ஒருவரோடொருவர் நண்பு கொள்ளார். தூய்மையான உள்ளமுடையவர்கள் ஒருவரோடொருவர் கலந்த அன்றைக்கே, தொன்று தொட்ட நண்பர்கள் போலாகி விடுவர். ஆகையினால் விபீடணனும் சுக்கிரீவனும் ஒரே நாளில் இரவும் பகலும் ஒன்று சேர்ந்ததென்னும்படி தழுவிக் கொண்டனர்.*

**(அ-ரை):** புல்லலர் : சேரமாட்டார்கள; ஞான்று : நாள்; ஒல்லை : விரைவில்; எல்லி : இரவு; எழு : உருக்குக் கம்பம்.

குறிப்பு: விபீடணன் கருப்பு; சுக்கிரீவன் வெண்மை; இவ்விருவரும் தழுவிக் கொண்டதற்கு இரவும பகலும் ஒப்புமை கூறியது இல்பொருளுவமை.

**621.** *இராமன் தன்னை யேற்றுக் கொண்டது பற்றி விபீடணன் பாராட்டுதல்.*

**(க - ரை):** *'தனது தேவியைத் தன்னிடமிருந்து பிரித்துவைத்துத் துரோகம் செய்த வஞ்சகனுக்குத் தம்பியாகிய என்னை வருக என்று ஏற்றுக் கொண்டானே? அல்லது தஞ்சமென்றடைந்தவனென்று எண்ணினனே? கொடியனாகிய நான் இராமனால் ஏற்றுக் கொள்ளப் பட்டமை, ஆலகாலவிடம் சிவபெருமானால் அமுதமாகக் கொள்ளப்பட்டது போலும்!"*

**(அ-ரை):** தஞ்சு : தஞ்சம்; அருள் செய்தானே : ஓ-வியப்புப் பொருளை உணர்த்திற்று.

618. 'மற்(று)இனி உரைப்ப(து) என்னோ?
மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி' அன்ன(து)
அன்றெனின் பிறிதொன் றாலும்
வெற்றியே பெறுக, தோற்க,
வீக, வீயாது வாழ்க
பற்றுதல் அன்றி உண்டோ,
அடைக்கலம் பகர்கின் றானை.'

619. 'பிறந்தநாள் தொடங்கி யாரும்
துணைபுக்க பெரியோன பெற்றி
மறந்தநாள் உண்டோ? என்னைச்
சரண்என வாழ்கின் றானைத்
துறந்தநாள் இறந்தநாள் ஆம்;
துன்னினை ஆழ்ச்சி யாலே
இறந்தநாள் அன்றே, என்றும்
இருந்தநாள் ஆவ(து)' என்றான்.

620. தொல்பெரும் காலம் எல்லாம்
பழகினும, தூயர் அல்லார்
புல்லலர்; உள்ளம் தூயார்
பொருந்துவர் எதிர்ந்த ஞான்றே;
ஒல்லைவந்(து) உணர்வும் ஒன்ற,
இருவரும் ஒருநாள் உற்ற
எல்லியும் பகலும் போலத்
தழுவினர் எழுவின் தோளார்.

621. 'பஞ்செனச் சிவக்கும் மென்கால்
தேவியைப் பிரிந்த பாவி
வஞ்சனுக்(கு) இளைய என்னை,
வருகஎன்(று) அருள செய்தானே?
தஞ்செனக் கருதி னானே?
தாழ்சடைக் கடவுள் உண்ட
நஞ்செனச் சிறந்தேன் அன்றே!
நாயகன் அருளின் நாயேன்.

622. விபீடணன் இராமபிரானது திருவடிகளில் வீழ்ந்து வணங்குதல்.

(க - ரை): முடியணிந்த தன் தலையின் மேல் குவித்த கையையுடையவனாய், கல்லும் மரமும் உருகும்படியாகக் குழைந்து செல்லும் அன்புடையவனாய், இராமபிரான் தன்னைப் பார்க்குந்தோறும் பூமியில் விழுந்து வணங்குகின்றவனாய், வேண்டிய வரங்களைத் தருவதில் கடல் போன்ற இராமபிரானது திருவடிகளில் வந்து வீழ்ந்து வணங்கினான்.

(அ-ரை) கதிர்மணி : ஒளியையுடைய இரத்தினம், காதலன் : அன்புள்ளவன், இருநிலம் : பெரியபூமி; இறைஞ்சுகின்றானை : வணங்குகின்றவன், வாரி : கடல்.

623. வணங்கிய விபீடணனை இராமபிரான் தழுவிக் கொள்ளல்.

(க - ரை): எனது பிறவி இத்தோடே ஒழிந்தது என்னும் மனத்தின் மகிழ்ச்சியை முகம் எடுத்துக் காட்ட, உவகைக் கண்ணீர் வடித்து, நிலத்தில் விழுந்து வணங்கின விபீடணனை, மிக்க கருணையினால் இராமபிரான் தழுவிக் கொண்டு, 'இருப்பாயாக' எனக் கையினால் இருக்கை காட்டினான்.

(அ-ரை) புல்லினன் : தழுவினன், இருக்கை : இருப்பிடம்.

624. இராமன் விபீடணனைப் பாராட்டுதல்.

(க - ரை): "விபீடணனே! தசரதச் சக்கரவர்த்திக்கு மைந்தர்களாக நாங்கள் நால்வர் இருந்தோம்; குகன் எனது துணைவனாகச் சேர ஐவர் ஆயினோம்; பின்பு சுக்கிரீவனோடு அறுவர் ஆயினோம்; உன்னைத் துணைவனாகப் பெற்றமையால் இப்பொழுது நாங்கள் எழுவராக உயர்ந்தோம். எங்களுக்குக் கொடிய கானகத்தைத் தந்த எமது தந்தை புதல்வர் அதிகமாக உடையவனாயினான்."

(அ-ரை) குன்றுசூழ்வான் மகன் : சூரியன் மகனாகிய சுக்கிரீவன்; எம் உழை : எம்மிடத்தில், அகன் அமர் : விரும்பத்தக்க, இதை 'அகன்அமர்ந்து செய்யாள் உறையும்' என்ற குறளிலும் காண்க. புகல்அரும் : புகுவதற்கு அரிய, பொலிந்தான் : மிகுந்தான், "எம் உழை...வந்த.. ஐய" என்பது, முற்கூறிய இருவர் இருக்குமிடத்திற்கு நாங்கள் சென்று துணையாகப் பெற்றோம். இப்பொழுது நீயே வந்து துணையாக அடைந்தாய் என்னும் நயம் அமைந்தது.

இலங்கை நிலையைப்பற்றி இராமன் விபீடணனிடம் கேட்டறிவதைப் பற்றிக் கூறுவது.

625. இராமனது நிலை.

(க - ரை): 'இராமன் தன் உடம்பைப் பார்ப்பான்; தன்னுயிருக்கு ஒப்பான சீதா பிராட்டியாரைக் கருதுவான்; இடையிலே உள்ள இடர்ப்பாடுகளை நோக்குவான்; பிறிதொன்றனையும் நோக்கமாட்டான்; கடலினைப் பார்ப்பான்; அக்கள்வனாகிய இராவணன் இருக்கும் இலங்கையாகிய திடலை நோக்குவான், இறுதியாகத் தன் வில்லை நோக்குவான்.

(அ-ரை): இடர் : துன்பம்; வைகுறும் : தங்கும்; திடர் : திட்டு, சிலை : வில்.

622. கரங்கள்மீச் சுமந்து செல்லும்
கதிர்மணி முடியன், கல்லும்
மரங்களும் உருக நோக்கும்
காதலன், கருணை வள்ளல்
இரங்கினன் நோக்குந் தோறும்,
இருநிலத்(து) இறைஞ்சு கின்றான்,
வரங்களின் வாரி அன்ன
தாள்இணை வந்து வீழ்ந்தான்.

623. அழிந்தது பிறவி, என்னும்,
அகத்(து)இயல முகத்தில் காட்ட
வழிந்தகண் ணீரின், மண்ணில்
மார்புற வணங்கி னானை,
பொழிந்த(து) ஓர் கருணை தன்னால்
புல்லினன், என்று தோன்ற;
'எழுந்(து) இனி(து) இருத்தி' என்னா,
மலர்க்கையால் இருகை ஈந்தான்.

624. 'குகனொடும் ஐவர் ஆனேம்;
முன்பு;பின் குன்று சூழ்வான்
மகனொடும அறுவர் ஆனேம்;
எமஉழை அன்பின் வந்த
அகன்அமர் காதல ஐய!
நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகல்அரும் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான் நுந்தை.'

## இலங்கைக் கேள்விப் படலம்

625. உடலினை நோக்கும்,இன் உயிரை நோக்கும்;ஆல்,
இடரினை நோக்கும்;மற்று யாதும் நோக்கலன்;
கடலினை நோக்கும்;அக் கள்வன் வைகுறும்
திடரினை நோக்கும்;தன் சிலையை நோக்கும்;ஆல்.

கடலைத் தாண்டுவதற்கு உதவி செய்யும்படி வருணனை இராமபிரான் வேண்டலைப் பற்றிக் கூறுவது.

626. 'இராமபிரான் வருணனோடு சினந்து கூறியது.

(க - ரை): இராமன் பெருமையற்ற வில்லையேந்தியவன்; இராவணனால் அபகரிக்கப் பட்டு மனைவியை இழந்த தன்மையுடையவனாய் இருக்கின்றான்; ஆகையினால் இவன் வீரமற்ற ஒரு மனிதனென்று அலட்சியம் செய்ததால் இந்தக் கடல், நெஞ்சில் அன்பற்றது ஆயிற்று' என்று சொன்னான்.

(அ-ரை): பாரம்: பெருமை, ஈரம்: அன்பு,-'இன்சொலால் ஈரம் அளைஇ' என்ற குறளிலும் காண்க. எறிகடல்: அலை வீசுகின்ற கடல், இசைத்தான்: சொன்னான்.

குறிப்பு: கடலுக்கு ஈரம் நீங்கியது என்பது ஒரு நயம்.

627. இதுவும் அது.

(க - ரை): 'உலகத்தில் சீவன் முத்தர்களாயுள்ள மெய்ஞ் ஞானிகளை, அவர்கள் கையில் ஒன்றும் இல்லாமை கண்டு ஒருவரும் விரும்பமாட்டார்கள். தம்முடைய ஆற்றல் பிறர்க்குப் புலப் படாவாறு அடக்கம் உடையவராய சிலர் இருப்பர்; அவரையும் ஒருவரும் விரும்பார். அற்பர்கள் ஒருவரிடத்திலுள்ள பெருமையைக் கண்ட பின்தான் அவரை நம்புவார்கள்.'

(அ-ரை) மறுமை முத்தநிலை, ஞாலம் உலகம், வெறுமை ஒன்றுமின்மை, குறுமை: குறிய பண்பு, கொழுங்கனல் கொடியநெருப்பு

குறிப்பு. ஆதலின் நமது ஆற்றலைக் காட்டினால் அன்றி வருணன் எதிரில் வாரான் என்பது பாடலின் கருத்து. இது பிறிது மொழிதல் அணியின் பாற்படும்.

628. வருணன் இராமபிரானைத் தன் பிழை பொறுக்குமாறு வேண்டல்.

(க - ரை): "ஐயனே! எனக்குத் தாயும், தந்தையும், மற்றனை யனைத்தும் நீயே யாவாய்; யாவருக்கும் பிற்பட்டவனும், முற்பட் டவனும், ஒரு பொருளைப் பெறுவதும், இழப்பதும் ஆகிய எல் லாம் நீயே யாவாய், உன்னை இகழ்ந்தேனென்று என்னைச் சினந் தாய். உன்னை இகழ முடியுமா? உன் பெருமை உன்னாலேயே உணர முடியாதென்றால் எம்போல்வார் எவ்வாறு உன்னை உணர வல்லார்?"

(அ-ரை): அத்தன்: தந்தை; பேறு: பெறுதல். இழவு: இழத்தல். எங்ஙனே: எவ்வாறு.

629. வருணன் இராமபிரானை வணங்குதல்.

(க - ரை): வருணன் தான் கொண்டுவந்த இரத்தின மாலையைக் காணிக்கையாகப் பூமியின்மேல் வைத்து, "சிறியோர் தமக் கொரு குற்றம் செய்தால் அதைப் பொறுப்பதே பெரியோர் கடமை அல்லவா! ஆயிரம் நாமங்களையுடைய பரம்பொருளே! நான் உனக்குச் சரணம்' என்று அடியில் வீழ்ந்துவணங்கினான்.

(அ-ரை): பாயிருள் சீக்கும்: பரவிய இருளை நீக்கும்; பரிதி: சூரியன், மாயிரும் கரத்தான்: மிகப்பெரிய கரத்தையுடைய (வருணன்), அடியுறை: பாதகாணிக்கை; மாயிரும்: ஒருபொருட் பன்மொழி.

## வருணனை வழி வேண்டு படலம்

626. "பாரம் நீங்கிய சிலையினன், இராவணன் பறிப்பத்
தாரம் நீங்கிய தன்மையன், ஆதலின், 'தகைசால்
வீரம் நீங்கிய மனிதன்' என்(று) இகழ்ச்சிமேல் விளைய
ஈரம் நீங்கிய(து) எறிகடல் ஆம்;" என இசைத்தான்.

627. 'மறுமை கண்டமெய்ஞ் ஞானியர் ஞாலத்து வரினும்,
வெறுமை கண்டபின், யாவரும யாவதும் விரும்பார்
குறுமை கண்டவர் கொழுங்கனல் என்னினும் கூசார்,
சிறுமை கண்டவர் பெருமைகண்(டு) அல்லது தேரார்.'

## வருணன் அடைக்கலப் படலம்

628 'அன்னை நீ! அத்தன் நீயே! அல்லவை எல்லாம் நீயே!
பின்னும் நீ! முன்னும நீயே! பேறும்நீ! இழவும் நீயே!
என்னை, நீ இகழ்ந்த(து) என்ற(து) எங்ஙனே! ஈசன் ஆய
உன்னை நீ உணராய்! நாயேன் எங்ஙனம் உணர்வேன் உன்னை?'

629. பாயிருள் சீக்கும் தெய்வப்
பரிதியைப் பழிக்கும் மாலை,
மாயிரும் கரத்தான், மண்மேல்,
அடியுறை யாக வைத்துத்
'தீயன சிறியோர் செய்தால்,
பொறுப்பதே பெரியோர் செய்கை;
ஆயிரம் நாமத்(து) ஐயா!
சரணம்!' என்று அடியில் வீழ்ந்தான்.

630. இராமன் விட்ட அம்பு அசுரர்களை அழித்து வருதல்.

(க - ரை): முனிவர் இட்ட சாபத்தைப் போலத் தப்பாது பாயவல்ல அந்த இராம பாணமானது, பல காத தூரம் விரைந்து சென்று புகைமிக்கெழும்படி அசுரர்களைச் சுட்டெரித்தது. ஆகவே தருமமே வலியுடையது என்பதாம்.

(அ-ரை): தூபம் புகை, பனைநெடும் காதம் : பலநெடிய காததூரம்.

வானர சேனைகள் இலங்கைக்குச் செல்லக் கடலில் வாராவதி கட்டியதைப் பற்றிக் கூறுவது. சேது-பாலம்; பந்தனம்-கட்டுதல்.

631. பாலங்கட்டுவதற்கு வானரங்கள் மலைகளைக் கொண்டு வருதல்.

(க - ரை): கால்களால் ஒரு மலையை உருட்டிக் கொண்டும், கைகளினால் தோள்மேல் ஒரு மலையைத் தாங்கியும், வானளாவிய மேகங்கள் சூழ்ந்த பெரிய மலையை வாலில் சுற்றிக்கொண்டும் வானரங்கள் வந்தன.

(அ-ரை) காலினை- கால் நடுவில், விசும்பு - வானம், சூல் உடை மழை முகில் கருக்கொண்ட மழைபெய்யும் மேகம்; வாலிடை இடை ஏழன் உருபு

குறிப்பு: காலில் மலைகளை உருட்டித் தோளில் மலைகளைச் சுமந்து, வாலில் மலைகளைக் கட்டி இழுத்து வந்த வானரசேனையின் தன்மை கூறியதால் இது தன்மை நவிற்சியணி ஆகும்.

632. நளன், அம்மலைகளை வாங்கி, அடுக்கி அணை கட்டுதல்.

(க - ரை): ஒவ்வொருவரையும் தூண்டி "விரைவிற் கொண்டு வாருங்கள்" என்று மூன்று கோடி வானரர்கள் கொண்டுவந்தாலும் அவற்றைத் தன் ஒரு கையாலேயே வாங்கி ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கினான். அவற்றைக் கடலில் போடும்போது தன் வலிமையைக் காட்டிக் கடலையும் நடுங்கச் செய்தான். இவ்வாறு செய்தவன், குற்றமற்ற நளன் என்னும் பெயருடைய வானர வீரன் ஆவன்.

(அ-ரை): முடுக்கினன் : விரைவாகச் செய்யத் தூண்டினன்; ஆழி . கடல்: காரணபபெயர். நவை : குற்றம்.

633. வானரங்கள் வாராவதி கட்டுதல்.

(க - ரை): வானரங்கள் வேரோடு மலைகளைப் பிடுங்கியெடுத்து வரும்பொழுது அவற்றின் குகைகளிலிருந்த ஏனைய விலங்குகளோடு யானைகளும் கொண்டுவந்து கடலில் தள்ளப்பட்டன. யானைகளின் மதநீரை உண்ணும்பொருட்டு அவற்றின் கன்னங்களில் மொய்த்துக்கொண்டிருந்த வண்டுகள் உடனே வெளியே பறந்தன. அவை, கைப்பொருளில்லாதவிடத்து, அவர்களை விட்டு நீங்கும் விலை மாதரை ஒத்தன.

(அ-ரை): மூசுதல் : மொய்த்தல்; வேசை மங்கையர் : விலைமாதர்.

630. பாபமே இயற்றி னாரைப், பன்னெடும் காதம் ஓடித்,
தூபமே பெருகும் வண்ணம், எரிஎழச் சுட்ட(து)அன்றே;
தீபமே அனைய, ஞானத் திருமறை முனிவர் செப்பும்
சாபமே ஒத்த(து) அம்பு; தருமமே வலிய(து); அம்மா.

## சேது பந்தனப் படலம்

631. காலிடை ஒருமலை உருட்டிக், கைகளின்
மேலிடை ஒருமலை வாங்கி, விண்தொடும்
சூல்உடை மழைமுகில் சூழ்ந்து சுற்றிய,
வாலிடை ஒருமலை ஈர்த்து வந்த; ஆல்.

632. முடுக்கினன் தருகென, மூன்று கோடியர்
எடுக்கினும் அம்மலை ஒருகை ஏந்தியிட்(டு)
அடுக்கினன்; தன்வலி காட்டி, ஆழியை
நடுக்கினன்; நளன் எனும் நவையின் நீங்கினான்.

633. மூசு வண்டினம், மும்மத யானையின்
ஆசை கொண்டன போல்தொடர்ந்(து) ஆடிய
ஓசை மாக்கடல் குன்றொடு(டு) ஒளித்தலும்,
வேசை மங்கையர் அன்(பு)என, மீண்டவே.

தூதுவரால் இராவணன், இராமன் துணைவலிமை பற்றிக் கேட்டறிதலைக் கூறுவது.

634. இராமன் கடல்கடந்து ஒரு மலையிடைத் தங்குதல்.

(க - ரை): பெரிய தவஞ்செய்து தேவர்கள் பெற்ற வரத்தினாலே, மருந்து போன்ற இலக்குவனோடும், வலிய வானர வீரரோடும், கற்பின் மிக்க சீதா பிராட்டியார் இருக்கின்ற இடமாகிய இலங்கையின் புறத்திலே ஒரு குன்றினிடை இராமபிரான் வந்து தங்கினான்.

(அ-ரை): மருந்து அனைய : நோய்தீர்க்கும் மருந்துபோன்ற, இளவஞ்சி சீதை; இறுத்தான் : தங்கினான்.

635. இராவணன் ஆலோசனைக் கூடத்தில், மாலியவான் தன் கருத்தைக் கூறுதல்.

(க - ரை): "ஒரு குரங்கு நம் நகரத்தைச் சுட்டதைக் கண்டறிந்தும், சமுத்திரத்தை வாராவதி கட்டித் தடுத்ததைக் கண்டறிந்தும், அழிவில்லாத வருணனுடைய பகைவரை வேரொடு களைந்தவற்றைக் கண்டும், நம் கண்ணிற்கு முன்னாலே படையெடுத்து வந்தமையை அறிந்தும் இனி அவர்களை வெல்லுமாறுகூட நினைக்க வேண்டுமா? சீதையை அவர்களிடம் விட்டுச் சமாதானமாகப் போவதே நலம்" என்று கூறினான்.

(அ-ரை): சுட்டவா : சுட்டவாறு—கடைகுறை,—ஏனையவற்றிற்கும் இவ்வாறே கொள்க. வேலை · கடல்; தாவறற : அழிவில்லாத, தெவ்வா : பகைவர், விட்ட : படையெடுத்து வந்த; கட்ட : களைபிடுங்கின.

636. இராவணன் மாலியவானைச் சினந்து கூறுதல்.

(க - ரை:) "மாலியவானே! நீ சொல்லி வந்தவற்றில் மற்றவைகளெல்லாம் ஒழியட்டும். மனிதர்கள், குரங்குகள், எனக்கஞ்சி இதுவரையிலும் யாதொன்றும் தலை காட்டாத தேவர்கள் ஆகிய இவர்களின் தன்மையைப் பெருமைப்படுத்திச் சொன்னதோடு நில்லாமல், அந்த மனிதர்களுக்கு நான் தோற்றுவிடுவேன் என்றும் சொன்னாயே! நீயும், நீ படித்த படிப்பும் வெகு நன்றாயுள்ளது! இவ்விடத்தைவிட்டு எழுந்துபோ" என்று மீட்டும் இராவணன் சொலலத் தொடங்கினான்.

(அ-ரை): இமையவர் : தேவர், இற்றைநாள் · இன்று + நாள்; சொறுவாறு : சொன்னவாறு; கற்றவாநன்று · இகழ்ச்சிக் குறிப்பு

இராமன் இலங்கையின் தோற்றத்தைக் காணுதலைக் கூறல்

637. குன்றின்மேல் ஏறி இலங்கை நகரைக் கண்ட இராமன் இலக்குவனிடம் பாராட்டிக் கூறுதல்.

(க - ரை): "இளையவ! நமது செல்வநகரமாகிய அயோத்தி முதலிய சிறந்த நகரங்களை வர்ணிக்கவந்த எத்தனையோ பல புலவர்கள், அந்நகரம் ஒவ்வொன்றும் இந்திரன் நகரமாகிய அமராவதியை ஒக்குமென்று உவமையாக எடுத்துக் கூறினார்களே அன்றி அதனினும் சிறந்த இந்த இலங்கை நகரை உவமை காட்டினார்களில்லை. ஏனென்றால் இவ்விரு நகரங்களில் உயர்வுடையது எதுவென அவர்கள் அறிந்திலர்."

(அ-ரை): வழுத்துவான் : துதிக்கும் பொருட்டு; இருக்கை : இருப்பிடம், அந்தரம் : வேறுபாடு; அம்மா : வியப்பிடைச்சொல்.

## ஒற்றுக் கேள்விப் படலம்

634. பெருந்தவம் முயன்(று)அமரர் பெற்றிடும் வரத்தால்,
மருந்(து) அனைய தம்பியொடும், வன்துணைவ ரோடும்,
அருந்ததியும் வந்தனைசெய் அம்சொல்இள வஞ்சி
இருந்தநக ரின்புறம்ஓர் குன்றிடை இறுத்தான்.

635. 'சுட்ட வாகண்டும் தொல்நகர், வேலையைத்
தட்ட வாகண்டும், தாவற்ற தெவ்வரைக்
கட்ட வாகண்டும், கண்எதி ரேவந்து
விட்ட வாகண்டும் மேல்எண்ண வேண்டுமோ?'

636. மற்றெலாம் நிற்க, அந்த
மனிதர், வா னரங்கள், வானின்
இற்றைநாள் அளவும் நின்ற
இமையவர் என்னும் தன்மை
சொற்றவா(று) அன்றி யேயும்,
'தோற்றிநீ' என்றும் சொன்னாய்;
'கற்றவா நன்று போ'என் (று)
இனையன கழறல் உற்றான்.

## இலங்கை காண் படலம்

637. 'நம்திரு நகரே ஆதி
வேறுள நகர்கட் கெல்லாம்
வந்தபேர் உவமை கூறி,
வழுத்துவான் அமைந்த காலை,
இந்திரன் இருக்கை என்பர்;
இலங்கையை எடுத்துக் காட்டார்;
அந்தரம் உணர்தல் தேற்றார்
அரும்கவிப் புலவர் அம்மா!'

இராவணன் வானர சேனையைப் பார்த்ததைக் கூறுவது.

**638.** இராவணன் போரை நினைந்து பூரித்தல்.

**(க - ரை):** சீதா பிராட்டியார்மேல் வைத்த ஆசையால் நாளும் நாளும் மெலிந்துபோன தோள்கள் இப்பொழுது போர் நிகழ இருக்கிறது என்ற செய்தியை உணர்ந்து, மகாமேரு மலையினும் பூரித்து உயர்ந்தன. மற்றொன்றையும் நோக்காமல் போரின் மேற் செல்லும் மனத்தையுடையவனாக இராவணன் ஆனான்.

**(அ-ரை):** பொலிந்தது : விளங்குகிறது; நலிந்த : துன்புற்ற, எழில் : அழகு, வலிந்து : உறுதியுடையதாய்ச் செல்ல, மிசை : மேலன் உருபு.

**639** கோபுரத்தின் மீதிருந்த இராவணனைச் சுற்றியுள்ள அரக்க வீரர்களின் தோற்றம்.

**(க - ரை):** கையில் பிரம்பைப் பிடித்தவராயுள்ளவர்களும், நெருப்பைக் கக்கும் கண்களையுடையவர்களும், சற்று நேரமேனும் இருந்த இடத்தில் இராமல் சுற்றி வருகின்ற நடையையுடையவர்களும், விரும்பிக் காவல் புரிவதில் நுண்ணறிவுடையவர்களுமான அரக்கர் பதினாயிரர் இராவணனைச் சுற்றி நின்றனர்.

**(அ-ரை)** வேத்திரம் பிரம்பு, நேத்திரம் கண், இறை : சற்றும், சிறிதும்; நின்றுழி நின்ற இடம், சூக்திரம : நுண்பொருளாய் சகி இருப்பது.

**640.** வானரசேனைகளைப்பற்றி இராவணனுக்குச் சாரண வீரன் தெரிவித்தல்.

**(க - ரை):** சாரணவீரன் இராவணனுக்கு வானரசேனைகளைச் சுட்டிக்காட்டி, "தலைவனே! கேட்பாயாக. இந்த வானர சேனைக்கு எடுத்துக்கூற ஒரு உவமையும் இல்லை; அளவும் இல்லை. வானின் மீன்களை உவமையாகக் கூறினாலும், கடலிலுள்ள மீன்களை எண்ணி அளவிட்டாலும், இந்தக் கடலின் மணலையெல்லாம் கணக்கிட்டுப் பார்த்தாலும் வானரசேனைகளை அளவிட முடியாது."

**(அ-ரை):** அண்ணல் : தலைவன்; வேலை : கடல்; கண்ணி : கணக்கிட்டு.

இராவணனது முடியைப் பறித்துச் சென்றமை பற்றிக் கூறுவது

**641.** மகுடமணிகளைப் பறித்து வந்த சுக்கிரீவனிடத்தில் இராமன் சில உரைகளைப் பகர்தல்.

**(க - ரை):** "சுக்கிரீவனே! ஒருமைப்பட்ட மனத்தோடு ஊன்றி நோக்கினால் பெருமையும், ஈகையும், ஆண்மைக் குணமும் ஆகிய இவைகள் எல்லாம் பொறுமைக்கு உறுதி தந்து நிற்பனவே யன்றிப் பொறுமையால் அவைகள் உறுதியடைவன ஆகா. அருமைத்தன்மையையும், அதனால் அடைந்த பழியையும் மறந்து விட்டனை போலும்! இம்மை, மறுமை இரண்டிற்குரிய நன்மைகளை இழந்து விட்டாய்! என்ன நினைந்து என்ன காரியம் செய்தாய்?" என்று இராமன் பகர்ந்தான்.

**(அ-ரை):** வண்மை : ஈகை; பொறை : பொறுமை; அயர்ந்தாய் : மறந்தாய். சுக்கிரீவன் செயல் தகாது என்பது இராமன்கருத்து.

## இராவணன் வானரத்தானை காண் படலம்

638. பொலிந்த(து) ஆங்குமிகு போர்என வேட்டும்;
நலிந்த நங்கைஎழி லால,வலி நாளும்
மெலிந்த தோள்கள்வட மேருவின் மேலும்
வலிந்து செல்ல, மிசைச் செல்லும் மனத்தான்.

639. வேத்தி ரத்தர்; எரி வீசி விழிக்கும்
நேத்தி ரத்தர்,இறை நின்றுழி நில்லாக்
காத்தி ரத்தர்,மனை காவல விரும்பும்
சூத்தி ரத்தர்,பதி னாயிரர் சுற்ற

640 'அண்ணல் கேள்! இவர்க்(கு) உவமையும்,
அளவும்ஒன்(று) உளதோ!
விண்ணின் மீனைக் குறிப்பினும்,
வேலையுள் மீனை
எண்ணி நோக்கினும், இக்கடல்
மணலினை எல்லாம்
கண்ணி நோக்கினும், கணக்கிலை'
என்றனன் காட்டி.

## மகுட பங்கப் படலம்

641. 'பெருமையும், வண்மை தானும்,
பேர்எழில், ஆண்மை தானும்,
ஒருமையின் உணர நோக்கின்
பொறையின(து) ஊற்றம் அன்றே;
அருமையும், அடர்ந்து நின்ற
பழியையும் அயர்ந்தாய் போலும்
இருமையும் கெடுத்தல் உற்றாய்!
என்நினைந்(து) என்செய் தாய்நீ!'

**642.** *அதற்குச் சுக்கிரீவன் வீரவுரை பகர்தல்.*

**(க - ரை):** *"தலைவனே! காட்டில் சடாயு செய்த செய்கையைச் செய்து காட்ட என்னால் முடியவில்லை. நாட்டில் குகன் செய்த நன்மையைப்போல் நயந்து செய்யவும் எண்ணமாட்டேன். இவற்றையெல்லாம் நான் கேட்டிருந்தும், இன்று சீதாபிராட்டியாரைக் கண்ணிற் கண்டும் அவரை மீட்காதவனானேன். முடிமணியைக் கொணர்ந்தேனேயன்றிப் பத்துத் தலைகளையும் பறித்துக்கொண்டு வரவில்லை; வெறுங்கையோடு வந்தேன்" என்று சுக்கிரீவன் இராமபிரானிடம் கூறினான்.*

**(அ-ரை):** கழுகின வேந்தன் : சடாயு; நயத்தல் : விரும்புதல்.

**643.** *இதுவும் அது.*

**(க - ரை):** *"தான் கற்ற நூலின் பெருமையைத் தன் எண்ணத்தினால் காட்டுகின்ற உமது தூதுவர்களிற் சிறந்தவனாகிய அனுமான், கொடிய போரில் தங்கள்வேல் வலிமையைக் காட்டின அரக்கர்களுக்கும், வில்லின் வலிமையைக் காட்டின அரக்கர்களுக்கும், தன்னுடைய வாலின் வலிமையைக் காட்டித் திரும்பிய அந்த இலங்கை நகரில் போய், திரும்பி வருவதில் என் கால் வலிமையைக் காட்டினேன். என் தோள் வலி காட்டுவதற்கு ஒரு எல்லையுண்டா?"*

**(அ-ரை):** அவதி : எல்லை; போந்த : வந்த, கைவலி : தோள்வலி—சினையாகுபெயர். வெம்போர் : கொடிய போர்.

**644.** *சுக்கிரீவனை, விபீடணன் பாராட்டுதல்.*

**(க - ரை):** *"மணிகள் அழுத்திய தோள்களையுடைய வானர வேந்தனே! கூரிய வாளாயுதத்தைச் சிவபெருமான் கையினின்றும் பெற்ற இராவணனது முடியில் பதித்த மணிகளையா பறித்து வந்தாய்? இங்கே இனி நிகழப்போகும் வெற்றிக்கு அடிப்படை நாட்டுக் கல்லன்றோ பறித்து வந்தாய். இதற்குமேல் சொல்லத் தகுந்தது வேறு என்ன?"*

**(அ-ரை):** தொடி : தோள்வளை; வடி : கூர்மை, வென்றி : வெற்றி. அரிக்குலம் : குரங்குக் கூட்டம்; அடிமணி : இராவணன் முடியிலிருந்து பறித்து வந்த இரத்தினக்கற்கள்.

இருவகைச் சேனைகளையும் அணிவகுத்தமைபற்றிக் கூறுவது.

**645.** *மாதுலத்தலைவன் இராவணனுக்கு வானரவீரர்களின் பெருமையைக் கூறுதல்.*

**(க - ரை):** *"இலங்கைக்குவந்து நகரத்தில் தீவைத்துச் சாம்பலாக்கிப் போன அந்தக் குரங்கிற்குக் கையில் சக்கரம், வில், அம்பு இவற்றில் யாதேனும் இருந்ததா? பத்து மலைச்சிகரம் போன்ற உனது முடியில் பதித்த நல்ல இரத்தினங்களைப் பறித்துக்கொண்டு சென்ற சுக்கிரீவனுக்குச் சூலம், வேல், வாள் ஆகியவற்றில் யாதேனும் உண்டா?"*

**(அ-ரை):** தனு : வில்; வாளி : அம்பு; மௌலி : முடி.

**குறிப்பு:** சக்கரம், வில், அம்பு, இவை திருமாலுக்குரியவை. சூலம், வாள் இவை சிவனுக்குரியவை. வேல் முருகனுக்குரியது. எனவே இம்மூவரினும குரங்கினம் வலியவை என்றபடி.

642. 'காட்டிலே கழுகின் வேந்தன்
செய்தது காட்ட மாட்டேன்;
நாட்டிலே குகனார் செய்த
நன்மையை நயக்க மாட்டேன்;
கேட்டிலேன், அலலேன் இன்று
கண்டும்அக் கிரிஅன் னானை
மீட்டிலேன்; தலைகள் பத்தும்
கொணர்ந்திலேன்; வெறும்கை வந்தேன்.'

643. 'நூல்வலி காட்டும் சிந்தை
நும்பெரும் தூதன் வெம்போர்
வேல்வலி காட்டி னார்க்கும்,
வில்வலி காட்டி னார்க்கும்
வால்வலி காட்டிப் போந்த
வளநகர் புக்கு, மற்(று)என்
கால்வலி காட்டிப் போந்தேன்;
கைவலிக்(கு)அவதி உண்டோ?'

644. 'தொடிமணி இமைக்கும் தோளாய்!
சொல்இதின் வேறும் உண்டோ?
வடிமணி வயிர வெவ்வாள்
சிவன்வயின் வாங்கிக் கொண்டான்
முடிமணி பறித்திட் டாயோ!
இவன் இனி முடிக்கும் வென்றிக்(கு)
அடிமணி இட்டாய் அன்றோ
அரிக்குலத்(து) அரச!' என்றான்.

அணிவகுப்புப் படலம்

645. 'புக்(கு)எரி மடுத்(து)இவ் வூரைப்
பொடிசெய்து போயி னாற்குச்
சக்கரம் உண்டோ? கையில்
தனுஉண்டோ? வாளி உண்டோ?
இக்கிரி பத்தின் மௌலி
இனமணி அடங்கக் கொண்ட
சுக்கிரி வற்கும் உண்டோ
சூலமும் வேலும் வாளும்?'

அங்கதன் தூது சென்றதைப்பற்றிக் கூறுவது.

**646.** தூதனுப்புதல் முறையென்று இராமன் கூறுவது.

**(க - ரை) :** "அரக்கர் செய்த தீமைகளையும், வனத்தில் உள்ளவர்களுக்கும் விபீடணனுக்கும் கொடுத்த வாக்கையும் நான் மறக்கவில்லை. முடிவாக நடக்க இருப்பது போரே. அறிவுடையவர்களால் ஆராய்ந்து கூறிய அரசு நடத்தும் முறையை நாம் நீங்கி வாழ்தல் தகுதியாமோ? தோள் வலியில் மிக்க வீரர்களாய் இருந்த போதிலும், அவர்கள் பொறுமையோடு பொருந்தி நடத்தலே வெற்றிக்கு வழிகாட்டியாம் அதுவே தருமத்திற்கும் ஒத்ததாகும்" என்று இவைபோன்றவற்றை அனைவரும் ஏற்றுக் கொள்ளும்படியாக இராமபிரான் கூறினார்.

**(அ-ரை).** அயர்த்திலென் : மறந்துவிடவில்லை, நயம : நன்மை, சமைய : ஏற்றுக்கொள்ளுமாறு.

**647.** இராமன் அங்கதனைத் தூதனுப்புதல் முறை எனல்.

**(க - ரை) :** "அனுமான் மீளவும் இராவணனிடம் போவானேயானால் இவனைத் தவிர வேறு வீரர்கள் எதிரிகளிடத்தில் இல்லை போலுமென்று அவர்கள் கருத இடந்தருமல்லவா? அவனைத் தவிர தூது சென்று வரத் தக்கவர்கள் யார் இருக்கின்றார்கள்? அங்கதனே அதற்குத் தகுதி வாய்ந்தவன். பகைவர்கள் அவனிடம் தங்கள் வீரத்தைக் காட்டுவார்களாயினும், யாதொரு தீங்கும் இன்றி மீள வல்லவனும் அங்கதனே யாவான்"

**(அ-ரை)** சாரும அரியக கிடக்க, ஒன்னார் : பகைவர்.

**648.** அங்கதன் புறப்படுதல்.

**(க - ரை) :** 'எங்கள் தலைவன் 'அனுமான் அடுத்தது நீ' என்று சொல்லும் சிறப்புப் பெற்றேன் நான். இனிமேல் என்னோடு ஒப்பவர்கள் யார்?' என்ற பெருமிதத்தோடும் மகிழ்ச்சியோடும் அங்கதன், நிலத்தில் வீழ்ந்து இராமனை வணங்கி, விடை பெற்றுக்கொண்டு ஒரு சிங்கம் வான்வழியே செல்வதைப்போல இராமன் ஏவிய அம்பு போன்ற விசையோடு சென்றான்.

**(அ-ரை)** சீயம : சிங்கம்; மாற்றம : வார்த்தை.

**649.** அங்கதன் இராவணனுக்குக் கூறுதல்.

**(க - ரை) :** 'ஐம் பெரும் பூதங்களுக்குத் தலைவனும், கடலால் சூழப்பட்ட உலகங்களுக்கெல்லாம் தலைவனும், இங்குப் பூமியில் சீதாபிராட்டியின் நாயகனாக அவதரித்தவனும், மற்றுள்ள தெய்வங்களுக்கெல்லாம் தலைவனும், உன்னால் பயிலப்பட்டு வருகின்ற வேதங்களுக்குத் தலைவனும், கற்ற அறிவிற்கு மேற்பட்ட ஊழ்வினைக்குத் தலைவனும் ஆகிய அத்தகைய தலைவனால் அனுப்பப்பட்ட தூதுவன் யான்; அவன் சொல்லியனுப்பிய வார்த்தைகளை உன்னிடம் சொல்ல வந்தேன்" என்றான்.

**(அ-ரை):** நீர் : கடல்; புவி : பூமி; மாற்றம் : வார்த்தை; பணித்த : கட்டளையிட்ட.

## அங்கதன் தூதுப் படலம்

646. 'அயர்த்திலென்; முடிவும் அஃதே;
ஆயினும் அறிஞர் ஆய்ந்த
நயத்துறை நூலின் நீதி,
நாமதுறந்(து) அமைதல் நன்றோ?
புயத்துறை வலிய ரேனும்,
பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத்துறை; அறனும் அஃதே;'
என்றிவை சமையச் சொன்னான்.

647. 'மாருதி இன்னம் செல்லின்,
மற்(று)இவன் அன்றி வந்து
சாரும்நல் வலியோர் இல்லை,
என்பது சாரும் அன்றே;
ஆர்இனி ஏகத் தக்கார்?
அங்கதன் அமையும்; ஒன்னார்
வீரமே விளைப்ப ரேனும்
தீதின்றி மீள வல்லான்.'

648. பார்மிசை வணங்கிச், சீயம்
விண்மிசைப் படர்வ தேபோல்
வீரன்வெம் சிலையில் கோத்த
அம்பென, விசையில் போனான்,
'மாருதி அல்லன் ஆகில்
நீ,எனும் மாற்றம் பெற்றேன்;
யார்இனி என்னோ(டு) ஒப்பார்?'
என்ப(து) ஓர் இன்பம் உற்றான்.

649. 'பூதநா யகன்,நீர் சூழ்ந்த
புவிக்குநா யகன்,இப் பூமேல்
சீதைநா யகன்,வே றுள்ள
தெய்வநா யகன், நீ செப்பும்
வேதநா யகன், மேல் நின்ற
விதிக்குநா யகன்தான் விட்ட
தூதன்யான்;பணித்த மாற்றம்
சொல்லிய வந்தேன்' என்றான்.

**650.** *இராவணன் அங்கதனை வினவுதல்.*

**(க - ரை):** "சிவபெருமானும், திருமாலும் என்னிடம் உத்தர வில்லாமல் இந் நகரத்திற்குள் வரப்பெறார். அவர்களில் ஒருவனு மல்லாமல், சிறிதும் அச்சமின்றி ஒரு மனிதன் பொருட்டு அவன் ஏவின தூதனாக என் உத்தரவின்றி நகரினுள் புகுந்து இராம தூதன் என்று சொன்ன உன் வரலாறு யாது?" என்று இராவணன் அங்கதனை வினவினான்

**(அ-ரை):** கணனுதல : நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான்; நேமி : சக்கரம்.

**651.** *அங்கதன், தான் வாலியின் மகனென்று தெரிவித்தல்.*

**(க - ரை):** "முற்காலத்தில் இராவணன் என்னும் ஒருவனை அவனுடைய தோள்களோடு தன் வாலினுள் அடங்கும்படி சுற்றிக் கொண்டு, யானை முதலிய மிருகங்கள் வசிக்கும் பல மலைகளிலும் தாண்டிக் குதித்துச் சென்றவனும். தேவர்கள் அமுதுண்ணும் படி மந்தரமலையினால் பாற்கடலைக் கடைந்து கொடுத்தவனும், இந்திரனது மகனும் ஆகிய வாலியினது மகன் யான்" என்று கூறினான்.

**(அ-ரை).** செம்மல் : சிறந்தவன், இங்கு மகனைக் குறித்தது. வேலை : கடல்; சுந்தரம் : அழகு; சிந்துரம் : யானை; பொருப்பு : மலை.

**652.** *அங்கதனுக்கு இராவணன் வானர ஆட்சியைத் தருவேனெனல்.*

**(க - ரை):** "என் மைந்தனே! உன் தந்தை எனது நண்பன். அதற்குத் தருமமும் சாட்சியுண்டு அத்தகைய உயர்நிலையில் உள்ள நீ ஒரு சிறிய மனிதனுக்கு ஏவும் தூதனானால் இழிவான செயலல்லவா. ஆகையினால் நீ அவனிடத்தை விட்டு இங்கே வந்துவிடு. நான் உனக்கு வானர ஆட்சி உரிமையை வாங்கி வழங்குவேன்" என்றான்.

**(அ-ரை):** உந்தை : உன் தந்தை; அறம் : தருமம்; சான்று : சாட்சி; நிந்தனை : பழி; தாழா(து). தாமதிக்காமல்; வந்தனை : விரைந்து வருவாய் என்ற பொருளில் வந்த காலவழுவமைதி.

**653.** *இராவணன் அங்கதனை வேண்டல்.*

**(க - ரை):** தன் முடிவு காலத்திற்கு அணிமையில் வந்து கொண்டிருக்கும் இராவணன் அங்கதனைப் பார்த்து, "மைந்தனே! பெற்ற தகப்பனைக் கொன்ற ஒரு பகைவன் பின்னே தலை சுமந்து இரண்டு கைகளையும் தொங்கவிட்டுக் கொண்டு நாணமின்றி அவன் ஏவலாளனாய் ஒரு அறிவிலியைப் போல வாழ்ந்து கொண்டிருக்கின்றாய் என்னும் பழியை நீந்திக் கொள்; என்னிடம் வந்து விடு. உன் உதவியால் சீதையை நான் அடைவேன். உன்னையும் என் மைந்தனாகப் பெறுவேன். இனி இந்த உலகத்தில் எனக்கு அரிய பொருள் என்ன இருக்கின்றது" என்று கூறினான்.

**(அ-ரை):** தாதை ; தந்தை; நாற்றி : தொங்கவிட்டு; சிறுவன் : மகன்; இறுதி : முடிவுகாலம்.

650. 'கங்கையும் பிறையும் சூடும்
கண்ணுதல், கரத்து நேமி
சங்கமும் தரித்த மால்,மற்(று)
இந்நகர் தன்னைச் சாரார்;
அங்கவர் தம்மை அன்றி,
மனிதனுக் காக, அஞ்சா(து),
இங்குவந்(து), இதனைச் சொன்ன
தூதன்நீ யாவன்?' என்றான்.

651. 'இந்திரன் செம்மல, பண்(டு),ஓர்
இராவணன் என்பான் தன்னைச்
சுந்தரத் தோள்க ளோடும்,
வாலிடைத் தூங்கச் சுற்றிச
சிந்துரக் கிரிகள் தாவித
திரிந்தனன்; தேவர் உண்ண
மந்திரப் பொருப்பால் வேலை
கலக்கினன்;மைந்தன்' என்றான்.

652. 'உந்தைஎன் துணைவன் அன்றே?
ஒங்(கு) அறச சான்றும் உண்டால்!
நிந்தனை இதன்மேல் உண்டோ
நீ அவன் தூதன் ஆதல்?
தந்தனன் நினக்கு யானே
வானரத் தலைமை;தாழா
வந்தனை!நன்று செய்தாய்!
என்னுடை மைந்த'' என்றான்

653. 'தாதையைக் கொன்றான் பின்னே
தலைசுமந்து இருகை நாற்றிப்,
பேதையன் என்ன வாழ்ந்தாய்!
என்ப(து) ஓர் பிழையும் தீர்ப்பாய்!
சீதையைப் பெற்றேன்! உன்னைச்
சிறுவனும் ஆகப் பெற்றேன்:
ஏ(து) எனக்(கு) அரிய(து)?'என்றான்
இறுதியின் எல்லை கண்டான்.

**654.** *இராவணன் சொற்கேட்ட அங்கதன் சிரிப்பு.*

(க - ரை): "இராவணனே! வாயில் வந்தவற்றைச் சொல்லி என்னை நீ வசஞ் செய்ய முயல்வாயேயானால் அதில் ஏதோ ஒரு சூழ்ச்சி இருக்கிறதென்று ஆராய்தற்குரியதல்லவா? ஒரு தூதுவனாக வந்து அதன் பயனாக ஒரு அரசச் செல்வத்தை, அதுவும் நீ தர நான் பெற்றுக் கொள்வது எது போல்வது என்றால், ஒரு சிங்கம் தனக்குரிய அரசாட்சியை ஓர் நாயின் கையால் வாங்கிப் பெற்றுக் கொள்வது போலாகும்" என்று அங்கதன் கூறிச் சிரித்தான்.

(அ-ரை): ஆய்தரத்தக்கது : ஆராயச்சி செய்தற்குரியது; நிகர் : ஒப்புமை; அரசது: அரசு—அது : பகுதிப் பொருள்விகுதி; ஆள்கை : தொழிற் பெயர்; சீயம் : சிங்கம்; நக்கான் : சிரித்தான்.

**655.** *அங்கதன், இராமன் சொல்லியவற்றை இராவணனுக்குக் கூறுதல்.*

(க - ரை): இராமன் என்னை அழைத்து, "அங்கதனே! நீ, தன் குலம் முழுவதும் அழிக்க இருக்கும் பாவியும், போருக்கு வருவதற்கஞ்சிக் காவலான இடத்தில் பதுங்கிக் கிடக்கின்றவனும் ஆகிய இராவணனிடம் சென்று 'என் தேவியை விடுக அல்லது போர்க்களத்தில் எதிர்ந்து என்னோடு போர் செய்து தன் ஆவியை விடுக ஆகிய இவ்விரண்டிலொன்று செய்க' என்று சொல்லுமாறு என்னைத் தூதனுப்பினான்" என்று அங்கதன் கூறினான்.

(அ-ரை): கூவி : அழைத்து; அமர் : போர், அரண் : காவல்.

**656.** *இதுவும் அது.*

(க - ரை): "தன் பாட்டியாகிய தாடகையின் உடம்பைப் பருந்துகள் உண்ணும்படி நான் வெட்டி வீழ்த்திய காலத்தும், மாமனாகிய சுபாகு என்னோடு எதிர்ந்து தன் படை வீரரோடு அழிந்த காலத்தும், அடுத்து வனத்திலிருக்கும் போது எங்களிடம் வந்த தங்கையாகிய சூர்ப்பணகையின் மூக்கையும் முலையையும் என் தம்பி சிதைத்த காலத்தும், வருவதற்கு அஞ்சியிருந்தவன் இனிமேல் செய்யும் ஆண்மையும் உண்டோ?" என்று இராமன் பழித்துரைத்ததை அங்கதன் இராவணனிடம் கூறினான்.

(அ-ரை): யாக்கை : உடம்பு; எம்பி : என்தம்பி; ஆண்மை : வீரச்செயல்.

**657.** *திரும்பி வந்த அங்கதன் இராவணனது உள்ளக் கருத்தை இராமனிடம் தெரிவித்தல்.*

(க - ரை): இராமனை வந்து அங்கதன் அடைந்த போது "இராவணனது உள்ளக் கருத்தையெல்லாம் உரைப்பாயாக" என்று கேட்டலும், அதற்கு அங்கதன் அதை விரித்துரைப்பதால் என்ன பயன்? சுருக்கமாகக் கூறுமிடத்து அவன் பத்துத் தலைகள் கீழே விழுந்து ஒழிந்தாலன்றிச் சீதையின் மேல் வைத்த ஆசையை ஒழியான்" என்று கூறினான்.

(அ-ரை): உற்றபோது : அடைந்தபொழுது; கொற்றவீரன் : வெற்றி வீரன், இராமன்; முற்ற : முழுவதும்; ஓதி : சொல்லி.

654. 'வாய்தரத் தக்க சொல்லி,
என்னை உன் வசம்செய் வாயேல்,
ஆய்தரத் தக்க(து) அன்றே?
தூது வந்(து) அரச(து) ஆள்கை,
நீதரக் கொள்வென் யானே?
இதற்(கு)இனி நிகர்வே(று) எண்ணின்,
நாய்தரக் கொள்ளும் சீயம்
நல்அர(சு)!' என்று நக்கான்.

655. 'கூவியின்(று) என்னை 'நீபோய்த்
தன்குலம் முழுதும் கொல்லும்
பாவியை, அமருக்(கு) அஞ்சி
அரண்புக்குப் பதுங்கி னானைத்
தேவியை விடுக! அன்றேல்
செருக்களத்(து) எதிர்ந்து தன்கண்
ஆவியை விடுக! என்றான்,
அருள் இனம் விடுகிலாதான்.'

656. 'பருந்துணப் பாட்டி யாக்கை
படுத்தநாள், படைஞ ரோடும்
மருந்தினும் இனிய மாமன்
மடிந்தநாள், வனத்துள் வைகி
இருந்துழி வந்த தங்கை
மூக்கும்வெம் முலையும் எம்பி
அரிந்த நாள், வந்தி லாதான்
இனிச்செய்யும் ஆண்மை உண்டோ?'

657. உற்ற போ(து)அவன் உள்ளக் கருத்தெலாம்
கொற்ற வீரன் 'உணர்த்'தென்று கூறலும்,
'முற்ற ஓதிஎன்? மூர்க்கன் முடித்தலை
அற்ற போ(து) அன்றி ஆசை அறான்' என்றான்.

முதற்கண் நிகழ்ந்த இராம இராவணப் போரைப் பற்றிக் கூறுவது.

658. இராவணன் போர்க்களத்தை யடைதல்.

(க - ரை): மேல், கீழ், இடை என்று சொல்லப்படும் மூன்று உலகங்களையும் திக்குவிசயம் செய்து முழு வெற்றியும் அடைந்தவனான இராவணன் தனக்கு எதிராக ஊன்றி நின்ற பெரும்படைகளும் உடைந்து ஓடும்படியாகவும், போர் வீரர்களான அரக்கர்கள் ஆரவாரித்து எழவும் போர்க்களத்தில் வந்து தோன்றினன்.

(அ-ரை): உலைய : குலைய. ஆன்ற : மேலான.

659. இராவணன் போருக்கு வந்ததையறிந்த இராமன் நிலை.

(க - ரை): இராவணன் போர் புரிதற்கு வந்தான் என்று கேள்விப்பட, சீதையைப் பிரிந்த துயரினால் மெலிந்து சுருங்கியிருந்த இராமனது தோள்கள் இப்பொழுது மெலிவு நீங்கப் பூரித்தன.

(அ-ரை). அமர்த்தொழில் : போர்த்தொழில்; வன்மை : வலிமை; தீங்கு இங்கே துன்பத்தைக் குறித்தது. வீங்கின : பூரித்தன, ஆரியன் : பூசிக்கத் தக்கவன்.

660. அனுமானின் தோள்மேல் ஆரோகணித்த இராமனது தோற்றம்.

(க - ரை): அனுமான் பாற்கடலை ஒத்திருந்தான்; அப்பாற் கடலில் துயில் கொள்ளும் திருமாலை இராமன் ஒப்பானென்றாலோ, இராமன் தூங்கவில்லை. ஆகையால் இவ்வுவமை பொருந்தாது. அனுமான் வேதத்தைப் போன்றுள்ளான். அவ்வேதத்தின் முடியிலே கூறப்படும் ஞானப் பொருளை இராமன் ஒத்திருக்கின்றான் என்று உவமை கூறலாமேயன்றி இதைத் தவிர வேறு உவமை கூற முடியாது.

(அ-ரை): ஓதம் : கடல்; சிரம் : முடி; போதம் : ஞானம்; பொருவு : உவமை.

661. இராமனது வில்லின் நாணோசை.

(க - ரை): கரிய நிறத்தையுடைய இராமபிரானும், போர் புரிதற்கு ஏற்று நின்று தன் கை வில்லினது நாணையெறிந்தான். அவ்வோசையானது பிரளயகால உருத்திரன் உலகையெல்லாம் அழிக்குங் காலத்து மண், விண் முதலிய எல்லாப் பொருள்களையும் தன் வாயில் செலுத்தி உண்ணுங் காலத்து எழும் பேரோசையை ஒத்திருந்தது.

(அ-ரை): அஞ்சனம் : மை; அமர் : போர்; நாண் எறிதல் : நாணைத்தட்டி ஒலிசெய்தல்; வாய்ப்பெய்து : வாயில் விழுங்கி; ஓதை : ஓசை; ஆர்ப்பு : ஆரவாரம்.

## முதற் போர்ப் படலம்

658 ஊன்றிய பெரும்படை உலைய உற்றுடன்
ஆன்றபோர் அரக்கர்கள் நெருங்கி ஆர்த்தெழத்
தோன்றினன், உலகெலாம் தொடர்ந்து நின்றன
மூன்றையும் கடந்(து)ஒரு வெற்றி முற்றினன்.

659. ஆங்கவன் அமர்த்தொழிற்(கு) அணுகி னன்என,
'வாங்கினென சீதையை' என்னும் வன்மையால்
தீங்குறு பிரிவினல் தேய்ந்த தேய்(வு)அற,
வீங்கின ஆரியன வீரத் தோள்களே.

660. ஓதம் ஒத்தனன் மாருதி; அதன் அகத்(து) உறையும்
நாதன் ஒத்தனன் என்னிபோ,துயில் கிலன் நம்பன்;
வேதம் ஒத்தனன் மாருதி! வேதத்தின் சிரத்தின்
போதம் ஒத்தனன் இராமன்,வே(று) இதின்இலை பொருவே.

661. அண்ணல் அஞ்சன வணணனும்
அமர்குறித்(து) அமைந்தான்,
எண்அ ரும்பெருந் தனிவலிச்
சிலையை நாண எறிந்தான்;
மண்ணும், வானமும், மற்றைய
பிறவும்தன் வாய்ப்பெய்(து)
உண்ணும் காலத்(து) அவ்
உருத்திரன்ஆர்ப்(பு)ஒத்த(து) ஓதை.

**662.** இராமனோடு எதிர்த்துப் போர் புரிந்த இராவணன் தோல்வியுற்றுத் தான் ஏறி வந்த தேர், வில், அம்பு முதலியன யாவும் சிதைவுற்று, இராமனுக்கெதிரே வெறுங்கையோடு நிற்றல்.

**(க-ரை):** 'தருமத்தின் வழி நீங்கினவர்கள் அடையும் பயன்களெல்லாம் இப்படித்தான்' என்று உலகமெல்லாம் ஆரவாரிக்கவும், உடம்பு கருகவும், நாணினால் கால் பெருவிரல் நிலத்தைக் கிளைக்கவும், கீழே நோக்கிய கண்களையுடையவனாயும், ஒளி இழந்த முகத்தோடும், குனிந்த தலையோடும், ஆயுதமில்லாத கையைத் தொங்கவிட்டுக் கொண்டு விழுதிறங்கப் பெற்ற ஓர் ஆலமரத்தைப் போலத் தோன்றும் உடம்பையுடையவனாயும் நின்றான்.

**(அ-ரை):** இறங்கு: கீழ் நோக்குதல் (வளைதல்), மெய்: உடம்பு, எல்: ஒளி; நாற்றினன்: தொங்கவிட்டவன.

**663.** இராமன் இராவணனுக்குக் கூறும் பரிவுரை.

**(க-ரை):** "இராவணா! பெரும் போரிற் பகைவரை வெல்வதென்பது அறவழியினால் ஆகுமேயன்றி வீரத்தினால் வெற்றி காண்போமென்பது தேவர்களுக்கும் முடியாத காரியம் என்பதை உன் மனத்தில் உறுதியாகப் பதித்துக் கொள். பாவியே! விரைவாக உன் நகருக்குச் சுற்றத்தோடும் ஓடிவிடு. நீ இந்நேரம் என் அம்பால் இறந்திருப்பாய். நான் தனிமையாயிருக்கும் ஆயுதமில்லா எதிரியைக் கொல்லுதல் தகாதென்று மனமிரங்கி உன்னைக் கொல்ல நினைந்திலேன்" என்று கூறினான்.

**(அ-ரை)** வலித்தி: உறுதியாகக்கொள், சமம்: போர்; பறத்தி: பறப்பாயாக; கிளை: உறவினர்.

**664.** இதுவும் அது

**(க-ரை):** இராவணா! நீ சீதையைச் சிறையினின்றும் விட்டுவிடு. தேவர்களுக்கு, அவரவர்கட்குரிய உரிமையைக் கொடுத்து முன்னை நிலையில் நிற்கச் செய். அடுத்து, இலங்கை அரசாட்சியை விபீடணனுக்குப் பட்டம் கட்டு. அவன் சொற்படி நீ நடந்து வா. அப்படிச் செய்தால் உன்னைக் கொல்லாமல் விடுவேன். இன்றேல் உன் தலைகளை வெட்டித் தரையினில் வீழ்ப்பேன்" என்று இராமன் கூறினான்.

**(அ-ரை)** இறை: அரசன்; வாளி: அம்பு; தடிந்து: கொன்று.

**665.** இதுவும் அது.

**(க-ரை):** கமுக மரத்தின் மேல் வாளை மீன்கள் தாவிப் பாயும் நீர்வளம் பொருந்திய கோசல நாட்டின் அதிபனாகிய வள்ளல் இராமபிரான் இராவணனைப் பார்த்து, "ஆண்மைக் குணமுடைய வீரனே! உனக்குத் துணையாக வந்த நால்வகைப் படைகளும் பெருங் காற்றால் பூளைப் பூக்கள் பறந்தோடியதைப் போல இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன. அதை நீயும் பார்த்தாய். ஆதலால் போர் செய்வதற்கென்றால் இன்று போய் நாளை வா" என்று அருள் கூர்ந்து உரைத்தான்.

**(அ-ரை):** ஆள்: ஆண்மை—பண்புணர்த்தும் மைவிகுதியின்றி நின்றது மாருதம்: காற்று; அறைந்த: வீசியெறிந்த; நாகு இளம்: ஒருபொருட் பன்மொழி.

662. 'அறம்க டந்தவர் செயல் இ(து) என்(று)
உலகெலாம் ஆர்ப்ப,
நிறம்க ரிந்திட, நிலம்விரல்
கிளைத்திட நின்றான்;
இறங்கு கண்ணினன், எல்அழி
முகத்தினன், தலையன்,
வெறுங்கை நாற்றினன், விழுதுடை
ஆல்அன்ன மெய்யன்.

663. 'அறத்தி னால்அன்றி, அமரர்க்கும் அரும்சமம் கடத்தல்
மறத்தி னால்அரி(து); என்பது மனத்திடை வலித்தி!
பறத்தி நின்னெடும் பதிபுகக் கிளையொடும்; பாவி!
இறத்தி! யான்அது நினைக்கிலென் தனிமைகண்(டு)இரங்கி!'

664. 'சிறையில் வைத்தவள் தன்னைவிட்(டு)
உலகினில், தேவர்
முறையில் வைத்துநின், தம்பியை
இராக்கதர் முதல்வர்
இறையில் வைத்(து), அவற்(கு) ஏவல்செய்(து)
இருத்தியேல், இன்னும்
தரையில் வைக்கிலென் நின்தலை
வாளியின் தடிந்து.'

665. 'ஆள்ஐயா! உனக்(கு) அமைந்தன, மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை; இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வா'என நல்கினன்; நா(கு) இளம் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.

கும்பகருணன் வதையைப் பற்றிக் கூறுவது.

**666.** தோல்வியுற்ற இராவணன் இலங்கைக்குத் திரும்புதல்,

**(க - ரை):** திசையானைகளோடு போர் புரிந்து அவற்றை வென்ற மார்பின் வலிமை, கைலாய மலையைப் பேர்த்தெடுக்க முயன்ற தோள் வலிமை, இசையில் வல்ல நாரத முனிவற்கு ஏற்றம்படியான இனிய சொற்களைச் சொன்ன நாவின் திறமை, மாலையணிந்த பத்து முடிகள், சிவபெருமான் கொடுத்த வாளாயுதம் ஆகிய இவைகளையெல்லாம் தன் வீரத்தோடு போர்க்களத்திலே போட்டு விட்டு ஒரு வெற்றாளாய் இலங்கை புகுந்தான்.

**(அ-ரை).** வாரணம் : யானை, பொருத : போர்செய்த; வரை : மலை, **தார்** : மாலை.

**667.** இராவணன் நாணத்தால் தலைகுனிந்து பூமியை நோக்கியபடியே நகருக்குள் புகுதல்.

**(க - ரை):** இராவணன் தான் செல்லும்போது திசைகளில் ஒன்றையும் நோக்காமலும், தன் வகைப் பொருந்திய நகரை நோக்காமலும், கடல்போன்ற பெரிய சேனைகளை நோக்காமலும், மாதர்கள் பலரும் தன்னை நோக்க, அவர்களையும் நோக்காமலும், பூமிதேவியென்னும் பெண்ணையே நோக்கிக்கொண்டு நகருக்குள் புகுந்தான்.

**(அ-ரை).** மாதிரம் : திசை, காதலர் : மக்கள், தாது : மகரந்தப்பொடி, **பூதலம்** : பூமி.

**668.** இராவணன் தனியாக அரண்மனையை யடைதல்

**(க - ரை):** மந்திரிமார்களும், மாதர் கூட்டங்களும், சேனைப் பதிகளும், உறவினர்களும் ஆகிய இவர்களெல்லாம் இராவணன் நிலையைக் கண்டு ஒரு பதுமைபோல் திகைத்து நிற்க, இவர்கள் ஒருவருமில்லாமல் ஒரு யானை தன் கூடத்தில் புகுந்ததைப் போலத் தன் அரண்மனையை அடைந்தான்.

**(அ-ரை)** சுற்றத்தார் : சூழ இருப்பவர்கள், வாளநுதல் : ஒளி பொருந்திய நெற்றி; தந்திரச்சுற்றம் : சேனைத்தலைவர்; கிளை உறவு; சிந்துரம் யானைக்கு நெற்றியிலிடும் பொட்டு; கூடம் யானை கட்டுமிடம், கோயில் அரண்மனை.

**669.** அப்பொழுது இராவணனது மனநிலை.

**(க - ரை):** 'போரில் தோற்று அவமானப்பட்டுவந்த என் செய்தியை அறிந்தால் தேவர்களும், பூமியிலுள்ள அனைவரும், நான் அவமதித்துச் சிரித்த பகைவர்கள் அனைவரும் நகைப்பர்' என்ற அதற்கு நாணமடைகிலன்; 'நாளைக்குச் சானகியிடம் சென்று தன் வீரவுரை பகரும்போது அவள் சிரிப்பாளே' என்ற ஒன்றுபற்றியே நாணத்தினால் இராவணன் வருந்துகின்றான்.

**(அ-ரை):** வான், மண் ஆகியவை இடவாகுபெயர்கள். வேல்நகும் : வேல் போன்ற; நகும் : உவம வாசகம்; சாம்புகின்றான் : வருந்துகின்றான்.

## கும்பகருணன் வதைப் படலம்

666. வாரணம் பொருத மார்பும்,
வரையினை எடுத்த தோளும்,
நாரத முனிவற்(கு) ஏற்ப
நயம்பட உரைத்த நாவும்,
தாரணி மவுலி பத்தும்,
சங்கரன் கொடுத்த வாளும்,
வீரமும் களத்தே போக்கி
வெறுங்கையோ(டு) இலங்கை புக்கான்.

667. மாதிரம் எவையும் நோக்கான்;
வளநகர் நோக்கான்; வந்த
காதலர் தம்மை நோக்கான்;
கடல்பெருஞ் சேனை நோக்கான்;
தா(து)அவிழ் கூந்தல் மாதர்
தனித்தனி நோக்கத், நான்ஓர்
பூதலம் என்னும் நங்கை
தன்னையே நோக்கிப் புக்கான்.

668. மந்திரச் சுற்றத் தாரும், வாள்நுதல் சுற்றத் தாரும்,
தந்திரச் சுற்றத் தாரும், நன்கிளைச் சுற்றத் தாரும்,
எந்திரப் பொறியின் நிற்ப,யாவரும் இன்றித், தான்ஓர்
சிந்துரக் களிறு கூடம் புக்கெனக் கோயில் சேர்ந்தான்.

669. வான்நகும், மண்ணும் எல்லாம்
நகும்,மணி வயிரத் தோளான்,
'தான்நகு பகைஞர் எல்லாம்
நகுவர்'என்(று) அதற்கு நாணுன்;
'வேல்நகு நெடும்கண், செவ்வாய்,
மெல்இயல் மிதிலை வந்த
சானகி நகுவள்'என்றே
நாணத்தால் சாம்பு கின்றான்.

**670.** அரக்கர்கள் கும்பகர்ணனை எழுப்புதல்.

**(க - ரை) :** அரக்கர்கள் தூங்குகின்ற கும்பகர்ணனை நோக்கி, "கும்பகர்ண! மாயமான உங்கள் செல்வமெல்லாம் இன்றைக்குக் கீழே இறங்கிக்கொண்டிருக்கின்றது, எழுந்திருந்து அதைப் பார்! காற்றுடிபோலத் திரிந்து, பிடித்த வில்லோடு வரும் யமதூதர் கையிலகப்பட்டு இனிக்கிடந்து நன்றாகத் தூங்குவாயாக" என்று எழுப்பினார்.

**(அ-ரை):** கறங்கு : காற்றாடி; காலதூதர் : எமதூதர்.

**குறிப்பு:** இங்கு அவர்கள் கையாளும், தனடாலும் மோதுவது போன்ற சந்தம் அமைத்தலை முன் கூறப்பட்ட கைப படலத்தில், அவன் வரக்கைக்கு அமைந்த சந்தத்தோடு ஒப்பிடுக.

**671.** கும்பகர்ணன் இராவணனுக்கு அறிவுரை கூறுதல்.

**(க - ரை) :** "கொடிய போர் தொடங்கிவிட்டதோ? சானகியின் துயரமுகள் ஒன்றும் நீங்கவில்லையா? வானுலகும் மண்ணுலகும் பரவிய நமது புகழ் போய்விட்டதோ? நாம் அழியும் காலம் வந்துவிட்டதா?" என்று கும்பகர்ணன் இராவணனுக்கு நிதினை உணர்த்தத் தொடங்கினான்.

**(அ-ரை):** வெம் சமர் : கொடிய போர். அலகில . அளவில்லாத பொன்றும் : அழியும்.

**672.** இதுவும் அது.

**(க - ரை) :** "இராமபிரானிடத்தில் சீதையைக் கொண்டு போய் விட்டு, அவன் பாதங்களை வணங்கி, நின் சந்தேகிக்கத்தகாத தம்பியாகிய விபீடணனோடு கலந்து உறவாடியிருப்போமேல் நாம் பிழைத்தற்குரிய வகையாகும். அன்றேல், நாம் செய்யக்கூடிய காரியம் வேறொரு வகையும் உண்டு. அதைச் சொல்லுகிறேன் கேட்பாயாக" என்று கும்பகர்ணன் இராவணனிடம் கூறினான்.

**(அ-ரை):** தையல் : பெண்—இங்குச் சீதையைக் குறித்தது. சரணம் பாதம்; ஐயறு : சந்தேகிக்கத்தகாத; உய்திறம் : பிழைக்கும் வகை; ஆல் அசை.

**673.** இதுவும் அது.

**(க - ரை) :** "எதிரிகளோடு போர்புரியத் தொடங்கி, சேனைகளை வரிசையாக அனுப்பி, அவை இறப்பதைக் கண்டு நீ இங்கிருந்துகொண்டு வருந்துதல் அறிவன்று. நம்முடைய பலவகையான வலிமைகளையெல்லாம் ஒருங்கு சேர்த்து ஒரே சமயத்தில் எதிரியின்மேல் ஏவிப் போர் புரிவது அடுத்த முறையாகும்" என்று இராவணன் உணரும்படி கும்பகர்ணன் எடுத்துக் கூறினான்.

**(அ-ரை):** பந்தி : வரிசை; தேம்புதல் : வருந்துதல், மந்திரம் : இங்கு அறிவின்மேல் நின்றது. உந்துதல் : செலுத்துதல்.

670. 'உறங்குகின்ற கும்பகன்ன! உங்கள் மாய வாழ்வெலாம்
இறங்குகின்ற(து) இன்று காண்! எழுந்திராய்! எழுந்திராய்!
கறங்குபோல வில்பிடித்த காலதூதர் கையிலே
உறங்குவாய்! உறங்குவாய்! இனிக்கிடந்(து) உறங்குவாய்!

671. 'ஆனதோ வெம்சமர்? அலகில் கற்புடைச்
சானகி துயர் இனம் தவிர்ந்த(து) இல்லையோ?
வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ? புகுந்ததோ பொன்றும் காலமே?'

672. 'தையலை விட்(டு), அவன் சரணம் தாழ்ந்து, நின்
ஐயறு தம்பியொ(டு) அளவளாவுதல்
உய்திறம்; அன்(று)எனின், உளது, வேறும்ஓர்
செய்திறம்; அன்னது தெரியக் கேட்டி, ஆல்'

673. 'பந்தியில் பந்தியில் படையை விட(டு), அவை
சிந்துதல் கண்டு, நீ இருந்து தேம்புதல்
மந்திரம் அன்று; நம் வலியெலாம் உடன்
உந்துதல் தருமம்;' என்(று) உணரக் கூறினன்.

**674.** *இராவணன் கும்பகர்ணனைச் சினந்து கூறுதல்.*

**(க - ரை):** "அந்த இரண்டு மனிதர்களையும் வணங்கி, அதோடு அங்குள்ள கூன் முதுகையுடைய குரங்குகளையும் கும்பிட்டு, அவரோடு கூடியிருந்து உயிர்வாழும் தன்மை உன் தம்பி யாகிய விபீடணனுக்கும், உனக்கும் முறையாகும். யான் அத் தொழிலைச் செய்யமாட்டேன். நீ எழுந்து போவாயாக" என்று கூறினான்.

**(அ-ரை):** உய்தொழில் : பிழைக்கும் தொழில்; உம்பி : உன் தம்பி; எழுக போகென்றான் : எழுந்து போவென்றான. எழுக என்பது முற்றெச்சம்.

**675.** *இராவணன் 'போருக்குச் செல்ல ஆயுதம் கொணர்க' எனல்.*

**(க - ரை):** இராவணன் தன் முன்னின்ற ஏவலாளனை நோக்கி, "எனது தேர், ஆயுதம் முதலியவற்றைக் கொண்டுவா! நாம் போருக்குப் புறப்படுவதைப் போர்வீரர்கள் அனைவருக்கும் சொல்லித் தெரிவிப்பாயாக, எனக்கு எதிராக என்னோடு எதிர்த்துப் போர்புரிய மண்ணிலுள்ளோரும் வானுலகிலுள்ளோரும் அந்த இரண்டு சிறுவர்களோடு சேர்ந்துகொண்டு வருவார்களாக" என்று கூறிக்கொண்டு போர்க்களம் செல்லத் தொடங்கினான்.

**(அ-ரை):** சாற்று : சொல்வாயாக, கூறு. செரு, பொருநை. போர் புரிதல்; தொழிற்பெயர். வெம்போர் . கொடிய போர், போதல் மேயினன். போகத் தொடங்கினன்.

**676.** *போருக்குப் புறப்பட்ட இராவணனை விலக்கிக் கும்பகர்ணன், தான் போருக்கு எழுதல்.*

**(க - ரை):** "அண்ணா! உனக்குப் பதிலாகத் தேரில் நானே போருக்குப் புறப்படுகிறேன். ஆனால் ஒன்று. நான் போரில் வென்று வெற்றியோடு திரும்பி வருவேனென்று சொல்லமுடி யாது. விதி ஒன்று என் எதிரிலே நிற்கின்றது, என் பிடரியைப் பிடித்துத் தள்ளுகின்றது. ஆகையால் நான் போரில் இறப்பது உறுதி. நான் இறந்த பிறகு சீதையை விட்டுவிட்டு அதனால் உனக்கு நன்மையுண்டாகும்."

**(அ-ரை):** இவண் . இங்கு, பிடர் : பிடரி, பொன்றுவென் இறப்பேன். பொலம் : பொன்; அணிகலனைக் குறிப்பதால் கருவியாகுபெயர். பொலன் கொள் தோள் : பொன்னணியணிந்த தோளையுடையவள் (சீதை), அன மொழித்தொகை.

**677.** *இதுவும் அது.*

**(க - ரை):** "இலங்கை நகருக்கு அரசனே! அவர்கள் போரில் என்னை வென்று விடுவார்களேயானால், உன்னையும் வென்றுவிடு வர் என்பது உறுதி. ஆகையினால் நான் இறந்த பின்பும் சீதையை விடுவதைப் பற்றி ஆலோசித்து நிற்பது தவறாகும். அச் சீதையை மகிழ்வோடு இராமனிடம் கொடுத்து விடுதல் ஒரு தவப் பயனை யொன்றதாகும்."

**(அ-ரை):** பெய்வளை : வளையலையணிந்தவள்—அன்மொழித்தொகை.

674. 'மானுடர் இருவரை வணங்கி, மற்றும்அக்
கூன்உடைக் குரங்கையும் கும்பிட்(டு), உய்தொழில்,
ஊன்உடை உம்பிக்கும் உனக்கு மேகடன்;
யான்அது முடிக்கிலேன் எழுக போகென்றான்.

675. 'தருகஎன் தேர்ப்படை; சாற்(று)என் கூற்றையும்;
வருகமுன் வானமும மண்ணும் மற்றவும்;
இருகைவன் சிறுவரோ(டு) ஒன்றி, என்னொடும்
பொருகவெம் போர்'எனப் போதல் மேயினான்.

676. 'வென்(று)இவண் வருவன்என்(று)உரைக்கிலேன்;விதி
ஒன்றது; பிடர்பிடித்(து) உந்த நின்றது;
பொன்றுவென். பொன்றினுல், பொலன்கொள் தோளியை
நன்(று)என நாயக! விடுதி! நன்(று) அரோ.'

677. 'என்னைவென்(று) உளர்எனில், இலங்கை காவல!
உன்னைவென்(று) உயருதல் உண்மை; ஆதலால்
பின்னைநின்(று) எண்ணுதல் பிழை; அப் பெய்வளை
தன்னைநன்(கு) அளிப்பது தவத்தின் பாலதே'

678. கும்பகர்ணன் விடை பெற்றுப் போருக்கு எழுதல்.

(க-ரை): "அரசனே! சென்ற நாட்களிலிருந்து இன்று வரை நான் அறிந்தோ அறியாமலோ உனக்குச் செய்த குற்றங்கள் உளதேல் அவைகளைப் பொறுத்து மன்னிப்பாயாக என்றால் போற்றத் தக்கவனே! இனி நான் உன் முகத்தில் விழிக்கப் போவதில்லை. விடை பெற்றுக் கொண்டேன்" என்று போருக்கு எழுந்து புறப்பட்டுப் போனான்.

(அ-ரை) இறைநாள : இன்று—நாள; கொறறவ . அரசனே, அற்றது : ஒழிந்துவிட்டது. ஆரியன : பூசிககததகுந்தவன்; பெயர்நது : எழுநது.

679. விபீடணன் தன்னிடம் வந்தமைக்குக் கும்பகர்ணன் வருந்துதல்

(க-ரை): தன் முன்னே வந்து வணங்கின விபீடணனை உச்சி மோந்து, உயிருள் மூழ்கும்படியாக அன்போடு தழுவி, "பாவிகளாகிய எங்களிலிருந்து பிரிந்து என் தம்பி ஒருவன் மேல்நிலையடைந்தான் என நினைக்க மன மகிழ்ச்சியடைகிறேன். என மகிழ்ச்சியெல்லாம் சிதையும்படியாக, அறிவற்றவர்களைப் போல இராமபிரானிடத்தினின்றும் இங்குத் தனியே எதன் பொருட்டு வந்தாய்?" என்று கும்பகர்ணன் கண்களில் கண்ணீர் மழை போலச் சொரிய விபீடணனிடம் கேட்டான்.

(அ-ரை) புல்லி தழுவி; உய்ந்தனை பிழைததாய், உவகைகின்றேன் மகிழ்ச்சியடைகின்றேன, தெளிவிலார் : தெளிவான அறிவறறவர், மழையின மழைபோல.

680. இதுவும் அது.

(க-ரை): "தக்கோய்! நீதியும், அறத்தை உறுதியாகக் கொள்ளும் தன்மையும், அறிவுடைமையும் ஆகிய நறபண்புகள் எல்லாம் பிரமனைக் குறித்துத் தவஞ் செய்து பெற்றாய். அந்த இராமனால் என்றும் சிரஞ்சீவியாக இருக்கும் தன்மையும் அடைந்தாய். அப்படியிருந்தும் நம குலததிறகுரிய இழிதகவு மட்டும் இன்னும் நீங்கவில்லை போலும்."

(அ-ரை): புலமை . அறிவுடைமை, ஆற்றி . செய்து, விளிவிலா : சாவிலலாத, புனமை . இழிதகவு.

681. இதுவும் அது.

(க-ரை): "ஐயா! பூட்டிய வில்லை யேந்திய கையோடும், அனைவருக்கும் தெய்வமாகிய இராமன் இருக்கின்றான்; தோற்கடிக்க முடியாத அவன் தம்பி அருகில் நிற்கின்றான்; ஏனைய வீரர்களும் அவனைச் சூழ்ந்து நிற்கின்றார்கள். எங்களைக் கொல்வதற்கு எமனும நிற்கின்றான். எங்கள் ஊழ்வினையும் நின்றது. எங்கள் பக்கம் தோல்வியுறும் என்பது உறுதி. அப்படியிருக்க உனது மிக்க வலிமை கெடும்படியாக என்னிடத்திற்கு ஏன் வந்தாய்?"

(அ-ரை); இறையவன் : கடவுள்; மாற்றரும் : வலியைப் பிறரால மாறற முடியாத; கொல்லிய : கொல்வதற்காக; செய்யிய என்னும வாய்பாட்டு வினையெச்சம். நின்ற : நின்றது என்பதன் கடைக்குறை, வெவ்வலி : மிக்க வலிமை.

678\. 'இற்றைநாள் வரைமுதல் யான்முன் செய்தன
குற்றமும் உள எனில் பொறுத்தி கொற்றவ!
அற்றதால் முகத்தினில் விழித்தல்; ஆரிய!
பெற்றனென் விடை'எனப் பெயர்ந்து போயினான்.

679 முந்திவந்(து) இறைஞ்சி னானை,
மோந்(து),உயிர் முழ்கப் புல்லி,
'உய்ந்தனை ஒருவன் போனாய்,
எனமனம் உவக்கின் றேன்,என
சிந்தனை முழுதும் சிந்தத்,
தெளிவிலா போல மீள
வந்த(து)என் தனியே?' என்றான்,
மழையின்நீர் வழங்கும் கணணான்.

680\. 'நீதியும்,தருமம் நின்ற நிலைமையும், புலமை தானும்.
ஆதிஅம் கடவுளாலே அருந்தவம் ஆற்றிப் பெற்றாய்!
வேதியர் தேவன் சொலலால் விளி(வு)இலா ஆயுபெற்றாய்!
சாதியின் புன்மை இன்னும் தவிர்ந்திலை போலும் தக்கோய்!"

681\. ஏற்றிய வில்லோன், யார்க்கும
இறையவன், இராமன் நின்றான்;
மாற்றரும் தம்பி நின்றான்;
மற்றையோர் முற்றும் நின்றார்;
கூற்றமும் நின்ற(து), எம்மைக்
கொல்லிய; விதியும் நின்ற;
தோற்றல்எம் பக்கல் ஐய!
வெவ்வலி தொலைய வந்தாய்!

682. விபீடணன் கும்பகர்ணனை வேண்டல்.

(க - ரை) : "மேலான குணத்தையுடையவனே! நீ இராம பிரானையடைந்தால் அவன் உலக்கு அபயம் கொடுத்து இறுதியில் முத்தியின்பமும் நல்குவான். அந்த இராமபிரான் எனக்குக் கொடுத்த இலங்கை அரசாட்சியை நான் உனக்குக் கொடுப்பேன். பின் நீ இட்ட ஏவல்களைச் செய்வேன். இதனின் மிக்க உறுதி உனக்கு வேறு இல்லை. நான் உனது தம்பி. உனது மனக்கவலையை மாற்றி நமது குலத்தையும் விளக்குவாயாக."

(அ-ரை) : உத்தம : மேலான குணத்தையுடையவன்; மனக்க நோய் : மனக்கவலை; வாழி அசை.

683. இதுவும அது.

(க - ரை) : "ஐயனே! வேதங்களுக்கெல்லாம் தலைவனுகிய திருமாலின் அவதாரமாகிய இராமன், என்மேல் வைத்த அன்பினாலும், கருணையாலும உன்பால் என்னை அனுப்பினன். நமக்கு ஏற்ற காரியம் இராமனைச் சேர்ந்திருத்தலாகும். ஆகையினாலே தருமத தொடு மாறுபடாமல் அவனைக் காணும் பொருட்டு நீயே வருவாயாக" என்று கீழே விழுந்து அவன் இரண்டு பாதங்களையும் பற்றிக் கொண்டான்.

(அ-ரை) காதல் : அன்பு; கருமம : காரியம்; ஈதே : நீட்டல் விகாரம்; திறம்பாது : மாறுபடாமல்; போதுவாய் : வருவாய்.

684. அதற்குக் கும்பகர்ணன் மறுப்புரை.

(க - ரை) : "மாலையணிந்த மார்பையுடைய விபீடணனே! என்னை நெடுநாளாக வளர்த்துப் பாதுகாத்து, இன்று போர்க் கோலத்தோடு போருக்கு அனுப்பிய இராவணனுக்காக என் உயிரைக் கொடுப்பேனே யொழிய, நீரில் எழுத்தைப் போல் அழிந்து போகும் இலங்கையாளும் செல்வத்தைக் கருதி இராம னிடம் வாரேன். நீ என்னுடைய துயரத்தை நீக்கக் கருதினையே யாஞல் உடனே சென்று இராமனோடு சேர்வாயாக" என்று கும்பகர்ணன் கூறினன்.

(அ-ரை) நீரகமேலவாழ்வு . நீரில எழுதிய எழுத்தைப்போல நிலையில் லாத வாழ்வு; நச்சி : விருமபி; தார் : மாலை; கார் . மேகம்; கோலம் : அழகு; கடிதின் : விரைவாக.

685. இதுவும் அது.

(க - ரை) : "பிரமதேவனது வரத்தினாலே நீ அழியாத அற நெறியை மேற்கொண்டுள்ளாய். உலகம் இருக்கும் வரைக்கும் அழியாமல் என்றும் சிரஞ்சீவியாய் இருக்கின்றாய். ஆகையினால் உலகுக் கெல்லாம் நீ ஒரு தலைவனாக விளங்குகின்றாய். அத்தகைய உனக்கு இராமனோடு பழகியிருத்தல் தக்கதே. இழிவு பொருந்திய மரணத்தை விரும்புகின்ற எனக்குப் போர் செய்யும் இது புகழ் தருவதாகும்" என்று கும்பகர்ணன் விபீடணனிடம் கூறினன்.

(அ-ரை): வழுவிலா : குற்றமற்ற; உலைவு இலா : அழிவில்லாத; புலைஉறு : இழிவு பொருந்திய; ஆல் : அசை.

682. 'எனக்(கு) அவன் தந்த செல்வத்(து)
இலங்கையும், அரசும் எல்லாம்,
நினக்கு நான் தருவன்; தந்(து), உன்
ஏவலின் நெடிது நிற்பேன்;
உனக்(கு) இதின் உறுதி இல்லை;
உத்தம! உன்பின் வந்தேன்
மனக்கு நோய் துடைத்து, வந்த
மரபையும் விளக்கு! வாழி!'

683. 'வேதநா யகனே உன்னைக்
கருணையால் வேண்டி விட்டான்,
காதலால், என்மேல் வைத்த
கருணையால்; கருமம் ஈதே;
ஆதலால் அவனைக் காண,
அறத்தொடும் திறம்பா(து), ஐய!
போதுவாய் நீயே!' என்னப்
பொன்அடி இரண்டும் பூண்டான்.

684 'நீர்க்கோல வாழ்வை நச்சி,
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலம் செய்து விட்டாற்(கு)
உயிர் கொடா(து) அங்குப் போகேன்;
தார்க்கோல மேனி மைந்த!
என் துயர் தவிர்த்தி ஆயின
கார்க்கோல மேனி யானைக்
கூடுதி கடிதின் ஏகி.'

685. 'மலரின்மேல் இருந்த வள்ளல்
வழுவிலா வரத்தி னால்நீ
உலை(வு) இலாத் தருமம் பூண்டாய்;
உலகுள தனையும் உள்ளாய்;
தலைவன்நீ உலகுக் கெல்லாம்;
உனக்(கு) அது தக்கதே; ஆல்,
புலைஉறு மரணம் எய்தல்
எனக்(கு) இது புகழதே, ஆல்.

686. இதுவும் அது.

(க - ரை): "ஆலோசனையில்லாத ஒரு தலைவன் தீய காரியங்களைச் செய்ய எண்ணினால், அவனைப் பாதுகாக்கும் பொருட்டுத் திருத்த முடியுமானால் முயன்று திருத்தி நல்வழிப் படுத்தலாம். அவ்வாறு திருத்த முடியாவிடின் அதற்காகப் பகைவர் பக்கம் சேர்தல் நன்மை தருமா? போர் செய்தற்கு உரியவர்களாகி நம்மை உணவளித்துக் காத்த அவரின் முன் இறத்தலன்றோ அவர் உணவை உண்டதற்குக் கைம்மாறு ஆகும்!"

(அ-ரை) பொருதொழில் : போர்த்தொழில்; ஒருத்தர் : ஒருவர்.

687. இதுவும் அது.

(க - ரை) : "ஐயா! எமனை வெற்றி கொண்டவனாகிய நான், செப்புத் தகட்டினால் வேயப்பட்ட மதில் சூழ்ந்த இலங்கை நகர்ச் செல்வத்தை நிலையுடையதென்று கருதி, வாசனை பொருந்திய மாலையை அணிந்த என் அண்ணனது உயிரைக்கொன்ற ஒரு பகைவனை வாழ்த்துக் கூறிக்கொண்டு, அம்புபட்டு அதனால் துளை பொருந்திய புண்ணோடு கூடிய நெஞ்சோடு அப்பகைவனைக் கும்பிட்டு வாழ்ந்திருக்க நான் ஒருப்படேன்."

(அ-ரை) இஞ்சி . மதில்; வம்பு வாசனை; தெரியல் : மாலை; எம்முன என் அண்ணன், துன்னம : துளை; ஆடல் : வெற்றி

688. விபீடணனை இராமனிடம் செல்லுமாறு கும்பகர்ணன் கூறுதல்.

(க - ரை) : "எல்லோராலும் வணங்குவதற்குரிய தகுதியுடைய விபீடணனே! நீ இங்கே சற்றும் தாமதித்து நிற்கக்கூடாது; என் சொல் ஏற்றுக்கொள்ளத் தக்கதென்று கேட்பாயேயானால், இராம இலக்குவரோடு போய்ச் சேர்ந்து அவரோடும் பொருந்திய நட்பை விரும்புவாயாக. இனி ஒரு பேச்சும் சொல்வதற்கு இல்லை. உடனே திரும்புவாயாக" என்று கும்பகர்ணன் விபீடணனிடம் கூறினான்

(அ-ரை) தாழக்கிற்பாய் : தாமதம் செய்வாய்; கெழீஇய : பொருந்திய; வேட்கிறபாய : விரும்புவாய்; மாற்றம் : சொல் : சூழ்க்கிற்பாய் : ஆலோசிப்பாய

689. இதுவும் அது.

(க-ரை): "சிரஞ்சீவிப்பட்டம் அடைந்து நின்ற விபீடணனே! (ஒரு பொருள் அல்லது ஒரு செயல்) கைகூடி வருங்காலத்தில் செவ்வனே கைகூடி வரும்; அழிவு நேருங்காலத்து, எவ்வளவு தான் பாதுகாத்தாலும் அப்பொருள் அழிந்து போவதும் உறுதி நல்ல அறிஞர் நின்னிலும் யார் இருக்கின்றார்கள்? எங்களைப் பற்றிக் கவலை கொள்ளாமல் செல்வாயாக" என்று கும்பகர்ணன் விபீடணனிடம் கூறினான்.

(அ-ரை): சேகு அற : குற்றமற; ஏகுதி : செல்வாயாக.

686. 'கருத்திலா இறைவன், தீமை
கருதினால், அதனைக் காத்துத்
திருத்தலாம் ஆகின் அன்றே
திருத்தலாம்; தீரா(து) ஆயின்
பொருத்துறு பொருள் உண்டாமோ!
பொருதொழிற்(கு) உரியர் ஆகி
ஒருத்தரின் முன்னம் சாதல
உண்டவர்க்(கு) உரிய(து); அம்மா.'

687. 'செம்பிட்டுச் செய்த இஞ்சித்
திருநகர் செல்வம் தேறி,
வம்(பு) இட்ட தெரியல் எம்முன்
உயிர்கொண்ட பகையை வாழ்த்தி,
அம்பிட்டுத் துன்னம் கொண்ட
புண்உடை நெஞ்சோ(டு) ஐய!
கும்பிட்டு வாழ்கிலேன் யான்,
கூற்றையும் ஆடல் கொண்டேன்.'

688. 'தாழ்க்கிற்பாய் அல்லை, என்சொல்
தலைக்கொளத் தக்க(து) என்று
கேட்கிற்பாய் ஆயின் எய்தி,
அவரொடும் கெழீஇய நட்பை
வேட்கிற்பாய்; 'இனிஓர் மாற்றம்
விளம்பினல் விளை(வு) உண்(டு)' என்று
சூழ்க்கிற்பாய் அல்லை; யாரும்
தொழநிற்பாய்!' என்னச் சொன்னான்.

689. 'ஆகுவது ஆகும் காலத்து;
அழிவதும் அழிந்து சிந்திப்
போகுவது; அயலே நின்று
போற்றினும் போதல் திண்ணம்;
சே(கு)அறத் தெளிந்தோர் நின்னில்
யார்உளர்? வருத்தம் செய்யா(து)
ஏகுதி; எம்மை நோக்கி
இரங்கலை; என்றும் உள்ளாய்!'

**690.** *கும்பகர்ணன் போர்க்களத்தில் நின்று இலக்குவனோடு வீரவுரை பகர்தல்.*

**(க - ரை):** "நாங்கள் ஆண் மக்கள் மூவர். எங்களிடையில் அருமையான ஒரு பெண் கொடியைத் தவஞ்செய்து தங்கையாகப் பெற்றோம். அவள் உங்களுக்கு ஒரு குற்றமும் செய்யவில்லை. அப்படியிருந்தும் அந்தப் பெண் பிள்ளையின் மூக்கை யரிந்த வீர ஆடவனே! பின்னும் அவளது கூந்தலைப்பற்றி இழுத்த அந்தக் கையை வெட்டிக் கீழே வீழ்த்துவேன். வலிமையுண்டேல் அதைக் காத்துக்கொள்" என்றான்.

**(அ-ரை):** செய்தவம் : ஐம்பொறிகளை ஒறுத்துச் செய்த தவம், நாசி மூக்கு; ஈர்த்த : இழுத்த, தலம் : நிலம்.

**691.** *அதற்கு இலக்குவன் மறுமொழி.*

**(க - ரை):** கரிய நிறத்தையுடையவனாகிய கும்பகர்ணன் இவை கூற, வலிமை மிக்க தோளையுடையவனாகிய இலக்குவன அதற்குப் பதிலாக, "எதிரிகளாகிய உங்களிடத்தில் வில்லினால் சொல்லுவோமேயன்றி உங்களைப்போல மிக்க வலிமை வெட்கமடையும்படி சொல்லினால் சொல்ல நாங்கள் படிக்கவில்லை" என்று கூறினான்.

**(அ-ரை):** அல் : இருட்டு; அனையது : அது, மல வலிமை, மாற்றம் மறுமொழி; மெய்ம்திறல் : மிக்க வலிமை, வெள்க : வெட்கமடைய.

**692.** *இராமனுக்கும் கும்பகர்ணனுக்கும் நேர்ந்த போரில் அரக்கர் சேனை அழிந்த நிலைமையைக் கூறுவது.*

**(க - ரை):** வேதங்களுக்கெல்லாம் தலைவனாகிய இராமபிரான் கொடிய அம்புகளை வெவ்வேறு விதமாகச் செலுத்திச் செய்த போர்த்திறனை எடுத்துச் சொல்வதற்கு என்ன உள்ளது? தேவர்களும், போர்க்களத்திற்கு வந்து பொருத அரக்கர்கள் இறந்துபட்டமையால் அவர்களைத் தேவலோகத்தில் கண்டார்கள். இறந்த அரக்கக் கணவர்களின் உடலைத்தேடும் அரக்கியப்பெண்களே போர்க்களத்தில் காணப்பட்டனர். மலையினும் பெரிய உடலையுடைய அரக்க வீரர்களை ஒருவரும் காணவில்லை.

**(அ-ரை)** வேதநாயகன் : திருமால், வழக்கம் : (அம்பு) வழங்குதல், சொரிதல்; உம்பர் : தேவர்; வெம்களம் : கொடிய போர்க்களம்.

**693.** *கும்பகர்ணன் துயரம்.*

**(க - ரை):** 'இராமனது விற்போர் வலிமைக்கு இந்த ஒரு இராவணன் அல்ல; ஆயிரம் இராவணராயினும் ஈடாகார். நான் கைகளும் கால்களும் இழந்து விட்டேன். எனக்கு உதவ வேறு ஒருவரையும் காணேன். இராவணன் காமநோய் கொண்டு முடிந்த முடிபு என்னே! என்றும் நீடித்து வாழக்கூடியவனாகிய இராவணனுக்கு இனிப் பிழைக்கும் வழி இல்லை.' இவ்வாறு கும்பகர்ணன் தன் உள்ளத்திலே எல்லாவற்றையும் உணர்ந்து துயரம் அடைந்தான்.

**(அ-ரை):** அமைவிலர் : ஈடாகார்; மையல் நோய் : காமநோய்; வரம்பின்றி : எல்லையில்லாமல்; உய்யுமாறு : பிழைக்கும் வகை.

690. 'பெய்த வத்தின்ஓர் பெண்கொடி எம்முடன் பிறந்தாள்
செய்த குற்றம்ஒன்(று) இல்லவள், நாசி,வெம் சினத்தால்
கொய்த கொற்றவ! மற்றவள் கூந்தல்தொட்(டு) ஈர்த்த
கை,தலத்திடைக் கிடத்துவென்; காக்குதி!' என்றான்.

691. அல்லி னால்செய்த நிறத்தவன், அனையது பகர
மல்லி னால்செய்த புயத்தவன் 'மாற்றங்கள் நும்பால்
வில்லி னால்சொலலின் அல்லது, வெம்திறல் வெள்கச்
சொல்லி னால்சொலக் கற்றிலம் யாம்'எனச் சொன்னான்.

692. வேதநாயகன் வெம்கணை வழக்கத்தின்
மிகுதியை வெவ்வே(று) இட(டு)
ஓது கின்ற(து)என்? உம்பரும்,
அரக்கர்வெம் களத்துவந்(து) உற்றாரைக்
காதல் விண் இடைக் கண்டனர்;
அல்லது கணவர்தம் உடல் நாடும்
மாதர் வெள்ளமே கண்டனர்;
கண்டிலர் மலையினும் பெரியாரை.

693. 'ஐயன் வில்தொழிற்(கு) ஆயிரம் இராவணர்
அமைவிலர்; அந்தோ!யான்
கையும் கால்களும் இழந்தனென்; வே(று)இனி
உதவலாம் துணைகாணேன்;
மையல் நோய்கொடு முடித்தவா தான்,என்றும்
வரம்(பு)இன்றி வாழ்வானுக்(கு)
உய்யு மா(று)அரி(து),' என்றும்தன் உள்ளத்தின்
உணர்ந்(து) ஒரு துயர் உற்றான்.

**694.** கும்பகர்ணன் இராமனை வேண்டுதல்.

**(க - ரை):** "யாவருக்கும் முதலானவரே! அரச வடிவங் கொண்டு பூமியில் அவதரித்த வேதத்திற் கூறும் பரம்பொருளே! என் தம்பியாகிய விபீடணன் நீதிமுறைப்படி சிறந்த வழியில் நடப்பவனேயன்றித் தன் சாதிக்குரிய தீயவழியில் நடப்பவன் அல்லன். அவன் உன்னை அடைக்கலமடைந்தான். நானும், அவனை அடைக்கலமாக ஏற்றுக்கொள்ளுமாறு உம்மை வேண்டு னேன்."

**(அ-ரை):** சிறுநெறி : தாழ்வான வழி, வேதியா : வேதத்திற கூறப்படும் பரம்பொருளே.

**695.** இதுவும் அது.

**(க - ரை):** "அந்தப் பாவியாகிய இராவணன் விபீடணனை நம் தம்பியென்று சற்றும் எண்ணமாட்டான், அவனைக் கண்டவுடன் கொன்று விடுவான் ஆதலால் எம்பெருமானே! இலக்கு வனையும், உன்னையும், அனுமானையும் பிரியாமல் விபீடணன் உங்களோடு தங்கி யிருக்குமாறு அருள்புரிவீராக. இதை நான் உம்மிடம் வேண்டிக்கொள்கிறேன்."

**(அ-ரை).** தகவு : மேன்மைக்குணம; இறை : சிறிதும, நல்கான் : மனமிரங்கான்; உம்பி : உன் தம்பி, எம்பி : என் தம்பி.

**696.** இதுவும் அது.

**(க - ரை):** "என் முகத்தைப் பார்த்து, இது மூக்கில்லாத முகம் என்று முனிவர்களும் தேவர்களும பார்த்துச் சிரிப்பார்கள். அவர்கள் பார்ப்பதற்கு முன்னமேயே என் தலையை உமது அம்பால் கொய்து, அக்கொய்த தலையைக் கடலிலே வீழச் செய்வீராக! இது, அடியேன் உன்னை வேண்டும் வரம்" என்று கும்பகர்ணன் இராமனிடம் வேண்டினான்.

**(அ-ரை):** நுன் : நின்; நோக்காமை : நோக்குவதற்கு முன்.

**697.** கும்பகர்ணன் வேண்டியபடியே இராமபிரான் செய்தல்.

**(க - ரை):** 'கும்பகர்ணன் நம்மிடத்தில் வரம் கேட்டுக் கொண்டான். இனி அதை மறுப்பது முறையன்று' என்று கருதி இராமபிரான் உடனே தன் வில்லையெடுத்து ஒரு அம்பு தொடுத்தார். அக்கணை உடனே சென்று கும்பகர்ணன் தலையைக் கொய்து மீண்டது. இராமபிரான் அத்தலையை வாயு அம்பால் கடலில் ஆழமான நடுப்பாகத்தில் புதைத்தார்.

**(அ-ரை):** உரம் : வலிமை; தடம்சிலை : பெரியவில்; கொளுவா : பொருந்த வைத்து; சிரம் : தலை; அரம் : பாதாளம்; அழுவம் : நடு.

694. 'நீதியால் வந்த(து)ஒரு
நெடும்தரும நெறிஅல்லால்
சாதியால் வந்தசிறு
நெறிஅறியான் என்தம்பி;
ஆதியாய்! உனை அடைந்தான்;
அரசர்உருக் கொண்(டு) அமைந்த
வேதியா! இன்னம் உனக்(கு)
அடைக்கலம் யான் வேண்டினேன்.'

695. 'தம்பியென நினைந்(து) இரங்கித்
தவிரான்அத் தக(வு) இல்லான்;
நம்பிஇவன் தனைக்காணின்
கொல்லும்; இறை நல்காதேல்;
உம்பியைத் தான்,உன்னைத்தான்,
அனுமனைத்தான், ஒருபொழுதும்
எம்பிபிரி யான்ஆக
அருளுதி!யான் வேண்டினேன்.'

696 'மூக்கிலா முகம்என்று முனிவர்களும அமரர்களும்
நோக்குவார், நோக்காமை நுன்கணையால என்கழுத்தை
நீக்குவாய்! நீக்கியபின் நெடும்தலையைக் கருங்கடலுள்
போக்குவாய்! இது நின்னை வேண்டுகின்ற பொருள்'என்றான்.

697. 'வரங்கொண்டான் இனிமறுத்தல்
வழக்(கு)அன்(று)'என்(று) ஒருவாளி
உரம்கொண்ட தடம்சிலையின்
உயர்நெடுநாண் உள்கொளுவாச்,
சிரம்கொண்டான்; கொண்டதனைத்
திண்காற்றின் கடும்படையால்,
அரம்கொண்ட கருங்கடலின்
அழுவத்துள் அழுத்தினான்.

இராவணன் சனகனைப்போல் ஒரு போலி உருவஞ்செய்து சீதைக்குக் காட்டி அவளை இணங்குவிக்கக் கருதுதலைப்பற்றிக் கூறுவது.

**698.** இராவணன் சீதையிடம் தன் வேட்கையைக் கூறுதல்.

**(க - ரை) :** "அறத்தான் ஈட்டிய நிதியை ஒப்பீர்! தேவாமிர்தத்திலும் இனிய தோற்றமுடையீர்! நான் பிறவிப்பயனை இழக்கும்படிச் செய்ய வந்தீர். உமது பெரிய அழகானது என் மானத்தைக்கெடுக்க, அதனால் நான் செய்த பெரிய காரியங்கள் எல்லாம் மறந்துவிட்டன. ஆசை நோயால் இறந்து இறந்து பெற்ற வரத்தினால் உயிர் பிழைத்து வருகின்றேன். இவ்வாறு, நான் செத்து செத்துப் பிறக்கும் என் நிலைமையை அறியக்கூடிய வலியுள்ளவர் யார் உள்ளார்?"

**(அ ரை):** ஈட்டார . வலிமையுடையவர்கள.

**699.** இதுவும் அது.

**(க - ரை).** "அமுதம் போன்ற சொற்களையுடையீர்! நடு நிலைமையோடு ஆராய்ந்து பார்த்தால், முற்காலத்தில் அகலிகை என்பவளிடத்தில் இந்திரன் சென்று தன் காதலை உணர்த்த, அவளும் அதை யேற்று அவனுடன் கலந்திருந்தாள். அதனால் அவள் யாதேனும் குற்றமடைந்தாளா? இல்லை. நான் உம்மிடம் கொண்ட ஆசை நோய்க்கு உமது அழகிய குமுத மலர் போன்ற சிவந்த வாயினின்று வரும் அமுதத்தைத் தவிர வேறு மந்திரமும் மருந்தும் கிடையாது."

**(அ-ரை)** அந்தரம நடுநிலைமை; மையல்நோய் · காதலநோய

**700.** அதற்குச் சீதையின் மறுமொழி.

**(க - ரை) :** "உணவின்றிக் கிடக்கின்ற உடம்பைத்தாங்கி, உயர்ந்த புகழை விரும்பாமல் உன் முன்னால் நாணமில்லாமல் உயிர்தாங்கி இருக்கவில்லை. குற்றமற்ற நற்குணங்களையே அணிகலனைக் கொண்ட திருமேனியையுடைய புண்ணிய வடிவினனாகிய என் கணவனை, இன்னும் காணலாம் என்னும் ஆசையோடு உயிர் வைத்திருக்கின்றேன்."

**(அ-ரை)** யாக்கை . உடமபு; நவைஅறு : குற்றமற்ற , பூண : அணிகலன்.

**701.** சீதை இராவணனைச் சினந்துரைத்தல்.

**(க - ரை) :** "இராவணா! போர்க்களத்தில் இலக்குவன், நீ புறங்கொடுத்தோடுவதைத் தடுத்து நிற்க, இராமபிரான் உன்னுடைய தலைகளைச் சிதறி அரக்கர் கூட்டங்கள் முழுவதையும் வென்று எனக்கு அருளும் அவனது அழகைக் காண வேண்டுமென்னும் ஆசையே, சென்று சென்று அழியும் என் ஆவியை மாற்றி நிலை நிறுத்துகிறது" என்றாள்.

**(அ-ரை):** திரிக்கும் : மாறுபடுத்தும் ; செரு : போர்;புறக்கொடை : புறங்கொடுத்தல்; காணிய . காணுவதற்காக.

## மாயா சனகப் படலம்

6698. 'அறம்தரு செல்வம் அன்னீர்!
அமுதினும் இனியீர்! என்னைப்
பிறந்திலன் ஆக்க வந்தீர்!
பேர்எழில் மானம் கொல்ல
மறந்தன பெரிய போன;
வரம் எனும் மருந்து தன்னால்
இறந்(து) இறந்(து) உய்கின் றேன்யான்,
யார் இது தெரியும் ஈட்டார்?'

6699. 'அந்தரம் உணரின், மேல்நாள்
அகலிகை என்பாள், காதல்
இந்திரன் உணர்த்த நல்கி
எய்தினள், இழுகுற் றாளோ?
மந்திரம் இல்லை, வேறோர்
மருந்தில்லை மையல் நோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வாய்
அமு(து) அலால்; அமுதச் சொல்லீர்!'

6700. 'ஊண் இலா யாக்கை பேணி,
உயர்புகழ் சூடா(து), உன்முன்
நாண் இலா(து) இருந்தேன் அல்லேன்!
நவைஅறு குணங்கள் என்னும்
பூண் எலாம் பொறுத்த மேனிப்
புண்ணிய மூர்த்தி தன்னைக்,
காணலாம் இன்னும், என்னும்
காதலால் இருந்தேன்; கண்டாய்!'

6701. 'சென்றுசென்(று) அழிக்கும் ஆவி
திரிக்குமால், செருவில் செம்பொன்
குன்றுநின்(று) அனைய தம்பி,
புறக்கொடை காத்து நிற்பக்,
கொன்றுநின் தலைகள் சிந்தி,
அரக்கர்தம் குலத்தை முற்றும்
வென்றுநின்(று) அருளும் கோலம்
காணிய கிடந்த வேட்கை.'

702. மாயா சனகனைக் கண்ட சீதையின் அரற்றல்.

(க - ரை): "தந்தையே! 'விருந்தாளிகளை உண்பித்துப் பின்னர் உண்டு வந்தீர்; பலவகை அறங்களையும் செய்தீர்; பகைவர்களின் இருப்பிடங்களையெல்லாம் அழித்தீர்; சிறந்த பல யாகங்களையெல்லாம் செய்து முடித்தீர்; கள் குடித்து மனி தரைத் தின்னும் கொடிய அரக்கரால் இன்று உமது வலிய தோள்கள் கட்டுண்டீர். இதனை நானும் கண்ணால் பார்க்க நேர்ந்ததே!" என்று சீதை மாயா சனகனைக் கண்டு புலம்பினாள்.

(அ-ரை): இருகை . இருப்பிடம், படரு கல கரை . எலகை; வயிரத திண்தோள் : வயிரம் பாய்ந்த திண்ணிய தோளகள.

703 இதுவும் அது.

(க - ரை.): "நீயே சேர்க்கையுடைய பகைவனையடைந்தீர். நீர் இப்படிப் பகைவர் கையில் அகப்பட்டுச் சிறைப்பட்டிருப்பதி னும், அப்பகைவர் அடியால் இறப்பதே மேலாகும். அரசர்களுக் கெல்லாம் உயர்ந்தவன் என்னும் மதிப்பைப் பெற்ற நீர், இப பொழுது பழியும் அடைந்தீர். இவைகளெல்லாம் நீராகத் தேடிக் கொண்டதன்று; பெண்ணாகிய என்னை மகளாகப் பெற்றமை யினால் அடைந்தவை யாகும். உம்மைப்போலப் பேறு பெற்ற வர்கள் யாவர்?"

(அ-ரை). பண் . பணபு; பகழி : அமபு; எண மதிபபு.

704. இதுவும அது.

(க - ரை): "சிறையிலிருந்து என் பகைவர்களையெல்லாம் அழியக் கண்டு மகிழ்ந்தேன் அல்லேன். என் தலைவனது திரு வடிகளைத் தலைக்கு அணியாக அணிந்தேனுமில்லேன். பத்துமாத காலமாக இங்கே சிறைப்பட்டு வருந்தினேன். உம்மை வமிசத் தோடும் அழித்தேன். அயோத்தி மன்னர்களின் புகழையெல்லாம் ஒழித்தேன்."

(அ-ரை): ஈறு : முடிவுகாலம்; எங்கோன் : எமது தலைவன்; வழி : வம்சம்; புனைந்தேன் : அணிந்தேன்.

705. இதுவும் அது.

(க - ரை): 'கொல்க' என்று ஒரு கொடிய பகையை என் கணவருக்குக் கொடுத்தேன்; எனது தந்தையின் தோள் களைக் கயிற்றினால் கட்டவும் கண்டேன். பிறந்த வீடு, புகுந்த வீடு என்னும் இரண்டு வீட்டுக்கும் துன்பத்தை உண்டாக்கினேன் அல்லவா? இத்தகைய யான் சாமானியமானவளா? இன்னும் இறக்காமல் இருக்கும் நான் இரங்கத்தக்கவளே யாவேன்."

(அ-ரை): கல் : மலை; பாசம் : கயிறு; இல் : வீடு; இன்னல் : துன்பம்; அளியத்தேன் : இரங்கத்தக்கவள்.

702 ‘இட்டுண்டாய்! அறங்கள் செய்தாய்!
எதிர்ந்துளோர் இருக்கை எல்லாம்
சுட்டுண்டாய்! உயர்ந்த வேள்வித்
துறையெலாம் கரையும் கண்டாய்!
மட்டுண்டார்; மனிதர்த் தின்ற
வஞ்சரால், வயிரத் திண்தோளை
கட்டுண்டாய்! என்னை யானும்
காண்கின்றேன் போலும் கண்ணால்’

703. ‘பண்பெற்றாரோடு கூடாப்
பகைபெற்றாய், பகழி பாய
விண்பெற்றாய் எனினும் நன்றால்!
வேந்தராய் உயர்ந்த மேலோர்
எணபெற்றாய்! பழியும் பெற்றாய்!
இது நின்னால் பெற்றேனா அன்றால்!
பெண்பெற்றாய் அதனால் பெற்றாய்;
யாவர்நின் பேறுபெற்றார்!’

704. ‘இருந்துநான் பகையை எல்லாம்
ஈறுஈண்(டு) அளவில் இன்பம்
பொருந்தினேன் அல்லேன்; எங்கோன்
திருவடி புனைந்தேன் அல்லேன்;
வருந்தினேன் நெடுநாள்; உண்மை
வழியொடு முடித்தேன்; வாயால்
அருந்தினேன் அயோத்தி வந்த
அரசர்தம் புகழை அம்மா!’

705. ‘கொல்எனக் கணவற்(கு) ஆங்கோர்
கொடும்பகை கொடுத்தேன்; எந்தை
கல்எனத் திரண்ட தோளைப்
பாசத்தால் கட்டக் கண்டேன்;
இல்எனச் சிறந்து நின்ற
இரண்டுக்கும் இன்னல் சூழ்ந்தேன்
அல்லனோ? எளியனோ யான்
அளியத்தேன் இறக்க லாதேன்?’

**706.** இதுவும் அது.

**(க - ரை):** "ஒப்பற்ற யாகம் செய்து என்னைப் பெற்றெடுத்த தந்தையின் தோள்கள் கட்டப்பட்டுப் புழுதியில் புரள்வதைப் பார்த்தேன். என்னைத் திருமணம் செய்து என் கையை மந்திரத் தோடு கூடிச் செய்யும் சடங்கின்படித் தொட்ட கணவனைப் பார்த்தற்கில்லாமலேயே நான் உயிர் நீங்கப் பெறுவேனோ?"

**(அ—ரை):** இணையறுவேள்வி . ஒப்பற்ற வேள்வி; புணை உறுதிரள்தோள் : தெப்பம்போன்ற திரண்டதோள்,—போராகிய கடலைக்கடப்பதற்குத் தோள்கள் ஒரு தெப்பம் போல்வதால் 'புணைஉறுதிரள தோள' என்றார். யாத்து : கட்டி; பூழி : புழுதி; வினையேன் : பாவியாகிய நான்.

**707.** இராவணனுக்கு இணங்குமாறு மாயாசனகன் சீதையினிடம் கூறுதல்.

**(க - ரை):** "செந்தாமரையில் வசிக்கும் மகாலக்ஷ்மியும், அனைவருக்கும் பொதுவானவள் என்னும் தன்மையடைந்தாள். பாவியாகிய நான் பெற்ற மகளே! உன்னால் நான் சிறையில் அடைக்கப் பட்டேன். நான் உயிர் விடுவது நன்றாகுமோ? தேவர்களுக்கும் அரசனாகிய இராவணனுக்கு, நீ தேவியாயிருப்பதனால் என்ன கெடுதி? சிறையில் வைக்கப்பட்டு வீணே துன்புறுகின்றாய்."

**(அ—ரை):** தையல் : பெண்; பொதுமை . யாவருக்கும பொதுவான தன்மை; அமரர் : தேவா; உழப்புகின்றாய் வருந்துகின்றாய்.

**குறிப்பு.** உலகில் செல்வம ஒருவரிடததேயன்றி முயற்சியுடையார் பலரிடத்தும் காணபபடுதலின இலககுமி பொதுமையுற்றாள் என்றார்.

**708.** மாயாசனகனைப் பற்றி ஐயுற்ற சீதை கடிந்து கூறுதல்.

**(க - ரை):** "தருமம் அழிய, தொன்று தொட்டு வருகின்ற முறைமை நீங்க, அரச குலத்திற்கு ஏற்ற வீரம் அழிய, சத்தியம் ஒழிய, பழி உண்டாக, வேதங்கள் கூறுகின்ற கொள்கைகள் தவற, நல்லொழுக்கம் குன்ற, தேவர்களும் பாராட்டத் தகுந்த புகழ்கெட இவற்றைக் கூறினாய். ஆராய்ந்து பார்த்தால் நீ உண்மையான சனகனோ என்று ஐயம் தோன்றுகிறது."

**(அ—ரை).** வழக்கு : தொனறுதொட்டு வருகின்ற முறைமை, வசை : பழி; பேணத்தக்க : பாராடடததக்க, திறம் · புகழ்.

**709.** இதுவும் அது.

**(க - ரை):** "நாயினும் கடைப்பட்டவனே! கட்டமைந்த வில்லையேந்திய என் கணவனைத் தவிர, வேறு ஆடவர் என் பக்கம் வருவார்களேயானால் அனலிற் பட்டு இறக்கும் விட்டிற் பூச்சிகள் ஆவார்கள் அல்லரோ? அரசனாகிய ஆண் சிங்கத்தோடும் கூடி வாழ்ந்திருந்த ஒரு பெண் சிங்கம் சாக்கடையில் உள்ள பண்டங்களைத் தின்று பிழைக்கின்ற நரியோடும் கூடி வாழ்வது உண்டோ?"

**(அ—ரை):** வரிசிலை : கட்டமைந்த வில்; மைந்தர் : ஆடவர்; மருங்கு : பக்கம்; அரி : சிங்கம்; பேடை : பறவைப் பெண் பெயர்; வழுவமைதியாக விலங்கின் பெண்மையைக் குறிக்கின்றது. அங்கணம் : சாக்கடை.

706. 'இணையறு வேள்வி மேல்நாள்
இயற்றிஈன்(று) எடுத்த எந்தை
புணைஉறு திரள்தோள் யாத்துப்
பூமியில் புரளக் கண்டேன்;
மணவினை முடித்(து)என் கையை
மந்திர மரபில் தொட்ட
கணவனை வினையேன் காண்டல்
இன்றியே கழிகின் றேனோ?'

707. 'பூவின்மேல் இருந்த தெய்வத்
தையலும் பொதுமை யுற்றாள்;
பாவியான் பயந்த நங்கை,
நின்பொருட் டாகப் பட்டேன்;
ஆவிபோய் அழிதல் நன்றோ?
அமரர்க்கும் அரசன் ஆவான்
தேவியாய் இருத்தல் தீதோ?
சிறையிடைத் தேம்பு கின்றாய்.'

708. 'அறம்கெட, வழக்கு நீங்க,
அரசர்தம் மரபுக்(கு)ஆன்ற
மறம்கெட, மெய்ம்மை தேய,
வசைவர, மறைகள் ஓதும்
திறம்கெட, ஒழுக்கம குன்றத்,
தேவரும் பேணத் தக்க
நிறம்கெட இனைய சொன்னாய்!
சனகன்கொல் நினையின் ஐயா?''

709. 'வரிசிலை ஒருவன் அல்லால்,
மைந்தர்என் மருங்கு வந்தார்
எரியிடை வீழ்ந்த விட்டில்
அல்லரோ? அரசுக் கேற்ற
அரியொடும் வாழ்ந்த பேடை,
அங்கணத்(து) அழுக்குத் தின்னும்
நரியொடும் வாழ்வ(து) உண்டோ
நாயினும் கடைப் பட்டோனே?'

**710.** *'இராமன் அம்பால் இறப்பாய்' என்று சீதை இராவணனிடம் கூறுதல்.*

**(க - ரை):** "என்னைக் கொல்லவும் உன்னால் ஆகாது; இந்த மாயாசனகனையும் கொல்லமுடியாது. என்மேல் வைத்த காதலால் உன்னையும் கொன்று ஒழிய மாட்டாய். இந்த உலகங்களையும் அழிக்க மாட்டாய். நானும் துன்பமுற்று அழியாப் புகழை உடையவளாக இருக்கின்றேன். இறுதியாக என் நாயகன் அம்பினாலே உன் உறவினர்களோடும் ஒழியப் போகிறாய்" என்றாள்.

**(அ-ரை):** இன்னல் : துன்பம்; கெடாபுகழ் : அழியாத புகழ்; எம்கோன் : எமது தலைவன்; கிளை : உறவினர்.

**711.** *கும்பகர்ணன் இறந்தமை கேட்ட இராவணன் புலம்புதல்.*

**(க - ரை):** "வலிய தோள்களையுடையவனே! நீ நீராடுங் காலத்தில் மகாமேருமலை உன்னுடைய கால் தேய்த்தற்குரிய கல்லாக இருந்ததே! அத்தகைய நீ ஒரு மனிதன் அம்பால் இறந்து ஒழிந்தாய் என்ற சொல்லன்றோ என்னைச் சுடுகின்றது" என்று புலம்பினான்.

**(அ-ரை):** மல் : வலிமை; விளிந்துளது : கொன்றுள்ளது; தோன்றல் : தலைவனே, விளிவேற்றுமை

**712.** *இதுவும் அது.*

**(க - ரை):** "மதயானையே! செந்தேனை முதலிய உணவுப் பொருள்களைப் பருகி, திக்குகள் தோறும் நீ சென்று வாழ அதைக் கண்டு இத்தனை காலமும் மகிழ்ந்திருந்தேன். இதோ, உனக்காக நானும் என்னுயிரை விட்டுவிடுகின்றேன்; உன்னைப் பிரிந்திருக்க மாட்டேன்; நீ தனியாகப் போக நான் மட்டும் இங்கு தாமதிக்க மாட்டேன்; உனக்குத் துணையாக நானும் அங்கு வந்து விடுகின்றேன்" என்று இராவணன் கும்பகர்ணனை நினைந்து புலம்பினான்.

**(அ-ரை):** மதக்களிறு : மதயானை; உய்ந்தேன் : மகிழ்ந்தேன் என்ற பொருளில் வந்துள்ளது. தாழ்க்கிலேன் : தாமதிக்கமாட்டேன்.

**713.** *அதிகாயனைப் பற்றி விபீடணன் இராமனிடம் கூறுதல்.*

**(க - ரை):** "தருமத்தைத் தவிர வேறொன்றும் அறியான்; வீரத்தையே தனக்கு அணிகலனாக அணிபவன்; வேறு பல அணிகலன்களை அணிய விரும்பான். தனக்கு நிகரானவற்றைச் சிதைக்கத் துணிவானன்றி, எளிய பிராணிகள் எவற்றையும் சிதைக்க மாட்டான்; மிக்க புகழைப் பெறுதலையே நல்லதென்று உணர்பவன்."

**(அ-ரை):** அறன் : தருமம்; மறன் : வீரம்; திறன் : வலிமை; பணி : ஆபரணம்; உறன் : மிகுதி; இசை : புகழ். அறன், மறன், திறன், உறன் ஆகியவை அடைப்போலி.

710. 'என்னையும் கொல்லாய்; இன்னே
இவனையும் கொல்லாய்; இன்னும்
உன்னையும் கொல்லாய்; மற்(று) இவ்
உலகையும் கொல்லாய்! யானோ
இன்னலும் நீங்கி, என்றும்
கெடாப்புகழ் எய்துகின்றேன்;
பின்னையும் எமகோன் அம்பின்
கிளையொடும் பிழையாய்' என்றாள்.

711 'கல்அன்றோ நீராடும் காலத்(து)உன் கால்தேய்க்கும்
மல்ஒன்று தோளாய் வடமேரு! மானிட வன்
வில்ஒன்று நின்னை விளிவித்துள(து), என்னும்
சொல்அன்றோ என்னைச் சுடுகின்றது தோன்றல்!'

712. 'செந்தேன் பருகித், திசைதிசையும் நீவாழ
உய்ந்தேன்; இனியின்று நானும் உனக்(கு) ஆவி
தந்தேன்; பிரியேன், தனிப்போகத் தாழ்க்கிலேன்;
வந்தேன் தொடர மதக்களிறே! வந்தேனால்!'

## அதிகாயன் வதைப் படலம்

713. 'அறன்அல் லதுஅல் லதுமா(று) அறியான்;
மறன்அல் லதுபல் பணிமற்(று) அணியான்;
திறன்அல் ல(து)ஓர் ஆருயிரும் சிதையான்;
உறன்நல் லதுபேர் இசைஎன்(று) உணர்வான்.

714. இரு சேனைகளின் கைகலப்பு.

(க-ரை): யானைகளும் பட்டொழியும் படியாகப் போர் புரிந்த வயிரத்தூணை யொத்த வானர வீரர்களின் கால்களால் உதைப்பதினாலும், கைகளால் மோதுவதினாலும், யமதூதர் கையிற்கயிறு போன்ற வால்களால் சுற்றி அடிக்கப் படுவதினாலும், அரக்க வீரர்கள் நிலத்தில் இறந்து புரண்டார்கள். அரக்கர்களுடைய வேலாயுதம் தங்கள் உடம்பிற் பாய்தலால் வானர வீரர்களும் இறந்து புரண்டார்கள்.

(அ-ரை) தோல்: யானை; துதைந்து: சிதறி; காலபாசம்: எமன்கயிறு; நிருதர்: அரக்கர்; கவியினவீரர்: வானரவீரர்.

715. தோற்றோடும் வானர வீரர்களை, இலக்குவன் தன் வில் நாணொலியால் தடுத்தல்.

(க-ரை): நூல்களெல்லாம் மறைந்து ஒளித்துக் கொண்டாலும் சொல்லப் பட்ட ஐம்பெரும் பூதங்களும் மேலே மறைந்து ஒளித்தாலும், பிரமன் இறந்தாலும், யுகாந்த காலத்தில் இடமகன்ற நான்கு வேதங்களின் ஆரவாரத்தைப் போல் இலக்குவன் வில்லொலி பரவிற்று.

(அ-ரை) நுவன்ற: சொல்லப்பட்ட, ஐம்பெரும் பூதங்கள்: நிலம், நீர், வளி, விசும்பு, நெருப்பு ஆகியவை; விரிஞ்சன்: பிரமன்; வீயினும்: இறந்தாலும், கால்: காற்று, கனம்: அகலம். இடமகன்ற.

716. அதிகாயன் இலக்குவனோடு போர் புரிதல்.

(க-ரை) இலக்குவன் விட்ட அம்புகளை மலையையும் வாட்டவல்ல தோள்களையுடையவனான அதிகாயன், தான் ஏவிய நெருப்பு அம்பினாலே துணித்து விலக்கி, 'இலக்குவ! நீ வலியவனானால் இதை விலக்கு பார்ப்போம்' என்று திட்டிவிடம் என்னும் பாம்பைப் போன்ற பதினாறு அம்புகளைச் சிதறி ஆரவாரித்தான்.

(அ-ரை). வெம்பகழி: கொடிய அம்பு; வெற்பு: மலை; வெதுப்பு: கலங்கச் செய்தல், விசும்பு: ஆகாயம்; வாளி: அம்பு.

குறிப்பு: திட்டிவிடம்: பார்த்த பார்வையினால் உயிரைக் கொல்லவல்ல ஒரு வகைப் பாம்பு. 'திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை' என்று முன்னரும் வருதல் காண்க.' இவ்வகைப் பாம்பு இலங்கையில் உள்ளன என்பர்

717. அதிகாயனோடு இலக்குவன் போர் புரிதல்.

(க-ரை): அதிகாயன் விட்ட அம்புகளால் அங்கதன் மார்பு பிளந்து,* ஒரு மலைச்சாரலிலே மழை பொழிவதைப் போன்ற இரத்த வெள்ளம், செந்நிறமாக விளங்குகின்ற அருவி போலப் பாய்ந்து சொரிவதை இலக்குவன் கண்டான். பின்பு, ஆயிரம் அம்புகள் எய்து, அதிகாயன் ஏறிவந்த தேரிலுள்ள குதிரைகளின் தலைகளைக் கொய்து, தேர்ப் பாகனுடைய தலையையும் கொய்து, அவனுடைய வில்லையும் முறித்தான்.

*(அ-ரை): சேய்: மகன்; செங்கேழ்: செந்நிறம்; கால்உயர்வரை: அடி பரந்த மலை.

714. தோல்படத் துதைந்(து)எழு வயிரத் தூண்நிகர்
கால்படக், கைபடக், கால பாசம்போல்
வால்படப் புரண்டனர் நிருதர்; மற்றவர்
வேல்படப் புரண்டனர் கவியின் வீரரே

715. நூல்மறைந்(து) ஒளிப்பினும், நுவன்ற பூதங்கள்
மேல்மறைந்(து) ஒளிப்பினும், விரிஞ்சன் வீயினும்
கால்மறைந்(து) ஒளிப்பிலாக், கலையின், கண் அகல்
நான்மறை ஆர்ப்(பு)என நடந்த(து) அவ்வொலி.

716. விட்ட வெம் பகழி தன்னை,
வெற்பினை வெதுப்பும் தோளான்
சுட்டதோர் கணையி னாலே
விசும்பிடைத் துணித்து நீக்கி,
எட்டினோ(டு) எட்டு வாளி,
'இலக்குவ விலக்காய்!' என்று
திட்டியின் விடத்து நாகம்
அனையன சிந்தி ஆர்த்தான்.

717. வாலிசேய் மேனி மேலும்,
மழைபொரு குருதி வாரி
கால்உயர் வரையின் செங்கேழ்
அருவிபோல் ஒழுகக் கண்டான்
கோல்ஒரு பத்து நூற்றால்
குதிரையின் தலைகள் கொய்து,
மேலவன் சிரத்தைச் சிந்தி,
வில்லையும் துணித்தான் வீரன்.

இந்திரசித்து, நாகபாசம் என்னும் அம்பை ஏவியதைப் பற்றிக் கூறுவது.

**718.** இந்திரசித்து இராவணனிடம் கடிந்து பேசுதல்.

(க - ரை): "புத்தியில்லாதவனே! அட்சகுமாரனைத் தரையோடு சேர்த்து அழித்தவனை அனுமானைக் கொல்லாமல், தூதுவனைக் கொல்லுதல் முறையன்று என்று விட்டாய். அவ்வாறு கொல்லாமல் விட்டதனால் இவ்விடத்திலுள்ள செய்திகள் எல்லாம் எதிரிகள் பக்கம் பரவலாயின. அதனால் மக்களுடைய உதவிகளை இழந்தாய். உன் வாழ்க்கையும் அழிந்தொழிந்தது."

(அ-ரை): விக்கற்கொடு வெவ்வுரை : (எதிரிகளின்) விருப்பமான பேச்சு, அத்தலைப்பெய்தல் : அந்தப் பக்கம் கலத்தல்; இற்றது : ஒழிந்தது

**719.** இந்திரசித்தின் படைப் பெருக்கம்.

(க - ரை): ஆயிரமாயிரம் கோடித் தேர்கள் தன் தேரைச் சுற்றி வரவும், அத்தேரைச் சுற்றி யானைப் படைகள் இரண்டாயிரம் ஆயிரம் கோடி சூழ்ந்து வரவும், அவற்றின் பின்னால் கடல் போன்ற குதிரைப் படை செல்லவும், காலாட்படை பெரிய கடல் போல முன்னணியில் செல்லவும், தன் நிலைமையினின்று அசையாத இந்திரசித்து போருக்குச் சென்றான்.

(அ-ரை) மாறு . பக்கம்; தார் : அணிவகுப்பு; முகம் : முன்னணி.

**720.** இந்திரசித்து அனுமனிடம் கூறும் வீரவுரை.

(க - ரை): "பயந்து ஓடிப் போகாதே! நில்லு! சிறிது நேரம் நின்றால் போதும்; உன்னோடு போர் புரியக் கருதியே போர்க்களம் வந்தேன். வில்லெடுக்கத் தெரியாமையால் வெறும் வீரவுரை பேசி உயிருடன் இருந்து விளையாடினாய். உன்னோடு போர் புரிய வந்திருக்கும் எனது வலிமையைக் கடக்கச் செய்வன நீ வீசி எறியும் மலைகளோ? மரங்களோ? சொல்வாயாக" என்று இந்திரசித்து சொல்ல, அதற்கு அனுமான் பதில் கூறுவான்.

(அ-ரை): ஆண்மை : வீரம்; இகல் : வலிமை.

**721.** அனுமான் வீரவுரை.

(க - ரை). "அற்பனே! எனக்கு வில்லெடுக்கத் தெரியாது. எனினும் எங்கள் படையில் வில் வீரர்கள் சிலர் இருக்கின்றனர். கல் எடுப்பது என்றாயே! அது போரில் இறந்தவர்களுக்குக் கல் நாட்டுவது என்னும் சடங்கு. நீ இன்று அல்லது நாளை இறக்கப் போகிறாய். அச்சடங்கைச் செய்ய உரியவனாகிய விபீடணன் இருக்கின்றான். ஒளிபொருந்திய ஆயுதங்களை யேந்திய தேவேந்திரன் முதலியோர் உனக்குத்தோற்று உயிர்கொண்டு போவார்கள். நாங்கள் தோற்றோடிய அவ்விந்திராதியர்போல வாயில் புல்லைக் கௌவிக் கொள்பவர்கள் அல்லோம். வேறு சில வகைகளால் போர்புரிய உன் எதிரில் வந்துள்ளோம்."

(அ-ரை): வெய்ய : கொடிய; மெல்லியோய் : அற்பனே; எல் : ஒளி; இடைந்து : தோற்று; ஏகுவார் : போவார்கள்.

## நாகபாசப் படலம்

718. 'அக்கப் பெயரோனை நிலத்தொ(டு) அரைத்துளானை,
விக்கற் கொடுவெவ் வுரைத் தூதுவன் என்று விட்டாய்!
புக்கத் தலைப்பெய்தல் நினைந்திலை; புந்தி இல்லாய்!
மக்கள் துணை அற்றனை! இற்ற(து)உன் வாழ்க்கை மன்னோ!

719. தேர் ஆயிரம் ஆயிர கோடிதன் மாடு செல்லப்,
போர் ஆனை புறத்தின் அவற்றின் இரட்டி போதத்,
தார் ஆர் புரவிக் கடல்பின் செலத், தானை வீரப்
பேர் ஆழி முகம்செலச், சென்றனன் போர்ச்சி யில்லான்.

720 'நில்லடா!சிறிது நில்லடா!உனை
நினைத்து வந்தனன் முனைக்கு நான்;
வில்எடாமை,நின(து) ஆண்மை பேசி,உயி
ரோடு நின்றுவிளை யாடினாய்!
கல்அடா, நெடுமரங்களோ,வரு
கருத்தினேன் வலிக டப்பவோ?
சொல்லடா!'என இயம்பினான் இகல்
அரக்கன்; ஐயன்,இவன் சொல்லினான்.

721. 'வில்எடுக்க உரியார்கள் வெய்ய,சில
வீரர் இங்கும் உளர், மெல்லியோய்!
கல்எடுக்க உரியானும் நின்றனன்;அ(து)
இன்று நாளையிடை காணலாம்;
எல்எடுத்த படை இந்திராதியர்,உ
னக்(கு)இடைந்(து), உயிர்கொ(டு) ஏகுவார்;
புல்எடுத்தவர்கள் அல்லம், வேறுசில
போர்எடுத்(து) எதிர் புகுந்துளோம்.

**722.** இந்திரசித்து விசும்பில் மறைந்து வேறு வடிவங் கொள்ளல்.

**(க - ரை):** முன்பு தான் செய்த தவத்தினாலும், தருமத்தினாலும், முனிவர்களிடத்திலிருந்து பெற்ற வரத்தினாலும், தன் குலத்தினாலும், கரிய நிறத்தையுடைய அரக்கனாகியதான் செய்த மாய மந்திரத்தினாலும், அணுவைப்போல் சிறியதாகிய ஓர் உடம்பை எடுத்துக்கொண்டான்.

**(அ-ரை)** தணிவற : குறைவில்லாமல், பண்டு : முன்பு, பிணி : பாச பந்தம்; மணிநிறம் : நீல நிறம், ஆக்கை : உடம்பு.

**723.** இலக்குவன் இளைப்பாறுதல்.

**(க - ரை)** அப்பொழுது இலக்குவன், அனுமான் தோளினின்றும் கீழே இறங்கி, தன் கையிலுள்ள அங்கதன் கையில் கொடுத்து, முதுகில் பட்டுப் பாய்ந்து சென்ற அம்புகள் அனைத்தையும் பிடுங்கி யெறிந்து இளைப்பாறினான். மேல் நடக்க நிகழப்போகும் விளைவை அறியமாட்டாதவனானான்.

**(அ-ரை)** அது கண்டது அப்பொழுது, இழிந்து இறங்கி, வெய்ய கொடிய, கதுவலிசிலை நீங்காத வலிமையையுடைய வில், வென்றி : வெற்றி. விதுவிதுப்பு : நடுக்கம்.

**724.** இந்திரசித்து விட்ட நாகாஸ்திரம் இலக்குவனை தோளைக் கட்டுதல்.

**(க - ரை):** இந்திரசித்து கொடிய நாகபாசம் என்னும் ஆயுதத்தை எய்தான். அப்படி எய்த அளவில், அந்த அம்பு பத்துத்திக்குகள் எங்கும் இருள் மயமாகப் பரவ விரைந்து சென்று, இராமபிரானது தம்பியாகிய இலக்குவனுடைய வட்டமான சிறந்த வயிரம் பாய்ந்து திரண்ட தோள்களாகிய மலைகளை நோகும்படியாக இறுக்கிக் கட்டிற்று.

**(அ-ரை)** வெய்ய : கொடிய; காகுத்தன் : இராமன், தத்திதாந்தபதம். வான் : சிறந்த, உளைய : வருந்த, வாங்கி : இறுக்கி, பத்துத்திக்குகள் : பெருந்திசை நான்கு, கோணத்திசை நான்கு; வான், நிலம் என்பவை.

**725.** நாகபாசத்தால் கட்டுண்ட இலக்குவன் செயல்.

**(க - ரை):** உலகமே தன்மேல் எதிர்த்து வந்த காலத்தும் கலங்காதவனும், மனத்தில் அடையக்கூடிய ஒருவிதக் குறைவு பற்றிய துன்பமில்லாதவனும் ஆகிய இலக்குவனால், அந்நாக பாசம் தோள்களை இறுக்கமாகக் கட்டின அளவில், இது ஒரு மாயமென்று உணர முடியவில்லை; இன்னது செய்வதென்று நினைக்க முடியவில்லை. வெட்டி வீழ்த்தப்பட்ட பிணத் துண்டங்களையுடைய போர்க்களத்தைப் பார்ப்பான்; பின் விசும்பைப் பார்ப்பான்.

**(அ-ரை):** இறுகுற : இறுக்கமாக; பிணித்த : கட்டிய; மறுகுறுதல்: கலங்குதல்; ஓரான் : நினைக்கமாட்டான்; அறுதலைக்களம : தலையற்ற உடற்குறைகளையுடைய போர்க்களம்; அந்தரம் : விசும்பு.

722. ‘தணிவறப் பண்டு செய்த
தவத்தினும், தருமத் தானும்
பிணிஅறுப் பவரின் பெற்ற
வரத்தினும், பிறப்பி னானும்,
மணிநிறத்(து) அரக்கன் செய்த
மாயமந் திரத்தி னாலும்,
அணுஎனச் சிறிய(து)ஆங்கோர்
ஆக்கையும் உடையன்ஆனான்.’

723. அதுகணத்(து) அனுமன் தோள்நின்(று)
ஐயனும் இழிந்து,வெய்ய
கதுவலிச் சிலையை, வென்றி
அங்கதன் கைய(து) ஆக்கி,
முது(கு)உறச் சென்று நின்ற
கணையொடு முறையின் வாங்கி,
விதுவிதுப்(பு) ஆற்றல் உற்றான்,
விளைகின்ற(து) உணர்ந்தி லாதான்

724. விட்டனன் அரக்கன் வெய்ய
படையினை; விடுத்த லோடும்
எட்டினோ(டு) இரண்டு திக்கும்
இருள்திரித்(து) இரிய ஓடிக,
கட்டின(து) என்ப மன்னோ,
காகுத்தற்(கு) இளைய காளை
வட்டவான் வயிரத் திண்தோள்
மலைகளை உளைய வாங்கி

725. இறுகுறப் பிணித்த லோடும்,
யாவையும் எதிர்ந்த போதும்
மறுகுறக் கடவான் அல்லன்;
மாயம்என்(று) உணர்வான் அல்லன்;
உறுகுறைத் துன்பம் இல்லான்
ஒடுங்கினன்; செய்வ(து) ஓரான்;
அறுகுறைக் களத்தை நோக்கும்;
அந்தரம் அதனை நோக்கும்.

**726.** அந்நாகபாசம் அனுமானைக் கட்டுதல்.

**(க - ரை):** காற்றின் புதல்வனாகிய அனுமான், 'இந்திர சித்தை ஒரு கணநேரத்தில், ஆகாயத்தில் கிளம்பித் தேடிப் பிடிப்பேன்' என்று கோபித்துத் தேடுகின்ற சமயத்தில், தாக்கி வருத்துதலையுடைய அந்நாகபாசம், அக்காலத்தில் இராவணன் தோள்களை வாலியின் வால் கட்டியதைப்போல அவனது தோள்களைச் சுற்றிக் கட்டியது.

**(அ-ரை):** கால்: காற்று; நாழி: நேரம், விசைத்து: வேகமாக; உறுக்கும்: கோபிக்கும்; வேலை: பொழுது; ஏவுடைப்பாசம்: கட்டுகின்ற பாசம்.

**727.** நாகபாசத்தால் கட்டுண்ட இலக்குவனைப் பார்த்த இராமபிரான் துயரம்.

**(க - ரை):** தன் கையில் பற்றிய அம்பை நோக்கும் தோள் வலியினையுடைய இராமன், தன் வில்லைப் பார்ப்பான், நாகபாசத்தின் கட்டைப் பார்ப்பான், தேவலோகத்திலுள்ள தேவர்களைப் பார்ப்பான்; இந்தப் பூலோகத்தை வேரோடு தோண்டி எறிவேன் என்பான்; பவளம் போன்ற தன் வாயைக் கடிப்பான்; கற்றோர் சொல்லிய அறவுரைகளை நினைத்துப் பார்ப்பான்.

**(அ-ரை)** வீக்கினை: கட்டினை, ஒழியா: ஒழியாத; அல் இருட்டு; பார் பூமி. கல்லுவென: தோண்டுவென; கறிக்கும் கடிப்பான.

**குறிப்பு:** கற்றோர் சொல் 'அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளி வழங்கு-மல்லன்மா ஞாலம் கரி' என்பது போன்றவை.

**728.** இராமன் விபீடணனை நோக்கி வருந்திக் கூறுதல்

**(க - ரை):** "விபீடணனே! போருக்குத் தொடங்கிய இந்திர சித்தோடு இலக்குவனுக்கு நடந்த சண்டையில் இலக்குவனுக்கு நேர்ந்த சம்பவத்தைப்பற்றி என்னிடம் விரைவில் வந்து கூறிப் போர்க்களத்திற்கு அழைத்தாயில்லை. அந்த நாகபாசத்தைத் தொடுத்த இந்திரசித்தின் கையையொடித்து அவன் உயிரையும் குடித்திருப்பேனே! நீ என்னைக் கெடுத்தாயே" யென்று அழிவற்றவனாகிய இராமன் வருந்திக் கூறினான்.

**(அ-ரை):** அடுத்தது: நேர்ந்தது; வல்லை: விரைவில்; அரவின் பாசம் பாம்பின் கயிறு; சரம: அம்பு

**729.** கருடாழ்வான் போர்க்களத்திற்கு வருதல்.

**(க - ரை):** எங்கும் பரவிய இருட்டையடக்கி, சூரியனுடைய ஒளியைப் பரவச்செய்து, அகன்ற திக்குகள் எங்கும் ஒளியைச் செலுத்தி, சந்திரன் ஒளியைத் திரளச்செய்து ஒளி விடும் பேரொளியானது எங்கும் விளங்க, ஒளியையுடைய மணிகளைப் பதித்த (கருடாழ்வானது) முடியானது, மேருமலையின் உச்சியில் தோன்றும் சூரியனைக் காட்டிலும் மும்மடங்கு பொலியும்படியாக இருந்தது.

**(அ-ரை):** அல: இருட்டு; ஆசை: திக்கு; வில்: ஒளி; எல்லை: ஒளியை. இங்குப் பண்புப் பெயராக வந்தது; மோலி: முடி; குயிற்றி: பதித்து; பொருப்பு: மலை; மேருமலை கருடாழ்வானுக்கும், சூரியன் அவனது முடிக்கும் உவமை ஆயின.

726. கால்உடைச் சிறுவன் 'மாயக்
கள்வனைக், கணத்தின் காலை,
மேல்விசைத்(து) எழுந்து நாடிப்,
பிடிப்பென்'என்(று) உறுக்கும் வேலை,
ஏல்புடைப் பாசம், மேல்நாள்,
இராவணன் புயத்தை வாலி
வால்பிணித்(து) என்னச் சுற்றிப்
பிணித்தது வயிரந் தோளை.

727. வில்லினை நோக்கும்; பாச
வீக்கினை நோக்கும்;வீயா
அல்லினை நோக்கும; வானத்(து)
அமரரை நோக்கும்; 'பாரைக்
கல்லுவென் வேரோ(டு)' என்னும்;
பவளவாய் கறிக்கும்;கற்றோர்
சொல்லினை நோக்கும்; தன்னைப்
பகழியை நோக்கும் தோளான்.

728. 'எடுத்தபோர் இலங்கை வேந்தன்
மைந்தனோ(டு) இளைய கோவுக்(கு)
அடுத்த(து)'என்(று) என்னை வல்லை
அழைத்திலை; அரவின் பாசம்
தொடுத்தகை சரத்தி னோடும்
துணித்(து)உயிர் குடிக்க என்னைக்
கெடுத்தனை வீட ணை நீ!'
என்றனன் கேடி லாதான்.

729. அல்லைச் சுருட்டி, வெயிலைப் பரப்பி,
அகல்ஆசை எங்கும்அழியா
வில்லைச் செலுத்தி, நிலவைத் திரட்டி,
விரிகின்ற சோதி மிளிர.
எல்லைக் குயிற்றி எரிகின்ற மோலி
இடைநின்ற மேரு எனும்அத்
தொல்லைப் பொருப்பின் மிசையே விளங்கு
சுடரோனின் மும்மை சுடர.

**730.** கருடாழ்வான் இராமபிரானைத் துதித்தல்.

**(க - ரை) :** "தேவர்களுக்கெல்லாம் சிறந்த தேவனே! உலகத்திலுள்ள மாந்தர் பலரும் உனது திருநாமத்தை யோதி வழிபட அவர்களுக்கு அருளும் செயலையுடையவனே! பதினான்கு உலகங்களையும் அழியாமல் அரசாட்சி செய்யும் மேன்மையுடைய முதல்வனே! யாவருக்கும் அடைய முடியாத பேரின்பமாகிய வீட்டுலகம் என்னும் பரம பதத்தை அடியார்களுக்குக் கொடுத்து அருளும் அழகிய முடியையுடையவனே! ஐயோ! மாயையில் கட்டுப்படாதவனாகிய நீ அதில் கட்டுண்டவர்களைப் போல் வருந்திக் குலைகின்றாயே! அளவற்ற மாயையின் வலிமையை எவரால் அறியமுடியும்?"

**(அ-ரை)** மூவாது : அழியாது. மேவாத : அடைய முடியாத. அதிரேகம் : மிக்க; வடசொல்.

**731.** இதுவும் அது.

**(க - ரை) :** "உன்னைச் சரணமடைந்தவர்க்கு இனிப் பிறவாமல் அருளும் பெரியோனே! சில சமயத்தில் பிறந்தவனைப்போல காணப்படுகின்றாய், பிறவாதவனைப் போலவும் காணப்படுகின்றாய். அத்தகைய உன் நிலைமையை, மாயையில் கட்டுண்ட உலகத்தவரும் நாங்களும் அறியமாட்டோம். உலகையெல்லாம் துறந்த துறவிபோலவும் காணப்படுகின்றாய், இல்லறத்தோடு கூடி வாழ்பவனாகவும் காணப்படுகின்றாய். உன்னுடைய பலவிதச் சிறப்புத் தன்மைகளில் ஒன்றையும் சொல்ல அறியமாட்டோம். உலகில் பிறந்தவர்களைப் போலவும் காணப்படுகின்றாய். பிறவாதவர்களைப் போலவும் காணப்படுகின்றாய். உலகில் தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டு, அரிய செயலாகக் கொண்டு மானுட வடிவில் தோன்றிய உன் மாயையின் தன்மையை யார் அறிவார்?"

**(அ—ரை)** மயலார் : மாயையில் கட்டுண்டவர்; அதிரேகம் : மிகுதி.

**732.** கருடன் இராமனையடைதல்.

**(க - ரை) :** இந்த ஏழு உலகங்களையும் தன் இரண்டு சிறகுகளாலே கவித்து மூட வல்லவனான கருடாழ்வான், இத்தகைய வார்த்தைகளைச் சொல்லி மனமுருகுகின்றவனாய் விரைந்து வருதலால் அவனது உடம்பின் ஒளி எங்கும் பரவ, அதனால் இருள் நீங்கிப் பொன் மயமான ஒளிவீசுவதைக் கண்ட இராமபிரான், இவன் யாரென்று தலைநிமிர்ந்து பார்த்து நினைப்பதற்கு முன்னால் அவன் எதிரே வந்து சேர்ந்தான்.

**(அ-ரை):** பன்னி : சொல்லி ; துன்னி : நெருங்கி, உன்னி: நினைத்து.

730. 'தேவாதி தேவ! பலராலும் முந்து
திருநாமம் ஓது செயலோய்!
மூவா(து) எந்நாளும் உல(கு) ஏழொ(டு) ஏழும்
அரசாளும் மேன்மை முதல்வா!
மேவாத இன்பம் அவைமேவி,மேவ
நெடுவீடு காட்(டு) அம முடியாய்!
ஆஆ வருந்தி அறிவாய்கொல் ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார்?'

731. 'மறந்தாயும் ஒத்தி, மறவாயும் ஒத்தி;
மயலாரும் யானும் அறியேம்;
துறந்தாயும் ஒத்தி; துறவாயும் ஒத்தி;
ஒருதன்மை சொல்ல அரியாய்!
பிறந்தாயும் ஒத்தி; பிறவாயும் ஒத்தி;
பிறவாமல் நல்கு பெரியோய்!
அறந்தான் நிறுத்தல் அரிதாக ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார்?'

732. என்றின்ன பன்னி அழிவான் அறிந்த
எரிசோதி கீற, இருள்போய்ப்
பொன்துன்னி அன்ன வெயில்வீசு கின்ற
பொருள்கண்டு நின்ற புகழோன்,
நின்றுன்னி உன்னி, இவன்யாவன் என்று,
நினைகின்ற எல்லை நிமிரச்
சென்றுன்னும் முன்னர் உடன் ஆயினன்,இவ்
உலகேழும் மூடு சிறையான்.

**733.** கருடாழ்வான் வரவினால் நாகபாசம் அழிதல்.

**(க - ரை):** பாதகனாகிய இந்திரசித்து செலுத்திய நாகபாசமானது, கருடாழ்வான் வரவினால் பொடிப்பொடியாக இற்று ஒழிந்தது. அது, தாமரை நூல் பிய்ந்து கட்டுவிடுவதைப்போல் இற்றது என்றால் அவ்வுவமானம் சரியானதாகுமா? பின்னைப் பொருத்தமான உவமை கூறுமிடத்துச் சடையப்ப முதலியாரின் திருவெண்ணெய் நல்லூரைப் பல தேசங்களிலிருந்தும் நாடி வருகின்ற வேதம் வல்ல அந்தணர், தமிழ்ப் புலவர் என்றிவர்கள் சுற்றத்தினர் பசி நீங்குவதைப்போல, இருந்த இடம் தெரியாமல் மறைந்தது என்பதே ஏற்ற உவமையாகும்.

**(அ-ரை):** வாசம் மணம். மரை நாளம் தாமரைத் தண்டு. மரை தலைக்குறை. நூல் தண்டிலுள்ள பஞ்சு. மழை மேகம். ஆசு அனைய ஐயம். மீளி: வீரன், பதகன் பாதகன் ஆறுதல் விகாரம். பாசு பாசம். இங்கு நாகபாசத்தைக் குறித்தது.

**734.** இராமபிரான் கருடாழ்வானைப் பாராட்டுதல்.

**(க - ரை):** தேவர் யாவரும் இன்ன தன்மையன் என்று அறியவொண்ணாத பரம்பொருளாகிய இராமபிரான், கருடாழ்வானை நோக்கி, "ஐயனே! நீ யாவன்? நாங்கள் செய்த அருந்தவப் பயனை இங்குவந்து சேர்ந்தாய். எங்களை உயிரையும் வாழ்வையும் கொடுத்தாய். எங்களைப் போன்றோரால் கைம்மாறு வேண்டும் தகுதிக்கு மேற்பட்டவனாக இருக்கின்றாய். ஆகையால் நீ செய்த உதவிக்குக் கைம்மாறு ஒன்றுமில்லை" என்று பாராட்டினான்.

**(அ-ரை).** எய்த்தலை அடைந்தாய், கையுறை காணிக்கை. கோடற்கு கொள்ளுவதற்கு; காட்சி. தோற்றப் பொலிவு. மீட்சி கைம்மாறு.

**குறிப்பு:** 'செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும், வானகமும் ஆற்றல் அரிது' என்ற குறளும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

**735.** இதுவும் அது.

**(க - ரை):** "உண்டோ, இல்லையோ என்னும் நிலையில் இருந்த எங்கள் உயிரைத் தந்து உதவிபுரிந்த மேலோனே! இதற்கு முன்பு எங்களைக் கண்டறிந்தவனும் அல்லை; பிறர் சொல்ல எங்களைக் கேட்டறிந்தவனும் அல்லை; ஒரு கடனையும் எங்களிடமிருந்து ஏற்றுக்கொண்டவனுமல்லை; பிறருக்குக் கொடுப்பதே தவிரப் பிறர்பால் ஒன்று கொண்டு நிரப்பும் தன்மையனும் அல்லை. இது உனது முறைமையாகும். இதற்கு முன்னும் நாம் ஒருவரோடொருவர் நண்பு கொண்டிலேம். நாங்கள் உனக்குச் செய்யக்கூடிய உதவியிருந்தால் சொல்வாயாக" என்று இராமபிரான் கேட்டான்.

**(அ-ரை):** பண்டு: முன் நாள்; நண்பு: நட்பு; பகர்தி: சொல்வாயாக.

733. வாசம் கலந்த மறைநாள நூலின்
வகையென்ப(து) என்னை, மழைஎன்(று)
ஆசங்கை கொண்ட கொடைமீளி அண்ணல்,
சரராமன் வெண்ணெய் அணுகும்,
தேசம் கலந்த மறைவாணர், செஞ்சொல்
அறிவாளர் என்றிம் முதலோர்
பாசம் கலந்த பசிபோல அகன்ற
பதகன் துரந்த உரகம்.

734. 'ஐய நீ யாரை? எங்கள
அருந்தவப் பயததின் வந்(து)
எய்தினை: உயிரும் வாழ்வும
ஈந்தனை; எம்ம னோரால்
கையுறை கோடற்(கு) ஒத்த
காட்சியை அல்லை; மீட்சி
செய்திறம் இலையால்!' என்றான்,
தேவர்க்கும் தெரிக் கொணாதான்.

735. 'கண்டிலை முன்பு; சொல்லக்
கேட்டிலை;கடன் ஒன்(று) எம்பால்
கொண்டிலை; கொடுப்ப(து) அல்லால்
குறைஇலை இதுநின் கொள்கை;
உண்(டு),இலை, என்ன நின்ற
உயிர்தந்த உதவி யோனே;
பண்(டு)இலை நண்பு; நாங்கள்
செய்வ(து) என்?பகர்தி!' என்றான்.

**736.** கருடாழ்வான் இராமபிரானிடம் விடைபெற்றுச் செல்லல்.

**(க - ரை) :** "மாயமான பிறவிக்கு ஒரு பகைவனாக இருக்கும் ஒரு பரம்பொருளே! நான் பறவைக் கூட்டங்களுக்கு அரசன். உமக்குப் புதியன் அல்லேன். உமக்கும் எனக்கும் உள்ள பழைய தொடர்பைத் தெரிவித்துக் கொள்ள வல்லவனோ நான்? இராவணனோடு இலங்கையிலே இப்போர்த் தொழிலை முடித்த பின்னர், இங்குவந்து மீண்டும் கண்டுகொள்வேன். எனக்கு விடை தருவீராக" என்று கேட்டுப் பெற்றுக்கொண்டு திரும்பிப் போனான்.

**(அ-ரை):** பாலகன் : பரிபாலிப்பவன், அரசன், மறவினை போதத் தொழில் : நல்கு : கொடுப்பாய் ; பகுதியே நின்று ஏவற்பொருண்மை உணர்த்திற்று.

அரக்கப்படைத் தலைவர்களின் வதைதனைப்பற்றிக் கூறுவது.

**737.** இருபக்கத்துச் சேனை வீரரும் பொருதல்.

**(க - ரை) :** புகைக்கண்ணன் என்னும் அரக்கனும், அனுமனும் எதிரெதிர் போர் தொடர்ந்தார்கள். வெற்றி மாலையையணிந்த அங்கதன், மாபெரும் பகைவன் என்னும் அரக்கனைத் தடுத்து அவனோடு போர்புரிந்தான். பாதுகாவலுக்குரிய திணிய வில்லையேந்திய மாலி என்னும் அரக்கனும், நீலன் என்னும் வானர வீரனும் தடுத்துப் போர்புரிந்தார்கள். பிசாசன் என்னும் பெயரையுடைய அரக்கனும், பனசன் என்னும் வானர வீரனும் ஒருவரோடொருவர் போர்புரிந்தார்கள்.

**(அ-ரை):** தூமகேதனன் : வடமொழியில் தூம்ராக்ஷன்; தூமம் : புகை. தாமம : மாலை; சேமம் பாதுகாவல், திணி : வலியமைந்த; தகைதல் : தடுத்தல்; வாமம : விரும்பத் தக்க, வயம : வெற்றி

**738.** சூரியன் உதித்தல்.

**(க - ரை) :** அரக்கர் என்னும் பெரிய இருட்கூட்டத்தை இராமன் என்னும் ஒரு சூரியன் உதித்து விலக்க, அதனோடு கொடுங்கிரணங்களையுடையவனான சூரியனும் உதித்தமையால், அவ்விரண்டொளியும் சேர்ந்து உலகில் மிக்க ஒளியை மிகுவன ஆயின.

**(அ-ரை):** அருக்கன் : சூரியன், துரக்க : நீக்க, விலக்க. புரக்தப பாது காக்கின்ற; மிகுக்கும் மிகுதியாக.

அரக்கப் படைத் தலைவனை மகரக்கண்ணன் வதைதனைப் பற்றிக் கூறுவது.

**739.** மகரக்கண்ணன் போர்புரிய இராமபிரானை நாடிச் செல்லல்.

**(க - ரை) :** பூமாலையணிந்தவனும், மகரக்கண்ணன் என்னும் பெயருடையவனும், இடியைப் போன்ற மிக்க வலிமையுடையவனுமாகிய அரக்கன், வெற்றி பொருந்திய பொன்மயமான பெரிய தேரில் ஏறி வந்து, வானரச் சேனைகளை வெல்லாமல் சென்று, கோசலநாட்டு அரசனை இராமபிரானை நாடிச்சென்றான்.

**(அ-ரை):** அலங்கல் : மாலை; மழை : மேகம், ஏறு : இடி ; சில்லி சக்கரம்; தண்டலை: சோலை; மருதவைப்பு : மருதநிலம் ; வயலும், வயல் சூழ்ந்த இடமும்; கொண்டல் : மேகம் ; இராமனைக் குறித்தது, உவமையாகு பெயர்.

736. 'பறவையின் குலங்கள் காக்கும்
பாலகன், பழைய நின்னோடு
உறவுள தன்மை யெல்லாம்
உணர்த்துவென்? அரக்கனோ(டு)அம்
மறவினை முடித்தபின்னர் வருவென்'
என்று உணர்த்தி, 'மாயப்
பிறவியின் பகைஞ! நல்கு
விடை!' எனப் பெயர்ந்து போனான்.

படைத்தலைவர் வதைப் படலம்

737. தூமக் கண்ணனும அனுமனும்
எதிர்எதிர் தொடர்ந்தார்;
தாமத்(து) அங்கதன் மாபெரும்
பக்கனைத் தடுத்தான்;
சேமத் திண்சிலை மாலியும்,
நீலனும் செறுத்தார்;
வாமப் போர், வயப் பிசாசனும்
பனசனும மலைந்தார்.

738. அரக்கர் என்றபேர் இருளினை இராமனும் அருக்கன்
துரக்க; வெம்சுடர்க் கதிரவன் புறத்(து) இருள் தொலைக்கப்
புரக்கும் வெய்யவர் இருவரை உடையன போல
நிரக்கும நல்ஒளி பரந்தன உலகெலாம் நிமிர.

மகராக்கண்ணன் வதைப் படலம்

739. வண்டுலாம் அலங்கல் மார்பன்
மகராக்கன், மழையே(று) என்னத்
திண்திறல் அரக்கன், கொற்றப்
பொற்றடம சில்லித் தேரைத்
தண்டலை மருத வைப்பின்
கங்கைநீர் தழுவும் நாட்டுக்
கொண்டல்மேல் ஓட்டிச் சென்றான்,
குரக்கினப் படையைக் கொன்றான்.

**740.** மகரக்கண்ணனோடு மற்ற அரக்கவீரரும் இறந்துபட்டமையைத் தூதர் இராவணனுக்குத் தெரிவிக்கச் செல்லல்.

**(க - ரை):** சக்கரவர்த்திப் புதல்வனை இராமன் கையம்பினாலும், வானரசேனை மரங்களையும், மலைகளையும் எடுத்து வீசி மோதுதலாலும், சுற்றி வளைத்துக்கொண்ட ஐந்து கோடி அரக்கச் சேனைகளும், மற்றும் இருபது வெள்ளம் அரக்கச் சேனைகளும் இறந்து ஒழிந்தன. இந்தச் செய்தியை அறிவிக்கும் பொருட்டு இராவணனிடம் தூதுவர் ஓடினார்கள்.

**(அ-ரை):** வழங்குதல்: வீசியெறிதல், பராவரும்: சொல்ல முடியாத, வெள்ளம்: ஓர் அளவைப் பெயர்

**குறிப்பு:** கையில் ஆயுதம் இல்லாதவர்களைக் கொல்லலாகாது என்னும் போர்முறை பற்றித் தூதுவர் உயிருடன் ஓடிச் சென்றனர். ஆகவே 'படைக்கலம் எடுத்திலாதார்' என்றார்.

**741.** வானர சேனைகளைப்பற்றி இந்திரசித்தின் எண்ணம்.

**(க - ரை):** ஆண் சிங்கம்போன்ற வானர வீரர்கள் அங்குமிங்கும் ஓடிச்செல்லும் வேகத்தை அறியமாட்டாதவனாகிய இந்திரசித்து, அனந்தன் என்னும் பெயரையுடையவர் பல கோடிக்கணக்கில் இருப்பார் போலும் என்பான்; அனந்தன் என்னும் பெயருடையோர் பலர் இந்த உலகமே இடம் போதாது என்னும்படி நிறைந்திருப்பர் போலும் என்பான். பார்த்த இடமெல்லாம் தோற்றுகின்ற மனிதர் என்னும் பயல்கள் இருவர் தாமோ? இன்னும் பலர் இருப்பார்களோ என்று நினைப்பான்.

**[அ-ரை):** அனந்தம: அளவில்லாத. என்னும்: என்பான். செய்யுமென் முற்று; கொல் அசை; இருவரே: ஏகாரம், வினாப் பொருளில் வந்தது.

**742.** இந்திரசித்து இலக்குவனோடு வீரவுரை பகர்தல்.

**(க - ரை):** "இலக்குவனே! உனக்கு முன் பிறந்த உன் தமையனாகிய இராமனை, அந்தமுறைக்கு மாறாக, உனக்குப் பின்பு இறந்தவனாகச் செய்வேன் இராமனுக்குப் பின் பிறந்த உன்னை, அவனுக்கு முன்பு இறந்தவனாகச் செய்வேன். இது சூளுரை. இச் சூளுரையை நான் நிறைவேற்ற மாட்டேனானால், இராவணனுக்கு மகனாகப் பிறந்தவனல்லேன் "என்று இந்திரசித்து சூளுரை பகர்ந்தான்.

**(அ-ரை):** முன்பிறந்த : முன்—பிறந்த, முன்பு—இறந்த; பின்பிறந்த : பின்—பிறந்த, பின்பு—இறந்த.

**743.** இதுவும் அது.

**(க - ரை):** "இலக்குவனே, உனக்கு அப்பெயர் பொருத்தமானதே யென்னும்படி என் பாணத்திற்கு உன்னை 'இலக்கு' ஆகக் கொள்வேன். இதனிடையில் உருத்திர பகவான் வந்து உன்னைக் காத்தற்குத் தடுத்து நின்றாலும், அவனுடைய வீரத்தையும் கலங்கச் செய்வேன். உன் தமையனாகிய இராமனும் இதைக் கண்ணால் காணப் போகிறான்."

**(அ-ரை):** இலக்குவன் : 'இலக்கு' ஆனவன்; இலக்கு : குறி; விடையவன் : இடப வாகனத்தையுடைய உருத்திர பகவான்.

740. தராதல வேந்தன் மைந்தர்
சரத்தினும்; கவியின் தானை
மராமரம் மலைஎன்(று) இன்ன
வழங்கவும் வளைந்த தானை
பராவரும் கோடி ஐந்தும்
வெள்ளம்நால் ஐந்தும் பட்ட.
இராவணன் தூதர் போனார்
படைக்கலம் எடுத்தி லாதார்.

பிரமாத்திரப் படலம்

741 அங்கதர் அனந்த கோடி
உளர்எனும்; அனுமன் எனபார்க்(கு)
இங்கினி உலகம் எல்லாம்
இடம்இலை போலும் என்னும்;
எங்கும்இம் மனிதர் என்பார
இருவரே கொல்என்(று) உன்னும்,
சிங்கஏ(று) அனைய வீரர்
கடுமையைத் தெரிகி லாதான்.

742 'முன்பி றந்தஉன் தமையனை, முறைதவிர்த்(து) உனக்குப்
பின்பி றந்தவன் ஆக்குவென்; பின்பிறந் தோயை
முன்பி றந்தவன் ஆக்குவென்; இதுமுடி யேனேல்
என்பி றந்தத னல்பயன் இராவணற்(கு)' என்றான்.

743 'இலக்கு வன்எனும் பெயர்உனக்(கு)
இயைவதே என்னா,
இலக்கு வன்கணைக்(கு) ஆக்குவென்;
இதுபுகுந்(து) இடையே
விலக்கு வென்என, விடையவன்
விலக்கினும், வீரம்
கலக்கு வென்;இது காணும்உன்
தமையனும் கண்ணால்.'

**744.** இலக்குவன் இந்திரசித்தினிடம் கூறும் வீரவுரை.

(க - ரை) : "இந்திரசித்து! அரக்கர் என்னும் பெயர் படைத்தவர் அனைவரும் அழிந்து ஒழிந்து சாகப் போகின்றீர்கள். அத்தகைய அரக்கர்களுக்கு இறுதிக் கடனாகிய நீர்க்கடன் செய்ய எம்மிடம் வந்த வீடணனைத் தவிர வேறு ஒருவரும் இரார். அது போலவே உன் தந்தைக்கு முன்பே நீ இறந்து விடுவாய் உன் பின்னே இறக்கும் அவனுக்கு இறுதிக் கடனாகிய நீர்க்கடன் உனக்குப் பதிலாக அந்த வீடணனே இரக்கமோடு செய்ய இருக்கின்றான்" என்று இலக்குவன் கூறினான்.

(அ-ரை) புரக்கும் : காப்பாற்றவல்ல; போந்தான் : வந்தான்; கரக்கும் : மறக்கும் இங்கே 'இறக்கும்' என்ற பொருளில் வந்தது.

**745.** பிரமன் அம்பை விடுவதற்கான முயற்சிகளைச் செய்ய இந்திரசித்து ஆகாயத்தில் மறைந்து செல்லல்.

(க - ரை) : ஆகாயத்தில் மறைந்து போய் நின்ற வஞ்சகனாகிய இந்திரசித்து, இராம இலக்குவருடைய மன நிலையையறிந்து தெய்வத் தன்மை பொருந்திய உயர்ந்த பிரமன் அம்பைச் செலுத்துவதற்கு முயற்சி கொண்டவனாகிப் போர்க்களத்தினின்று பிரிந்து போனதே இப்பொழுது செய்தற்குரிய காரியமாகுமென்று முடிவுசெய்து பிரிந்து சென்றான். அதையறிந்த தேவர்கள் கைகொட்டி ஆரவாரித்துச் சிரித்தார்கள்.

(அ-ரை) வானம் : சிறந்த, ஆவலங்கொட்டிச் சிரித்தல் : கைகொட்டி ஆரவாரஞ்செய்து சிரித்தல்.

**746.** இந்திரசித்து இலக்குவன் மீது பிரமன் அம்பு தொடுத்தல்.

(க - ரை) : பிரமன் அம்பை இலக்குவன் உடம்பின் மேல் இந்திரசித்து எய்தான். அந்த ஒரு அம்பிலிருந்து சொல்லுதற்கரிய பல அம்புகள் தோன்றி, ஒரு பொன் மலையில் குருவிக் கூட்டங்கள் மொய்ப்பனபோல அடர்ந்து இலக்குவன் உடம்பில் பாய்ந்தன.

(அ-ரை) காலை : பொழுதில்; 'இமைப்பதன் முன்னம்' என்பது மிக விரைவில் என்ற பொருள் தந்தது மால்வரை பெரியமலை; பன்னலாம்தரம் அல்லன எடுத்துக்கூறும் தகுதிக்கு மேற்பட்ட.

**747.** பிரமன் அம்பால் கட்டுண்ட வானரவீரரைக் கண்ட இராமன் புலம்பல்.

(க - ரை) : "அற்பத் தொழிலாகிய அரசினை விரும்பினேனாய் என் தந்தையைக் கொன்றேன்; அடுத்தபடிச் சடாயுவையும் உயிரொழியும்படியாகச் செய்தேன்; இன்றைக்கு இத்தனை வானரவீரர்களையும் ஒழித்தேன்; நானும் நலமாக இருக்கிறேன். என்னுடைய கொடுஞ் செய்கைகளுக்கு ஒரு எல்லையும் உண்டோ?"

(அ-ரை): புன்தொழில் : அற்பத்தொழில்; புலைஅரசு : இழிவான அரசாட்சி; வெஃகினேன் : விரும்பினேன்; ஒருக்கினேன் : ஒழித்தேன்; வரம்பு : எல்லை; வற்றோ : வல்லதோ.

744. 'அரக்கர் என்ப(து)ஓர் பெயர்படைத்
தவர்க்கெலாம், அடுத்த
புரக்கும் நன்கடன் செயவுளன்
வீடணன், போந்தான்;
கரக்கும் நுந்தைக்கு நீசெயக்
கடவன கடன்கள்
இரக்கம் உற்(று)உனக்(கு) அவன்செயும்'
என்றனன் இளையோன்.

745. மறைந்து போய்நின்ற வஞ்சனும்,
அவருடை மனத்தை
அறிந்து, தெய்வவான் படைக்கலம்
தொடுப்பதற்(கு) அமைந்தான்,
பிரிந்து போவதே கருமம்இப்
பொழு(து),எனப் பெயர்ந்தான்;
செறிந்த தேவர்கள் ஆவலம்
கொட்டினர் சிரித்தார்.

746. இன்ன காலையில், இலக்குவன்
மேனிமேல் எய்தான்
முன்னை நான்முகன் படைக்கலம்,
இமைப்பதன் முன்னம்,
பொன்னின் மால்வரைக் குரீஇஇனம்
மொய்ப்பன போலப்
பன்ன லாம்தரம் அல்லன
சுடர்க்கணை பாய்ந்த.

747. 'புன்தொ ழில்புலை அரசினை
வெஃகினேன், பூண்டேன்;
கொன்(று)ஒ ருக்கினென் எந்தையைச்;
சடாயுவைக் குறைத்தேன்;
இன்(று)ஒ ருக்கினேன் இத்தனை
வீரரை; இருந்தேன்;
வன்தொ ழிற்(கு) ஒரு வரம்(பு)ம்உண்
டாய்வர வற்றோ?'

748. இதுவும் அது.

(க - ரை): 'அண்ணனாகிய வாலியைக் கொன்று தம்பிக்கு, வானரத் தலைவனாகுந் தன்மையைக் கொடுத்தேன்; என்னைச் சேர்ந்தவர் அனைவரையும் அழிப்பதற்கு உரியவனாகி நிற்கின்றேன்; போக வேண்டிய உயிரைப் போகாமல் பொறுமையோடு பிடித்துக் கொண்டு, உங்களை இத்தனை துன்பத்தோடும் பார்த்தேன்; பாரமான உடற்சுமையைச் சுமந்து கொண்டிருப்பதற்காக இப்பிறவி எடுத்தேன்' என்று கூறி இராமபிரான் புலம்பினான்.

(அ-ரை): அமைய பொருந்துமபடி; நல்கினேன் : கொடுத்தேன்; அடங்கலும் : முழுவதும், அவிப்பதற்கு - அழிப்பதற்கு, கமை : பொறுமை; பொறை : பாரம்.

749. பிரமன் அம்பால் கட்டுண்ட இலக்குவனைக் கண்ட இராமன் துயருறுவது.

(க - ரை) : 'துயருறுகின்ற என்னைத் தாங்குவார் ஒருவரும் இல்லை. தமபியாகிய இலக்குவனைத் தழுவிக் கொண்ட என் கையை விலக்குபவர்களும இல்லை. அஞ்சாதே என்று ஒரு பேச்சு சொல்லவும் ஒருவரும் இல்லை. எனக்கு வேண்டியவர் அனைவரும் இறந்துபட்டனர் இது நான் அடைந்த துன்பமாகும். தனியனாக உள்ள என்னைத் துயரத்தினின்று நீக்க வல்லவர் யார்?' என்று இராமன் துயருற்றான்.

(அ-ரை) தடக்கை : விசாலமான கை; தெருட்டுவார் : தேற்றுவார்; பாங்கராகி (ரை : பக்கத்திலுள்ளவர்கள்.

750. இலக்குவன் இறந்து பட்டானென்று எண்ணி இராமன் புலம்புதல்.

(க-ரை): "நாம காட்டில் வசித்தற்குரிய பதினான்கு வருட காலமும் அவ்வப்போது உணவு உண்பேனாகிய எனக்கு உணவுகளைக் கொணர்ந்து கொடுத்து நான் உண்ண, நீ ஒன்றும் உண்ணாதிருந்தவனே! எனக்காக வெயில் என்றும பார்க்கமாட்டாய்; நின்றபடியே தரையில் சார்ந்து கிடக்கின்றாய். உடல் மிகவும் களைப்புற்றுத் தூங்குகின்றாயோ? இன்றைக்கு இவ்வுறக்கத்தினின்று விழித்துப் பார்க்கமாட்டாயோ?' என்று இராமபிரான் இலக்குவனைப் பார்த்துப் புலம்பினான்.

(அ-ரை): பயிலுமகாலம் : வசிக்க வேண்டிய காலம்;படர்கானம் : விரிந்த காடு; அயில்கின்றேன் : உண்கின்றவன்; உன்னாய் : நினைக்கமாட்டாய; துறவாய் : நீங்காய்

751. இதுவும் அது.

(க - ரை): "பூமியின் மேல் வைத்த ஆசையினால் கைகேயி முதலான தாய்மார்களுக்கும் ஒரு புண்ணின் மேல் கொள்ளி வைத்தாற் போன்ற துன்பம் உண்டாக்கினேன்; சீதையாகிய பெண் மேல் வைத்த ஆசையினால் இந்தத் துன்பங்களைப் பெற்றேன். மதித்தற்குரிய என் புகழ் நன்று! இத்தகைய நான் எளிமையானவனோ?"

(அ-ரை); புண்மேல் வைத்ததீ : ஒருதுன்பத்திற்குமேல் பிறிதொரு துன்பம் உண்டாக்குவதற்கு உவமானம்; பேறுகள் : துன்பத்தைக் குறிப்பதால் இகழ்ச்சிக் குறிப்பு; எண் : மதிப்பு. என்புகழ் நன்றால் எளியனோ? என்பவை இகழ்ச்சிக் குறிப்பு.

748. 'தமையனைக்கொன்று, தம்பிக்கு
வானரத் தலைமை
அமைய நல்கினேன். அடங்கலும்
அவிப்பதற்(கு) அமைந்தேன்;
கமை பிடித்துநின்(று) உங்களை
இத்துணை கண்டேன்;
சுமை உடற்பொறை சுமக்கவந்
தனென்' எனச் சொன்னான்

749. 'தாங்கு வார்இல்லை; தம்பியைத்
தழீக்கொண்ட தடக்கை
வாங்கு வார் இல்லை; வாகினைல்
தெருட்டுவார் இல்லை;
பாங்கா ஆயினோர் யாவரும்
பட்டனர், பட்ட
தீங்கு தான் இது; தமியனை
யார்துயர் தீர்ப்பார்?'

750. 'பயிலும் காலம் பத்தொடு
நாலும் படர்கானத்(து),
அயில்கின் றேனுக்(கு), ஆவன
நல்கி, அயிலாதாய்!
வெயில்என்(று) உன்னாய், நின்று
தளர்ந்தாய்! மெலி(வு)எய்தித்
துயில்கின் றாயோ? இன்றிவ்
வுறக்கம் துறவாயோ?'

751. 'மண்மேல் வைத்த காதலின், மாதர் முதலோர்க்கும்
புண்மேல் வைத்த தீநிகர் துன்பம் புகுவித்தேன்;
பெண்மேல் வைத்த காதலின் இப்பேறுகள் பெற்றேன்;
எண்மேல் வைத்த என்புகழ் நன்றால் எளியேனே?'

**752.** இதுவும் அது.

(**க-ரை**). "என்றும் என்னை மறக்காதவனே! அறமும், தாயும், தந்தையும், உறவும், பிறரும் என்னைத் தவிர வேறில்லையாக அவர்களைத் துறந்தாய்; எனக்குத் துணையாக வந்து என்னுடன் பிறந்தாய், நான் காட்டிற்கு வந்த பொழுது என்னைப் பின் தொடர்ந்து வந்தாய், என்னைப் பிரியாமல் இருந்தாய்; இன்று இறந்து கிடக்கின்றாய். உன்னைக் கண்டும் உயிர் வைத்துக் கொண்டு இருக்கின்றேன். நான் ஒரு எளியவனோ?" என்று இராமன் புலம்பினான்.

(**அ-ரை**) எளியனோ? : இகழ்ச்சிக் குறிப்பில் வந்தது.

**753.** போர்க்களத்தில் சோர்ந்து கிடந்த இராமனைத் தேவர்கள் தேற்றிக் கூறுதல்.

(**க-ரை**). "அன்பர்க்குப் பிறவி நோய் வாராது காத்து நிற்கும் பற்றுக்கோடான பரம்பொருளே! வேதியன் போலத் தோன்றி வாராமல் மறைகின்றாய். அத்தகைய பரம் பொருளாகிய நீ எங்களைப் பொருட்டு மானிட வடிவம் தாங்கி வந்தனையே என்று மனம் மகிழ்ந்து அஞ்சாமல் இருந்தோம். எங்களைக் காக்கும் இடையிலேயே, துன்பம் அடைய வருந்துகின்றாய். மாயைக்கு அப்பாற்பட்டவனாகிய நீயே இந்தத் துன்பத்தினின்றும் விடுபடாயேயானால். திருமகள் வாழும் மார்பையுடையவனாகிய உன்னுடைய மாயையை எங்களால் நீக்க முடியுமா?"

(**அ-ரை**). வெருவாது அஞ்சாமல், களைகண் பற்றுக்கோடு, இடர் துன்பம்.

**754.** பிரமன் அம்பால் கட்டுண்ட இராம இலக்குவரைக் கண்ட சீதை புலம்பல்.

(**க-ரை**): சீதை வாய்விட்டுப் புலம்பின அளவில், தேவமாதர் அனைவரும் அழுதனர். சிவபெருமானின் இடப்பாகத்தில் உள்ள உமாதேவி அழுதாள், மகாலக்குமி அழுதாள்; கங்காதேவி அழுதாள், சரஸ்வதி அழுதாள். திருமாலின் தங்கையாகிய துர்க்காதேவியழுதாள், கல் மனம் படைத்தவர்களாகிய அரக்கிமார்களும் மனம் தளர்ந்து அழுதார்கள்.

(**அ-ரை**) வானுடை மயில்கள் : அரமடமாதர்,—உவமையாகு பெயர். மழுவுடையான் இளங்காளையில் ஏறிவரும் சிவபெருமான். குயில் ஆகு பெயராக உமாதேவியைக் குறித்தது பதுமம் தாமரை.

**755.** சீதையின் துயரைக் கண்ட ஏனையோரும் அழுதல்.

(**க-ரை**): சீதை அழவும், அவளைப் பெற்றவளாகிய பூமி தேவியும் அழுதாள். குறையாத வேத நூல்களும், அறமும் தங்கள் உடம்பு நிலை குலைந்து தளர்ந்து அழுதன. பின் வாங்காமல் துன்புறுத்த வல்ல பெரும் பாவமும் அழுதது. ஏனையோர் செய்கையைப் பற்றிப் பின் என்ன சொல்லுவது? இலங்கையில், நின்றவர்கள் நின்றபடியே அழுதார்கள். இப்படிப் புலம்பின சீதை கொஞ்ச நேரத்தில் நினைப்பையும், மூச்சு விடுதலையும் நீங்கினாள்.

(**அ-ரை**): பொன்தாழ குழையாள் : பொன்னாலாகிய தொங்குகின்ற காதணியுடையவள், (சீதை); உடற்றும் : துன்புறுத்தும்; உயிர்ப்பு : மூச்சு விடுதல்.

752. ‘அறம்,தாய், தந்தை,சுற்றமும்,
மற்றும் எனை அல்லால்
துறந்தாய்!என்றும் என்னை
மறாதாய்! துணைவந்து
பிறந்தாய், என்னைப் பின்பு
தொடர்ந்தாய்! பிரிவற்றாய்!
இறந்தாய் உன்னைக் கண்டும்
இருந்தேன் எளியேன் ஓ!’

753. ‘வருவாய் போல வாராதாய்,
வந்தாய்என்று மனம் களிப்ப
வெருவா(து) இருந்தோம்! நீ இடையே
துன்பம் விளைக்க மெலிகின்றாய்;
கருவாய் அளிக்கும் களைகண்ணே!
நீயே இடரைக் காவாயேல்,
திருவாழ் மார்ப! நின்மாயை
எம்மால் தீர்க்கத் தீருவதோ?’

சீதை களங்காண் படலம்

754. மங்கை அழலும், வானாட்டு
மயில்கள் அழுதார்; மழவிடையோன்
பங்கில் உறையும் குயில்அழுதாள்:
பதுமத் திருந்த மா(து)அழுதாள்;
கங்கை அழுதாள்; நாமடந்தை
அழுதாள்;கமலத் தடம்கண்ணன்
தங்கை அழுதாள்; இரங்காத
அரக்கி மாரும் தளர்ந்(து) அழுதார்.

755. பொன்தாழ் குழையாள் தனையீன்ற,
பூமா மடந்தை புலந்(து) அழுதாள்;
குன்றா மறையும், தருமமும்மெய்
குலைந்து குலைந்து தளர்ந்(து) அழுத;
பின்றா(து) உடற்றும் பெரும்பாவம்
அழுத; பின்என் பிறர்செய்கை?
நின்றார் நின்ற படிஅழுதார்;
நினைப்பும் உயிர்ப்பும் நீத்திட்டாள்.

756. திரிசடை சீதையைத் தேற்றல்.

(க - ரை): "சீதையே! நான் கண்ட கனவுகளையும், நல்ல சகுனம் நேர்ந்தமையையும், உனது கற்புடைமையையும், சேனைகளுடைய வாளையேந்திய அரக்கர்களின் பாவச் செய்கையையும், அறத்தைப் பாதுகாக்கும் தேவர் நாயகனாகிய இராமபிரானது வீரத் தன்மையையும் நீ மறந்து விட்டனை போலும்! இவற்றையெல்லாம் நினைத்துப் பார்க்குமிடத்து இராவணனுக்கு அழிவு நேரலாமேயன்றித் தாமரைக் கண்ணனாகிய இராமபிரானுக்கு ஒரு காலும் அழிவு வராது என்று உறுதியுடன் இருப்பாயாக" என்று திரிசடை தேற்றினாள்.

(அ-ரை): நிமித்தம் : சகுனம்; தண்டம் : சேனை, அண்டர் : தேவர்; அயர்ந்தாய் : மறந்துவிட்டாய்; புண்டரீகம : தாமரை, புலையன் : இழிதொழில் செய்பவன்.

757. இதுவும் அது.

(க - ரை): "அன்னையே! இராமன் இறந்தானேயானால் பதினான்கு உலகங்களும் இக்கணமே அழிந்திருக்கும்; சந்திர சூரியரும் அழிந்திருப்பர். தெய்வம் என்று ஒருபொருள் இருக்கிறதென்கிறார்களே, அது என்னாகும்? பிரமன் முதலாக உள்ள சகல உயிர் வகைகளும் இறந்து போயிருப்பர். அஞ்சாதே! இப்பொழுது அவைகள் எல்லாம் தன்னிலையில் இருக்கின்றன. ஆகையால் இராமபிரானும் இறந்திலன் என்று அனுமானப் பிரமாணத்தால் துணிவாயாக. இதற்கு மேல் தருமமும் நம்மைக் காத்துக் கொண்டு நிற்கின்றது."

(அ-ரை): ஒய்ந்துளன் : இறந்திருப்பான்; இரவி : சூரியன்,—இங்கே உபலட்சணத்தால் சந்திரனையும் குறித்தது. விரிஞ்சன் : பிரமன், வெருவல் : அஞ்சாதே; ஆய்ந்து : ஆராய்ந்து.

758. இதுவும் அது.

(க - ரை): "சீதையே! நீ கொடுத்த வரத்தினால் அனுமான் என்றும் சிரஞ்சீவியாகையால், அவனுக்குச் சாவு கிடையாது. உன்னுடைய கற்புக்கும் அழிவு நேர முடியுமா? இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் அவ்வளவு வலியுடையனவல்ல. எளிதில் நீங்கக்கூடியவைகளே. நம்மவர்களைக் கட்டிக் கீழே கிடத்திய, பிரமன் அம்பின் கொடிய செய்கையும் இக்கணமே நீங்கிவிடும். அத்தோடு தேவர்களுடைய எண்ணத்திற்கும் தவறு நேராது."

(அ-ரை): மாருதி : அனுமான்; திசைமுகன் : பிரமன்; பேரும் : நீங்கும்; பிழைப்பது : தவறுவது.

756. 'கண்டஅக் கனவும்,பெற்ற
நிமித்தமும், நினது கற்பும்
தண்டவாள் அரக்கர் பாவச்
செய்கையும்,தருமம் தாங்கும்
அண்டர்நாயகன்தன் வீரத்
தன்மையும், அயர்ந்தாய் போலும்;
புண்டரீகற்கும் உண்டோ
இறுதி! இப் புலையர்க்(கு) அல்லால்.'

757. 'ஒய்ந்துளன் இராமன் என்னின்,
உலகம்ஓர் ஏழும் ஏழும்
தீய்ந்துறும்; இரவி பின்னும்
திரியுமோ? தெய்வம் என்ஆம்?
வீய்ந்துறும் விரிஞ்சன முன்னு
உயிர்எலாம்;வெருவல் அன்னை!
ஆய்ந்(து) அவை உள்ள போதே
அவர்உளர்; அறமும் உண்டால்.'

758. 'மாருதிக்(கு) இல்லை அன்றே
மங்கைநின் வரத்தி னாலே
ஆருயிர் நீங்கல்; நின்பால்
கற்புக்கும் அழிவுண் டாமே?
சீரிய(து) அன்(று) இ(து) ஒன்றும்;
திசைமுகன் படையின் செய்கை
பேரும்இப் பொழுதே; தேவர்
எண்ணமும் பிழைப்ப(து) உண்டோ?'

அனுமான் சஞ்சீவிமலையைக் கொணர்ந்து இராமலக்குமணர் முதலியோரை உயிர்ப்பித்தமை பற்றிக் கூறுவது.

**759.** விபீடணன் இராமனுக்குத் தீங்கில்லையென்று உணர்தல்.

(**க - ரை**) : விபீடணன், 'இராமனுக்கு அழிவு நேராது' என்ற உறுதியினால் உயிர் விடவில்லை; வாயால் அழுதானில்லை; சினந்து பொங்கி நெருப்பைப் போல் கொதிக்கும் மனத்தை யுடையவனாகிய அவன் அஞ்சினானுமில்லை. நன்றாக உற்று நோக்கி, 'இராமபிரானது திருமேனிக்குத் தீங்கு நேரவில்லை' என்று அறிந்து துன்பம் நீங்கினான்.

(**அ-ரை**): பொருமி : சினந்து; வெருவலன் : அஞ்சினானில்லை; வடு . குறைப்; இங்குத் தீங்கைக் குறித்தது.

**760.** சாம்பவான் சஞ்சீவி மூலிகைகளைக் கொணருமாறு அனுமனை அனுப்புதல்.

(**க - ரை**) : "அறிவின் மிக்கவனாகிய சாம்பவான் அனுமானை நோக்கி, "வீரனே! செத்தவர்களைப் பிழைக்க வைக்கக் கூடிய சஞ்சீவ கரணி யென்னும் மருந்தும், உடம்பை இரண்டாக வெட்டினாலும் ஒட்டுவிக்கக் கூடிய சந்தானகரணி யென்னும் மருந்தும், ஆயுதங்களால் காயப்பட்ட உடம்பின் புண்ணை மாற்றவல்ல விசல்ய கரணி யென்னும் மருந்தும், முதியோனை இளையோனாக உரு மாற்ற வல்ல சாவர்ண்ய கரணி யென்னும் மருந்தும் இருக்கின்றன. நீ இம்மருந்துகள் இருக்கும் இடத்திற்குச் சென்று அவற்றைக் கொணர்வாயாக" என்று அடையாளத்தோடும் கூறினான்.

(**அ-ரை**): உய்விக்கும் : பிழைக்க வைக்கும். மருந்து : மூலிகை; மெய் : உடம்பு; வகிர் : பிளவு; கீண்டாலும் : வெட்டினாலும்.

**761.** அனுமான் மேருமலையின் மேலேறிச் செல்லல்.

(**க - ரை**) : அனுமான், நினைக்கின்ற மனத்தின் எண்ணத்திற்கும், பேரறிஞர்கள் நோக்கும் கண் பார்வைக்கும், கருதுகின்ற தெய்வத்தன்மை பொருந்திய மனத்திற்கும், பற்றப்படாது மிக்க வேகத்தையுடையவனானான். பூவுலகத்திற்கும், எட்டு திக்குகளுக்கும், தேவலோகத்திற்கும், ஒரு அளவையாகிப் பூமியின் நடுப் பாகத்தில் இருப்பதாகிய மகாமேரு மலையின் மீது சென்றான்.

(**அ-ரை**). எண் : இங்கு மனோவேகத்தைக் குறித்தது. வைகும் : தங்கும்; கடியன் : கடுமையான வேகத்தையுடையவன்; வரம்பு : எல்லை.

**762.** அங்கு நான்முகனைக் கண்டு வணங்கல்.

(**க - ரை**) : அறவடிவினனான அனுமான், அந்த மலையின் உச்சியில், உலகைப் படைத்த பிரமனுடைய நகரத்தைப் பார்த்து, அந்நகரின் நடு இடத்தில், தாமரை மலர்ப் பீடத்தில் பிரமன் வீற்றிருத்தலைக் கண்டு, அவனைக் கையால் வணங்கினான்.

(**அ-ரை**): உம்பர் : உச்சி; நடுநாப்பண் : ஒருபொருட் பன்மொழி; நாமம்: புகழ்; பொலிய : விளங்கும்படியாக.

## மருந்து மலைப் படலம்

759. ஆயினும், 'இவருக் கில்லை
அழி(வு)' எனும் அதனால் ஆவி
போயின(து) இல்லை; வாயால்
புலம்பலன்; பொருமிப் பொங்கித்
தீயினும் எரியும் நெஞ்சன்
வெருவலன், தெரிய நோக்கி,
'நாயகன் மேனிக்கிலலை
வடு' என நடுக்கம் தீர்ந்தான்.

760 'மாண்டாரை உய்விக்கும் மருந்தொன்றும்
மெய்வேறு வகிர் களாகக்
கீண்டாலும் பொருந்துவிக்கும் ஒரு மருந்தும்,
படைக்கலங்கள் கிளர்ப்ப(து) ஒன்றும்,
மீண்டேயும் தம்உருவே அருளுவதோர்
மெய்மருந்தும் உள; நீ வீர!
ஆண்(டு) ஏகிக் கொணர்தி' என அடையாளத்
தொடும் உரைத்தான் அறிவின் மிக்கான்.

761. எண்ணுக்கும் அளவி லாத
அறிவினோர் இருந்து நோக்கும்
கண்ணுக்கும், கருதும் தெய்வ
மனத்திற்கும் கடியன் ஆனான்;
மண்ணுக்கும், திசைகள் வைத்த
வரம்பிற்கும், மலரோன் வைகும்
விண்ணுக்கும் அளவை யான
மேருவின் மீது சென்றான்.

762. அன்னமா மலையின் உம்பர்,
உலகெலாம் அமைத்த அண்ணல்
நன்னகர் அதனை நோக்கி,
அதன் நடு நாப்பண், நாமப்
பொன்மலர்ப் பீடம் தன்மேல்
நான்முகன் பொலியத் தோன்றும்
தன்மையும் கண்டு, கையால்
வணங்கினான் தருமம் போல்வான்.

763. உத்தர குருவைக் கண்டு அப்பாற் செல்லுதல்.

(க - ரை): நெருப்பைப் போல ஒளி வீசும் சடை முடியையு டைய சிவபெருமானுக்கும், பிரமனுக்கும், திருமாலுக்கும் பொது விடமாகிய அம்மலையின் பக்கத்திலுள்ள 'உத்தர குருவம்' என் னும் போக பூமியைப் பார்த்து, 'இது சோழ வளநாடு போன்ற பொலிவுடையது' என்று நினைத்து, அனுமான் அப்பாற் போனான்.

(அ-ரை): வன்னி : நெருப்பு, மௌலி : முடி; சென்னி : சோழன, நாள் தெரியல் : புதுமலர் மாலை ; தியாகம் : கொடை ; பொன்னி : காவேரி, பொன்னி நாடு : சோழநாடு; வைப்பு : நிலம்; புலன்கொள் : அறிவுபொருந்த; உத்தர குருவம் : போகபூமிகள எழில் ஒலறு.

குறிப்பு: மூவரும் ஆளும மகாணி : மேருமலை, தேவர் மூவருக்கும் பொதுவானது என்பது புராண மரபு.

764. அனுமான் சஞ்சீவி மலையைத் தூக்கிச் செல்லல்.

(க - ரை): இங்கு நின்று, இன்ன மருந்து இன்ன அடையாள முடையது என்று தேடிப் பிடுங்கத் தொடங்கினால் காலம் வீணா கும் என்று மனத்தில் நினைத்து அனுமான், அந்த மலையை வேரொடும் பிடுங்கிக் கையில் ஏந்திக் கொண்டு வான் வழியாக விரைந்து சென்றான்.

(அ-ரை): சிலகும் : குறையும் ; அங்கை : உள்ளங்கை; பொங்கு : விரிந்த; விசும்பு : ஆகாயம்; கடிது : விரைந்து.

765. அனுமான் கொணர்ந்த சஞ்சீவி மலையின் காற்றுப் போர்க்களத்தில் வீசின அளவில், மூர்ச்சித்துக் கிடந்த அனை வரும் எழுந்தனர் என்பது.

(க - ரை): சஞ்சீவி மலையின் காற்று வந்து வீசிய அளவில் தேவர்களால் போற்றப்பட்டு, இதுவரை யடையாத புதிய துன்பம் அடைந்தவர்களாகிய இராமன் சேனை வீரர்கள், இதற்கு முன் இல்லாத பெருமையும், மிக்க வலிமையும், அழகும் உடைய வர்களாக எழுந்தார்கள் ; யமனை வென்று தம்முயிர் உடம்போடு பொருந்தப்பெற்றவரும் ஆயினர்.

(அ-ரை): விருந்து : புதுமை, இதற்கு முன் படாத புதுத்துன்பம். ஏற்றம் : உயர்வு; கூற்று : எமன்.

766. சஞ்சீவி மலையினால் வானரர் உயிர் பெற்றமைக்கும், அரக்கர் உயிர் பெறாமைக்கும் காரணம்.

(க - ரை): போர்க்களத்தில் இறந்த அரக்கர்களின் உடல் கள் யாவும் இராவணன் ஆணைப்படிக் கடலில் எறியப்பட்டு முழுகி ஒழிந்தன. அதனால் அவை உயிர் பெற்றில. பின் கடலிலே மிதக்கும் மரக்கலங்களில் செத்துக்கிடக்கும் பிணங்களும் உயிர் பெற்று எழுந்தன. அதனால் வானரப்படை பிழைத்ததைப்பற்றி எடுத்துக்கூறவும் வேண்டுமோ?

(அ-ரை): யாக்கை : உடம்பு; ஆழி : கடல்; கரக்கல் : மூழ்குதல் ; உய்ந்து : பிழைத்து.

763. வன்னிநாட் டியபொன் மௌலி
வானவன், மலரின் மேலான்,
கன்னிநாள் திருவைச் சேரும்
கண்ணனும், ஆளும் காணி
சென்னிநாள் தெரியல் வீரன்
தியாகமா விநோதன் தெய்வப்
பொன்னிநாட்(டு) உவம வைப்பைப்
புலன்கொள நோக்கிப் போனான்.

764. இங்குநின்(று) இன்னன மருந்(து)என்(று) எண்ணினால்,
சிங்கும்ஆல் காலம்; என்(று) உணர்ந்த சிந்தையான்,
அங்கது வேரொடும் அங்கை தாங்கினான்,
பொங்குநல் விசும்பிடைக் கடிது போகுவான்.

765. காற்றுவந்(து) அசைத்தலும், கடவுள் நாட்டவர்
போற்றினர்; விருந்துவந்(து) இருந்த புண்ணியர்
ஏற்றமும் பெருவலி அழகொ(டு) எய்தினர்;
கூற்றினை வென்றுதம் உருவும் கூடினர்.

766. 'அரக்கர்தம் யாக்கைகள் அழிவில் ஆழியில்
கரக்கல்உற்(று) ஒழிந்தன ஒழியக், கண்டன
மரக்கலம் முதலவும் உய்ந்து வாழ்ந்தன;
குரக்கினம் உய்ந்த(து) கூற வேண்டுமோ?'

767. இராமன் மூர்ச்சித்தெழுந்த இலக்குவனைத் தழுவுதல்.

(க - ரை): சிறந்து விளங்கிய தம்பியாகிய இலக்குவனுக்கு, உயிர்வந்து பொருந்தத் தனது பூரித்த தோள்களால் மனமாறத் தழுவிக்கொண்டு, இராமன் துயர் நீங்கினன். சஞ்சீவி மலையின் காற்று வீசியதால் உலகின் எப்பாகத்திலும், ஒருவருக்கும் ஒரு வித நோயும் இல்லாமல் தீர்ந்தது. தேவர்களும் துன்பம் நீங்கப் பெற்றார்கள்.

(அ-ரை) ஓங்கிய : உயர்ந்த, உள்ளுற : மனமாற, வீங்கிய : பூரித்த; மறுக்கம் : துன்பம்.

768. இராமன் அனுமனைப் புகழ்தல்.

(க - ரை): "அனுமானே! ஒரு உயிர் அழிந்துபோகும் சமயத்தில் அதனை, ஒருவர் தருவாரேயானால் அந்த உதவிக்கு, உயிருக்குயிராகப் பிறிதோர் உயிரைக் கொடுத்தாலும் கைம்மாறாக முடியுமா? அதனின் சிறந்த பொருள் ஒன்று இருந்து கொடுத்தாலன்றோ ஏற்ற கைம்மாறு ஆகும்? எனக்கு அடைய நின்ற பழியையும் காத்து, பகைவரிடத்தினின்றும் என்னைக் காத்து, எங்கள் மரபையும் அழியாமல் காத்தாய். வேத நெறியையும் காத்தவனாவாய்" என்று இராமன் அனுமனைப் புகழ்ந்தான்.

(அ-ரை): மொழிபுங்கால் : சொல்லுமிடத்து; முற்றுமே : முற்றுமோ,— ஏகாரம் வினைப்பொருட்டு; வழி : மரபு.

அரக்க மகளிர் கள்ளைக் குடித்து இராவணனவையில் ஆடியதைப் பற்றிக் கூறுவது.

769. கள்ளின் வேகம்.

(க - ரை): மனிதப் பிறவியின் பயன் இதுவென உணர்ந்து, கல்வி கற்றுக் கற்ற நெறியில் நின்று, நல்லறிஞர்களாகிய தூயவர் கூட்டத்தோடும் பழகி, நலம் பெறுவதாயிருக்க, அதையொன்றும் அறியாத ஒரு பேதை மகனிடத்தில் ஒரு வஞ்சகன் செய்த சூழ்ச்சித் திறம் விரைவிற் சென்று அடைவதைப் போல, அரக்கியர் குடித்த கள்ளின் வேகம் அவர்களோடு விரைந்து கலந்தது.

(அ-ரை): நவையறு : குற்றமற்ற; முற்பயம : முற்பிறப்பில் செய்த வினையின் விளைவு; தேறரு : தெளியாத; வஞ்சன் : வஞ்சகன்.

770. கள்ளுண்ட மடவாரின் தோற்றம்.

(க - ரை): மாவடு போன்ற, மருண்டு நோக்கும் நீல நிறம் பொருந்திய குவளை மலர் போன்ற ஒளி பொருந்திய கண்கள், கள்ளுண்டதனால் செம்மை நிறம் அடையவும், செந்நிறம் பொருந்திய செவ்வாம்பற் பூப் போன்ற வாய்களாகிய பவளத் துண்டங்கள் வெளுப்படையவும், அசோகம் பூப் போன்ற நிறம் மாறி வடிவம் வேறாகக் காணப்பட்டு, அரக்கர்களுக்கு அடுத்து நிகழ இருக்கும் இறுதிக் காலத்தைக் காட்டும் ஒரு அறிகுறியாக விளங்குகின்ற ஒரு வயலைப் போல இருந்தது அம்மகளிர் தோற்றம்.

(அ-ரை): மா : மாவடு; மணி : நீல நிறம்; வாள் : ஒளி; அரத்தம் : செந்நிறம்; கிடை : துண்டு; நிருதர் : அரக்கர்; பிறழ்ந்து : மாறுபட்டு; பழனம் : வயல்.

767. ஓங்கிய தம்பியை உயிர்வந்(து), உள்ளுற
வீங்கிய தோள்களால் தழுவி, வெம்துயர்
நீங்கினன் இராமனும்; உலகின் நின்றில
தீங்(கு); உள தேவரும் மறுக்கம் தீர்ந்தனர்.

768. 'அழியும் கால்தரும் உதவிக்(கு) ஐயனே!
மொழியுங் கால்தரும் உயிரும் முற்றுமே;
பழியும் காத்(து), அரும் பகையும் காத்(து),எமை
வழியும் காத்தனை, மறையும் காத்தனை!'

## களியாட்டுப் படலம்

769. நற்பெரும் கல்விச் செல்வம்
நவைஅறு நெறியை நண்ணி,
முற்பயம் உணர்ந்த தூயோர்
மொழியொடும் பழகி முற்றிப்
பிற்பயன் உணர்தல் தேற்றாப்
பேதைபால் வஞ்சன் செய்த
கற்பனை என்ன ஓடிக்
கலந்தது கள்ளின் வேகம்.

770. மாப்பிறழ் நோக்கி னார்தம்
மணிநெடும் குவளை வாட்கண்
சேப்புற, அரத்தச் செவ்வாய்ச்
செங்கிடை வெண்மை சேர,
காப்புறு படைக்கைக் கள்வ
நிருதர்க்கோர் இறுதி காட்டி,
பூப்பிறழ்ந்(து) உருவம் வேறாய்ப்
பொலிந்த(து) ஓர் பழனம் போன்ற.

**771.** இராவணன் முன் நிகழ்ந்த களியாட்டு அடங்குதல்.

**(க - ரை):** அம்மகளிர் ஆடுகின்ற கூத்தும், மகிழ்ச்சியில் வந்த ஆரவாரமும், தேவாமிர்தம் போன்ற வாய்ப்பாட்டும், முழவு களால் எழுப்பும் தெய்வத்தன்மை பொருந்திய தாள ஒத்துக் களும், பவளம் போன்ற வாயையுடைய மகளிர் இராவணனோடு பிணங்கிக்கொள்வதும், அம்மகளிர் கடைக்கண்ணால் நோக்கும் பார்வையும், மழலைபோன்ற விரும்பத்தக்க வார்த்தைகளைப் பேசு தலும் ஆகிய இவைகள் எல்லாம், போர்க்களத்திலிருந்து வானர சேனை ஆரவாரித்த ஓசையைக்கேட்ட அளவில், ஒரு மலர்ந்த மலர் வெயிலால் வாடியதைப்போல ஒடுங்கின.

**(அ-ரை):** அமலை : ஓசை; ஆனாற : சிறந்த, பாணி : தாளவொத்து; வைவுரை : விரும்பத்தக்க வார்த்தை; மெய்மை விருப்பம்.

இந்திரசித்து அனுமன் முன்னால் மாயா சீதையை வெட்டியதைப் பற்றிக்கூறுவது.

**772.** மாயம் புரிய அநுமனிடம் இந்திரசித்து வருதல்.

**(க - ரை):** பிறரால் மாற்றமுடியாத மாயைகளை இயற்ற வல்ல வெற்றியையுடையவனும், எமனையும் வென்று உயர்ந்த வெற்றி முரசு கொட்டினவனுமாகிய இந்திரசித்து, மேலைக்கோபுர வாயிலில் வந்து தங்கியிருந்த கொடுமையையுடைய காற்றின் புதல்வனாகிய அனுமனிடம் வந்தான்.

**(அ-ரை).** வலத்தான் : வெற்றியுடையவன், வட்டகை : ஆரவாரம்

**773.** இந்திரசித்து மாயா சீதையைத் தன் கண் முன்னே கொல்லக் கண்ட அனுமான் வருந்திப் புலம்புதல்.

**(க - ரை):** 'பெரிய சிறையிலே வைக்கப்பட்ட கற்புடைய சீதையாகிய ஒப்பற்ற பெண்ணை என் கண்ணெதிரிலே கொல்ல, சிறகுகள் அற்ற பறவைபோலாகி ஒரு செயலுஞ்செய்ய முடியாதவனாக இருக்கின்றேன். இப்பொழுது நான் ஒரு பெரிய சிறையில் அழுந்திக் கிடக்கின்றேன். எமது தலைவனாகிய இராமபிரான் தேவி தன்னைச் சிறையினின்றும் அடியேன் மீட்ட வண்ணம் மிகவும் அழகிது' என்று அனுமான் வருந்தினான்.

**(அ-ரை):** புள் : பறவை; பெரிதும் . மிகவும்; அழகிது : இகழ்ச்சிக் குறிப்பு; அம்மா : வியப்பிடைச் சொல்.

**774.** இதுவும் அது.

**(க - ரை):** 'கடத்தற்கரிய கடலைக்கடந்து, இந்த இலங்கா நகரத்தை அழிக்கவல்ல நெருப்பை வைத்து, அலைகளையுடைய கரியகடலுக்கு வாராவதி கட்டி, மேருமலைக்கு அப்பாற்போய்ச் சஞ்சீவி மலையின் மூலிகையைக் கொண்டுவந்து காட்டி, வானர வீரரில் உன்னை நிகராவார் ஒருவரும் இல்லையென்று வீரர்கள் என்னைப் பாராட்ட மகிழ்ச்சி கொண்டிருந்தேன். இவ்வளவும் செய்த எனது அடிமைத்தன்மை கடலிலே கலக்கிய ஒரு வாசனைப் பொருளைப்போலப் பயனற்றதாகிவிட்டது.'

**(அ-ரை):** அள்ளரி : அடர்ந்துஎரியும நெருப்பு; வெள்ளம் : அலை; கோட்டம் : ஒரு வாசனைப் பொருள், வைத்தியச்சரக்கு.

771. ஆடலும், களிப்பின் வந்த
அமலையும், அமுதின் ஆன்ற
பாடலும் முழவின் தெய்வப்
பாணியும் பவள வாயார்
ஊடலும், கடைக்கண் நோக்கும்,
மழலைவெவ் உரையும் எல்லாம்
வாடல்மெல் மலரே ஒத்த;
ஆர்ப்பொலி வருத லோடும்.

## மாயா சீதைப் படலம்

772. மேற்றிசை வாயிலை மேவிய வெம்கண்
காற்றின் மகன் தனை, வந்து கலந்தான்,
மாற்றல் இல் மாயை வகுக்கும் வலத்தான்
கூற்றையும் வென்(று)உயர் வட்டணை கொண்டான்.

773. 'பெரும்சிறைக் கற்பி னாளைப்
பெண்ணினைக கண்ணிற் கொல்ல
அரும்சிற(கு) அற்ற புள்போல்,
யாதும் ஒன்(று) இயற்றல் ஆற்றேன்,
இரும்சிறை அழுந்து கின்றேன்;
எம்பிரான் தேவி பட்ட
அரும்சிறை மீட்ட வண்ணம்
அழகிது! பெரிதும் அம்மா!'

774. 'அரும்கடல் கடந்(து),இவ் வூரை
அள்எரி மடுத்து, வெள்ளக்
கருங்கடல் கட்டி, மேருக்
கடந்(து)ஒரு மருந்து காட்டிக்
குரங்(கு)இனி உன்னோ(டு) ஒப்பார்
இல், எனக் களிப்புக் கொண்டேன்;
பெரும்கடல் கோட்டம் தேய்த்த(து)
ஆய(து)என் அடிமைப் பெற்றி.'

**775.** *சீதை இறந்துபட்டாள் எனக் கேட்ட இராமபிரான் மூர்ச்சையடைதல்.*

**(க - ரை):** பித்துக்கொண்டவர்களும் கூடச் சிறிதும் சகிக்கக் கூடாத பெரிய அன்பு என்னும் ஆயுதமானது, தன் மார்பிலே தைத்த அளவில் இராமபிரான் உயிரற்றவன் என்னும்படி பூமியில் விழுந்தான். சித்திரத்தில் எழுதிய பதுமை போன்ற அந்த வீரன் அறிவு நீங்கினன்; தன் நண்பர்களின் முகத்தையும் நோக்க வில்லை; இலக்குவன் கேட்ட வினைக்களுக்கு விடையளிக்கவில்லை.

**(அ-ரை):** மித்திரர் : நண்பர், வதனம் : முகம்; இறை : சிறிதளவும்; அபிமானம் : அன்பு, சத்திரம் : ஆயுதம்.

**776.** *'சீதையை இந்திரசித்து, கொன்றிருக்கலாம்' என்று விபீடணன் கருதுதல்.*

**(க - ரை):** முன் நிகழ்ந்த செயல்களுக்குரிய காரணங்களை யெல்லாம் உணரத்தக்கவனை விபீடணன் நடுங்கினன். அளவில்லாத துன்பமானது மனத்தில் அழுந்திப் பதிய இடையில் ஒன்றும் அறிய முடியாதவனை அவன், 'நம்மால் இராம இலக்குவரை வெல்ல முடியாது. நமக்கு இவ்வளவு நாசமும் இவளால்தானே விளைந்ததென்று இந்திரசித்து எண்ணிச் சீதையைக் கொன்றிருக்கவும் கூடும்' என்று மனத்தில் ஓர் ஐப்முற்றான்.

**(அ-ரை):** துளககம : நடுக்கம; தெரிககிலாதான் : தெரியாதவன்; அடுக்கும் : தகும; ஐயம : சந்தேகம்.

**777.** *இலக்குவன் இராமனைத் தேற்றிப் போர் புரியத் தூண்டுதல்.*

**(க - ரை):** "அண்ணே! ஒரு பெண், அதிலும் துணையற்றவள்; தவம் செய்பவள்; அறவடிவாகிய கற்புக்கே ஒரு தெய்வம் போன்றவள்; அத்தகைய உன் தேவியாகிய திருமகளைத் தொட்டுக் கொடியவனாகிய இந்திரசித்துக் கொன்றான் என்றால் நாம் துன்பப்பட்டுக் கொண்டிருப்பது இன்னும் பிழைத்திருப்ப தற்காகவா? அல்லது அரக்கர்கள் மேல் வைத்த கருணையினாலா? இப்படிப் போர்புரியாமல் உழன்றுகொண்டிருப்பது தருமத்திற்கு அடுக்குமா?"

**(அ-ரை)** தையல் : பெண்; தெய்வதம் : தெய்வம்; உழப்பது : துன்பப் படுவது; உய்யவோ : பிழைத்திருக்கவோ?

**778.** *இலக்குவன் வீரவுரை.*

**(க - ரை):** "நல்ல நெறியில் ஒழுகுபவர்களுக்கு, நெறியற்றவர் கர்வங்கொண்டு செருக்குற்று வலியராகி ஒரு அழிவு தேடுவாரே யானால் நாம் சும்மா இருக்கும் செயல் எதனோடு சேர்ந்தது? அரக்கர் என்றால் என்ன? தேவர்கள் என்றால் என்ன? அந்தணர் என்றால் என்ன? தேவ, அசுர குருக்களாகிய வியாழன் வெள்ளி ஆகிய இவர்கள் என்றால் என்ன? முனிவர் என்றால் என்ன? வேதத்தின் கோட்பாடு என்றால் என்ன? நாம் அழிப்பதானால் இந்த மூன்று உலகங்களும் நெருப்புப் பற்றி எரியாதா?" என்று இலக்குவன் இராமனிடம் வீரவுரை பகன்றான்.

**(அ-ரை):** செருக்கினர் : கர்வங்கொண்டவர்; வலியர் : வலிமையுடையவர்; எரிமடுத்தல் : அக்கினி பற்றி அழித்தல்.

775. சித்திரத் தன்மை யுற்ற
சேவகன் உணர்வு தீர்ந்தான்;
மித்திரர் வதனம் நோக்கான்;
இளையவன் வினவப் பேசான்;
பித்தரும் இறைபொ ருத,
பேர் அபி மானம் என்னும்
சத்திரம் மார்பில் தைக்க,
உயிர் இலன் என்னச் சாய்ந்தான்.

776. தொல்லைய(து) உணரத் தக்க
வீடணன் துளக்கம் உற்றான்;
எல்லையில் துன்பம் ஊன்ற
இடைஒன்றும் தெரிக்கி லாதான்
'வெல்லவும அரிது; நாசம்
இவள் தனால் விளைந்த(து) என்னக்
கொல்வதும் அடுக்கும்,' என்று
மனத்தின் ஓர் ஐயம் கொண்டான்.

777. 'தையலைத் துணையி லாளைத்,
தவத்தியைத், தருமக் கற்பின்
தெய்வதம் தன்னை, மற்றுன்
தேவியைத், திருவைத் தீண்டி
வெய்யவன் கொன்றான் என்றால்,
வேதனை உழப்ப(து) இன்னும்
உய்யவோ! கருணை யாலோ,
தருமத்தோ(டு) உறவும் உண்டோ?'

778. 'அரக்கர்என்? அமரர் தாம்என்?
அந்தணர் தாம்என்? அந்தக்
குருக்கள்என்? முனிவர் தாம்என்?
வேதத்தின் கொள்கை தான்என்?
செருக்கினர் வலியர் ஆகி,
நெறிநின்றார் சிதைவர் என்றால்
இருக்கும்இ(து) என்ஆம்? இம்மூன்(று)
உலகையும் எரிம டாதே?'

**779.** ‘இந்திரசித்து அயோத்தியை அழிக்கச் சென்றிருக்கிறான்’ என்று கேட்ட இராமன் துயருறுதல்.

**(க-ரை):** ‘பாவியாகிய நான் ஒருவன் செய்த பாவம் என் ஒருவனோடு மட்டும் ஒழியாமல், என் தந்தைக்கும், அடுத்துச் சடாயுவுக்கும், துணையற்றவளாயிருந்த சீதைக்கும் அழிவை யுண்டாக்கி, அத்துடன் நீங்கிற்றில்லை. அதற்கு மேலும், பேதையாகிய பெண் பிறப்பில் பிறந்து எங்களைப் பெற்ற தாய்மார் மூவருக்கும், யாதொரு குற்றமும் அற்ற என்னுடைய அன்புத் தம்பிமார்களுக்கும், எங்கள் நகரத்திற்கும், நாட்டிற்கும் அல்லவா அப்பாவம் தீங்கு விளைத்தது!’

(அ-ரை) தாதை : தந்தை; தமியள் : ஒன்றியானவள்.

**780.** இராமனை இலக்குவன் தேற்றல்.

**(க-ரை) :** “நெருப்புப்போன்ற கொடியவனாகிய இந்திரசித்து பிரமன் அம்பை யேவ, சாதலையுடையவனாகிக் கீழே விழுவதற்கு என்போன்றவனா பரதன்? கொடிய எமனை அழைத்துக்கொண்டு பரதன் போர்புரியத் தொடங்குவானேயானால், இந்த இந்திரசித்து அவனால் குத்துண்டு தன் கூட்டத்தோடும் இறந்து பூமியில் விழுவான். அதை நீயும் சென்று கண்டுகொள்ளப் போகிறாயன்றோ?” என்று இலக்குவன் மனம் புழுங்குகின்றவனை இராமனைத் தேற்றினான்.

(அ-ரை) வீ கொண்டு : சாதலை மேற்கொண்டு, கோடி : கொள்வாய்; புழுங்குதல் : மனம் கொதித்தல்.

**781.** விபீடணன் இராமனைத் தேற்றுதல்.

**(க - ரை):** “இறைவனே! பிராட்டியாரைப் பாதகனாகிய இந்திரசித்து, கையினால் பற்றிக் கொன்றிருப்பானேயானால் இந்த மூன்று உலகங்களும் பற்றியெரிந்து சாம்பராய்ப் போயிருக்க வேண்டும். சீதையைக் கொன்றது ஒருகால் உண்மையாய் இருந்தாலும் இவர்கள் அயோத்திமேல் படையெடுத்துச் செல்வதென்பது முழுதும் பொய். இவ்விரண்டு நிகழ்ச்சிகளையும் சிறிது நேரத்தில் நாம் தெரிந்து கொள்ளலாம்” என்று விபீடணன் இராமபிரானைத் தேற்றினான்.

(அ-ரை): பாதகன் : பாவி; சாம்பர் : சாம்பல்-கடைப்போலி; சித்திரம் : பொய்.

**782.** விபீடணன் வண்டின் உருக்கொண்டு அசோகவனம் சென்று சீதையைக் காணுதல்.

**(க - ரை):** விபீடணன் ஒரு வண்டின் வடிவம் எடுத்துக் கொண்டு, இராமனுடைய மனவேகத்திலும் விரைந்துசென்று, அசோக வனத்தில் சீதையிருக்குமிடத்தை அடைந்து, ஆவி உண்டோ? இல்லையோ? என்னும் நிலையோடு ஒரு பாவை போன்று இருக்கின்ற சீதையைத் தன் கருத்தாலும் கண்களாலும், தானே கண்டான்.

(அ-ரை): மானவன் : இராமபிரான்; தண்டலை : சோலை; இருக்கை : இருப்பிடம்; பொருக்கென : விரைவாக; என்ப, மன், ஓ மூன்றும் அசை நிலைகள்.

779. 'தாதைக்கும், சடாயு வான
தந்தைக்கும், தமியள் ஆய
சீதைக்கும், கூற்றம் காட்டித்
தீர்ந்தில(து), ஒருவன் தீமை;
பேதைப்பெண் பிறந்து. பெற்ற
தாயர்க்கும், பிழையி லாத
காதல்தம் பியர்க்கும், ஊர்க்கும்,
நாட்டிற்கும், காட்டிற்(று) அன்றோ?'

780. 'தீக்கொண்ட வஞ்சன் வீசத்
திசைமுகன் பாசம் தீண்ட
வீக்கொண்டு வீழ யானே
பரதனும்? வெய்ய கூற்றைக்
கூக்கொண்டு, குத்துண்(டு), அன்னான்
குலத்தொடும் நிலத்தன் ஆதல்
போய்க்கண்டு கோடி அன்றே'
என்றனன் புழுங்கு கின்றான்.

781. 'பத்தினி தன்னைத் தீண்டிப்,
பாதகன் படுத்த போது,
முத்திறத்(து) உலகம் வெந்து,
சாம்பராய் முடியும் அன்றே!
அத்திறம் ஆன தேனும்
அயோத்திமேல் போன வார்த்தை
சித்திரம்; இதனை எல்லாம்
தெரியலாம் சிறிது போழ்தின்.'

782. வண்டினை(து) உருவம் கொண்டான்;
மானவன் மனத்தில் போனான்;
தண்டலை இருக்கை தன்னைப்
பொருக்கெனச் சார்ந்து,தானே
கண்டனன் என்ப மன்னோ,
கண்களால்,கருத்தால் ஆவி
உண்(டு) இலை என்னச் செய்த
ஓவியம் ஒக்கின் றாளை.

**783.** *சீதையைக் கண்டுவந்த விபீடணன் இராமபிரானிடம் கூறுதல்.*

**(க - ரை):** *''ஐயனே! 'தங்கள் தேவி உயிரோடு இருக்கின்றாள். நான் சென்று நேரில் கண்டேன். நமது அருந்ததி போன்ற கற்புடைய பிராட்டியாருக்கு அழிவும் நேரமுடியுமா? இந்திரசித்து நாம் வருந்தும்படியாக இந்த மாயம் செய்து, எரிகின்ற நெருப்பையுடைய யாகத்தால் நம்மை வேரோடும் அழிக்கும் பொருட்டு நிகும்பலை என்னும் இடத்திற்குப் போய்ச் சேர்ந்துள்ளான்'' என்று கூறினான்.*

**(அ-ரை).** மருங்கு : இடம்; முருங்கு அழல் : எரிகின்ற நெருப்பு; முற்றி முடித்து; முதல் அற : வேரோடும்; மூண்டான் : முயற்சி கொண்டான

**784.** *விபீடணன் வார்த்தையைக் கேட்ட இராமன் மகிழ்ச்சி.*

**(க - ரை):** *விபீடணன் கூறியவற்றைக் கேட்ட இராமபிரான் ஐயம் நீங்கி எழுந்த மகிழ்ச்சியால் அவனை உடம்பும், உயிரும், ஆசையும் ஒன்றாகும்படியாக இறுக்கமாகத் தழுவிக் கொண்டு, ''விபீடணனே! நீ இருக்கின்றாய்; தெய்வமும் உதவி புரிய இருக்கின்றது; அனுமான் இருக்கின்றான்; நான் செய்த தவமும் துணை நிற்கின்றது; இவற்றுடன் என் உடல் வலியும் இருக்கின்றது. ஆகையால் இது போன்ற துன்பங்களை ஒழித்தல் நமக்கு ஒரு பொருளா?'' என்று கூறினான்.*

**(அ-ரை):** உளை : இருக்கின்றாய்; ஆல் : அசை.

**785.** *நிகும்பலை யாகம் செய்யும் இந்திரசித்தினோடு போர் புரிய இலக்குவனை இராமபிரான் அனுப்புதல்.*

**(க - ரை):** *''மிகுந்த புகழையுடைய இலக்குவனே! சிவபெருமான் அம்பையும், திருமாலின் அம்பையும், உனக்கு எதிரில் நின்று இந்திரசித்து ஒரு சேர விடுவான். அந்த அம்புகளை, அதே போன்ற பிற சிவ, விஷ்ணு அம்புகளால் வலியொழியும்படியாகப் போர் செய்து உன்னுடைய வில்லின் மிக்க வலிமையினால் எதிர்ந்து போய் அவன் உயிரைக் கொண்டு வருவாயாக'' என்று இராமபிரான் கூறினான்.*

**(அ-ரை):** முக்கணான்படை : சிவபெருமானின் பாசுபதாஸ்திரம்; தருக்கு : வலிமை மிகுதி; ஆழி முதல்வன் படை : சக்கராயுதத்தையேந்திய திருமாலின் நாராயணாஸ்திரம்.

**786.** *இந்திரசித்தினோடு போர் புரிய இலக்குவனை அனுப்பிய இராமன் செயல்.*

**(க - ரை):** *தன்னை விட்டுப் பிரிதலில்லாத தம்பியாகிய இலக்குவன் மிக்க வேகத்தோடு சென்று, உடம்பை விட்டுப் பிரியாத உயிர் போல மறைந்த அளவில், அதைக் கண்டு வருந்தின இராமன், முன்பு விசுவாமித்திர முனிவருடைய யாகத்தைக் காக்கும் பொருட்டுத் தான் சென்றபொழுது, வருந்திய தன் தந்தையாகிய தயரதனை ஒத்தான்.*

**(அ-ரை):** வெம்கடுப்பு : மிக்கவேகம்; வான் : சிறந்த.

783. 'இருந்தனள் தேவி; யானே
எதிர்ந்தனன் கண்களால்;நம்
அருந்ததி கற்பி னுளுக்கு
அழிவுண்டோ? அரக்கன் நம்மை
வருந்திட மாயம் செய்து
நிகும்பலை மருங்கு புக்கான்,
முருங்(கு) அழல் வேள்வி முற்றி
முதல்அற முடிக்க மூண்டான்'

நிகும்பலை யாகப் படலம்

784. வீரனும் ஐயம் தீர்ந்தான்;
வீடணன் தன்னை, மெய்யோ(டு)
ஆர்வமும் உயிரும் ஒன்ற
அழுந்துறத் தழுவி,'ஐய!
தீர்வது பொருளோ துன்பம்!
நீஉளை; தெய்வம் உண்டு;
மாருதி உளன்:நாம் செய்த
தவம்உண்டு; வலியும் உண(டு)ஆல்''

785. 'முக்கணன் படையும், ஆழி
முதலவன் படையும், முன்னின்(று)
ஒக்கவே விடுமே; விட்டால்,
அவற்றையும் அவற்றின் ஒயத்
தக்கவா(று) இயற்றி,மற்றுன்
சிலைவலித் தருக்கி னுலே,
புக்கவன் ஆவி கொண்டு,
போதுதி, புகழின் மிக்கோய்!'

786. தான்பிரி கின்றிலாத தம்பி,வெம் கடுப்பின் செல்லா
ஊன்பிரி கின்றி லாத உயிர்என, மறைத லோடும்
வான்பெரு வேள்வி காக்க, வளர்கின்ற பருவ நாளில்
தான்பிரிந்(து) ஏகக் கண்ட தயரதன் தன்னை ஒத்தான்.

26

**787.** *இந்திரசித்துத் தான் செய்த யாகம் குலைந்தமை கண்டு வருந்துதல்.*

**(க - ரை):** *தன்னுடைய மானமும் அழிய, தான் அமைத்த யாகத்தில் தனது மௌன நிலையும் அழிய, வலிய சேனை வீரர்களும் அழிய, சிறந்த மந்திரம் உருவேற்றுதல் முதலிய பிற செய்கைகளும் அழியப் பின்வருவனவற்றைச் சொல்வதானான்.*

**(அ-ரை):** வகுத்த : அமைத்த; மோனம் : மௌனம்; முரண் : வலிமை, ஏனையும் என்பது ஏனையவும் என்பதன் மரூஉ.

**788.** *இதுவும் அது.*

**(க - ரை):** *மந்திரத்தோடு கூடிச் செய்யும் யாகமானது மடிந்து போயிற்று என்று மனத்தில் நினைத்து, நொந்து, 'நான் தேய்ந்திருத்தலைத் தேவர்கள் அறிவராயின் என்ன சொல்லுவர்? இந்திரசித்து, எளிய மனிதருக்கு நேரில் நிற்க ஆற்றாதவனாகி விட்டான். இனி இவன் வலிமை இந்திரனிடத்துக் காட்டமுடியுமா என்று இகழ்வரன்றோ?' என்று இந்திரசித்து வருந்தினான்.*

**(அ-ரை).** அந்தரம் : தேவலோகம்; ஏசவோ : இகழவோ.

**789.** *அனுமான் இந்திரசித்தினை அசதியாடல்.*

**(க - ரை):** *"இந்திரசித்தே! விசாலமான அலைகளையுடைய சமுத்திரம் போன்ற பரந்த சக்கரவியூகம் வகுத்து நிகும்பலையில் நீ வேள்வி செய்ததை நாங்கள் கண்டிலோமே? நீ அங்குப் போர் புரிந்திருப்பாய். இப்பொழுது நாணொலியைக் கூட நாங்கள் கேட்டிலோமே? அயோத்தி நகரத்திற்குத் தொடர்ந்து சென்று அங்குள்ளவர்களை அவர்கள் இனத்தோடும் அழித்து, எப்பொழுது திரும்பி வந்தாய்? நீ தொடங்கிய வேள்வி நன்கு நிறைவேறிற்று? எடுத்துக் கொண்ட காரியம் நலமாக முடிந்ததா?"*

**(அ-ரை):** தடந்திரைப் பரவை : விசாலமான அலைகளையுடைய கடல், சக்கரவியூகம் : சக்கரம் போன்ற படை அணிவகுப்பு, கிளை : சுற்றம், துணிய நூறி : சிதைவுபடும்படியாக அழித்து.

**790.** *இந்திரசித்து வீரவுரை கூறுதல்.*

**(க - ரை):** *"என்னுடைய வில்லும், என்னுடைய பொன்னணியணிந்த தோள்களும் இருக்க, உலகத்தில் உடம்போடு கூடி வாழும் உயிர்களெல்லாம் மறைந்து கொள்ளாமல் என்னோடு எதிர்த்து நிற்குமேல், அவை பிழைக்க முடியுமா? கூன் முதுகினையுடைய குரங்கின் கூட்டத்தோடு மனிதர்களையும் கொன்று, அத்துடன் வானுலகத்திலுள்ளாரையும் தொடர்ந்து பற்றிக் கொல்லுவேன். முன்பு மருந்து மலையைக் கொண்டு வந்து பிழைத்தீர்கள். இனியொரு முறை அம்மருந்து மலையைக் கொணர்ந்தாலும் உங்களைப் பிழைக்க விடமாட்டேன்."*

**(அ-ரை):** உய்யுமோ : பிழைக்குமோ; ஒளிப்பிலலாமல் : மறையாமல்.

787. மானமும் பாழ்பட, வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட, முடிவி லாமுரண்
சேனையும் பாழ்படச், சிறந்த மந்திரத்(து)
ஏனையும் பாழ்பட, இனைய செப்பினான்.

788 'மந்திர வேள்விபோய் மடிந்த(து) ஆம்எனச்
சிந்தையின் நினைந்துநொந் திருந்து தேய்வுறல்
அந்தரத்(து) அமரரும் 'மனிதர்க்(கு) ஆற்றலன்
இந்திரற் கேஇவன் வலி'என்(று) ஏசவோ!'

789 'தடந்திரைப் பரவை அன்ன
சக்கர வியூகம் புக்குக்
கிடந்தது கண்ட(து) உண்டோ?
நாண்ஒலி கேட்டி லோமே?
தொடர்ந்துபோய் அயோத்தி தன்னைக்
கிளையொடும் துணிய நூறி
நடந்த(து)எப் பொழுது? வேள்வி
முடிந்ததே? கருமம் நன்றே!'

790. 'யான்உடை வில்லும்,என்பொன்
தோள்களும் இருக்க, இன்னும்
ஊன் உடை உயிர்கள் யாவும்
உய்யுமோ? ஒளிப்பி லாமல்,
கூன்உடைக் குரங்கி னோடு,
மனிதரைக் கொன்று சென்(று),அவ்
வானினும் தொடர்ந்து கொல்வேன்;
மருந்தினும் உய்ய மாட்டீர்!'

**791.** இந்திரசித்து விபீடணனை இகழ்தல்.

**(க - ரை) :** "நான்முகனது வழிவந்த குலத்தினராய பார்ப்பனர்களுக்கெல்லாம் ஒப்பற்ற தலைவனாக இருக்கின்றாய். தேவர்களும் உன்னை வந்து வணங்கும் மேலான தகுதியை உடையவனாக இருக்கின்றாய். அத்தகைய நீ, எளிய மனிதர்களுக்கு அடிமையாகி வஞ்சனையால் இராவணன் செல்வத்தை ஆள இருக்கின்றாய். நாங்கள் இறப்போமானால் எங்களோடு உனது மானமும் போய் விடும். ஆகவே உனக்கு மானம் ஏது? மானம் கெட்டு உயிர் வாழ விரும்புகின்றாய்" என்று இந்திரசித்து இகழ்ந்து கூறினான்.

**(அ-ரை):** பனி : குளிர்ச்சி; தவிசு : ஆசனம.

**792.** விபீடணன் இந்திரசித்துக்குக் கூறும் மறுமொழி.

**(க - ரை) :** "அறமே இம்மைக்கும் மறுமைக்கும் உற்ற துணையாகும்; அன்றிப் பொறுத்தற்கரிய நரகத்தைக் கொடுக்கும் பாவத்தைத் துணையாகக் கொண்டு ஒழியாத பழியோடு வாழ நான் விரும்பவில்லை. எக்காலத்திலும் நான் உண்மையை நீங்குவதில்லை; பொய்ம்மையை முற்றிலும் நீக்குவேன். இராவணன் நெறிதவறி நடக்கத் தொடங்கிய பொழுதே அவனுக்கு நான் தம்பியாகப் பிறக்க வில்லை"

**(அ—ரை):** அமைய : பொருந்த, மறம் : பாவம், பிழைத்த : தவறுசெய்த.

**793.** இதுவும் அது.

**(க - ரை) :** "நான் கள்ளுண்டறியேன்; பொய் சொல்லியறியேன்; வலிமையினால் அநியாயமாக எதையும் நான் கவர்ந்து கொண்டதில்லை; மாயமாகிய வஞ்சனைச் செயல்களை மனத்தாலும் எண்ணேன்; என்னிடத்தில் யாரும் ஒரு குற்றமும் இதுவரை கண்டதில்லை; என்னிடத்தில் ஏதேனும் தீய ஒழுக்கம் உண்டா? நீங்களும் நேரில் பார்க்கிறீர்கள் அல்லவா? பிறர் மனைவியின் பொருட்டு அறநெறி தவறினார் ஒருவரைத் துறந்து வந்தது குற்றமுடையதாகுமோ?" என்று விபீடணன் பதிலுரைத்தான்.

**(அ—ரை)** நறவம் . கள், உண்டே . ஏகாரம் வினாப்பொருளில் வந்தது. நீயிர் : நீங்கள்; திறம்பினார் . வழிதவறினார்.

**794.** இதுவும் அது.

**(க - ரை) :** "தருமத்தை ஒருகாலும் பாவம், வெல்லாது என்னும் உண்மையை அறிந்து, இராமபிரானைச் சரணம் அடைதல் ஞானநெறிக்கும் ஒக்குமென்று எண்ணி, தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய இப்பரம் பொருளை அடைந்தேன். நான் இராமபிரானைச் சரணம் அடைந்தது, எனக்கு வெளியே புகழ்தரினும் தருக; அல்லது பழிதரினும் தருக. அறிவிலாகிய சிறப்புவரினும் வருக; அல்லது அச்சிறப்பு ஒழியினும் ஒழிக" என்று சினமற்றவனாகிய விபீடணன் மறுமொழியளித்தான்.

7791. 'பனிமலர்த் தவிசின் மேலோன்
பார்ப்பனக் குலத்துக்(கு) எல்லாம்
தனிமுதல் தலைவன் ஆனாய்;
உன்னை வந்(து) அமரர் தாழ்வார்;
மனிதருக்(கு) அடிமை யாய்நீ
இராவணன் செல்வம் ஆள்வாய்;
இனிஉனக்(கு) என்னோ மானம்?
எங்களோ(டு) அடங்கிற்று அன்றே?'

7792. 'அறம்துணை ஆவ(து) அல்லால்;
அருநர(கு) அமைய நல்கும்
மறம்துணை யாக மாயாப்
பழியொடும் வாழ மாட்டேன்!
துறந்திலேன் மெய்ம்மை; பொய்ம்மை
உம்மையே துறப்ப(து) அல்லால்;
பிறந்திலேன் இலங்கை வேந்தன்
பின்,அவன் பிழைத்த போதே.'

7793. 'உண்டிலென் நறவம்; பொய்ம்மை
உரைத்திலென்; வலியால் ஒன்றும்
கொண்டிலென்; மாய வஞ்சம்
குறித்திலென்;யாரும் குற்றம்
கண்டிலர் என்பால்!உண்டே?
நீயிரும் காண்டிர் அன்றே!
பெண்டிரின் திறம்பி னாரைத்
துறந்தது பிழையிற்(று) ஆமோ?'

7794. 'அறத்தினைப் பாவம் வெல்லா(து)
என்னும்அ(து) அறிந்(து),'ஞானத்
திறத்தினும் உறும்என்(று) எண்ணித்
தேவர்க்கும் தேவைச் சேர்ந்தேன்;
புறத்தினில் புகழே ஆக!
பழியொடும் புணர்க! போதச்
சிறப்பினிப் பெறுக! தீர்க!'
என்றனன் சீற்றம் இல்லான்.

இந்திரசித்து வதையைப் பற்றிக் கூறுவது.

**795.** இலக்குவன் வலியைப்பற்றி இராவணனிடம் இந்திர சித்துக் கூறுதல்.

**(க - ரை):** "தந்தையே! இந்த உலகையும் வானுலகையும் படைத்த திருமாலின் படையை நான் இலக்குவன்மேல் ஏவ, அது அவனை வலஞ்செய்து வணங்கிப் போகுமேயானால், இதற்கு மேல் ஒரு வலிமையும் உண்டோ? நமது முன்னோர் செய்த பாவத்தினால் நீ கொடிய பழியைத் தேடிக்கொண்டாய்! கோபங்கொள்வானேயானால் அந்த இலக்குவன் ஒருவனே இந்த மூன்று உலகங்களையும் அழித்துவிடுவான்."

**(அ-ரை)** விசும்பு : வானுலகம்; சலம் : கோபம்.

**796.** இந்திரசித்து இராவணனை வேண்டுதல்.

**(க - ரை):** "ஆகையினால் நான் போருக்கு அச்சமுற்றுச் சொல்லுகிறேன் என்று நினைக்கலாகாது. சீதைமேல் வைத்த ஆசையை நீ விடுவாயேயானால் அந்த இராம இலக்குவர் கோபம் ஒழிவர்; ஊருக்குத் திரும்பிப் போய்விடுவர். நீ அவர்களுக்குச் செய்த தீமையையும் பொறுத்துக்கொள்வர். இதை உன்மேல் நான் கொண்ட அன்பினால் உரைத்தேன்" என்று உலக முழுவதையும் கலங்கச்செய்து வென்றவனாகிய இந்திரசித்து இராவணனிடம் கூறினான்.

**(அ-ரை):** அருளலை . நினைக்காதே; புரிவர் : செய்வார்கள்.

**797.** இராவணன் இந்திரசித்திடம் வன்சொல் வழங்குதல்.

**(க - ரை):** "மைந்தனே! நான் இராமனோடு போர்புரிவதாகிய இந்தப் பெரிய பகையைத் தேடிக்கொண்டது எவருடைய உதவியை நம்பி? இதற்குமுன் இறந்துபோன அரக்க வீரர்கள் இப்பகையை முடிப்பார்கள் என்று எண்ணியா? அல்லது இறக்க இருக்கும் வீரர்கள் போரில்வென்று வெற்றியோடு இனித்திரும்புவர் என்று எண்ணியா? அல்லது இந்திரசித்து உள்ளான், அவர்களை வென்று வெற்றி தருவானென்று உன் வலிமையை எண்ணியா? இவற்றில் யாரையும் நம்பியன்று. என்னுடைய வலிமை ஒன்றையே நோக்கித் தேடிக்கொண்டேன். ஆதலால் நான் தேடிக்கொண்ட பகைக்கு நானே பொறுப்பு."

**(அ-ரை):** வென்றவர் பெயர்வர் : வென்று திரும்புவர்—முற்றெச்சம்.

**798.** இராவணன் இந்திரசித்தினை இகழ்ந்து கூறுதல்.

**(க - ரை):** "சிறுவனே! 'உன் அறியாமையை என்னிடம் சொன்னாய்; உலகெல்லாம் அழிந்தாலும் அழியாமல் என்னுடைய வரலாறு என் புகழினோடு நிலைபெற்று நிற்கும்படி தேவர்களும் பார்க்கும்படியாக, நீர்மேல் குமிழி போன்ற நிலையில்லாத இவ்வுடம்பை விட்டாலும் விடுவனேயன்றிச் சீதையை விடுவதும் உண்டா? எனக்கு இருபது வலிய தோள்கள் இருக்கின்றன அவை என்ன செய்யும் என்பது உனக்குத் தெரியுமா?" என்று இராவணன் இகழ்ந்து கூறினான்.

**(அ-ரை):** பிள்ளாய் : விளிவேற்றுமை; காதை : வரலாறு; மொக்குள் : நீர்க்குமிழி; யாக்கை : உடம்பு.

## இந்திரசித்து வதைப் படலம்

795. ‘நிலம்செய்து விசும்பும் செய்து
நெடியமால் படை, நின் றுனை
வலம்செய்து போவ தானால்,
மற்றினி வலிய(து) உண்டோ?
குலம்செய்த பாவத் தாலே
கொடும்பழி தேடிக் கொண்டாய்!
சலம்செயின் உலகம் மூன்றும்
இலக்குவன் முடிப்பன் தானே.’

796 ‘ஆதலால் அஞ்சி னேன்என்(று)
அருளலை; ஆசை தான் அச்
சீதைபால் விடுவை யாயின்
அனையவர் சீற்றம் தீர்வர்;
போதலும் புரிவர்; செய்த
தீமையும் பொறுப்பர்; உன்மேல்
காதலால் உரைத்தேன்’ என்றான்,
உலகெலாம் கலக்கி வென்றான்.

797 ‘முன்னையோர் இறந்தோர் எல்லாம்
இப்பகை முடிப்பர் என்றும்,
பின்னையோர் நின்றோர் எல்லாம்
வென்றவர்ப்பெயர்வர் என்றும்
உன்னை, ‘நீஅவரை வென்று
தருதி’ என்(று)உணர்ந்தும் அன்றால்;
என்னையே நோக்கி யான்இந்
நெடும்பகை தேடிக் கொண்டேன்’

798. ‘பேதைமை உரைத்தாய் பிள்ளாய்
உலகெலாம் பெயரப் பேராக்
காதைஎன் புகழி னோடும்
நிலைபெற, அமரர் காண
மீதெழு மொக்குள் அன்ன
யாக்கையை விடுவ(து) அல்லால்
சீதையை விடுவ(து) உண்டோ?
இருபது திண்தோள் உண்டால்.’

**799.** இராவணன் இந்திரசித்திற்கு அறிவுரை கூறுதல்.

**(க - ரை):** "சாதல் என்பது ஒரு நாள் வந்தே தீரும். அது எல்லோருக்கும் பொதுமையானது. இன்றைக்கு இருப்போர் நாளை இறந்து விடுவர். ஆனால் புகழ் மாத்திரம் என்றும் அழியாமல் நிற்கும். நான் போரில் வெல்லாமல் தோற்றே இறந்தாலும் வேதம் உள்ள வரையில், இந்த உலகில் இராமனுடைய புகழ் நிற்கும் வரையில் எனது புகழும் அழியாமல் நிற்கும்" என்று இராவணன் இந்திரசித்திடம் கூறினான்.

**(அ-ரை)** பொன்றுதல் : இறத்தல், பொதுமை : பொதுவான தன்மை.

**800.** இந்திரசித்தின் மாயச்செயல்களை விபீடணன் இலக்குவனுக்குக் கூறுதல்.

**(க - ரை)** "இலக்குவனே! கொடியவனாகிய இந்திரசித்து, போரில் தேரைச்செலுத்தி விசும்பில் சென்று மறைந்தாலும் மறைவான்; போர்த்தொழிலை மீறி, மாயமான செயல்கள் செய்தாலும் செய்வான்; இன்னும் மேக மண்டலத்திற்கு அப்பாற் போய் அங்கிருந்து வஞ்சகமான செயல்களைச் செய்தாலும் செய்வான். நீ இவற்றைப் பாராப்பாய், இவன் இறப்பதானால் பகலில் இறப்பானேயன்றி இரவில் இறக்கமாட்டான்" என்றான்.

**(அ-ரை)** கடாவி : செலுத்தி; கடந்து : மீறி, கார் : மேகம், காணுதி காண்பாய்; கருதும் என்றது கருதிச்செய்வான் என்னும் பொருட்டு. வீவிலன் : சாகமாட்டான், வெய்யோன் : கொடியவன்.

**801.** இந்திரசித்து மாயப்போர் புரிதல்.

**(க - ரை):** காற்று வீசுவதைப் போலச் சுழன்று வீசியும், இடியிடிப்பதைப் போலப் பெருமுழக்கம் செய்தும், நெருப்புப் போலப் பற்றியெரித்தும் இறுதிக்காலத்தில் தோன்றக்கூடிய எமனைவன் ஒரு சூலம் கொண்டு வந்தாற்போல அச்சுறுத்தியும் வானரப்படைகளைக் கொல்ல இந்திரசித்து, போரில் தோன்றினான். அப்போது இலக்குவன், 'இவன் தலையைத் துணித்தற்கு ஏற்ற காலம் இதுவே' என்று பின்வருமாறு செய்தான்.

**(அ-ரை)** உருமேறு : கொடிய இடி, காலுதல் கணைந்து—செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.

**802.** இந்திரசித்தின்மேல் இலக்குவன் அம்பு விடுதல்.

**(க - ரை):** இராமனுக்கு உறுதுணையாக நின்று இவ்வுலகங்களையெல்லாம் நல்ல நெறியில் நிறுவச் செய்பவனாகிய இலக்குவன், பிறைபோலும் பிறப்பதியையுடைய ஒரு அம்பைத் தொடுத்து, "வேதங்களால் நிலைநாட்டப்படுவதும், அந்தணர்களால் வணங்கத் தக்கதும் ஆகிய பரம்பொருள், தரும வடிவினனாகிய இராமனே என்பது சத்தியமானால், பிறைபோலும் வளைந்த பற்களையுடைய இந்த இந்திரசித்தினைக் கொல்லுவாய்" என்று தன்னுடைய முழு வலிமையையும் செலுத்திவிட்டான்.

**(அ-ரை):** தேற : தெளிய; அறமூர்த்தி : தருமமே வடிவமாகப் பெற்றவன்; கோறி : கொல்லுவாய், வாங்கி : இழுத்து, பிறை எயிறு : பிறைபோலும் வளைந்த பற்கள்.

799. 'வென்றிலென் என்ற போதும்
வேதம்உள் ளளவும் யானும்
நின்றுளென் அன்றே, மற்(று)அவ்
இராமன்பேர் நிற்கும் ஆயின்;
பொன்றுதல் ஒருகா லத்துத்
தவிருமோ? பொதுமைத்(து) அன்றே?
இன்றுளார் நாளை மாள்வார்;
புகழுக்கும் இறுதி உண்டோ?'

800. 'தேரினைக் கடாவி வானில்
செல்லினும் செல்லும்; செய்யும்
போரினைக் கடந்து மாயம்
புணர்க்கினும் புணர்க்கும்; போய்அக்
காரினைக் கடந்து வஞ்சம்
கருதினும் கருதும் காண்டி;
வீர!மெய்ப் பகலின் அல்லால்
விளிகிலன் இருளின், வெய்யோன்.'

801. காற்றென, உருமே றென்னக்,
கனல்எனக், கடைநாள் உற்ற
கூற்றம்ஓர் சூலம் கொண்டு
குறுகிய(து) என்னக், கொல்வான்
தோற்றினன்; அதனைக் காணா,
'இனித்தலை துணிக்கும் காலம்
ஏற்ற(து)' என்(று) அயோத்தி வேந்தற்(கு)
இளையவன் இதனைச் செய்தான்:

802. 'மறைகளே தேறத் தக்க
வேதியர் வணங்கற் பால,
இறையவன் இராமன் என்னும்
நல்அற மூர்த்தி என்னின்,
பிறைஎயிற்(று) இவனைக் கோறி''
என்(று)ஒரு பிறைவாய் வாளி
நிறைஉற வாங்கி விட்டான்
உலகெலாம் நிறுத்தி நின்றான்.

**803.** *இந்திரசித்தின் தலை துணிக்கப்பட்டு விழுதல்.*

**(க - ரை) :** *இலக்குவன் ஏவிய அந்த அம்பாகிய தெய்வம், திருமாலின் படையாகிய சக்கராயுதமும், இந்திரன் படையாகிய வச்சிராயுதமும், நெற்றியில் அனற் கண்ணையுடைய உருத்திர பகவானின் அஞ்சத்தக்க திரிசூலாயுதமும், பிரமன் அம்பும் ஆகிய இவைகளெல்லாம் நாணமடையும்படியாகத் தன் முற்பகுதியில் அக்கினி பற்றிப் பரவ விரைந்துசென்று, அந்த இந்திரசித்தின் தலையை இரண்டாக வெட்டித்தள்ளித் தேவர்கள் பூமழை பொழிய அதனிடை விளங்கி நின்றது.*

**(அ-ரை):** *நேமி : சக்கராயுதம்; குலிசவேல் : வச்சிராயுதம், நாமவேல் அஞ்சத்தக்க வேல்; கதுவ : பற்ற; புத்தேள் : தெய்வம்.*

**804.** *அங்கதன் இந்திரசித்தின் தலையை இராமன் முன் கொணர்தல்.*

**(க - ரை) :** *பூரித்த தோளையுடையவனும், தேய்ந்துகொண்டு வருகின்ற பழியையுடையவனும், மகிழ்ச்சி அதிகரிக்கும் மனத்தை உடையவனுமாகிய இராமபிரான், தேவர்பொருட்டு முற்காலத் தில் கடலைக் கடைந்த வாலியின் புதல்வனாகிய அங்கதன், தன் கையால் ஒரு தலையைத் தூக்கிக் கொணர்வதைக் கண்டான்.*

**(அ-ரை):** *வீங்கிய பூரித்த; சேய : மகன், குரிசில் தலைவன்; இங்கு அங்கதனைக் குறித்தது.*

**805.** *இராமன் அங்கதனைப் பாராட்டுதல்.*

**(க - ரை) :** *"வானரர் தலைவனே! தெற்குத் திக்கின் கண்ணே கடலாற் சூழப்பட்ட வலிய மதிலையுடைய இலங்கை நகரத்தையாளும் அறிவிலியாகிய இராவணன் பெற்ற புதல்வனாகிய இந்திரசித்தினை இலக்குவன் வெட்டி வீழ்த்தியதனால், அவனுடைய வலிய தலையை எடுத்துக்கொண்டு நீ எனக்குமுன் வருதலினாலே இனி நான் தலைநிமிர்ந்து வாழ்வேன். அடுத்துக் குடைபிடித்து ஆளும் அரசாட்சியும் பெறுவேன்" என்று இராமபிரான் அங்கதனிடம் கூறினான்.*

**(அ-ரை):** *தலை : இடம்; ஆழி : கடல்; புன்தலைக் கள்வன் : அறிவிலி, இளவல் : தம்பி; வானர—ஈச : வானரேச—குணசந்தி.*

**806.** *இந்திரசித்தினைக் கொன்று திரும்பி வந்த இலக்குவனைக் கண்ட இராமன் மகிழ்ச்சி.*

**(க - ரை) :** *இந்திரசித்து மடிந்தான் என்ற மகிழ்ச்சியின் மேலீட்டினால் யாதொன்றும் சொல்லமுடியாமல் விம்மிதமுற்றவனாகிய இராமபிரான், இந்திரசித்தின் தலையினைப் பார்ப்பான், தம்பியின் வெற்றி இலக்குமி தழுவிய பொன்மலை போன்ற தோளை நோக்குவான்; அருகில் நின்ற அனுமானின் வலிமையை நோக்குவான்; தன் வில்லை நோக்குவான்; தேவர்கள் பூமாரி பொழிந்து ஆரவாரித்ததை நோக்குவான்: இந்திரசித்து கொல்லப்பட்டதையும் பார்ப்பான்.*

**(அ-ரை):** *கொற்றவை : வெற்றித்திரு ; இவள் வீரர்களின் தோளில் உறைபவள் என்பது மரபு. மாருதி : அனுமான்.*

803. நேமியும், குலிச வேலும்
நெற்றியின் நெருப்புக் கண்ணன்
நாமவேல் தானும், மற்றை
நான்முகன் படையும் நாணத்,
தீமுகம் கதுவ ஓடிச்
சென்(று)அவன் சிரத்தைத் தள்ளிப்
பூமழை வானோர் சிந்தப்
பொலிந்த(து) அப் பகழிப் புத்தேள்.

804. வீங்கிய தோளன், தேய்ந்து
மெலிகின்ற பழியன், மேன்மேல்
ஓங்கிய உவகை ஊறும்
உள்ளத்தன், உம்பர்க் காக
தேங்கிய கடலை முன்னாள்
திரித்தவன் சேய், செங்கையால்
தாங்கிய குரிசில், பற்றிக்
கொணர்ந்திடும் தலையைக் கண்டான்.

805. 'தென்தலை ஆழி சூழ்ந்த
திண்மதில் இலங்கை காக்கும்
புன்தலைக் கள்வன் பெற்ற
புதல்வனை, இளவல் வீழ்த்த,
வன்தலை எடுத்து நீமுன்
வருதலால், வான ரேச!
என்தலை எடுக்க லானேன்!
இனிக்குடை எடுப்பேன்!' என்றான்.

806. தலையினை நோக்கும்; தம்பி
கொற்றவை தழீஇய பொன்தோள்
மலையினை நோக்கும்; நின்ற
மாருதி வலியை நோக்கும்;
சிலையினை நோக்கும்; தேவர்
செய்கையை நோக்கும்; செய்த
கொலையினை நோக்கும்; ஒன்றும்
உரைத்திலன் களிப்புக் கொண்டான்.

807. இராமன் இலக்குவனைப் புகழ்தல்.

(க - ரை): "கம்பத்தில் கட்டக்கூடிய மதச்செருக்கையுடைய யானைப்படை கொண்ட அரசனான சனகன் பெற்ற பூங்கொம்பு போன்ற சீதை, என்பால் வந்து சேர்ந்தாள் என்றே மனமகிழ்ச்சி அடைகின்றேன். வாசனை மிகுந்த தாமரை மலரில் வசிக்கும் பிரமன் படைத்த இந்த உலகத்திலே 'தம்பியையுடையான் பகைக்கு அஞ்சான்' என்னும் பழமொழியை விளக்கிக் காட்டினாய்" என்று இராமபிரான் இலக்குவனைப் புகழ்ந்தான்.

(அ-ரை) கம்பம் யானை கட்டும் தறி, குறுகினள் : அடைந்தாள்; அகம் மனம, வம்பு வாசனை; மாற்றம வார்த்தை, 'தம்பியுடையான் படைக்கஞ்சான்' என்பது ஒரு பழமொழி "பாமபறியும பாமபின்கால் என மொழியும் பழமொழியும பார்த்திலீரோ" (சூர்ப்பணகைப படலம்) என்பன போன்ற பல பழமொழிகளைக் கம்பர் தன கவியில் அமைததுள்ளமை அறியத்தக்கது

இந்திரசித்து மாண்டது கண்டு இராவணன் வருந்துதலைப பற்றிக் கூறுவது.

808. இராவணன் புலம்பல்.

(க - ரை) : இந்திரசித்து இறந்ததால். வெந்த புண்ணில் காய்ச்சிய வேல் நுழைந்தாற் போன்ற துன்பத்தையுடையவனாகிய இராவணன் அவனை நினைந்து, 'வலியுடையவனே' என்பான்; 'சிறந்த மகனே' என்பான்; 'என் தந்தையே' என்பான், 'என் உயிர்போன்றவனே' என்பான், 'உனக்கு முன் பிறந்தவனாகிய நான் இறவாமல் இன்னும் உயிரோடு இருக்கின்றேனே' என்பான்.

(அ-ரை). மைந்து வலிமை; வெமமையான் துன்பத்தையுடையவன்.

809. இராவணனுடைய ஒவ்வொரு தலையும் இந்திரசித்தை நினைந்து புலம்பல்.

(க - ரை): ஒரு தலையானது 'ஐயனே!' என்று அழும். மற்றொரு தலை, 'உன்னை இழந்த நான் இன்னும் அரசாட்சி செய்வேனோ' என்று புலம்பும். பின்னும் ஒரு தலை, 'உன்னைக் காட்டிக் கொடுத்த வஞ்சகனாகிய நான் பிழைப்பேனோ' என்று புலம்பும்.

(அ-ரை) இனம . இன்னும்; செய்வெனே, உய்வெனே ; ஏகாரம் வினைபொருளில் வந்தது. கையன் வஞ்சகன்; உயவெனே : பிழைப்பனோ.

810. இதுவும் அது.

(க - ரை) : ஒரு தலையானது, 'சந்தனக்கோலம் எழுதப் பெற்ற உருக்குக் கம்பம் போன்ற உனது தோள்களால் என்னைத் தழுவிக்கொள்ளாமல் இருக்கின்றாயே!' என்று புலம்பும். 'உறுதி பொருந்திய வில்லை யேந்திய வீரனே! ஆண்புலியை ஒரு மான் உயிர் உண்பதா?' என்று புலம்பும்.

(அ-ரை): எழு : உருக்குக் கம்பம்; உழுவை : புலி; போத்து : ஆண் மிருகம்; உழை : மான்; சேவகன் : வீரன்; ஆண்புலி இந்திரசித்திற்கும, மான் இலக்குவனுக்கும் உவமை கூறப்பட்டன.

807. 'கம்ப மதத்துக் களியானைக்
காவல் சனகன் பெற்றெடுத்த
கொம்பும், என்பால் இனிவந்து
குறுகி னள்என்(று) அகம் குளிர்ந்தேன்!
வம்பு செறிந்த மலர்க்கோயில்
மறையோன் படைத்த மாநிலத்தில்
'தம்பி யுடையான் பகைஅஞ்சான்'
என்னும் மாற்றம் தந்தனையால்.'

### இராவணன் சோகப் படலம்

808. மைந்த வோ!எனும்; மாமக னே!எனும்;
எந்தை யோ!எனும்; என்உயிரே! எனும்,
முந்தி னேன்உனை நான்உளெ னே!எனும்;
வெந்த புண்இடை வேல்பட்ட வெம்மையான்.

809 ஐய னே!எனும் ஓர்தலை, யான்இனம்
செய்வெ னேஅர(சு)! என்னும்அங்(கு) ஓர்தலை;
கைய னேன்உனைக் காட்டிக் கொடுத்தநான்
உய்வெ னே!என்(று) உரைக்குமஅங்(கு) ஓர்தலை.

810. 'எழுவின் கோலம் எழுதிய தோள்களால்
தழுவிக் கொள்கலை' என்னும்அங்(கு) ஓர்தலை;
'உழுவைப் போத்தை, உழை,உயிர் உண்பதே!
செழுவில் சேவக னே!'எனும் ஓர்தலை.

815. இதுவும் அது.

(க - ரை): 'அளவற்ற வலிமையுடையவனே! எமனுங்கூட உன் எதிரில் அஞ்சாமல் வந்து உன் உயிரைக் கொள்ளுவதற்கு ஏற்ற வலிமையுடையவன் அல்லன். அவ்வாறிருக்க நீ எவ்வாறு உயிர் நீங்கினாய்? இப்பொழுது நீ என்னையும் விட்டு உனக்கு ஏற்றதாகிய எந்த உலகத்திற்குச் சென்றாய்?' என்று ஒரு தலை புலம்பும்.

(அ-ரை): ஊற்றம மிகக வலிமை, உற்றனை அடைந்தாய்.

816. இராவணன் போர்க்களம் புக்கு இறந்த இந்திரசித்தினைக் கண்டு புலம்பல்.

(க - ரை): 'ஒரு பகையை மேற்கொண்டு போர்க்களம் அடைந்து போர் புரிந்து என் மகனாகிய இந்திரசித்தோடு அரக்க வீரர் எல்லோரும் இறந்து ஒழிந்தனர். அவர்களில் ஒரு வரும் திரும்பி வரவில்லை. துறவிகளாகிய அந்த இராம இலக்கு வரோடு அங்குள்ள குரங்குகளும் போர்க்களத்தில் வந்து இன்னும் ஒருவர்கூட இறக்கவில்லை. இனி இராவணனுடைய வீர வாழ்க்கையும் இருக்கிறதா?'

(அ-ரை). விளிந்து : இறந்து, விரதியர் . துறவிகள், அமர்க்களம · போர்க்களம்.

817. மண்டோதரி இந்திரசித்தின் உடலின்மேல் விழுதல்.

(க - ரை): தலையின்மேல் வைத்த கையையுடையவளும், நெருப்பின்மேல் நடக்கின்றவளைப்போல பூமியில் வைக்கும் கால் களையுடையவளும், மகனை இழந்ததால் ஏக்கம் நிறைந்த மன முடையவளுமான மண்டோதரி, ஒரு வேடன் ஒரு மயிலின்மேல் அம்பை எய்ய அதனால் அது இறந்து மலையின்மேல் சாய்ந்து விழுவதைப் போலத் தன் மகன்மீது கலக்கமுற்று வீழ்ந்தாள்.

(அ-ரை): தழல் : நெருப்பு; கூர்ங்கணை . கூர்மையான அமபு, மறுகி மனம் கலங்கி.

818. மண்டோதரி புலம்புதல்

(க - ரை): "ஒவ்வொரு கலையாக வளர்ந்துவரும் சந்திரனைப் போல, நீ வளரும் இளம் பருவத்தே உன் வில் வலியால் இந்திரனை வெல்ல, அந்தச் சிறப்பைக் காண்பதற்கு ஓர் தவமும் செய்திருந்தேன். இப்பொழுது உனது தலையில்லாத உடம்பைக் காண்கிறேன். இதற்கும் என்ன பாவமான தவம் செய்தேனோ? ஆகையால் மைந்தனே! இத்தகைய நிலையில்லாத வாழ்வை நிலையுடையதென்று அறிவற்றவளாகிய நான் நினைப்பேனோ?"

(அ-ரை): கலை : சந்திரன் ஒளி; அரி : இந்திரன்; ஆக்கை : உடம்பு, நினைவிலாதேன் : அறிவிலாதேன். 'நில்லாத வற்றை நிலையின என்றுணரும் புல்லறி வாண்மை கடை' என்ற குறள் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

815. 'கூற்றம் உன்எதிர் வந்(து)உயிர் கொள்வ(து)ஓர்
ஊற்றந் தான்உடைத்(து) அன்று,எனையும் ஒளித்(து)
ஏற்ற எவ்வுல(கு) உற்றனை? எல்லைஇல்
ஆற்ற லாய்'என்(று) உரைக்கும் அங்(கு)ஓர்தலை.

816. 'பூண்டொரு பகைமேல் புக்(கு)என்
புத்திர ரோடும் போனார்
மீண்டிலர்,விளிந்து வீழ்ந்தார்;
விரதியர் இருவ ரோடும்
ஆண்டுள குரங்கும், ஒன்றும்,
அமர்க்களத் தாரும் இன்னும்
மாண்டிலர், இனிமற்(று) உண்டோ
இராவணன் வீர வாழ்க்கை.'

817. தலையின்மேல் சுமந்த கையள்,
தழலின்மேல் மிதிக்கின் றாள்போல்
நிலையின்மேல் மிதிக்கும் தாளள்,
ஏக்கத்தால் நிறைந்த நெஞ்சள்
கொலையின்மேல் குறித்த வேடன்
கூர்ங்கணை உயிரைக் கொள்ள
மலையின்மேல் மயில் வீழ்ந்(து) என்ன,
மைந்தன்மேல் மறுகி வீழ்ந்தாள்.

818. 'கலையினால் திங்கள் போல
வளர்கின்ற காலத் தேஉன்
சிலையினால் அரியை வெல்லக்
காண்ப(து)ஓர் தவமும் செய்தேன்;
தலையிலா ஆக்கை காண
எத்தவம் செய்தேன் அந்தோ!
நிலைஇலா வாழ்வை இன்னும்
நினைவெனோ நினைவி லாதேன்.'

**819.** இதுவும் அது.

**(க - ரை):** "மகனே! அரக்கர்களின் கடல்போன்ற சேனையெல்லாம் நெருப்புப் பற்றிய பஞ்சைப் போலக் கொடிய கோபத்தையுடைய மனிதர் கொன்றதனால் இறந்து ஒழிந்தன. அவை மீண்டும திரும்பி வரவில்லை மேலே அமுதம் பூசி, உள்ளே நஞ்சு வைத்துச் செய்த பெண்ணாகிய சீதையால் நமது இலங்கை வேந்தனும் நாளைக்கு இம்மாதிரி ஆவான் அல்லவா! அதனால் நான் மிகவும் அஞ்சுகின்றேன்."

**(அ-ரை).** பரவை கடல்,—உவமையாகு பெயராகிச் சேனையைக் குறித்தது. விளிந்தது . இறந்தது; அஞ்சினேனை அஞ்சினேன! அடுக்குத்தொடர்.

இராவணன் தன் சேனைகளைக் கண்டமை பற்றிக் கூறுவது:

**820.** இராவணன் படைத் தலைவர், படைகளின் வகையைப் பற்றி அவனிடம் கூறுதல்.

**(க - ரை):** கடல் நீரானது ஒரு திசையினின்றும் மறுதிசைக்குப் பெயர்ந்து பாய்வது போன்ற சேனையை, வேதங்களிலும வேதத்தின் முடிவில் கூறப்படும உபநிடதங்களிலும கூறப்படும பொருளைப் பிறருக்கு எடுத்துக்காட்டி விளக்கும் அறிஞர்போலத் தூதுவர் இராவணனுக்கு ஒவ்வொரு வரிசை வரிசையாக உள்ள சேனைகளை முறையாகக் காட்டிச் சென்றனர்.

**(அ-ரை)** மாதிரம திசை, மண்டி நெருங்கி, ஓதம் . கடல், அணிகள வரிசைகள்.

**821.** இதுவும் அது.

**(க - ரை):** "அரசே! சூலாயுதத்தை ஏந்தி உனக்கு முன் நின்ற இவ்வரக்க வீரர்கள், சிவபெருமான் எமன் மார்பில உதைக்க, அவ்வுதையால் அவன் மார்பினின்று கடல்போலப் பொங்கி யெழுந்த இரத்த வெள்ளத்தில் தோன்றியவர்கள் ஆவர். இங்கு நின்றுள்ள பெருந்தொகையினராய இவ்வீரர்கள், தேவர்கள் கடல் கடைந்த பொழுது, கடலில் அமுதம் தோன்றுவதற்கு முந்தியே எழுந்த ஆலகால விடத்திற்கும முன்பே தோன்றினராவர்" என்று தூதுவர்கள் இராவணனுக்குப் படை வரிசைகளைக் காட்டிச் சென்றனர்.

**(அ-ரை):** கான்ற . கக்கின; வேலை · கடல்; குருதி : இரத்தம்.

**822.** இராவணனுக்கு 'வன்னி' எனும் அரக்கத் தலைவன் தன் கருத்தைத் தெரிவித்தல்.

**(க - ரை):** "நாம் சீதையை இராம இலக்குவரிடம் கொண்டு போய் விட்டு விட்டோமானாலும், கொடிய போரை விரும்பிப் போர் புரிந்து இறந்து ஒழிந்த நமது வீரர்களை நாம் திரும்பப் பெறப்போவதில்லை. நாம அடைவது வெறும் பழியே. ஆகையால் படையெடுத்துச் சென்று அவர்களைக் கூட்டத்தோடு ஒழிப்பதைத் தவிர அவர்களோடு சமாதானம் செய்துகொள்ளுவது என்பது கடினமான காரியம். இனி நாம் செய்தற்குரிய கடமை யாவது போர்புரிவதேயாம்."

**(அ-ரை):** விட்டம் : விட்டோம்; வெம்சமம் : கொடிய போர்; முட்டி : மோதி; கட்டம் : கஷ்டம் என்ற வடசொல். செரு : போர்.

819. 'பஞ்(சு)எரி உற்ற(து) என்ன
அரக்கர்தம் பரவை எல்லாம்
வெஞ்சின மனிதர் கொல்ல
விளிந்ததே; மீண்ட தில்லை;
அஞ்சினேன்! அஞ்சினேன் அச்
சீதைஎன்(று) அமுதால் செய்த
நஞ்சினால் இலங்கை வேந்தன்
நாளை இத் தகையன் அன்றோ?'

## படைக் காட்சிப் படலம்

820. மாதிரம் ஒன்றி னின்று,
மா(று)ஒரு திசைமேல் மண்டி
ஓதநீர் செல்வ(து) அன்ன
தானையை,உணர்வு கூட
வேதவே தாந்தம் கூறும்
பொருளினை விரிக்கின் றார்போல்,
தூதுவர் அணிகள் தோறும்
வரன்முறை காட்டிச் சொன்னார்.

821. 'காலன் மார்புழைச் சிவன்கழல் பட,அன்று கான்ற
வேலை யேஅன்ன குருதியில் தோன்றிய வீரர்,
சூலம் ஏந்திமுன் நின்றவர்; இந்நின்ற தொகையார்
ஆல காலத்தின் அமிழ்தின்முன் பிறந்தபோர் அரக்கர்.'

822. 'விட்டம் ஆயினும் மாதினை,வெம்சமம் விரும்பிப்
பட்ட வீரரைப் பெறுகிலம்;பெறுவது பழியால்;
முட்டி மற்றவர் குலத்தொடும் முடிக்குவ(து)அல்லால்
கட்டம் அத்தொழில்;செருத்தொழில் இனிச்செயும் கடமை.'

இராவணனது மூலபல சேனையை (Reserved Army) இராம பிரான் வதை செய்தமையைப் பற்றிக் கூறுவது.

**823.** மூலபல அரக்கர்களின் வீரத் தன்மை.

**(க - ரை):** மூலபல சேனை வீரர், சூலம் ஏந்தி வருவாராயின் உருத்திர பகவானை வென்றுவிடுவர்; மழுவாயுதத்தை ஏந்தி வரு வாராயின் எமனை வென்று விடுவர்; ஒளி பொருந்திய வாளா யுதத்தையும், அழகிய வில்லையும், தண்டாயுதத்தையும், சக்கரா யுதத்தையும் ஏந்தி வருவாராயின் திருமாலை வென்றுவிடுவர். வெற்றி பொருந்திய வேலாயுதத்தை யேந்தி வருவாராயின் முருகக் கடவுளையும் வென்றுவிடுவர்.

**(அ-ரை):** சுடர் : ஒளி; கோலம் : அழகு; கொற்றம் : வெற்றி; வான் · சிறந்த; கடப்பார் : வென்றுவிடுவர்; வாள், வில், தண்டு, சக்கரம் இத்துடன் சங்கும் சேர்த்துத் திருமாலாயுதம் ஐந்தென்பர்.

**824.** மூலபல சேனையைக் கண்டு வானர வீரர்கள் அஞ்சி யோடுதல்.

**(க - ரை):** சில வானர வீரர்கள் வாராவதியின்மேல் ஓடி னர்; சில வானர வீரர்கள் கடலைத் தாண்டி அப்பாற் செல்லத் தெப்பங்களைத் தேடினர்; சிலர் கடலில் தெப்பமின்றி நீந்திச் சென்றனர்; சிலர் துணைவர்களோடு சென்று கடல் நீரில் மூழ்கி னர்; சிலர் பிறருக்குத் தெரியாதபடி மரக்கிளைகளில் ஏறி ஒளித் தனர். பலர் மலைகளில் உள்ள குகைகளில் புக்கு மறைந்தனர்.

**(அ-ரை):** ஆழி : கடல்; புணை : தெப்பம்; பணைகள் : மரக்கிளைகள்; முழை : குகை.

**825.** தாங்கள் ஓடின காரணத்தை வானரசேனைத் தலைவர் அங்கதனிடம் தெரிவித்தல்.

**(க - ரை):** "மூலபல சேனையின் வலிமைக்கு அனுமன் வலி மையும், சுக்கிரீவனது வலிமையும், இராம இலக்குவர் சிலையின் வலிமையும், தங்கள் உயிரைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ள வும் போதா. அவர்கள் எங்களை எப்படிக் காப்பாற்ற முடி யும்? எங்களுக்கு உணவாகக் காய்களும் கனிகளும் கிட்கிந்தை யில் இருக்கின்றன. நாங்கள் ஒளிந்துகொள்ள மலைக்குகைகள் அங்கு இருக்கின்றன. இந்த உலகத்தை மனிதர் ஆண்டால் என்ன? இராக்கதர் ஆண்டால் எங்களுக்கென்ன?" என்று கூறினர்.

**(அ-ரை):** தனு : வில்; சாலா : போதாதவை; முழை : குகை; கரக்க : ஒளிக்க; வையம் : உலகம்; "இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன?" என்பது ஓர் பழமொழி.

## மூலபல வதைப் படலம்

823. சூலம் வாங்கிடின், சுடர்மழு
ஏந்திடின், சுடர்வாள்,
கோல வெம்சிலை பிடித்திடின்,
கொற்றவேல் கொள்ளின்,
சால வான்தண்டு தரித்திடின்,
சக்கரம் தாங்கின்,
காலன்,மால்,சிவன், குமரன்என்(று)
இவரையும் கடப்பார்.

824. அணையின் மேற்சில சென்றன; ஆழியை நீந்தப்
புணைகள் தேடின சில;சில நீந்தின போன;
துணைகளோடும்புக்(கு) அழுந்தின சில;சில தோன்றாப்
பணைகள் ஏறின; மலைமுழை புக்கன பலவால்.

825. 'அனுமன் ஆற்றலும்,அரசன(து) ஆற்றலும், இருவர்
தனுவின் ஆற்றலும் தம்உயிர் தாங்கவும் சாலா;
கனியும் காய்களும் உணவுள;முழைஉள கரக்க;
மனிதர் ஆளின்என்?இராக்கதர் ஆளின்என் வையம்?'

**826.** அங்கதன், வானர வீரர் ஓடுவது தகாதென்று சாம்பவானிடம் கூறுதல்.

**(க - ரை):** "எவ்வளவு வலிமையுடைய அரக்கர்களாயிருந்தாலும், அவர்களிடம் தருமம் இல்லை. அவ்வளவு தருமங்களையெல்லாம் பாவம் வெல்லுமென்று எங்கேயாவது அறிந்திருப்பீரா? பைத்தியம் பிடித்தவர்களைப்போல நீரும் இவர்களோடு ஓடிய தன்மை அறிவுடைமைக்குப் பொருந்தியதாக இல்லையே" என்று அங்கதன் சொன்னான். அதற்குச் சாம்பவான் பின்வருவனவற்றைச் சொல்லலானான்.

**(அ-ரை).** பெயர்ந்த ஓடிப்போனவை, ஒருங்கு (அறிவுடைமைக்கு) பொருந்தமற்றது.

**827.** அதற்குச் சாம்பவான் கூறும் பதில்.

**(க - ரை)** "நான் மாலியென்னும் அரக்கன் வலிமையைக் கண்டேன்; அதன்பின் மாலியவான் என்னும் அரக்கன் வலிமையைக் கண்டேன்; காலநேமி என்பவனது வலிமையைக் கண்டேன்; இரணியனது வலிமையைக் கண்டேன், ஆலகால விடம் கடலில் தோன்றியதையும் கண்டேன்; மது கைடபர் என்னும் இருவர் கடலைக் கலக்கியதையும் கண்டேன்; இவர்களுக்குள்ள வலிமையும் பிறருக்கு உண்டா?"

**(அ-ரை)** அனுசன : தம்பி, வேலை : கடல் மிடுக்கு வலிமை.

**828.** இதுவும் அது.

**(க-ரை):** "மூலபல சேனை வீரர் தங்களுடைய இயற்கை வலிமையோடு அதன் மேலும் பெற்ற வரத்தையுடையவர்கள், மாயம் செய்வதில் வல்லவர்கள்; கடல் மணலினும் மிகுந்த எண்ணிக்கையுடையவர்கள். அவர்கள் மனப்பான்மையை நோக்கினால் கலியுகத்தினும் கொடுமையுடையவர்கள்; படைக்கலம் பயின்று ஏந்திய கையை யுடையவர்கள்; அவர்களைக் கண்டு தேவர்கள் அஞ்சுவதையும் நீ கண்டாய். நமது வானர வீரர் தோற்றோடுவது இயற்கையே."

**(அ-ரை):** வெருவல் : அஞ்சுதல், கலியினும் கொடியர் : இந்தக் கருத்து 'கங்குபூசி வருகின்ற கரிகாலன் எனவே' என்று முனைபு வருதல் காண்க ஏனையுகங்களிலும் கலியுகம் கொடியது என்பது மரபு.

**829.** இராமன் அனுமானிடம் அனைவரையும் காத்து நிற்கும்படியாகக் கூறுதல்.

**(க - ரை):** "அனுமானே! நீ நமது வானரசேனைகளைக் காத்து அயோத்தி நகரினின்றும் என் பின்னே வந்த யானை போன்ற வீரனாகிய இலக்குவனைக் காத்து, சுக்கிரீவனைக் காத்து, அளவுக்கு மீறின வானுலகையும், மண்ணுலகையும் வேகத்தினோடு அழியாமல் பாதுகாத்து வளர்ப்பாயாக" என்று இராமபிரான் கூற, அதைக் கேட்ட அனுமான் வேறொன்றும் சொல்ல இயலாது வணங்கி இலக்குவன் பின் எழுந்து சென்றான்.

**(அ-ரை):** திருநகர் : அயோத்தி; தீர்ந்து : நீங்கி, போந்த : வந்த: யானை இலக்குவனுக்கு உவமையாகு பெயர். எண்தீர்ந்த அளவற்ற.

826. 'எத்தனை அரக்க ரேனும்
 தருமம் ஆண்(டு) இல்லை அன்றோ;
அத்தனை அறத்தை வெல்லும்
 பாவம்என்று அறிந்த(து)உண்டோ?
பித்தரைப் போல நீயும்
 இவரொடும் பெயர்ந்த தன்மை
ஒத்திலது' என்னச் சொன்னான்;
 அவன் இவை உரைப்ப(து) ஆனான்.

827 'மாலியைக் கண்டேன்! பின்னை
 மாலிய வானைக் கண்டேன்;
காலநேமியையும் கண்டேன்!
 இரணியன் தனையும் கண்டேன்;
ஆலமா விடமும் கண்டேன்!
 மதுவினை அனுச னோடு
வேலையைக் கலக்கக் கண்டேன்;
 இவர்க்குள மிடுக்கும் உண்டோ?'

828. 'வலிஇதன் மேலே பெற்ற
 வரத்தினர்; மாயம் வல்லோர்;
ஒலிகடல் மணலின் மிக்க
 கணக்கினர்; உள்ளம் நோக்கின்
கலியினும் கொடியர்; கற்ற
 படைக்கலக் கரத்தர், மாணாருல
மெலிகுவ(து) அன்றி உண்டோ
 விண்ணவர் வெருவல் கண்டாய்?'

829. 'சேனையைக் காத்(து),என் பின்னை
 திருநகர் தீர்ந்து போந்த
யானையைக் காத்து, மற்றை
 இறைவனைக் காத்(து), எண்தீர்ந்த
வானை இத் தலத்தி னோடும்
 மறையொடும் வளர்த்தி' என்றான்
ஏனைமற்(று) உரைக்கி லாதான்,
 இளவல்பின் எழுந்து சென்றான்.

830. இராமபிரான் போர்க்கோலம் பூணுதல்.

(க - ரை): இராமபிரான் கும்பிட்டுத் தன் வில்லையெடுத்து அதில் நாணினை ஏற்றி, மேருமலையைப் போன்ற உறுதியுடைய தாயினும் தன்னுடைய கருணைக்கடல் போன்ற ஒளிமிகுந்த மார்பில் வீரக் கவசம் அணிந்து, ஒருவரால் செய்யப்படாத வேத மந்திரங்களைப் போல அழியாத அம்புகளையுடைய தூணியைத் தன் முதுகில் தாங்கினன்.

(அ-ரை): கல் : மலை; எல்ஒளி : மிக்க ஒளி. ஒரு பொருட் பன்மொழி. இழையா : செய்யப்படாத; வாளி : அம்பு.

குறிப்பு: இராமன் மார்பு மேருமலையைவிட வலியதாக இருப்பதால் அதற்குக் கவசம் அணிதல் வேண்டா. எனினும் போர்க் கோலத்திற்காக அணிந்தான் என்பது மேருக்கல் எனச் சிறந்ததேயும் என்பதன் கருத்து.

331. அப்பொழுது தேவர்கள் இராமனை வாழ்த்துதல்.

(க - ரை): "உலகுக்குக் கண் போன்றவனே! எளியேங்களாகிய எங்களுக்கு ஒரு கவசம்போல் நின்று பாதுகாப்பவனே! கடல்போன்ற கரிய நிறத்தை யுடையவனே! தருமத்தின் வாழ்வாக உள்ளவனே! வேத முணர்ந்தவர்களுக்கு வலிமையாகி இருப்பவனே! உம்மைத் தவிர வேறொருவர் இந்த மூலபலப் படைகளுக்குப் பின் வாங்காமல் எதிர்த்து நிற்குமுடியுமா? எங்கள் எண்ணமாகிய 'அரக்கர் அழிவை' முடித்துத் தருவாயாக" என்று தேவர்கள் எல்லாரும் வாழ்த்துக் கூறினர்.

(அ-ரை): ஒண்ணுமே : முடியுமா? ஏகாரம் வினாப்பொருளில் வந்தது ஊன்றல் : எதிர்த்து நிற்றல்.

832. இராமபிரான் அரக்கரை அழித்தல்.

(க - ரை): வஞ்சகமான ஓரம் நினைத்து, பெரிய நீதிமன்றத்திலே எதிரிகளிடம் பொருள் பெற்றுக்கொண்டு பொய்ச்சாட்சி சொல்லும் பாவிகளுடைய குலம் இருந்த இடம் தெரியாமல் அழிவதைப்போல அரக்கர்கள் அழிந்து ஒழிந்தனர். தருமத்தைப் போன்றவனாகிய இராமபிரான் விடங்கலந்த நீர்நிலையை ஒத்தான். அந்த நீரைக் குடித்து இறப்பவரைப்போல் பல அரக்கர்கள் இறந்தனர். பஞ்சகாலத்தில் வறியோர்கள் பலவிதத் துன்பப்பட்டு இறப்பதைப் போலவும் பல அரக்கர்கள் மாண்டனர்.

(அ-ரை): வளம் : மிக்க பொருள்; கரி : சாட்சி; மறம் : பாவம்; படுவார் : இறப்பார்.

830. வில்லினைத் தொழுது வாங்கி
ஏற்றினன்; வில் நாண், மேருக்
கல்எனச் சிறந்த தேயும்,
கருணைஅம் கடலே அன்ன
எல்ஒளி மார்பில் வீரக்
கவசம்இட்(டு) இழையா வேதச்
சொல்எனத் தொலையா வாளித்
தூணியும் புறத்துத் தூக்கி.

831. 'கண்ணனே! எளியேம் இட்ட
கவசமே! கடலே அன்ன
வண்ணனே! அறத்தின் வாழ்வே!
மறையவர் வலியே! மாறு(து)
ஒண்ணுமே நீஅ லா(து)ஓர்
ஒருவர்க்(கு)இப் படைமேல் ஊன்றல்
எண்ணமே முடித்தி!' என்று
ஏத்தினர் இமையோர் எல்லாம்.

832. வஞ்சவினை செய்து, நெடு மன்றில்வளம்
உண்டு,கரி பொய்க்கும் மறம்ஆர்
நெஞ்சம்உடை யோர்கள்குலம் ஒத்தனர்
அரக்கர்;அறம் ஒக்கும் நெடியோன்
நஞ்சநெடு நீரினையும் ஒத்தனன்;
அடுத்(து)அதனை நக்கி னரையும்,
பஞ்சம்உறு நாளில்வறி யோர்களையும்,
ஒத்தனர் அரக்கர் படுவார்.

**833.** இராமபிரான் செய்யும் போரின் வேகத்திறம்.

**(க - ரை):** பகைவர்கள் உடலில் பாய்ந்த தசை பற்றியுள்ள ஆயுதத்தை யேந்திய இராக்கத வீரர்கள் ஒவ்வொருவருக்கும் எதிரெதிராகக் காணப்படும் வடிவங்களிலெல்லாம், வளைந்த வில்லும் தானும் போர்க்களத்தில் குதித்து குதித்துச் சுழன்று வந்து போர்புரியும் வேகத்தினலே ஒப்பற்ற ஆண்சிங்கம் போன்ற இராமபிரான், இறந்து வானுலகு சென்றவர்களின் தேரும், நின்று போர்புரிகின்ற வீரர்களின் தேரும் தான் ஏறிவந்த தேரைப் போலவே காணும்படி தோற்றினன்.

**(அ-ரை):** ஊன தசை, கூன் : வளைந்த, கடுப்பு வேகம் செல்வு சுற்றிவருதல்; மயவர் · வீரர்: ஏறு : ஆண சிங்கம.

குறிப்பு அரக்கவீரர்கள் ஒவ்வொருவரும் இராமனது வடிவமாகவே தங்களுக்குள் காணப்படுவதால், தாங்களே ஒருவருக்கொருவர் வெட்டி, மாய்ந்தனர்.

**834.** போரில் இராமனது சரவேகத்தோடு கரவேகம்.

**(க - ரை):** கோபிக்கத்தக்க வில் ஒன்றேயென்றலும், அம்பு ருத்தூணி ஒன்றேயென்றலும், வில்லினல் வீசப்பட்டுப் பாய்ந்து செல்கின்ற அம்பு மழை, மழைத்துளிகளின் அளவுக்கும் மேற்பட்டவை. இராம பிரானுடைய இரண்டு கைகளே, ஆயிரம் கைகள் செய்யும் போர்த்தொழில்களைச் செய்தன. வைகுந்தத்திலுள்ள திருமாலின் ஆயிரங் கைகளும் ஒன்று சேர்ந்து இரண்டு கைகள் ஆயின.

**(அ-ரை):** காய்தல் . சினத்தல்; கணை, பகழி : அம்பு. தூய் : தூவி. அமலன் : பாவததிலிருந்து விடுபட்டவன். (இராமன்.)

**835.** மூலபல சேனை முழுவதையும் ஒழித்து, வானவர் வாழ்த்துமாறு நின்ற இராமபிரானது தோற்றம்.

**(க - ரை):** நெருப்புப் பற்றினற் போன்ற கண்களை யுடைய அரக்கர் அனைவரையும் கொன்றதனல், பேய்க்கூட்டங்கள் நெருங்கி நரிகள் கூடி, மிக்க பிணக்குவியல்கள் விளங்கிக் காணப் படுகின்ற சுடுகாடு போன்ற அந்த போர்க்களத்தில் கையில் மலர் ஏந்தி மலர்மாரி பொழிந்து தேவர்கள் வாழ்த்தும்படியாகத் தனியே நின்ற இராமபிரான், மகாசங்கார காலத்தில் இந்த உலக மாகிய மயானத்திலே தன்னந்தனியே நிற்கும் உருத்திரபகவானை ஒத்தான்.

**(அ-ரை).** சிந்தி : அழித்து; விண்ணவர் : தேவர்; பிறங்கி : விளங்கி; ஈமம் ; சுடுகாடு; கறைமிடற்று இறைவன் : விடக்கறை பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான்.

833. ஊன்ஏறு படைக்கை வீரர்
எதிர்எதிர், உருவந் தோறும்,
கூன்ஏறு சிலையும் தானும்
குதிக்கின்ற கடுப்பின் கொடமால்
வான்ஏறி னார்கள் தேரும்,
மலைகின்ற வயவர் தேரும்,
தான்ஏறி வந்த தேரே
ஆக்கினன் தனிஏ(று) அன்னான்.

834. காய்இரும் சிலைஒன் றேனும்,
கணைப்புட்டில் ஒன்ற தேனும்,
தூய்எழு பகழி மாரி
மழைத்துளித் தொகையின் மேல;
ஆயிரம் கைகள் செய்த
செய்தன அமலன் செங்கை;
ஆயிரம் கையும் கூடி
இரண்டுகை ஆன(து) அன்றே.

835. தீமொய்த்த அனைய செங்கண்
அரக்கரை முழுதும் சிந்திப்,
பூமொய்த்த கரத்தர் ஆகி
விண்ணவர் போற்ற நின்றான்;
பேய்மொய்த்து, நரிகள் ஈண்டிப்
பெரும்பிணம் பிறங்கித் தோன்றும்
ஈமத்துள், தமியன் நின்ற
கரைமிடற்(று) இறைவன் ஒத்தான்.

**836.** வீடணன் மேல் வந்த வேலைத் தான் ஏற்பேன் என்று இலக்குவன் முற்படுதல்.

**(க - ரை):** 'இந்த வேலுக்குத் தோற்று நான் இறப்பேன் என்றாலும், பூத உடம்பு மாயப் புகழுடம்பு நிற்கும்; தருமமும் எனக்குத் துணையாகத் தொடர்ந்துவரும்; மேலோர்களும் புகழ்வார்கள்; ஆகையினால் நம்மை அடைக்கலமென்று அடைந்தவன் இறக்க, நாம் பார்த்துக்கொண்டிருப்பது எதில் சேரும்? பெரிய பழி எம்மை வந்து சேர்வதன் முன்னமே என்னுடைய ஒப்பற்ற மார்பில் அந்த வேலாயுதத்தை ஏற்றுக்கொள்வேன்' என்று இலக்குவன் அதற்கு எதிராகச் செல்ல முற்பட்டான்.

**(அ-ரை):** ஆர்ப்பர் : புகழ்ந்து ஆரவாரிப்பர்.

**837.** வேற்படையை யேற்க ஒருவரை யொருவர் முந்துதல்.

**(க - ரை):** அங்ஙனம் சென்ற இலக்குவனுக்குமுன், 'நானே அப்படைக் கலத்தை ஏற்பேன்' என்று வீடணன் எதிர்நிற்பான். அங்கதன் அவ்விருவரையும் விலக்கி 'நானே ஏற்பேன்' என்று வேற்படையின் முன் நிற்பான். சுக்கிரீவன் அவ்வங்கதனையும் விலக்கி 'நானே ஏற்பேன்' என்று அவ்வேற்படையின் முன் நிற்பான். இவ்வாறு ஒருவருக்கொருவர் முந்தியதாகிய துன்பந் தரும் அச்செயலை இத்தகையதென்று சொல்லமுடியுமா?

**(அ-ரை):** கடுகும் : விரைந்து செல்லுவான்; அலக்கண் : துன்பம்; அன்னது : அது; விரித்தல் விகாரம்.

**838.** இலக்குவன் அவ்வேலை ஏற்றல்.

**(க - ரை):** இலக்குவன் தனக்கு முன்நின்றவர்களெல்லாம் பிற்படும்படி, வாயு வேகத்தைப் போல விரைந்து சென்று, 'நீங்களெல்லாம் நிற்பீர்களாக! நான் இதைத் தடுப்பேன்' என்று சொல்லி, மின்னுகின்ற அந்த வேலாயுதத்தைத் தேவர்களும் கண்ணில் மோதி அடித்துக்கொண்டு இரங்குமாறு தனது பொன் போன்ற மார்பில் பட்டு முதுகின் புறம் வெளிவரும்படியாக ஏற்றனன்.

**(அ-ரை):** கால் : காற்று; முடுகி : வேகமாகச் சென்று; உரைநேரா : வார்த்தை கூறி, புடைத்து : அடித்துக்கொண்டு.

குறிப்பு: இக்கொடுந் துன்பத்தைக் கண்ணால் பார்க்க நேர்ந்ததே யென்று விண்ணவர் கண்புடைதது இரங்கினா

**839.** வேலினால் மாண்ட இலக்குவன் அனுமான் மருந்தால் உயிர்த்தெழுந்து கூறுதல்.

**(க - ரை):** இலக்குவன் எழுந்து நின்று, அனுமனைத் தனது இரண்டு கையினாலும் தழுவிக்கொண்டு, "எந்தையே! விபீடணன் உயிரோடு இருக்கின்றானா?" என்று வினவ, அந்தச் சமயத்தில் மகிழ்ச்சி பொங்கித் தன்னைத் தொழுது நின்ற அவனை நோக்கி, நடுக்கமும் துன்பமும் நீங்கி, "வீடணனே! இனிச் சீதாதேவியும் நம்மிடம் வந்துவிடுவள்; இராவணனும் ஒழிந்து விடுவான்" என்று கூறி மகிழ்ச்சியடைந்தான்.

**(அ-ரை):** எந்தாய் : என் தந்தையே; விம்மி : பூரித்து; துளுக்கம் : நடுக்கம்.

## வேலேற்ற படலம்

836. 'தோற்பன் என்னினும் புகழ்நிற்கும்
தருமமும் தொடரும்;
ஆர்ப்பர் நல்லவர்; அடைக்கலம்
புகுந்தவன் அழியப்
பார்ப்ப(து) என்?நெடும் பழிவந்து
தொடர்வதன் முன்னம்
ஏற்பன் என்தனி மார்பின்' என்(று)
இலக்குவன் எதிர்ந்தான்.

837. இலக்கு வற்குமுன் வீடணன் புகும்;இரு வரையும்
விலக்கி அங்கதன் மேற்செலும்; அவனையும் விலக்கிக்
கலக்கும் வானரக் காவலன்; அனுமன்முன் கடுகும்;
அலக்கண் அன்னதை இன்ன(து)என்றுஉரைசெயல் ஆமோ?

838. முன்நின் றார்எலாம் பின்உறக்,
காலினின் முடுகி
'நின்மின்! யான்இது விலக்குவென்'
என்(று) உரை நேரா,
மின்னும் வேலினை, விண்ணவர்
கண்புடைத்(து) இரங்கப்
பொன்னின் மார்பிடை ஏற்றனன்,
முதுகிடைப் போக.

839. எழுந்துநின்(று), அனுமன் தன்னை,
இருகையால் தழுவி, 'எந்தாய்!
விழுந்திலன் அன்றோ மற்(று)அவ்
வீடணன்' என்ன, விம்மித்
தொழும்துணை அவனை நோக்கித்,
துணுக்கமும், துயரும் நீங்கித்,
'கொழுந்தியும் மீண்டாள்; பட்டான்
அரக்கன்' என்(று) உவகை கொண்டான்.

840. இலக்குவன் முதல் அனைவரும் இராமனிடம் செல்லல்.

(க - ரை): 'தருமம் என்று ஒன்று உண்டு என அறிஞர்கூறும் ஒப்பற்ற பொருளை இப்பொழுது அனுமன் தன் செய்கையால் விளக்கிக் காட்டினமையை அறிந்தால், இனி இராமனுக்குச் செய்தற்கருமையான காரியங்களும் உண்டோ? இம்மை மறுமை என்ற இரண்டிலும் நிகழும் பயனை நோக்கினால், 'தருமம் வெல்லும், பாவம் தோற்கும்' என்னும் இந்நியதி அழியாத உண்மை' என்று தங்களுக்குள் தீர்மானித்துக்கொண்டு இலக்குவன் முதலியோர் இராமனிடம் சென்றனர்.

(அ-ரை): கருமம் : செயல்; இருமை : இம்மை, மறுமை என்பன.

841. இராமன் இலக்குவனைப் புகழ்தல்.

(க - ரை): "ஐயனே! ஒரு புறாவிற்காகத் தன் உடம்பில் காயம் உண்டாகும்படிச் சதையை அறுத்துக்கொடுத்த தெய்வத் தன்மை பொருந்திய தருமவானாகிய சிபிச் சக்கரவர்த்தியும் உனக்கு நிகராக மாட்டான்; அதற்குமேல் வேறொரு உவமை உரைப்பதற்கு என்ன உள்ளது? இந்த உலகத்திலே அருளை உடையவர்கள் என்பவர் தம்மவர்க்கு ஏதேனும் இடையூறு நேர்ந்தால் அவ்விடையூற்றை நீக்குவதில் கன்றையும் கறவைப் பசுவையும் ஒப்பார்" என்று இராமபிரான் இலக்குவனைப் பாராட்டினான்.

(அ-ரை): யாக்கை : உடம்பு; புத்தேள் : தெய்வத்தன்மை பொருந்திய. அறவன் : தருமவான்; தமர் : சுற்றம். 'கன்றைக் கறவைப் பசு காப்பதைப போலச் சுற்றத்தாரைப் பேரருளாளர் காப்பர்' என்பது உவமை நயம்.

842. போர்க்களங்கண்ட வானர வீரர்களின் நிலைமை.

(க - ரை): சில வானர வீரர்கள் அப்பிணக்குவியலைக் கண்டு ஏக்கமுற்றார்கள்; சிலர் நடுங்கினார்கள்; சிலர் கூச்சலிட்டு உள்ளத்தில் அச்சம் மிக அதிகமாக அஞ்சினார்கள்; சிலர் வாய் குழறிப் பேசினர்; சிலர் உள்ளம் வெதும்ப வருந்தினார்கள்; பின்பு அவர்கள் மெல்லமெல்லத் தங்கள் உயிர் இருக்குமிடத்திற்கு மகிழ்ச்சி வந்து பொருந்த, இவ்வாறு அவர்கள் அடைந்த நிலைமையை எவர் அறிந்து சொல்ல முடியும்?

(அ-ரை). இரைத்து : கூச்சலிட்டு; வீங்கினர் : மிகுந்தார்; வெருவல் : அஞ்சுதல்; வெமப : வெதும்ப; ஊன்ற : பதிய.

843. போர்க்களத்தைக் காட்டி இராவணனுக்கு மாலியவான் கூறும் அறவுரைகள்.

(க - ரை): "அளவில்லாத இந்த உலகங்களையெல்லாம் படைத்துக் காத்து அழிக்கும் பெரிய செயலால், இந்த உலகத்திற்கு ஒப்பற்ற பரம்பொருளாய் இருப்பவன் ஒருவன் உண்டு என்று வேதம் சொல்லுவதைக் கேட்டிருக்கின்றோம் அல்லவா? திருப்பாற்கடலில் அரவணைப்பள்ளியில் தங்கி, தேவர்கள் துயரம் தீர்ப்பதற்காக இராமனாக அவதாரம் எடுத்தவன் அந்தப் பரம்பொருளே யாகும் என்று நமக்குக் கூறிய விபீடணனது மொழி பொய்யாகுமா?"

(அ-ரை): அளப்பரும் : அளக்கமுடியாத; அளித்து : கொடுத்து—இங்கே படைத்து என்னும் பொருளில் வந்தது. கிளப்பது : சொல்லுவது; கேட்டும் : கேட்டோம்; பொய்த்து ஆமோ : பொய்யாகுமோ.

840. 'தருமம்என்(று) அறிஞர் சொல்லும்
தனிப்பொருள் தன்னை, இன்னே
கருமம்என்(று) அனுமன் ஆக்கிக்
காட்டிய தன்மை கண்டால்
அருமைஎன் இராமற்(கு) அம்மா?
அறம்வெல்லும் பாவம் தோற்கும்,
இருமையும் நோக்கின்' என்று,
இராமன்பால் எழுந்து சென்றார்.

841. 'புற(வு)ஒன்றின் பொருட்டா யாக்கை
புண்உற அரிந்த புத்தேள்
அறவனும், ஐய நின்னை நிகர்க்
கிலன்; அப்பால் நின்ற
பிறவினை உரைப்ப(து) என்னே?
பேர்அரு ளாளர் என்பார்
கறவையும் கன்றும் ஒப்பார்,
தமர்க்(கு)இடர் காண்கின்' என்றான்.

வானரர் களம் காண் படலம்

842. ஏங்கினார்; நடுக்கம் உற்றார்;
இரைத்(து)இரைத்(து) உள்ளம்ஏற
வீங்கினார்; வெருவல் உற்றார்;
விம்மினார் உள்ளம் வெம்ப
ஓங்கினார்; மெள்ள மெள்ள
உயிர்நிலைத்(து) உவகை ஊன்ற
ஆங்(கு)அவர் உற்ற தன்மை
யார்அறிந்(து) அறைய கிற்பார்?

இராவணன் களம் காண் படலம்

843. 'அளப்பரும் உலகம் யாவும்
அளித்துக்,காத்(து), அழிக்கின் றான்தன்
உளப்பெரும் தகைமை தன்னால்
ஒருவன்,என்(று) உண்மை வேதம்
கிளப்பது கேட்டும் அன்றே;
அரவின்மேல் கிடந்து மேனாள்,
முளைத்தபேர் இராமன்; என்ற
வீடணன் மொழிபொய்த்(து) ஆமோ?"

**844.** *இராவணன் கோபுரத்திலிருந்து போர்க்களத்தைக் காண்டல்.*

**(க - ரை):** *தன் கண்ணில் குமிழியிட்டுப் பெருகும் நீரோடும், இரத்தத்தோடும், கோபாக்கினியோடும் வழிகின்ற கண்ணை யுடையவனாகிய இராவணன், பலவிதத் துறைகள் அமைந்த தமிழ் இலக்கண மரபுபோன்ற அம்புகளை இராமன் ஏவுதலால் இறந்துபோன அரக்கர்களின், முழுகச் செய்யவல்ல இரத்த வெள்ளத்தைக் கடலானது ஆறாகிய வாயினால் குடித்து வெளியே உமிழ்வது போன்று அதன் அலைகள் கரையில் வந்து மடக்கி எறிவதைக் கண்டான்.*

**(அ ரை):** *சோரி : இரத்தம்; வேலை : கடல்; ஓதம : அலை, உடற்று மடக்கி யெறிய.*

**845.** *இராவணன் கோபுரத்தினின்று கீழே இறங்கி வருதல்.*

**(க - ரை):** *வானம் பிளவுபட்டுச் சிறிதென்னும்படியாக ஆரவாரித்த வானர வீரர்களின் மிகுதியைக் கண்ணுற்கண்டான்; போர்க்களத்தில் பூமி பிளக்கும்படியாக ஆடுகின்ற பிணக்குறை யுடல்களின் கூட்டங்களைக் கண்டான்; அதே சமயத்தில் தங்கள் கண்களை நன்கு திறந்து போர்க்களத்தை விரிவாகப் பார்க்கும வானவர்களின் மகிழ்ச்சியையும் கண்டான். இவற்றைக்கண்ட புண்ணினால் இரண்டாகப் பிளக்கப்பட்டதைப் போன்ற நெஞ்சை யுடையவனாகிய இராவணன் கோபுரத்தினின்றும் இறங்கித் தன் இருக்கைக்குப் போனான்.*

**(அ-ரை):** *ஒல்க : தளர; வீக்கம் : மிகுதி; கவந்தம் : வெட்டின குறை முண்டங்கள்; வருக்கம் : கூட்டம்; இழிந்து : இரங்கி.*

**846.** *இராவணன் அரசவையை யடைதல்.*

**(க - ரை):** *கோபச்சிரிப்பு சிரிக்கும் வாயையுடையவனாய், நாக்குக் கடைவாயைத் தடவப் புகை எழும்புகின்ற மூக்கையுடை யவனாய், நெருப்புப் பொறியைக் கக்கும் கண்களையுடையவனாய், குற்றம் பிறக்கின்ற நெஞ்சையுடையவனாய், கொடிய கோபமாகிய நெருப்பு அதிகமாக வீசிக் கொடுமை பிறக்கின்ற சொல்லையுடைய வனாய் இராவணன் தன் அரசவையை அடைந்தான்.*

**(அ-ரை):** *நகை : சிரிப்பு; மிகை : குற்றம; சிகை : வெம்மை; இருக்கை : இருப்பிடம்.*

**847.** *இராவணன் தான தருமம் வழங்குதல்.*

**(க - ரை):** *இராவணன் முதலில் சிவபெருமானைப் பூசித்து, வேதங்கள் சொல்லியபடி தானங்களை வீசியெறிந்து, பின்னும யார் யார் விரும்பினார்களோ அவர்கட்கெல்லாம் அவற்றைக் கொடுத்துக் குறைதலில்லாத போர்புரிதற்குப் புறப்படச் சித்த மானான்.*

**(அ-ரை):** *இமையா முக்கண் இறைவன் : தெய்வத்தன்மையால் இமைத்தலில்லாத மூன்று கண்களையுடையவன், சிவபெருமான்; ஆசற : குற்ற மற. ஒல்கா : குறைதலில்லாத-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.*

844. குமிழிநீ ரோடும், சோரிக்
கனலொடும், கொழிக்கும் கண்ணன்
தமிழ்நெறி வழக்கம் அன்ன
தனிச்சிலை வழங்கச் சாய்ந்தார்,
அமிழ்பெரும் குருதி வெள்ளம்
ஆற்றுவாய் முகத்தில் தேக்கி
உமிழ்வதே ஒக்கும் வேலை
ஓதம்வந்து உடற்றக் கண்டான்.

845. விண்பிளந்(து) ஒல்க ஆர்த்த
வானரர் வீக்கம் கண்டான்;
மண்பிளந்(து) அழுந்த ஆடும்
கவந்தத்தின் வருக்கம் கண்டான்;
கண்பிளந்(து) அகல நோக்கும்
வானவர் களிப்பும் கண்டான்;
புண்பிளந் தனைய நெஞ்சன்
கோபுரத்(து) இழிந்து போனான்.

846. நகைபிறக் கின்ற வாயன்,
நாக்கொடு கடைவாய் நக்கப்
புகைபிறக் கின்ற மூக்கன்,
பொறிபிறக் கின்ற கண்ணன்,
மிகைபிறக் கின்ற நெஞ்சன்,
வெம்சினத் தீ,மேல் வீங்கி
சிகைபிறக் கின்ற சொல்லன்
அரசியல் இருக்கை சேர்ந்தான்.

## இராவணன் தேர் ஏறு படலம்

847. ஈசனை, இமையா முக்கண்
இறைவனை,இருமைக்(கு) ஏற்ற
பூசனை முறையில் செய்து,
திருமறை புகன்ற தானம்
வீசினன் இயற்றி, மற்றும,
வேட்டன வேட்டோர்க் கெல்லாம்
ஆசற நல்கி,ஒல்காப் போர்த்
தொழிற்(கு) அமைவ(து) ஆனான்.

848. இராவணன் தேரேறுதல்.

(க - ரை): இராவணன் சிவனைத்தொழுது தேரில் ஏறினன்; மனந்தேறினவர்களாயிருந்த இந்திரன் முதலிய தேவர்கள் கலக்க முற்றவர்களாய் மயங்கிச் செய்வதறியாமல் திகைத்தனர். ஓயாது இறைவனைத் தியானம் பண்ணிக்கொண்டிருக்கும் தொழிலைத் தவிர வேறு தொழிலின்றி ஐம்புலன்களும் அடங்கிய முனிவர்களும், உலகமெல்லாம் நடுங்கத் தாங்களும் அஞ்சினார்கள்.

(அ-ரை): தியங்கினர் : கலங்கினர்; அனுங்க : வருந்த.

849. இராவணன் சூளுரை பகர்தல்.

(க - ரை): 'நான் இராமனை எதிர்ந்து போய்ப் பின், ஒன்று, சானகி தன் கணவனை இழந்து வயிறு பிசைந்து அழுது பெரிய துயரக் கடலில் மூழ்கும்படி செய்வேன்; அல்லது என் மனைவியாகிய மண்டோதரி என்னையிழந்து அவ்வாறு தன் வயிற்றைப் பிசைந்து கொண்டு அத்துயரக்கடலில் மூழ்கும்படி செய்வேன். இந்த இரண்டிலொன்றைச் செய்து முடிப்பேன்' என்று இராவணன் சூளுரை கூறினன்.

(அ-ரை): மன்றல் : வாசனை; அம் குழல் : அழகிய குழல்; மலர்க்கை : மலர் போன்ற கை; உவமத்தொகை; அலம் : துன்பம்; தலைக்கொடு : மேற்கொண்டு; தலைப்படின் : நேர்ந்தால்.

போர்புரிய இராமபிரான் தேரில் ஏறியதைப் பற்றிக் கூறுவது.

850. இராமபிரான் போருக்கு எழுதல்.

(க - ரை): வானர வீரர்கள் கூம்பிடும் கைகளோடு, சொல் தடுமாறி, உடலெல்லாம் நடுக்கம் கொண்டு கீழே விழுந்து ஆரவாரிக்கும் ஓசை மிகும்படியாக, அந்நாளில் அரக்கர் துன்புறுத்தலால் வருந்திய தேவர்கள் முறையிட, அவர்களை அஞ்சேல் என்று கூறித் திருப்பாற் கடலில் பாம்பணைப் பள்ளியினின்றும் எழுந்தவாறு போல, இன்றும் இராமபிரான் விரைந்து போருக்கு எழுந்தான்.

(அ-ரை): மெய்ம்முறை துளங்க என்பது உச்சி முதல் உள்ளங்கால் வரை நடுங்க என்று பொருள்; கவி : குரங்கு, பூசல் : ஆரவாரம்; அமளி : படுக்கை.

851. இராமபிரான் தேரேறுதல்.

(க - ரை): பாவமானது கீழே விழுந்து பூமியில் புரண்டு துன்பமடையவும், அனைவரும் போற்றத்தக்க புண்ணியமானது பெரும் மகிழ்ச்சியோடும் கூத்தாடவும், துயரில் அழுந்திய தேவர்களும் முனிவர்களும் தங்கள் கை தங்களை அறியாதபடியே தலைமீது ஏறி வணங்கவும் இராமபிரான் தேரில் ஏறி அருளினன்.

(அ-ரை): வெதும்ப : துன்புற; தொழும்தகைய : தொழத்தக்க: தீவினை: பாவம்; நல்வினை : புண்ணியம்; முந்துற்று ; அவர்கள் நினைப்பதற்கு முந்தியே.

848. ஏறி ஞன்தொழு(து), இந்திரன் முதலிய இமையோர்
தேறி ஞர்களும் தியங்கிஞர்; மயங்கிஞர்; திகைத்தார்;
வேறு தாம்செயும் வினையிலே மெய்யின்ஐம் புலனும்
ஆறி ஞர்களும் அஞ்சிஞர் உலகெலாம் அனுங்க.

849. 'மன்றல் அம்குழல் சனகி,தன்
மலர்க்கை யால்வயிறு
கொன்(று),அலம்தலைக் கொடு,நெடும்
துயர் இடைக் குளித்தல்;
அன்றி(து) என்றிடின் மயன்மகள்
அத்தொழில் உறுதல்;
இன்(று) இரண்டின்ஒன்(று)
ஆக்குவென் தலைப்படின்;' என்ருன்.

## இராமன் தேர் ஏறு படலம்

850. தொழுங்கையொடு, வாய்குழறி, மெய்ம்முறை துளங்கி
விழுந்துகவி சேனையிடு பூசல்மிக விண்ணோர்
அழுந்துபடு, பால்அமளி அஞ்சல்என அந்நாள்
எழுந்தபடி யேகடி(து) எழுந்தனன் இராமன்.

851. விழுந்துபுரள் தீவினை நிலத்தொடு வெதும்பத்,
தொழும்தகைய நல்வினை களிப்பிஞெடு துள்ள,
அழுந்துதுய ரத்(து) அமரர், அந்தணர், கை முந்துற்(று)
எழுந்துதலைஏற, இனி(து) ஏறினன் இராமன்.

இராவணனது வதையைப் பற்றிக் கூறுவது.

852. இராவணனும், இராமபிரானும் போர்புரிய எதிர்ந்தமை.

(க.-ரை): ஒரு காரியமும், அக்காரியங்களின் இறுதியறியக் கூடிய ஞானமும் போலவும், பொருள்களின் உண்மைத் தன்மையை மறைக்கக்கூடிய அறியாமையும், அறிவுடைமையும் போலவும், மிகக்கொடிய பாவமும், அழிவில்லாத புண்ணியம் போலவும், முறையே இராவணனும் இராமபிரானும் ஒருவரையொருவர் தாக்கிப் போர புரிந்தார்கள்.

(அ-ரை). கடைக்கண : இறுதிக காலததில்; அவிஞ்சை : அறியாமை; விஞ்சை : அறிவுடைமை

853. இராவணன் இராமபிரான்மீது மாய அம்பு தொடுக்க எண்ணுதல்

(க-ரை): 'தான் தேய்ந்து தோற்றுப்போக நின்றவனாகிய இராமபிரான் தனது வில்லின் வலிமையைக் காட்டினான்; மிகுந்த பேய் போன்ற படைக்கலங்களை இவன்மேல் செலுத்துவதனால் பயனொன்றுமில்லை; ஆதலின் இவன், தன்னோடு கூடிய பெரிய சேனையுடன் போர்க்களத்திலே தவறாது ஒழியும் வண்ணம் இப்பொழுது மாய அம்பைத் தொடுப்பேன்' என்று இராவணன் எண்ணினான்.

(அ-ரை): சிலைவலம் : வில்லின் வலிமை; துரப்பது : செலுத்துவது; ஆய பொருந்திய, பிழையாமல் · தவறாமல்; அடுகளம் · கொல்லும போர்ககளம், அவிய : சாவ; மதித்தான : எணணினான.

854. இராவணனுடைய மாய அம்பைப்பற்றி மாதலி இராமபிரானிடம் கூறுவது.

(க-ரை): "கார்காலத்து மேகம் போன்ற கரிய நிறத்தை யுடைய இராமபிரானே! இரும்புத்தொழில் செய்யும் கொல்லருக்கு நூல்நுழையும்படியான ஒரு ஊசியைச் செய்து இதனை விலைக்கு வாங்கிக்கொள்க என்று சொல்லும் அறிவிலிகளைப் போல, அந்தத் திக்குயானைகளின் கொம்பை முறித்த தோளையுடையவனாகிய இராவணன் மீளுவதற்கரிய மாய அம்பை நின் மேல் விடுத்தான்" என்று மாதலி கூறினான்.

(அ-ரை): இருப்புக் கம்மியர் : இரும்புத் தொழில் செய்வோர்; இழை · நூல்; இயற்றி : செய்து; கோடி : கொள்ளுவீர். பதடி : பதர்; மருப்பு : கொம்பு, கல்லிய : தோண்டிய. மாயவனை இராமன்மீது மாய அமபு தொடுததற்கு இங்குக் கூறிய உவமை பொருந்தும. 'கொல்லத்தெருவில் ஊசி மாறியது போல' : பழமொழி.

855. இராமன் விட்ட ஞான அம்பினால் மாய அம்பின் வலிமை தொலைதல்.

(க-ரை): மாய அம்பின் மாயையை நீக்கவல்ல பெரிய ஞான அம்பு பாய்தலால், மனிதப் பிறப்பு அடைந்ததனால் மூடிக் கொண்ட மாயையானது அறவழியில் செல்லுதலினாலே நல்ல அறிவு வந்து சேர, அம்மாயையினால் ஆன்ம சொரூபத்தை அறிய முடியாதவாறு தடையுண்டவர்கள் தங்கள் ஆன்ம சொரூபத்தை அறிந்ததுபோல அவ்வம்பின் மாயம் ஒழிந்தது.

(அ-ரை): துறத்தல் : நீக்குதல்; ஆற்லும் : செய்யும்.

## இராவணன் வதைப் படலம்

852. கரும மும்,கடைக் கண்உறு ஞானமும்,
அருமை சேரும் அவிஞ்சையும், விஞ்சையும்,
பெருமை சால்கொடும் பாவமும், பேர்கலாத்
தரும மும்எனச், சென்(று)எதிர் தாக்கினர்.

853. தேய நின்றவன் சிலைவலம் காட்டினன்;'தீராப்
பேயை என்பல துரப்ப(து)?இங்(கு)இவன்பிழையாமல்
ஆய தன்பெரும் படையொடும் அடுகளத்(து) அவிய
மாயையின் படை தொடுபென்' என(று) இராவணன் மதித்தான்.

854. 'இருப்புக் கம்மியற்(கு) இழைநுழை
ஊசிஎன்(று) இயற்றி
விருப்பின்'கோடியால் விலக்(கு)'
எனும் பதடியின் விட்டான்
கருப்புக் கார்மழை வண்ண!அக்
கடுந்திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய தோளவன்
மீளரு மாயம்.'

855. துறத்தல் ஆற்றுறும் ஞானமாக் கடும்கணை தொடர,
அறத்த லாதுசெல் லாதுநல் அறிவுவந்(து)அணுகப்
பிறத்தல் ஆற்றுறும் பேதைமை பிணிப்புறத் தம்மை
மறத்த லால்தந்த மாயையின் மாய்ந்த(து) அம்மாயம்.

**856.** இராமனைப் பரம்பொருளென்று இராவணன் கருதல்.

**(க - ரை):** 'என்னெதிரில் நிற்கும் இவன் சிவனோ என்றால் அவனும் அல்லன்; பிரமனும் அல்லன்; திருமாலும் அல்லன்; உண்மையான வரத்தால் பெற்ற என் ஆயுதங்களையெல்லாம தொலைக்கின்றான். அல்லது தவசியாக இருப்பானேயானால் இவ்வளவு பெரிய யுத்தத்தை முடிக்கும் தகுதியுடையவனாகான். மற்று இவன் எல்லா உலகங்களையும் ஒரு கணத்தில் படைத்துக் காத்து அழிக்கும் பேராற்றலுடைய, வேதத்தால் நிலைநாட்டிக் கூறப்படும் மூலகாரணனை அப்பொருளோ?' என்று இராவணன் கருதினான்.

**(அ-ரை)** அடுகின்றான் : கொல்லுகின்றான்; தரன் : தகுதியுடையவன்; சிவனோ. அவனோ, தவனோ : ஓகாரம தெரிநிலைப்பொருள; இவனோ : ஓகாரம விளைப்பொருள்.

**857.** இராமபிரான் இராவணனது தலைகளில் ஒன்றை அறுத்தல்.

**(க-ரை):** அந்தணர்களின் வேதத்திற் கூறும் மெய்ப்பொருளாகிய இராமபிரான், கொடியவர்களில் முதல்வனாகிய இராவணன் தனது அருகில் வந்த சமயத்தை நோக்கினான். பிறைச் சந்திரனைப் போன்ற அடிப்பாகத்தையுடைய ஓர் அம்பினாலே வரிசையாக நிமிர்ந்துள்ள தலைகளில் ஒன்றை வெட்டி வீழ்த்தினான்.

**(அ-ரை):** வெய்யவர் : கொடியவர்; ஆதியன் : முதன்மையானவன், அற்றம : சமயம; சாதி : இனம; பாதியின்மதி : பிறைச்சந்திரன்; முகம் : அடிபபாகம; பகழி : அமபு.

**858.** வெட்டின தலை மீள முளைத்தல்.

**(க - ரை):** இவ்வுலகில் இறந்த உயிரானது தான் செய்த வினையின் மிகுதியால் உடனே உடலெடுத்துப் பிறந்ததைப்போல வெட்டின அத்தலையானது மறவாமல் தன்னிடத்திலே மடித்த வாயோடு முளைத்தது. உலகில். தவப்பயனால் இவ்வாறு செயல் நிகழ்வதன்றி வேறு வகையால் உண்டாகுமா?

**(அ-ரை):** கருமம:முன்செய்த வினை; ஈட்டு : ஈட்டம்; மிகுதி : கடைக்குறை.
குறிப்பு: இபபாடல் வேறறுபபொருள வைப்பணியாகும. 'வேண்டிய வேண்டியாங்(கு) எய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப் படும்' என்னும் குறள இங்கு ஒப்பு நோக்கத்தககது.

**859.** இராமபிரான் இராவணனது கையை வெட்டி வீழ்த்துதல்.

**(க - ரை):** நிலைபெற்ற, சக்கராயுதம் ஏந்திய திருமாலின் அவதாரமாகிய இராமபிரான், இந்த இராவணனுக்கு அறுபட்ட தலைகள் மீளவும் முளைக்கும் வரம் உண்டு என்று அறிந்து, இழிந்தவனாகிய அவனது, பிறைச்சந்திரனைப் போன்ற வளைந்த வடிவையுடைய வில்லையேந்திய கையை வெட்டிப் பூமியில் விழும்படியாகச் செய்தான்.

**(அ-ரை):** நேமி : சக்கரம்; நீசன் : இழிந்தவன்; கலைஉறுதிங்கள் : குறைந்த கலைகளையுடைய சந்திரன், பிறைச் சந்திரன்; தலம் : நிலம்.

856. 'சிவனோ அல்லன்; நான்முகன் அல்லன், திருமாலாம்
அவனோ அல்லன், மெய்வரம் எல்லாம் அடுகின்றான்;
தவனோ என்னின் செய்து முடிக்கும் தரன் அல்லன்;
இவனோ தான் அவ் வேதமுதற்கா ரணன்?' என்றான்.

857. வேதியர் வேதத்து மெய்யன்; வெய்யவர்க்(கு)
ஆதியன் அணுகிய அற்றம் நோக்கினான்;
சாதியின் நிமிர்ந்த(து)ஓர் தலையைத் தள்ளினான்,
பாதியின் மதிமுகப் பகழி ஒன்றினால்.

858. இறந்தோர் உயிர், உடன் கருமத்(து) ஈட்டினால்
பிறந்துள(து) ஆம்எனப், பெயர்த்தும் அத்தலை
மறந்தில(து) எழுந்தது; மடித்த வாயது;
சிறந்தது தவம்அலால் செயல்உண் டாகுமோ?

859. தலைஅறின் தருவ(து)ஓர் தவமும் உண்(டு), என
நிலையுறு நேமியான் அறிந்து, நீசனைக்,
கலைஉறு திங்களின் வடிவு காட்டிய
சிலைஉறு கையையும் தலத்தில் சேர்த்தினான்.

**860.** *இராவணனுடைய வெட்டிய தலைகள் பலவிடங்களில் வீழ்தல்.*

**(க-ரை):** *இராவணனுடைய வெட்டி வீழ்த்தப்பட்ட தலைகள், கடலின் அலைகள்தோறும், பூமியின் பலவிடங்கள் தோறும், சிறப்புப் பொருந்திய பெரிய மலைகள்தோறும், திக்குகள் தோறும், பார்க்குமிடங்கள்தோறும் இடிகள் விழுந்ததைப்போலப் பேரொலியோடும் விழுந்தன.*

**(அ-ரை)** *தரங்கம் : அலை; சீர்த்த : சிறப்புப் பொருந்திய. மால்வரை : பெரிய மலை; ஆர்தது : முழுங்கி; அசனிகள் : இடிகள்.*

**861.** *இராவணன் கண்களைப் பேய்கள் தோண்டியுண்ணல்.*

**(க-ரை):** *ஒருவன் நெடுநாளாக நுகர்ந்துவந்த புண்ணியத் தின் பயன் போய்விட்ட பிறகு, அவனது மற்றைப் பண்புகளெல் லாம் பழுதடையும் அல்லவா? அதுபோல இராவணனது புண ணியத்தின் பயன் தீர்ந்து விட்டமையால் முன்பு அவனைத் தொழுது சுற்றித் திரிந்த பேய்க்கூட்டங்கள் இன்று அவன் கண்களைத் தோண்டித் தின்பன ஆயின.*

**(அ-ரை):** *பொழுது நீட்டிய : நெடுங்காலமாகச் செயத; கழுது : பேய; சூன்ற : தோண்டின.*

**862.** *'மூர்ச்சித்த இராவணனைக் கொல்லலாகாது' என்று இராமன் மாதலியிடம் கூறுதல்.*

**(க-ரை):** *"கையில் ஆயுதத்தையிழந்து மயங்கிக்கிடக்கின்ற வனாகிய இராவணனது தளர்ந்துபோன பெருந்துன்பத்தைக் கண்டு, போர் முறையின் நீதியைக்கடந்து அவன் உயிரைக் கொள்ளுவதும் அறமாகுமா? ஆதலால் என் மனம் இப்பொழுது போர் செய்தலை நீக்கிற்று" என்று இராமன் மாதலியிடம் கூறினன்.*

**(அ-ரை):** *இடைதல் : தளர்தல்; இகல் : போர்; நடை ; ஒழுக்கம்; கோடல் : கொள்ளுதல்.*

**863.** *தேர்ப்பாகன், தேரைத் திருப்பிச்சென்ற காரணத்தை இராவணனிடம் கூறுதல்.*

**(க-ரை):** *"ஐயனே! ஆண்மகனுக்குரிய வீரச்செயல்களை நீ நீங்கினய். அங்கே சற்று நேரம் தங்கினலும், அக்கணத்திலேயே உன்னுயிர் மாண்டுவிடும் என்று தெரிந்தது. ஆகவே, அச்சமயத தில் நான் செய்தற்குரிய உண்மையான கடமையென்று, உனக்கு நேரும் துன்பத்தை நீக்கும் பொருட்டு இத்தேரைத் திருப்பிச் செலுத்தும் தொழிலைச் செய்தேன்" என்று தேர்ப்பாகன் கூறினன்.*

**(அ-ரை):** *இறை : சற்றும்; மாண்டது என்பது : துணிவுபற்றி வந்த கால வழுவமைதி; இடர் : துன்பம்.*

860. நீர்த்த ரங்கங்கள் தோறும், நிலந்தொறும்
சீர்த்த மால்வரை தோறும், திசைதொறும்
பார்த்த பார்த்த இடந்தொறும் பல்தலை
ஆர்த்து வீழ்ந்தன அசனிகள் வீழ்ந்(து)என.

861. பொழுது நீட்டிய புண்ணியம் போனபின்
பழுது செல்லும்அன் றேமற்றைப் பண்பெலாம்;
தொழுது சூழ்வன முன்னின்று தோன்றவே
கழுது சூன்ற இராவணன் கண்எலாம்.

862. 'படைது றந்து மயங்கிய பண்பினன்
இடைபெ றும்துயர் பார்த்(து),இகல் நீதியின்
நடைது றந்(து,)உயிர் கோடலும் நன்மையோ;
கடைது றந்தது போர்என் கருத்'தென்றான்.

863. 'ஆண்தொ ழில்துணி(வு) ஓய்ந்தனை;ஆண்(டு)இறை
ஈண்ட நின்றிடின் ஐயனே! நின்உயிர்
மாண்ட(து) அக்கணம் என்(று),இடர் மாற்றுவான்
மீண்ட(து) இத்தொழில்; எம்வினை மெய்ம்மையால்.'

**864.** *இராமபிரான் பிரமன் அம்பை இராவணன்மீது ஏவுதல்.*

**(க - ரை):** *பேரழகனாகிய இராமன், அனைவருக்கும் முந்தி உலகத்தைப் படைத்த கடவுளாகிய பிரமனது முதன்மையான புகழையுடைய அம்பை எடுத்து அருச்சனை புரிந்து, தன் வில்லின் நாணில் தொடுத்து மந்தரமலை போன்ற தனது தோளிற் பொருந்தும்படியாக வளைத்தான்.*

**(அ-ரை):** *பெயர் : புகழ்; வாங்கி : எடுத்து; அருச்சியா : செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம், சுந்தரம அழகு; புரை : உவம உருபு; தொடுபுரு; தொடுத்து : செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.*

**865.** *இராமபிரான் பிரமன் அம்போடு, தன் சக்கராயுதத்தையும் ஏவுதல்.*

**(க - ரை)** *: அந்த நிமிடத்திலேயே, பிரமன் அம்பானது திருமாலின் படையாகிய சக்கராயுதத்தோடு சேர்ந்து சென்று அந்தக் கொடியவனாகிய இராவணனது மார்பில் பாய்ந்தது. அந்த வேகத்தினால் இந்தப் பூமியும் எட்டுத்திக்குகளும், வானுலகும் நிலைகுலைந்தன.*

**(அ-ரை):** *ஆண் தகை : அன்மொழித்தொகை; தழீஇ : சொல்லிசை யளபெடை; உரம : மார்பு; விசும்பு : வானுலகம்.*

**866.** *இராவணன் உயிரிழத்தல்.*

**(க - ரை) :** *இராமபிரானது தூய அம்பானது, இராவணனுடைய மூன்று கோடி ஆயுள், அவன் முயன்று செய்த பெருந் தவம், 'முப்பத்து முக்கோடித் தேவரில் எவராலும் வெல்லப்படமாட்டாய்' என்று பிரமதேவனால் அவனுக்குக் கொடுக்கப்பட்ட வரம், எட்டுத் திக்குகளோடு எல்லா உலகங்களிலும் சென்று போர் செய்து வென்ற அவனது தோள் வலிமை ஆகிய இவற்றையெல்லாம் தின்று, அவன் மார்பில் புகுந்து விரைந்துசென்று, அவனுடைய உயிரைக் குடித்து அப்பாற்போயிற்று.*

**(அ-ரை):** *முதல்வன் : இங்கே பிரமனைக் குறிக்கிறது; செருக்கடந்த : போர் செய்துவென்ற; இராகவன் : 'இரகு' மரபில் பிறந்த இராமபிரான் : தத்திதாந்த பதம்; புனிதவாளி : தூய அம்பு.*

864. முந்தி வந்(து)உல(கு) ஈன்ற முதற்பெயர்
அந்த ணன்படை வாங்கி அருச்சியா
சுந்த ரன்சிலை நாணில் தொடுப்புரு
மந்த ரம்புரை தோள்உற வாங்கினான்.

865. அக்க ணத்தின் அயன்படை ஆண்தகைச்
சக்க, ரப்படை யோடுந் தழீஇச் சென்று
புக்க(து),அக் கொடி யோன்உரம்; பூமியும்,
திக்க னைத்தும், விசும்பும் திரிந்தவே.

866. முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய
பெருந்தவமும்,முதல்வன் முன்னாள்
'எக்கோடி யாராலும் வெலப்படாய்'
எனக்கொடுத்த வரமும்,ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும் தின்று மார்பில்
புக்கோடி உயிர்பருகிப் புறம் போயிற்(று)
இராகவன்தன் புனித வாளி.

**867.** *இறந்த இராவணனது முகப்பொலிவு.*

**(க - ரை):** கொடிய சிங்கம் கோபிப்பதைப் போன்ற தன்னுடைய சினம் அடங்கவும், மனவெழுச்சி குன்றவும், வஞ்சனை யொழியவும், பகைவர் தோற்கும்படியாகப் போர்புரியவல்ல கையின் செயல் நீங்கவும், சீதைமீது கொண்ட ஆசை அழியவும், வலிமையெல்லாம் தேயவும், நன்னெறி மாறி நடந்தவனாகிய இராவணனது உயிரிழந்த முகங்கள், ஐம்புலன்களால் தம்மை யடக்கிய முனிவர்களது தலைமையையும் நிலைமையையும் அடங்கச் செய்த அக்காலத்தில் பொலிந்ததைவிட இப்பொழுது மும்மடங்கு பொலிந்து காணப்பட்டது.

**(அ-ரை):** வெம்மடங்கல் : கொடிய சிங்கம் ; வினையம : வஞ்சகம , வீய : அழிய ; தெவ்—மடங்க : தெம்மடங்க : பகைவர் தோற்றோட; பொரு : போர புரிகின்ற ; மயல் : ஆசை : பொலிந்தன : விளக்கமுற்றன ; அம்மா : வியப்பிடைச் சொல்.

**868.** *இறந்த இராவணனை இராமபிரான் சென்று காணல்.*

**(க - ரை):** இலக்குமி நாயகனாகிய இராமபிரான் மாதலியிடம் தேரைக்கொடுத்து, "இதை நீ கொண்டு இந்திரனிடம செல்வாயாக" என்று அனுப்பிவிட்டுப் பின் இலக்குவனோடும ஏனைய வானரவீரர் அனைவரும் தன்னைச்சுற்றி வரும்படியாகப பூமியில் நடந்துசென்று, போரில் எவருக்கும் தோற்றுப்புறங் கொடுக்காத போர்வீரனாகிய இராவணனை அணுகிப் போர்புரிந்து இறந்து கிடக்கும் அவனது முழு உருவத்தையும், அவன் சிறப்பை நோக்குவதைப்போல மனமுவந்து நோக்கினான்.

**(அ-ரை):** விசும்பு : வானுலகம்; பார் : பூமி, புறம்கொடா : முதுகு காட்டாத ; பொருது : போர் புரிந்து ; சீர் : சிறப்பு.

**869.** *இராவணன் முதுகில் தழும்பு இருக்கக்கண்ட இராமபிரான் கூறுவது.*

**(க-ரை):** "இந்த மூன்று உலகங்களையும் வெல்லும் செயலோடு பொருந்தினாலும், இராவணன் இறந்துவிட்டானென்று, அதற்குக் காரணமாக இருந்த எனது தோளைச் சிறப்புத் தன்மையோடு நோக்கும் வீர அழகானது, முதுகில்பட்ட தழும்புடையவனாகிய இவ்விராவணனோடு இன்று நான் போர் புரிந்ததால் குறைந்து குற்றமுடையதாயிற்று."

**(அ-ரை):** வென்றி : வெற்றி ; மெலித்தல் விகாரம்; பொன்றினன் : இறந்தவன்: பொற்பு : அழகு; குன்றி : குறைந்து; ஆசுற்றது : குற்றமுற்றது; அம்மா: வியப்பிடைச் சொல்.

867. வெம்மடங்கல் வெகுண்டனைய சினம்அடங்க,
மனம் அடங்க,வினையம் வீயத்,
தெம்மடங்கப் பொருதடக்கைச் செயல்அடங்க,
மயல் அடங்க, ஆற்றல் தேயத்,
தம்அடங்கு முனிவரையும் தலைஅடங்க,
நிலைஅடங்கச் சாய்ந்த நாளின்,
மும்மடங்கு பொலிந்தன,அம் முறை துறந்தான்
உயிர் துறந்த முகங்கள் அம்மா!

868. 'தேரினை நீ கொடுவிசும்பில் செல்'கென்ன
மாதலியைச் செலுத்திப் பின்னர்ப்
பாரிடமீ தினின் அணுகித், தம்பியொடும்
படைத்தலைவர் எவரும் சுற்றப்,
போரிடை மீண்(டு) ஒருவருக்கும் புறம்கொடாப்
போர்வீரன், பொருது வீழ்ந்த
சீரினையே மனம்உவப்ப உருமுற்றும்
திருவாளன் தெரியக் கண்டான்.

869. 'வென்றியால் உலகம் மூன்றும்
மெய்ம்மையால் மேவி னாலும்
பொன்றினன்என்று தோளைப்
பொதுஅற நோக்கும் பொற்புக்
குன்றிஆ சுற்ற(து) அன்றே,
இவன்எதிர் குறித்த போரில்
பின்றியான் முதுகில் பட்ட
பிழம்புள தழும்பின் அம்மா!'

**870.** *விபீடணன் இராமபிரானுக்கு, 'நீ செய்த போர் குற்ற முடையதன்று' எனக் கூறுதல்.*

**(க - ரை) :** "ஐயனே! இதற்குமுன் இராவணனோடு போர் புரிந்த ஆயிரம் தோளையுடைய கார்த்தவீரியார்ச்சுனனும், வாலி யும் வெற்றி யடைந்தமை அவர்களின் இயற்கை வலியான் அன்று; ஒரு சாபத்தினாலேயே ஆகும். இப்பொழுது நீர் இராவண னோடு போர்புரிந்து வெற்றிபெற்றது, சானகியின் மேல் இராவ ணன் வைத்த காதலாகிய நோயும், உனது கோபமும் ஆகிய இவ்விரண்டினாலேயுமாம். இவ்வாறன்றி இராவணனை ஒருவரால் வெல்ல முடியுமா?"

**(அ-ரை):** மேயின : பொருந்திய; முனிவு : கோபம; நுவலற்பாலோா : வாய்வீரம் பேசிக்கொண்டிருப்போர்.

**871.** *விபீடணன் புலம்பல்.*

**(க - ரை) :** "அளவிட முடியாத வலிமையுடைய அண்ணா ! அண்ணா ! அசுரர்களுக்குப் பிரளய காலம் போன்றவனே! தேவர் களுக்கு எமனே! உலகில் ஒருவிடமானது, அதை உண்டவர் களின் உயிரைப் போக்கும். இந்தச் சானகி யென்னும் பெருவிட மானது உன்னைக் கண்ணால் பார்த்த அளவில் உன் உயிரைப் போக்கியதே! நீயும் போர்க்களத்தில் பட்டு இறந்தாய். இவ் வாறு விளையும் என்று எண்ணாத நான் அன்று எண்ணிச் சொன்ன சொற்களை இனி மேலாவது எண்ணிப் பார்ப்பாயா !"

**(அ-ரை):** அமரர் : தேவர்,—காரணப்பெயர். (மரணம இல்லாதவர்கள்) கூற்று : எமன; அண்ணாவோ! அண்ணாவோ!—அடுக்குத்தொடர்.

**872.** *இதுவும் அது.*

**(க-ரை) :** "தலைவனே ! சிறப்புப் பொருந்தியவளும், மகா லக்ஷ்மியும், தேவர்களுக்குத் தாயானவளும், தெய்வத்தன்மை பொருந்திய கற்பு வாய்ந்தவளும் ஆகிய புகழ்பெற்ற சீதையை, திக்கு யானைகளின் கொம்புகளை யொடித்த பருத்த மார்பினால் தழுவ வேண்டி உயிரைக் கொடுத்து, அதற்குப் பதிலாகப் பழியை ஏற்றுக்கொண்ட பித்தனே ! விஜயலக்ஷ்மியையும், சரஸ்வதியை யும், புகழாகிய பெண்ணையும் தழுவிய உனது கையானது, அவர்கள் பொறாமை யடையும்படி, இன்று பூமியாகிய மகளைத் தழுவிக் கிடக்கின்றதோ ?"

**(அ-ரை):** மோய் : தாய்; பேர் : புகழ்: பார்மகள் : பூமிதேவி; மருப்பு : கொம்பு· இறுத்த : ஒடித்த: பணைத்த : பருத்த.

870. 'ஆயிரம் தோளி னானும்,
வாலியும் அரிதின் ஐய,
மேயின வென்றி,விண்ணோர்
சாபத்தின் விளைந்த; மெய்ம்மை
தாயினும் தொழத்தக் காள்மேல்
தங்கிய காதல் தன்மை
நோயும்,நின் முனிவும் அல்லால்,
வெல்வரோ நுவலற் பாலார்?'

871. 'உண்ணாதே உயிர்உண்ண(து) ஒருநஞ்சு;
சனகிஎனும் பெருநஞ்(சு),உன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
உயிர், நீயும் களப்பட் டாயே!
எண்ணாதேன் எண்ணியசொல் இன்றினித்தான்
எண்ணுதியோ? எண்ணில் ஆற்றல்
அண்ணாவோ! அண்ணாவோ! அசுரர்கள்தம்
பிரளயமே! அமரர் கூற்றே!'

872. 'போர்மகளைக், கலைமகளைப், புகழ்மகளைத்
தழுவியகை பொருமை கூரச்
சீர்மகளைத், திருமகளைத், தேவர்க்கும்
தம்மோயைத் தெய்வக் கற்பின்
பேர்மகளைத், தழுவுவான் உயிர்கொடுத்துப்
பழிகொண்ட பித்தா! பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ!திசையானை
மருப்(பு)இறுத்த பணைத்த மார்பால்.'

**873.** *மண்டோதரி புலம்பல்.*

**(க - ரை) :** *"வெள்ளெருக்க மாலையணிந்த சடைமுடியை யுடைய சிவபெருமானது கைலாய மலையை யெடுத்த உனது அழகிய உடம்பின் மேற்பாகத்திலும் அடிப்பாகத்திலும் பலபல துளைகள்பட்டு இருப்பதை நோக்கிஞல், சானகியை உனது மன மாகிய சிறையில் வைத்து ஒளித்த காதலானது உன் உடம்பினுள் இருக்குமென்று கருதி என் இருக்கவும் இடம் போதாதபடி உயி ரிருக்கும் இடத்தை நாடி அந்த இராமபிரானுடைய அம்பானது இவ்வாறு செய்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது."*

**(அ-ரை)** *வெள்ளெருக்கம் . சிவபெருமான அணியும மலா மாலைகளில ஒன்று, வெறபு · மலை, நாடி : தேடி; இழைததவாறு . செயத விதம; கள : தேன, கரதத · ஒளிதத*

**874.** *இதுவும் அது.*

**(க - ரை) :** *"தலைவனே! உன் தவப்பயனையே பெரிதாக நினைத்திருந்த நான் உனது மூன்றரைக்கோடி ஆயுளுக்கும், பெரிய அறிவுடையவர்களாலும் இவ்வளவினதென்று அளவிட் டுக் கூற முடியாத உனது தோள் வலிமைக்கும் ஒருகாலும் அழிவு கிடையாதென்று எண்ணி யிருந்தேன். உன்னுடைய வரத்தின் பலமாகிய பாற்கடலானது சீதையென்கிற பிரையையிட்ட தனுல் அழிந்துவிடும் என்பதை நான் அறிந்தேனில்லையே!"*

**(அ-ரை)** *ஆயு : ஆயுள், உலபபு : அழிவு.*

*வீடணனுக்கு முடிசூட்டுவதைப்பற்றிக் கூறுவது.*

**875.** *இலக்குவன் விபீடணனுக்கு முடிசூட்டுதல்.*

**(க - ரை) :** *உண்மையான வேதத்திற் சொன்ன விதியின் முறைப்படியே தேவர்கள், கங்கை முதலிய தெய்வத் தன்மை பொருந்திய நதிகளின் நீரிஞல் திருத்தமாக நீராட்ட, இராம பிரானது கட்டளைப்படி இளஞ்சிங்கமாகிய இலக்குவன் தனது கையிஞல் விபீடணனுக்கு முடிசூட்டிஞன்.*

**(அ-ரை):** *மெய்கொள் : உணமையான; திருந்திட : திருத்தமாகச்செய்ய; கோளரி : சிஙகம; மகுடம் : முடி; அரோ : அசைசசொல்.*

**876.** *இராமபிரான் விபீடணனுக்கு அறவுரை கூறுதல்.*

**(க - ரை) :** *அன்னமாகி முன்பு வேதங்களைத் தந்தருளியவ ஞகிய திருமாலின் அவதாரமான இராமபிரான் விபீடணனை நோக்கி, "அளவற்ற அறவழியில் ஒழுகுகின்றவனே! உரிமையிஞல் மூன்று உலகத்துள்ளாரும் உன்னை வணங்க, தேவர்களுடைய பெருமை பொருந்திய நீதியின்படியே, தருமநிலை மாறுபடா வண்ணம், இம்மை மறுமைகளுக்குரிய புகழும் புண்ணியமும விளையும்படியாக அரசு ஆள்வாயாக" என்று அறவுரை கூறிஞன்.*

**(அ-ரை):** *உம்பர் : தேவர்; பேர்கிலாது : மாறுபடாது; சீல : ஒழுகக முடையவனே; அண்மைவிளி.*

873. 'வெள்எருக்கம் சடைமுடியான் வெற்(பு)எடுத்த
திருமேனி, மேலும் கீழும்
எள் இருக்கும் இடன் இன்றி, உயிர் இருக்கும்
இடம்நாடி இழைத்த வாறோ!
கள் இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள் இருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி?'

874. 'அரைகடையிட்(டு) அமைவுற்ற முக்கோடி
ஆயுவும்,பேர் அறிஞர்க் கேயும்
உரைகடையிட்(டு) அளப்பரிய பேராற்றல்
தோள்ஆற்றற்(கு) உலப்போஇல்லை;
திரைகடையிட்(டு) அளப்பரிய வரம்என்னும்
பாற்கடலைச் சீதை என்னும்
பிரைகடையிட்(டு) அழிப்பதனை அறிந்தேனோ
தவப்பயன்நின் பெருமை பார்ப்பேன்?'

## வீடணன் முடிசூட்டு படலம்

875. மெய்கொள் வேத விதிமுறை, விண்ணுளோர்
தெய்வ நீள்புனல் ஆடல் திருத்திட,
ஐயன் ஆணையி னால்,இளம் கோளரி
கையி னால்மகு டங்கவித் தான்;அரோ.

876. 'உரிமை மூவுல கும்,தொழ, உம்பர்தம்
பெருமை நீதி அறன்வழிப் பேர்கிலா(து),
இருமையே அர(சு) ஆளுதி, ஈ(று)இலாத்
தரும சீல'என் றான், மறை தந்துளான்.

**877.** இராமபிரான் வீபீடணனுக்கு அறிவுரை பகன்றபின் அனுமனை நோக்குதல்.

**(க - ரை):** தன் மாற்றாந்தாயாகிய கைகேயியின் சொல்லை மேற்கொண்டு வனம் புகுந்தவனாகிய இராமபிரான் விபீடணனை நோக்கி, "உயர்ந்த கீர்த்தியை யுடையவனே! என்று புகழ்ந்து, அவனுக்கு வேண்டிய பல நீதிகளையும் எடுத்துரைத்து, நீ உன் சுற்றத்தாரோடு நிலைபெற்று வாழ்வாயாக" என்று சொல்லி, வலிமை பொருந்திய அனுமானை நோக்கினன்.

**(அ-ரை):** பனுவுதல் சொல்லுதல்; தமா : சுற்றததாா; மன்னி : நிலை பெற்று; அடல் : வலிமை.

சீதாபிராட்டியார் இராமபிரான் திருவடியைத் தொழுதமை பற்றிக் கூறுவது.

**878.** அனுமான் சீதாபிராட்டியாரை வாழ்த்துதல்.

**(க - ரை):** "எளியவள் போன்று இருந்த தாயே! உனக்கு மங்களம் உண்டாகுக. அணிகலன்கள் அணிந்தவளே! உனக்கு மங்களம் உண்டாகுக. நீ வாழ்வாயாக! உனக்கு மங்களம் உண டாகுக. கொடுமைக்கடல் போன்றவனாகிய இராவணனை, இராம னாகிய முகபடாம் அணிந்த யானையானது கொன்றது; ஆதலால் உனக்கு மங்களம் உண்டாகுக."

**(அ-ரை):** ஏழை : எளிய தன்மையுடையவள்; ஏந்திழை : அணிகலன் களையணிந்தவள்; சூழி : யானையின் முகபடாம்; துகைத்தது : மிதித்து நசுக்கியது.

**879.** அனுமான் மகிழ்ச்சி.

**(க - ரை):** மலைபோன்ற தோளையுடையவனாகிய அனுமான், இராமபிரானுடைய திருநாமங்களைப் பலமுறை பாடினான்; இடதுசாரி வலது சாரியாக வந்து தாண்டிக் குதித்து நின்று கூத்தாடி, தனது கைகள் இரண்டும் களிப்பின் மிகுதியால் நடுங் கத் தலையில் குவித்துக் கும்பிட்டு நின்றான்.

**(அ-ரை):** குப்புற்று : தாண்டிக்குதித்து; அலங்குற : அசைய.

**880.** அனுமான் சீதையிடம் மீட்டும் கூறுதல்.

**(க - ரை):** "தாயே! பூமியால் சுமக்கப்பட்ட மலைகள் கிடந் தன வற்றைப் போல இராவணனது தலைகள் போர்க்களத்தில் உருண்டு கிடக்கின்றன. அவனது அழகிய தோளின் கூட்டங் கள் சமுத்திரத்திலே இருக்கும் அலைகள் போலக் கிடக்கின்றன. அவனுடைய பெரிய உடல் போர்க்களத்தே அசைவற்று நிலை யாகக் கிடக்கின்றது."

**(அ-ரை):** தாரணி : பூமி; மணித்தோள் : அழகிய தோள்; ஆழி : கடல்; நிலைகிடந்த : அசைவற்றுக்கிடந்தன.

3877. பன்னு நீதிகள் பற்பல கூறி,மற்(று)
'உன்னு டைத்தம ரோ(டு)உயர் கீர்த்தியோய்!
மன்னி வாழ்'கென்(று) உரைத்(து),அடல் மாருதி
தன்னை நோக்கினன், தாயர்சொல் நோக்கினன்.

பிராட்டி திருவடி தொழுத படலம்

3878. 'ஏழை சோபனம்! ஏந்திழை சோபனம்!
வாழி சோபனம்! மங்கல சோபனம்!
ஆழி யான அரக்கனை ஆரியக்
சூழி யானை துகைத்தது சோபனம்.

3879. பாடி னன்திரு நாமங்கள்; பன்முறை,
கூடு சாரியில் குப்புற்றுக் கூத்துநின்(று)
ஆடி, அங்கை இரண்டும் அலங்குறச்
சூடி நின்றனன் குன்றன்ன தோளினன்.

3880. 'தலைகி டந்தன, தாரணி தாங்கிய
மலைகி டந்தன போல்;மணித் தோள்நிரை
அலைகி டந்தென ஆழி கிடந்தன;
நிலைகி டந்த, உடல்நிலத் தே'என்றான்.

**881.** அனுமன் சொற்களைக் கேட்ட சீதையின் நிலை.

**(க - ரை):** தங்களது பெருமை பொருந்திய குடும்பத்திற்கு எய்தவிருந்த குற்றத்தைத் துடைத்துப் போக்கினவளாகிய சீதா பிராட்டியார், அத்தகைய மகிழ்ச்சியுடையவளாகி அனுமானை நோக்கி நின்று, இன்ன வார்த்தையை இன்னவிதமாகச் சொல்ல வேண்டும் என்கின்ற நினைப்பு ஒன்றும் தோன்றாமல் அப்படியே விம்முற்று நெடுநேரம் நின்றாள்.

**(அ-ரை):** அனையள் : அத்தன்மையுடையவள்; இயமபுவது : சொல்லுவது; மாசு : குற்றம்; "தற்காத்துத் தற்கொண்டாறபேணி தகைசான்ற, சொற் காத்துச் சோர்விலாள் பெண" என்ற குறட்கருத்துப்படி 'மனையின் மாசு துடைத்த' என்றார்.

**882.** சீதை அனுமானுக்கு நன்றி கூறுதல்.

**(க - ரை):** "பெருந்தன்மையுடையவனே! நீ எனக்குச் செய்த இந்த உதவிக்குக் கைம்மாறாக மூன்று உலகங்களையும் உனக்குக் கொடுக்கலாமென்றால், அவை உன் உதவிக்கு ஈடாகா. அல்லாமலும், அவைகள் அழியும் தன்மையுடையவை. ஆகையினால் வேறு கைம்மாறு காண்கிலேன். உன்னை ஒரு தெய்வமாகக் கொண்டு என் தலையினால் வணங்குதலே தக்கதாகும்" என்று சீதை நன்றியுரை கூறினாள்.

**(அ-ரை):** உன்னினேன் : நினைத்தேன்; மேல் : அதன்மேலும்.

**883.** இதுவுமது.

**(க - ரை):** "இயற்கையிலேயே அழகுடையதாய்த் துளையிட்ட ஒரு மாணிக்கம், மேலும் சாணை பிடித்தாற் போன்ற சிறந்த தூதனே! ஆகையினாலே உனக்கு ஒரு பொருளைத்தர இயலாதவளாக இருக்கின்றேன். பின் என்ன கைம்மாறு செய்வதென்று நினைத்து இருந்தேன். உனக்கு நான் செய்யக் கூடிய ஏதேனும் ஒரு உதவியை நீயே சொல்வாயாக" என்று சீதை அனுமானிடம் கூறினாள்.

**(அ-ரை):** வேதம் : தொளையிடுதல், வடசொல். வேகடம : சாணைபிடித்தல்; செய்திறம் : செயயும் தன்மை.

**884.** சீதை விபீடணனிடம் இத்தோற்றத்துடனேயே இராமபிரானிடம வருவேனென்றல்.

**(க - ரை):** "வீரனே! நான் அசோக வனத்தில் இருந்த நிலைமையை உள்ளவாறு தேவர் கூட்டமும், எங்கள தலைவனாகிய இராமபிரானும், முனிவர்களுடைய கூட்டமும், உயர் குலத்தில் பிறந்த சிறந்த கற்பையுடைய மகளிர் கூட்டங்களும் காண்பதே பெருமையுடையதாகும். இதற்கு மேல் நினைத்தற் குரிய, அலங்காரம் செய்துகொள்ளல் சிறந்தது அன்று" என்று சீதை விபீடணனிடம் கூறினாள்.

**(அ-ரை):** இவண் : இங்கு; இமையவர் : தேவர்; வான் உயர் : மிகச் சிறந்த; ஈட்டம் : கூட்டம். மாட்சி பெருமை; விழுமியது : சிறந்தது; கோலம கோடல் : அலங்கரித்துக் கொளளல்.

:881. அனையள் ஆகி அனுமனை நோக்கினள்;
இனைய(து) இன்ன(து) இயம்புவ(து) என்ப(து)ஓர்
நினைவி லாது நெடி(து)இருந் தாள்;நெடு
மனையின் மாசு துடைத்த மனத்தினள்.

:882. 'உலகம் மூன்றும் உதவற்(கு), ஒருதனி
விலையி லாமையும் உன்னினேன்; மேல்அவை
நிலையி லாமை நினைந்தனென்; நின்னை,என்
தலையி னல்தொழ வேதகும், தன்மையோய்!'

:883. 'ஆத லான்ஒன்(று) உதவுதல் ஆற்றலேன்;
'யாது செய்வ(து)?' என்று எண்ணி இருந்தனென்;
வேத நல்மணி வேகடம் செய்தன்ன
தூத; என் இனிச் செய்திறம்? சொல்' என்றாள்.

:884. 'யான் இவண் இருந்த தன்மை
இமையவர் குழுவும், எங்கள்
கோனும், அம் முனிவர் தங்கள்
கூட்டமும், குலத்துக்(கு) ஏற்ற
வான் உயர் கற்பின் மாதர்
ஈட்டமும் காண்டல் மாட்சி;
மேல்நினை கோலம் கோடல்
விழுமிய(து) அன்று; வீர!'

**885.** அரம்பை, சீதையின் கூந்தலை ஒழுங்குபடுத்தல்.

**(க - ரை):** பெண் தன்மைக்கெல்லாம் இருப்பிடமானவளும், கற்புக்கு ஒரு அணிகலம் போன்றவளும், அழகிற்கு உரையாணிப் பொன் போன்றவளும், திருப்பாற் கடலில் தேவாமிர்தத்தோடு தோன்றிய அமிர்தம் போன்றவளும், தருமத்துக்குத் தாய் போன்றவளும் ஆகிய சீதையின், திருமால் போலும் கரிய நிறத்தை யுடையதாகிய (சடைப்பின்னலை) கூந்தலை அரம்பையானவள் மெல்லெனத் தன் விரல்களால் ஆராய்ந்து ஒழுங்கு படுத்தினாள்.

**(அ-ரை).** காணி : நிலையான இடம்; பொற்பு : அழகு; ஆணி : உரையாணி; வேணி : சடை, இங்கு கூந்தலைக் குறிக்கிறது. சகிர்ந்து : கோதி.

**886.** சீதையை இராமபிரானிடம் அழைத்துச் செல்லுதல்.

**(க - ரை.) :** சந்திரமண்டலத்தின் நடுவே உள்ள ஒருமானைப் போல விமானத்தின் நடுவே சீதை தோற்றும்படி அவளை அதில் ஏற்றி, தேவ மகளிர் தொடர்ந்து வரவும், நெருங்கி வானர வீரர்கள் ஓடி வரவும், விபீடணனது படை வீரர்களாகிய அரக்கர்களும் புறத்திலே சுற்றி ஓடி வரவும், வேதநாயகனாகிய இராமபிரானிடத்தில், தலைவனாகிய விபீடணன் இராமபிரான் கட்டளைப் படி இவ்வாறு சீதையை அழைத்துச் சென்றான்.

**(அ-ரை):** நாப்பண் : நடு இடம், (சந்திரமண்டலத்தில் மான் இருப்பதாகக் கூறப்படுகிறது). மானம் : விமானம்—முதற் குறை; மடந்தையர் : பெண்கள்; மண்டி : நெருங்கி; அண்டர் : தேவர்.

**887.** இராமனிடம் தன்னை யழைத்து வந்த அனுமனைச் சீதை பாராட்டுதல்.

**(க - ரை) :** "உன்னுடைய சிறந்த ஒழுக்கத்தையும், எனது கணவனது வீரத் தன்மை பொருந்திய அழகையும், என் குலத்தின் உயர்வையும், இந்த உலகத்தை அழிவில்லாமல் செய்ததையும் நிலைநாட்டிக் காட்டிய வானர வீரனாகிய அனுமானுக்கு என்றும் சிரஞ்சீவியாகும் தன்மையை எனது கற்புடைமை காட்டுமா?" என்று சீதை கூறினாள்.

**(அ-ரை):** சீலம் : ஒழுக்கம்; சேவககோலம் : வீரஅழகு; ஞாலம் : பூமி, கவி : குரங்கு; நாள்அருக்காலம் : என்றும அழியாத சிரஞ்சீவியாந்தன்மை.

**888.** இராமன் சீதையைக் காணல்.

**(க - ரை):** கற்புக்கு அரசி போன்றவளும், பெண்மைக் குணத்திற்குக் காவலாக உள்ளவளும், அழகுக்கு ஒரு அழகு செய்பவளும், வாழ்ந்து கொண்டிருக்கும் புகழ் போன்றவளும், தன்னைப் பிரிந்து தன் அருளையே விரும்பி நின்ற தருமம் போன்றவளும் ஆகிய சீதாபிராட்டியாரை அந்தத் தலைவனாகிய இராமபிரானும் அன்போடு அவள் உருவம் முழுவதையும் நோக்கினான்.

**(அ-ரை):** காப்பு : காவல், பு—தொழிற்பெயர் விகுதி; பொற்பு : அழகு; அருள்புரி : அருளை விரும்பி நின்ற; அற்பு : அன்பு; வலித்தல் விகாரம்; அமைய : முழுவதும்.

885. காணியைப் பெண்மைக் கெல்லாம்;
கற்பினுக்கு அணியைப் பொற்பின்,
ஆணியை; அமிழ்தின் வந்த
அமிழ்தினை அறத்தின் தாயைச்;
சேண்உயர் மறையை எல்லாம்
முறைசெய்த செல்வன் என்ன
வேணியை அரம்பை மெல்ல
விரல்முறை சுகிர்ந்து விட்டாள்.

886 மண்டல மதியின் நாப்பண்
மான் இருந் தென்ன,மானம்
கொண்டனர் ஏற்றி, வான
மடந்தையர் தொடர்ந்து கூட
மண்டிவா னரரும் ஓட,
அரக்கரும் புறமசூழ்ந்(து) ஓட
அண்டர்நா யகன்பால் அண்ணல்
வீடணன் அருளின் சென்றான்.

887. 'சீலமும் காட்டி,என் கணவன் சேவகக்
கோலமும் காட்டி,என் குலமும் காட்டி,இஞ்
ஞாலமும் காட்டிய கவிக்கு, நாள்அருக்
காலமும் காட்டும்கொல்,என்தன் கற்(பு)' என்றாள்.

888. கற்பினுக்(கு) அரசினைப், பெண்மைக் காப்பினைப்,
பொற்பினுக்(கு) அழகினைப், புகழின் வாழ்க்கையைத்,
தற்பிரிந்(து) அருள்புரி தருமம் போலியை,
அற்பின்அத் தலைவனும் அமைய நோக்கினான்.

**889.** இராமபிரான் சீதையின் கற்பைப் பரிசோதிக்கக் கருதிக் கடிந்து நோக்குதல்.

**(க - ரை):** தனது இரண்டு தனபாரங்களிலும் கண்ணீர் ஆறாகப் பெருக, தன்னை வணங்கி நின்ற மயில் போன்றவளும் கற்பின் செல்வம் போன்றவளுமாகிய சீதையை, படம் விரித்த ஒரு பாம்பு போலச் சீறி எழுந்து இராமபிரான் கோபத்தோடு பார்த்தான்.

**(அ-ரை):** சுணங்கு : தேமல்; முன்றில் . முன்னிடம்; தூங்கிய : சொரிந்த, அணங்கு : துன்பம்; பணமகிளர் . படமவிரிதத; பார்ப்புறு : பார்தது; செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம.

**890.** இராமபிரான் சீதையைக் கடிந்து கூறல்.

**(க - ரை):** "அரக்கருடைய உணவு வகைகளை விரும்பி உண்டு வந்தாய்; உன்னுடைய ஒழுக்கமானது அழிந்ததால் நீ இறந்தாயு மல்லை. முறைமை கெட்ட அரக்கன் ஊராகிய இலங்கையில் தங்கியிருந்தாய். சிறிதும் அச்சமின்றி நீ இங்கே திரும்பியது என்ன நினைத்து? என்னை, என் மனைவன் விரும்பி ஏற்றுக்கொள்வான் என்ற நினைப்பா?"

**(அ-ரை).** ஊண்திறம · உணவு வகை, உவநதனை விரும்பினை, முறை திறம்பு : முறைமை மாறிய; இவண் : இங்கு.

**891.** இதுவும் அது.

**(க - ரை):** "துன்பமற்றவளாகத் தோன்றுகின்ற சீதையே! நீ அரக்கர்களிடம் தங்கியிருந்தமையால், அவர்கள் உண்ணும் உணவாகிய பிராணிகளின் அமிழ்தத்திலும் இனியதான மாமிச உணவை உண்டிருப்பாய்; அவர்கள் குடிக்கும் கள்ளை நீயும் போதுமான அளவு குடித்திருப்பாய். இவ்வாறு உயிரோடு இருந்தாயே? இனி எங்களுக்கும் ஏற்றதாகிய நீ உண்ட விருந்து இருக்கின்றதா? சொல்லுவாயாக" என்று இராமபிரான் கடிந்து கூறினான்.

**(அ-ரை):** வெமமை · துன்பம்; மன் நிலைபெறற, நறவு கள.

**892.** இதுவும் அது.

**(க - ரை):** "பெண் தன்மையும், உயர்குடிப்பிறப்பும், கற்பு என்கின்ற உறுதியுடைப் பொருளும, நல்லொழுக்கமும், தெளிவான அறிவும், சிறப்பும், மெய்ம்மையும், பெண்ணாகிய நீ தோன்றியதனாலே கொடையில்லாத ஒரு அரசனது புகழ் மாய்வதுபோல இவைகள் எல்லாம் உலகத்தில் இல்லாதனவாயின."

**(அ-ரை):** திண்மை . உறுதிப்பாடு; சீாமை : சிறப்பு; வண்மை : கொடை: புகழின் : புகழ்போல; ஐந்தன் உருபு ஒப்புப் பொருளில் வந்தது. 'கற்பு எனும் திண்மை' என்ற தொடர் "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பெனும், திண்மையுண் டாகப் பெறின்" என்னும் குறளில் அமைந்துள்ளது.

889. சுணங்(கு)று துணைமுலை முன்றில் தூங்கிய
அணங்குறு நெடும்கணீர் ஆறு பாய்தர
வணங்(கு)இயல் மயிலினைக், கற்பின் வாழ்வினைப்
பணம்கிளர் அர(வு)என எழுத்து பார்ப்புறு.

890. 'ஊண்திறம் உவந்தனை ஒழுக்கம் பாழ்பட
மாண்டிலை, முறைதிறம்(பு) அரக்கன் மாநகர்
ஆண்டுறைந்(து) அடங்கினை; அச்சம் தீர்ந்(து)இவண்
மீண்ட(து)என் நினை(வு)எனை விரும்பும்' என்பதோ?'

891. 'மருந்தினும் இனிய,மன் உயிரின் வான்தசை
அருந்தினை யே?நற(வு) அமைய உண்டியே?
இருந்தனை யே?இனி எமக்கும் ஏற்பன
விருந்துள வோ?உரை; வெம்மை நீங்கினாய்!'

892 'பெண்மையும், பெருமையும், பிறப்பும், கற்(பு)எனும்
திண்மையும், ஒழுக்கமும், தெளிவும், சீர்மையும்,
உண்மையும், நீஎனும் ஒருத்தி தோன்றலால்
வண்மையில் மன்னவன் புகழின் மாய்ந்தலால்.'

**893. இதுவும் அது.**

**(க - ரை) :** ஞானிகளின் மனத்தில் இருப்பவனாகிய இராம பிரான், சீதையை நோக்கி, "சீதையே! நான் இன்னது சொல்வ தென்று தெரியவில்லை. உன்னுடைய ஒழுக்கமானது என்னுடைய அறிவை அடியோடு சிதைக்கின்றது. நீ இப்பொழுது இறந்து படு; அன்றேல் உனக்கு ஏற்ற இடமாகிய ஒரு இடத்திற்குப் போய்விடு" என்று கூறினான்.

**(அ-ரை):** ஈடற : அடியோடு; சேதியா நின்றது : சிதைக்கின்றது; சாதி சாவாய்; போதி : போவாய்; ஏவல் ஒருமை வினைமுற்று. புலவர் : ஞானிகள், புந்தி : அறிவு.

**894. சீதை இராமபிரானுக்குப் பதில் உரைத்தல்.**

**(க - ரை) :** "தலைவனே! அசோகவனத்தில் நான் தற்கொலை செய்து கொள்ளும் நிலையிலிருந்தபொழுது, அனுமான் வந்து என்னைக் கண்டு, 'வள்ளலாகிய நீர் என்னை மீட்பதற்கு இங்கே வருவீர்' என்று சொன்னான். எவரினும் மேலானவனாகிய அந்த அனுமான் சோர்ந்து கிடந்த எனது நிலைமையை உமக்கு எடுத்துக் கூறவில்லையா? அப்படி வந்த அனுமான் ஒரு தூதனும் அல்லனோ?" என்று கேட்டாள்.

**(அ-ரை):** சாருதி : சேர்வாய்; சமைய : பொருந்துமாறு; இசைத்தது சொன்னது.

**895. இதுவும் அது.**

**(க - ரை) :** "மேன்மையான குணத்தையுடையவரே! இத் துணை காலமாக நான் வருந்திக் காத்துவந்த தவம், நற்குணம், கற்புடைமை ஆகிய இவைகளையெல்லாம் நீர் மனத்தில் உணராமை யினாலே ஒரு பைத்தியக்காரன் செயல் போலத் தருமத்தோடு இல்லையாயினவன்றோ?"

**(அ-ரை):** உழந்த : வருந்திய; பிழைத்தது : தவறி நீங்கலாயிற்று; எத தவம, எந்நலம் ஆகியவை தவம், நலம் ஆகியவற்றின் மிகுதியைக் குறிக கின்றது. உத்தமன் : உயர்ந்த குணத்தையுடையவன்.

**896. இதுவும் அது.**

**(க-ரை) :** "தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், காளையி லேறி வருபவராகிய சிவபெருமானும், சங்கு முதலிய ஐந்தாயுதங் களையும் ஏந்திய தரும வடிவினனாகிய திருமாலும் ஆகிய இவர்க ளெல்லாம் உலகத்திலுள்ள பலவற்றையெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல உள்ளும்புறமும் நன்கு உணரவல்லவ ராயினும், மாதர்களின் மனத்தின் நிலைமையை அறியவல்லவர் கள் ஆவார்களோ? ஆகார். ஆகையினால் என் கணவரும் என் மனத்தின் நிலைமையை அறிந்திலர் ஆயினர்."

**(அ-ரை):** பங்கயம் : தாமரை; காரண இடுகுறிப் பெயர். சங்கு மறற நான்கு ஆயுதங்களைத் தழுவி நிற்றலால் 'உபலக்கணம்' எனப்படும். அங்கை : உள்ளங்கை.

893. 'யாதுயான் இயம்புவ(து)? உணர்வை யீடறச்
சேதியா நின்றதுன் ஒழுக்கச்; செய்தியால்;
சாதியால்; அன்(று)எனில் தக்க(து) ஓர்நெறி
போதியால்;' என்றனன் புலவர் புந்தியான்.

894. மாருதி வந்(து)எனைக் கண்டு 'வள்ளல்நீ
சாருதி ஈண்(டு)'எனச் சமையச் சொல்லினன்;
யாரினும் மேன்மையான் இசைத்த(து) இல்லையோ!
சோரும்என் னிலை;அவன் தூதும் அல்லனே?'

895. 'எத்தவம், எந்நலம், என்றன் கற்பு,நான்
இத்தனை காலமும் உழந்த ஈதெலாம்
பித்(து)என லாய்,அறம் பிழைத்த தால், அன்றே
உத்தம நீமனத்(து) உணர்ந்தி லாமையால்.'

896. 'பங்கயத்(து) ஒருவனும், விடையின் பாகனும்,
சங்குகைத் தாங்கிய தரும மூர்த்தியும்,
அங்கையின் நெல்லிபோல் அனைத்தும் நோக்கினும்
மங்கையர் மனநிலை உணர வல்லரோ?'

897. இதுவும் அது.

(க - ரை): "வேதங்களிற் சொல்லப்படும் பரம்பொருளே! ஆகையினாலே இனி அயலார் யார் பொருட்டு எனது குற்றமற்ற தவச் செயலை எடுத்துக் காட்டி விளக்குவேன்? இப்பொழுது நான் இறப்பதினும் சிறந்தசெயல் வேறொன்றும் இல்லை. இறக்குமாறு சொல்லிய உமது கட்டளையும் பொருத்தமானதே. அது எனது கடமையும் ஆகும்" என்று சீதை கூறினாள்.

(அ-ரை): கோதறு : குற்றமற்ற; பணி : கட்டளை; விதி : கடமை.

898. சீதை தீக்குளிப்பேனென்றல்.

(க - ரை): பருமையினால் மிக்கனவும், ஆபரணங்களையணிந்தனவுமான தனங்களையும், வளையலணிந்த கைகளையும் உடையவளாகிய சீதை அக்கினி தேவனை நோக்கி, "அக்கினி தேவனே! நான் மனத்தினாலும், உடம்பினாலும், வாக்கினாலும் கற்புக்குக் குற்றமுண்டாகும்படி நடந்திருப்பேனானால், கோபத்தோடு என்னைச் சுடுவாயாக" என்று கூறித் துளசிமாலை யணிந்த திருமாலின் அவதாரமாகிய தன் கணவனுக்கும் வணக்கம் செய்தாள்.

(அ-ரை): கடந்த : மீறிய; பூண் : ஆபரணம்; மறு : குற்றம்; புனம் : காடு; துழாய் : துளசி, மனம், வாக்கு ஆகிய இரண்டையும் கூறிய அளவிலே ஏனை உடம்பும் பெறப்படும்.

899. சீதை தீக்குளித்தல்.

(க - ரை): ஒரு ஆழமான நீர்நிலையில் மலர்ந்துள்ள செந்தாமரைகளாகிய தன் கோயிலை அடைபவளைப் போலச் சீதாபிராட்டியார் செந்நிறமான நெருப்பில் பாய்ந்தாள். அவ்வாறு பாய்தலும் அவளது கற்பு என்னும் தீயினாலே அந்தத் தீக்கடவுளும் வெந்து கரிந்து போயினன்.

(அ-ரை) நிவந்த : மேலெழுந்த; ஏய்ந்த தனக்குரியதாகிய.

குறிப்பு. செந்தாமரை மலர் அக்கினிக்கு உவமையாயிற்று. அதில் சீதை பாய்ந்தமை, திருமகளாகிய தான் தனது கோயிலாகிய செந்தாமரை மலரை அடைந்ததை யொத்தது.

900. தீக்குளித்த சீதையைத் தீக்கடவுள் அதினின்றும் எடுத்து வருதல்.

(க - ரை): சீதையின் கற்பினால் வெந்து எரியும் உடம்பை யுடையவனாகிய தீக்கடவுள், அங்ஙனம் தீயில் மூழ்கி அழுந்திய சீதையைத் தன் இரண்டு கைகளினாலும் தாங்கி மேலேயெழுந்து இராமபிரானிடம் வந்து, கைகளினால் அவனைத் தொழுது முறையிட்டு அரற்றுபவனானான்.

(அ-ரை): அங்கி : தீக்கடவுள்; கரத்துணை : இரண்டு கை; சுருதி ஞானத்தின் கொழுந்து : வேதங்களால் அறியும் அறிவின் பயனாகிய பரம்பொருள். (திருமால்); பூசல் : ஆரவாரம்; அரற்றுதல் : கூச்சலிட்டு அழுதல்.

897. 'ஆதலின், புறத்(து)இனி யாருக் காகஎன்
கோதறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன்?
சாதலின் சிறந்த(து)ஒன்(று) இல்லை; தக்கதே,
வேதநின் பணி;அது விதியும்;' என்றனள்.

898. கனத்தினால் கடந்தபூண் முலைய கைவளை
'மனத்தினால், வாக்கினால், மறுவுற் றேன்எனில்,
சினத்தினால் சுடுதியால் தீச்செல்வா' என்றாள்;
புனத்துழாய்க் கணவற்கும் வணக்கம் போக்கினாள்

899. நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை
ஏய்ந்ததன் கோயிலே எய்து வாள்எனப்
பாய்ந்தனள்; பாய்தலும் பாலின் பஞ்(சு)எனத்
தீய்ந்த(து)அவ் வெரி,அவள் கற்பின் தீயினால்.

900. அழுந்தின நங்கையை அங்கை யால்சுமந்(து)
எழுந்தனன், அங்கி,வெந்(து) எரியும் மேனியான்,
தொழும்கரத் துணையினன், சுருதி ஞானத்தின்
கொழுந்தினைப் பூசலிட்(டு) அரற்றும் கொள்கையான.

901. தீக்கடவுள் இராமபிரானுக்குக் கூறுதல்.

(க - ரை) : "ஐயனே! 'சீதாபிராட்டி கோபிப்பாளேயானால் இந்த உலகில் மழைபெய்யுமா? பூமியானது இரண்டாகப் பிளப்பது அன்றித் தன் மேலுள்ள பொருளைத் தாங்கி நிற்குமா? அறமானது தன் நெறியில் செல்லுமா? உலகம் பிழைக்குமா? அவள் சாபங் கொடுப்பாளேயானால் தாமரை மலரில் இருக்கின்ற பிரமனும் இறந்து விடுவான்" என்று தீக்கடவுள் இராமபிரானிடம் கூறினாள்.

(அ–ரை): ஏகாரங்கள் அனைத்தும் வினைப்பொருளில் வந்தது. உய்யுமே பிழைக்குமா. வையுமேல் : சாபங் கொடுப்பாளானால்.

902. இராமபிரான், தீக்கடவுளுடைய சொற்களை உடன் பட்டுக் கூறல்.

(க - ரை): "தீக்கடவுளே! இந்த உலகத்தில் அழிக்கமுடியாத சாட்சியாக நீ இருக்கின்றாய். ஆதலால் இவளது மேலான பண்பு களை எடுத்துக் கூறி, இவளிடத்தில் யாதொரு குற்றமும் இல்லை யென்று நீ சொன்னது போற்றத் தக்கதே. ஆகையால் இச் சீதை இப்பொழுது நீக்கப்படாமல் ஏற்றுக்கொள்ளத் தக்கவள்" என்று கருணை நிரம்பிய திருவுள்ள முடையவனாகிய இராமபிரான் கூறினான்.

(அ–ரை): சான்று ; சாட்சி; இழிப்பில : மேன்மையான; கழிப்பிலள் : நீக்கமுடியாதவள்.

903. பிரமன் சீதையை ஏற்றுக்கொள்ளுமாறு இராமனை வேண்டுதல்.

(க - ரை) : "உனது உண்மையான வடிவம் இத்தகையது ஆகையினாலே, எங்களையும், இந்த மூன்று உலகங்களையும் பெற்று, உலகிற்கு இல்லறத்தை நடத்திக் காட்டுமாறு வந்த எமது அன்னையாகிய சீதாபிராட்டியாரை வீணாக வெறுக்காமல் ஏற்றுக் கொள்வாயாக" என்று முற்காலத்தில் திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட திருமாலின் கொப்பூழினின்று தோன்றியவனும், இந்த உலகிலுள்ள உயிர்களுக்கெல்லாம் உறுப்புக்களோடு கூடிய உடம் பையும், அவர்களுக்கு வேண்டிய உணவுவகை முதலியவற்றையும் படைத்தவனுமாகிய பிரமன் இராமபிரானிடம் வேண்டினான்.

(அ–ரை): மனையின் மாட்சி : சிறந்த இல்லற ஒழுக்கம்; மோய் : தாய்; உலகில் மானுடர் நன்னெறியில் ஒழுகுவதற்கு, அதை நடத்திக் காட்டத் திருமால் அவதரித்தது 'இராமாவதாரம்' ஆதலால், இத்தன்மைபற்றி 'மனை யின் மாட்சியை வளர்த்த எம்மோய்' என்றார்.

901. 'பெய்யுமே மழை?புவி பிளப்ப(து) அன்றியே
செய்யுமே பொறை?அறம் நெறியில் செல்லுமே?
உய்யுமே உல(கு)?இவள் உணர்வு சீறினல்
வையுமேல் மலர்மிசை அயனும் மாயுமே!'

902. 'அழிப்பில சான்றுநீ உலகுக்(கு); ஆதலால்
இழிப்பில சொல்லிநீ, இவளை யாதும்ஓர்
பழிப்பிலள் என்றனை; பழியும் இன்(று);இனிக்
கழிப்பிலள்;' என்றனன் கருணை உள்ளத்தான்.

903. 'இனைய(து) ஆகலின், எமையும்,மூன்(று)
உலகையும் ஈன்று,
மனையின் மாட்சியை வளர்த்தஎம்
மோயினை, வாளா
முனையல்' என்(று)அது முடித்தனன்;
முந்துநீர் முளைத்த
சினையின் பந்தமும் பகுதிகள்
அனைத்தையும் செய்தோன்.

904. அப்பொழுது சிவபெருமான் தோன்றி இராமனுக்கு உரைத்தல்.

(க - ரை): பிரமன் சொன்ன அளவில் சிவபெருமானும் அங்கு எழுந்தருளி இராம பிரானைப் பார்த்து, "வலியோனே! உனது தன்மையை நீ ஒரு சிறிதும் உணர்ந்தாயில்லை போலும். நீ முழுமுதற் கடவுளாகிய திருமாலேயாவாய். மூன்று உலகங்களுக்கும், தாயாகிய சீதை உன் மார்பில் வசிக்கும் திருமகளே யாவள்" என்று சீதையை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினன்.

(அ-ரை): ஏறு : காளையை விரும்பியேறும கடவுள், (சிவபெருமான்) இசைத்தான் : சொன்னை, உரவோய் : வலியோனே.

905. அங்குவந்த தசரதன் இராமனைத் தழுவிக் கூறுதல்.

(க - ரை): "இராமனே! அன்று கைகேயி என்னிடம் பெற்ற வரமாகிய கூரிய வேலானது இன்று வரைக்கும் என் மனத்தில் தைத்து நின்றது. அது, என்னைக் கொன்றும் நீங்கவில்லை. இப்பொழுது உனது பூண் அணிந்த வாசனை பொருந்திய மார்பாகிய காந்தமென்னும் இரத்தினத்தைத் தழுவியதனாலே அது நீங்கி விட்டது."

(அ-ரை): அயில் : கூர்மை பொருந்திய; ஆகம் : மார்பு; வாங்க : பற்றியிழுக்க; கைகேயி கேட்ட வரம் இரும்பு வேலாகவும், இராமனது மார்பு அந்த இரும்பையிழுத்த காந்தக் கல்லாகவும் கூறப்பட்டதால் இப்பாடல் உருவக அணியாகும்.

906. தசரதன் சீதையைத் தேற்றல்.

(க-ரை): "உலகில் பெண்ணாகப் பிறந்த அருந்ததி முதலான பெருமையாகிய பணபாடு உடைய கற்புடை மகளிற்கெல்லாம் அரிய அணிகலன் போன்ற சீதையே! உனக்குப் பிறந்த இடமாவது பூமியாகும்; நீ வைகுந்த லோகத்தினின்றும் பூமிக்கு வந்தாய், மதிப்புக்கு மேற்பட்ட உனது கற்புடைக் குணங்களுக்கு இனி ஒரு குற்றமும் இல்லை."

(அ-ரை). பண் : பண்பாடு; அருங்கலம் : அரிய அணிகலன்; பாவாய பதுமை போன்றவளே; எண்பு : மதிபபு.

குறிப்பு: வேள்வி செய்ய நிலததைச் சனகன் உழுதபொழுது பூமியிலிருந்து சீதை தோன்றியவளாதலால் 'மண் பிறந்தகம் உனக்கு' என்று கூறப்பட்டது. வான் என்பது வைகுந்தத்தைக் குறிததது.

907. தசரதன் இலக்குவனைத் தழுவிக்கொண்டு கூறுதல்

(க - ரை): தசரதன், தன் கண்ணீர் வெள்ளமானது இலக்குவனது சடைக்கற்றை மேல்பட்டுப் பூமியில் ஒரு வெள்ளத்தைப போன்று சொரிய, அவனைத் தழுவிக்கொண்டு, "மைந்தனே! நீ உன் தமையனைத் தொடர்ந்து அவனுடன் காட்டுக்குப் போயினை. அச்செயலால் என்னுடைய நெஞ்சில் இருந்த புண்ணை நீக்கினை. அதோடு நீ இனிப் பிறவாவண்ணம் மேல்வரும் நீக்குதற்குரிய பிறப்பையும் நீக்கிக்கொண்டாய்" என்று கூறினன்.

(அ-ரை): நீத்தம் : வெள்ளம்; எண்ணின் : ஆராயுமிடத்து.

904. என்னும் மாத்திரத்(து) ஏ(று)அமர்
கடவுளும் இசைத்தான்,
'உன்னை நீஒன்றும் உணர்ந்திலை
போலுமால் உரவோய்!
முன்னை ஆதியாம் மூர்த்திநீ!
மூவகை உலகின்
அன்னை சீதையாம் மாதுநின்
மார்பின் வந்(து) அமைந்தாள்!'

905. 'அன்று,கேகயன் மகள்கொண்ட
வரம்எனும் அயில்வேல்
இன்று காறும்என் இதயத்தின்
இடை நின்ற(து); என்னைக்
கொன்று நீங்கல(து) இப்பொழு(து)
அகன்ற(து); உன் குலப்பூண்
மன்றல் ஆகமாம் காந்தமா
மணியின்று வாங்க.'

906. 'பெண்பி றந்தவர் அருந்ததி
யேமுதற் பெருமை
பண்பி றந்தவர்க்(கு) அருங்கலம்
ஆகிய பாவாய்!
மண்பி றந்தகம் உனக்கு;நீ
வானின்றும் வந்தாய்!
எண்(பு) இறந்தநின் குணங்களுக்(கு)
இனிஇழுக்(கு) இலையால்.'

907. 'கண்ணின் நீர்ப்பெருந் தாரை,மற்
றவன்சடைக் கற்றை
மண்ணின் நீத்தம்ஒத்(து) இழிதரத்
தழீஇநின்று, 'மைந்த!
எண்ணின் நீக்கரும் பிறவியும்
என்நெஞ்சின் இறந்த
புண்ணும் நீக்கினை தமையனைத்
தொடர்ந்துடன் போந்தாய்.'

**908.** இராமன் தசரதனிடம் வரங் கேட்டல்.

**(க-ரை):** "உனக்கு வேண்டியதாகிய ஒரு வரத்தைக் கேள்" என்று தசரதன் இராமனைப் பார்த்துக் கூற, அதற்கு அழகனாகிய அவன், "தந்தையே! நீ முன்பு கொடியவள் என்று விலக்கிய என் பெருந் தெய்வமாகிய கைகேயியும், அவள் மகனாகிய பரதனும் எனக்கு முறையே தாயாகவும், தம்பியாகவும் பொருந்தும் ஒரு வரத்தைக்கொடு" என்று வணங்கினான். அந்தச் சமயத்தில் உலகி லுள்ள உயிர்களெல்லாம் இராமனது பெருங் குணத்தைக் கண்டு அவனைத் துதித்து வாழ்த்தி ஆரவாரித்தன.

(அ-ரை). அமைந்தது : பொருந்தியது; வழுத்தி : துதித்து.

**909.** தசரதன் கைகேயியை மனைவியாக அங்கீகரித்தல்.

**(க - ரை):** "உலகத்திலுள்ள மாந்தருக்கு ஒரு குறையும் நேராதபடி அவர்களைக் காத்து ஆளும் அரசாட்சியை, இது குற் றத்திற்கு முதற் காரணமென்று நினையாமல் ஆளவிரும்பியதனால், நான் குற்றம் செய்தேனே யன்றிக் கைகேயி குற்றம் செய்த துண்டோ" என்று இராமபிரான் கூறிய அளவில் தசரதனும் உடனே தன் கோபம் நீங்கினான்.

(அ-ரை): அளிக்கும : காப்பாற்றுகின்ற; வான்பிழை : சிறந்த குற்றம்; சலம் : கோபம.

இராமபிரான் அயோத்திக்கு மீண்டு சென்றதைக் கூறுவது.

**910.** விபீடணனிடத்திலுள்ள புட்பக விமானத்தை, இராம பிரான் கொண்டுவரச் சொல்லல்.

**(க - ரை):** 'இயக்கர்களின் அரசனான குபேரனுக்கு முன் நாளில் பிரமன் கொடுத்த புட்பக விமானம் என்னிடத்தில் உள் ளது. அது களங்கமற்ற பெரியோர்களின் மனம்போலத் தூய்மையுடையது: வானவர்களும் வியப்படையுமாறு வான் வழியே செல்லவல்லது. இவ்வாறு நல்லறிவுடையவனாகிய விபீ டணன் கூற, இராமபிரான் "அதை விரைவில் கொணர்வாயாக" என்று கட்டளையிட்டான்.

(அ-ரை): இயக்கர் : பதினெண் தேவகணங்களில் ஒருவர். அருமறைக் கிழவன : அரிய வேதங்களுக்கு உரியவனான பிரமன். துயகது : களங்கம; சுரர்கள் : தேவர்கள்; வல்லே : விரைவு.

**911.** வரும் வழியில் தாங்கள் கடலில் கட்டிய வாரா வதியை இராமபிரான் சீதைக்குக்காட்டிக் கூறுதல்.

**(க - ரை):** "நல்ல நெற்றியை யுடைய சீதையே! நான் உன்னைப் பிரிந்து பலநாள் கழிந்த பின்னர், சூரியன் மகனாகிய சுக்கிரீவனைச் சிறந்த துணையாக நட்புக் கொண்டேன். அதன் பிறகு அனுமானை உன்னிடம் தூதாக அனுப்பி, அவன் உனது ஐயத்தைப் போக்கித் திரும்பிவந்து என்னிடம் உன் நிலையைச் சொன்ன பிறகு, வானர வீரர்கள் கட்டியதாகும் இந்த வாராவதி" என்று இராமபிரான் கூறினான்.

(அ-ரை): நன்னுதல் : நல்ல நெற்றியையுடையவள், அன்மொழித் தொகை. இரவி : சூரியன்; வான்துணை : சிறந்த துணை; நட்டபின் : நணபு கொண்டபின்; பேது : ஐயம்; பெற்றி : தன்மை; வானரேச : வானர; ஈச : குணசந்தி.

908. 'ஆயி னும்உனக்(கு) அமைந்த(து) ஒன்(று)
உரை'என அழகன்,
'தீயள் என்று,நீ துறந்தஎன்
தெய்வமும், மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம்
தரு'கெனத் தாழ்ந்தான்;
வாய்தி றந்(து)எழுந்(து) ஆர்த்தன
உயிர்எலாம் வழுத்தி.

909. 'ஊன்பி ழைக்கிலா உயிர்நெடி(து)
அளிக்கும்நீள் அரசை,
வான்பி ழைக்(கு)இது முதல்என(து),
ஆள்வுற மதித்து,
யான்பி ழைத்த(து)அல் லால்,என்னை
யீன்றஎம் பிராட்டி
தான்பி ழைத்த(து)உண் டோ,என்றான்;
அவன்சலம் தவிர்ந்தான்.

மீட்சிப் படலம்

910. 'இயக்கர் வேந்தனுக்(கு), அருமறைக்
கிழவன் அன்(று)ஈந்த
துயக்(கு) இலாதவர் மனம்எனத்
தூயது; சுரர்கள்
வியக்க வான்செலும் புட்பக
விமானம் உண்(டு);'என்றே
மயக்கி லான்சொலக் 'கொணருதி
வல்லையின்' என்றான்.

911. 'நன்னுதல்! நின்னை நீங்கி
நாள்பல கழிந்த பின்றை,
மன்னவன் இரவி மைந்தன்
வான்துணை யாக நட்ட
பின்னை,மா ருதிவந்(து) உன்னைப்
பே(து)அறுத்(து), உனது பெற்றி
சொன்னபின், வான ரேசர்
தொகுத்த(து)இச் சேது கண்டாய்!'

**912.** இராமன் சீதைக்கு வாராவதியின் சிறப்பைக் கூறுதல்.

**(க-ரை):** "சீதையே! கங்கை, யமுனை, கோதாவரி, நருமதை, காவிரி ஆகிய இந்நதிகளில் மூழ்கினவருக்குத்தான் பாவம் நீங்கும். சங்குகளை வீசியெறிகின்ற அலைகளையுடைய இக்கடலில் கட்டிய இந்த வாராவதியைக் கண்ணிற் கண்டா லேயே அவர்கள் செய்த பாவம் நீங்கிவிடும்."

**(அ-ரை):** படிதல் : நீரில் மூழ்குதல்; புன்மை : இங்கு பாவத்தைக குறித்தது. பண்பாகுபெயர். தரங்கம் : அலை; வேலை : கடல்; தட்ட : கட்டிய.

**913.** வரும் வழியில் இராமபிரான் சீதைக்குப் பல இட விசேடங்களைக் காட்டிக் கூறுதல்.

**(க-ரை):** "சீதையே! இங்குக் காணப்படுகின்ற மலை அகத்திய முனிவர் வசிக்கும் பொதிய மலை; நமக்கு முன்னால் காணப்படுவது திருமாலிருஞ்சோலைமலை; அதன் வடபால் உயர்ந்து தோன்று வது திருவேங்கடமலை" இவ்வாறு அருளோடு இராமபிரான் கூற, பின் சீதை, "அனுமான் தோன்றியது எந்த மலை" என்று வினவ, எதிரே காணப்படும் (ருசியமூக பருவதம்) மலையைக் காட்டி 'இதுதான்' என்று இராமபிரான் சொன்னான்.

**(அ-ரை):** மணி : அழகு; மால் : திருமால்; ஓங்கல் : மலை; உபபுரா : எதிரே; அனந்தன் : ஆதிசேடன். [ஆதிசேடனே திருவேங்கட மலையாக ஆயினன் என்னும் புராண வரலாறுபற்றி, அது அனநத வெற்பு எனப் பட்டது.] அணங்கு : தெய்வம்.

**914.** இராமன் ஆணைப்படி அனுமான் பரதனிடம் செல்லல்.

**(க-ரை):** தன் தந்தையாகிய காற்றின் வேகமும், இராம பிரான் ஏவும் அம்பின்வேகமும் பிறபடும்படியாக மிகுந்த வேகத் தோடு தன் மனவேகமும் பின்வாங்கச் செல்லும் அனுமான், வழி யில் குகனைச் சந்தித்து இராமபிரான் வருகையை அவனுக்குத் தெரிவித்து வானின் வழியே போயினன்.

**(அ-ரை):** சாயகம் : அம்பு; கடுமை : வேகம்; முடுகி : விரைந்து; சேயான் : செவ்விய பண்புடையவனாகிய இராமபிரான்.

**915.** இராமன் வராமையைக் குறித்து பரதன் வருத்தம்.

**(க-ரை):** "இராமபிரான் என்னைப்பற்றி, 'பரதன் அரசாள வேண்டும் என்னும் விருப்பமுள்ளவனானால், பதினான்கு ஆண்டு களுக்குமேல் இன்னும் அவ்வரசைக் கைப்பற்றி ஆள்வானாக' என்று நினைத்தானோ?" என்று பரதன் எண்ணி, இனிமேல் தான் செய்தற்குரிய செயலை ஆலோசித்தவனாய், "இவ்வாறு செய்வதே நலம்" என்று தீர்மானித்து இருந்தான்.

**(அ-ரை):** இச்சை : விருப்பம்; அன்னன் : அத்தகையவன்; உன்னினன் : நினைத்தான்; உறுவது : செய்யத்தகுவது; அரோ : அசைச்சொல்.

912. 'கங்கையே,யமுனை, கோதா
வரி,நரு மதை,காவேரி
பொங்குநீர் நதிகள் யாவும்,
படிந்(து) அலால் புன்மை போகா;
சங்(கு)எறி தரங்க வேலை!
தட்ட,இச் சேது என்னும்
இங்கிதின் எதிர்ந்தோர் புன்மை
யாவையும் நீக்கும் அன்றே.'

913. 'இதுதமிழ் முனிவன் வைகும்
இயல்தரு குன்றம்;முன்தோன்(று)
உதுவளர் மணிமால் ஓங்கல்;
உப்புறத்(து) உயர்ந்து தோன்றும்
அதுதிகழ் அனந்தவெற்(பு), என்று
அருள்தர,'அனுமான் தோன்றிற்(று)
எது'என அணங்கை நோக்கி,
இற்(று)'எனஇராமன் சொன்னான்.

914. தந்தை வேகமும்,தனது நாயகன் தனிச் சிலையின்
முந்து சாயகக் கடுமையும்,பிற்பட முடுகிச்
சிந்தை பின்வரச் செல்பவன்,குகற்கும் அச் சேயான்
வந்த வாசகம் கூறி,மேல் வான்வழிப் போனான்.

915. 'என்னை இன்னும், அரசியல் இச்சையான்
அன்னன் ஆகின் அவன்அது கொள்க என்(று)
உன்னி னான்கொல்? உறுவது நோக்கினான்;
இன்ன தேநலன் என்(று)இருந் தான்;அரோ.'

916. பரதன் சத்துருக்கனிடம் வேண்டல்.

(க - ரை): "சத்துருக்கனே! "நான் உன்னிடம் ஒருவரம் வேண்டுகிறேன். அதுயாதெனில், இராமபிரான் தான் குறித்த காலத்தில் இங்கு வந்து சேர்ந்திலன்; ஆகவே நான் இப்பொழுது நெருப்பில் வீழ்ந்து இறப்பேன்; நீ என் சொல்லை மறுக்காமல் இந்நாட்டிற்கு அரசனுவாயாக" என்று பரதன் வேண்டினன்.

(அ-ரை): இராகவன் : இராமன், 'இரகு' வமிசத்தில் பிறந்தவன்; தததி தாந்தபதம். வீடுவென் : இறப்பேன்; ஆதி : ஆவாய்; மருது : மறுக்காமல்.

917. சத்துருக்கன் தன்னை வெறுத்துக் கூறுதல்.

(க - ரை): "பூமி தேவியைக் கைவிட்டுக் காட்டை ஆளும்படி போன இராமபிரானைப் பாதுகாத்து, அவனோடு சென்றவனும் ஒரு தம்பி; அரசைத் துறந்துபோன அண்ணன் திரும்பிவரவேண்டிய காலமெல்லை போய்விட்டது என்று நீங்காத தன் உயிரை விடத் துணிந்தவனும் ஒரு தம்பி; மற்றொரு தம்பியாகிய நானோ அத்தம்பியர் செய்த செயல்களுக்குப் புறம்பாக நாணமில்லாமல் இவ்வரசாட்சியை ஆள்வேன்! இவ்வரசாட்சி என்ன நன்மையைத் தரத்தக்கதோ? என்று சத்துருக்கன் வெறுத்துக் கூறினன்.

(அ-ரை): கான் : காடு; அவதி : எல்லை; ஆறாத : நீங்காத; என்னு . செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். அம்மா : வியப பிடைச்சொல்.

918. தீயில் விழச்செல்லும் பரதனைக் கோசலை விலக்குதல்.

(க - ரை): கோசலை பரதனை நோக்கி, "என் மகனே! சக்கரவர்த்தி கைகேயிக்கு வரங்கொடுத்ததும், அதனால் இறந்ததும், அவன் புதல்வனாகிய இராமன் காட்டிற்குச் சென்றதும், நான் முற்பிறப்பில் செய்த விதியின்படியே விளைந்ததாகும். அதன்பின், குறித்த காலத்தில் இராமன் வராமையும், ஆராயுமிடத்து அவ்விதியின்படியே நடந்ததாகும். ஆகையால் இப பொழுது நீ தீயில் மூழ்கி உயிர்விடத் துணிந்த காரியம் எதனால்? எல்லாம் விதியின்படியே ஆகும் என்று நீதியை யுணர்ந்து இச் செயலை நிறுத்துக" என்று கோசலை கூறினள்.

(அ-ரை): மன் : அரசன்; இழைத்தது : செய்தது; பெற்றி : தன்மை; எண்ணில் : ஆராயுமிடத்து.

919. இதுவும் அது.

(க - ரை): "ஐயனே! நீ செய்யும் காரியங்களெல்லாம் தருமத்தோடு கூடிய நீதிக்குப் பொருந்தியதாக இருக்குமேயல்லாமல் அதற்கு மாறுபட்டதாக இருந்ததை நான் என் கண்களால் கண்டிலேன். உன்னுடைய அருமை ஒரு சிறிதும் உனக்குத் தெரியாது. உன்னுடைய பெருமைக் குணமாவது ஊழிக்காலத்தில் உலகம் அழிந்தாலும் அழியாதது அல்லவா?" என்று கோசலை கூறினள்.

(அ-ரை): கருமம் : காரியம்; ஊழி : பிரளய காலம்; பேருமே : மாறுபடுமோ? 'ஊழி பெயரினும் தாம் பெயரார் சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார்' என்று குறட்பாவை இங்கு ஒப்பு நோக்குக.

916. 'என்அ(து) ஆகுங்கொல் அவ்வரம் என்றியேல்,
சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்;
மின்னு தீயிடை யான்இனி வீடுவென்,
மன்னன் ஆதி,என் சொல்லை மரு(து)' என்றான்.

917. 'கான்ஆள, நிலமகளைக் கைவிட்டுப்
போவானைக், காத்துப், பின்பு
போனானும் ஒருதம்பி; போனவன்தான்
வரும் அவதி போயிற்(று)என்னா,
ஆனாத உயிர்விடஎன்(று) அமைவானும்
ஒருதம்பி; அயலே நாணாது,
யானும்இவ் அர(சு)ஆள்வென்? என்னே இவ்
வரசாட்சி? இனிதே? அம்மா!'

918. 'மன்இழைத்ததும், மைந்தன் இழைத்ததும்
முன்இழைத்த விதியின் முயற்சியால்;
பின்இழைத்ததும் எண்ணில்அப் பெற்றியால்;
என்இழைத்தனை என்மகனே!'என்றாள்.

919. 'தரும நீதியின் தன்பயன் ஆவ(து)உன்
கருமமேஅன்றிக், கண்டிலம் கண்களால்;
அருமை ஒன்றும் உணர்ந்திலை! ஐயநின்
பெருமை ஊழி திரியினும் பேருமோ?'

**920.** இதுவும் அது.

**(க - ரை):** "அளவற்ற கோடி இராமன்கள் ஒன்று சேர்ந்தாலும், தலைவனாகிய உனது கருணைக் குணத்திற்கு ஈடாவார்களா? புண்ணியவானாகிய உன்னுயிர் போயினால் நிலவுலகமும், வானுலகமும், ஏனைய உலகத்திலுள்ள உயிர்களும் வாழ்ந்திருக்க முடியுமா?"

**(அ-ரை):** அண்ணல் : தலைவன்: அருள் : கருணை.

குறிப்பு: "ஆயிரம் இராமர்கள் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா" என்ற குகப் படலத்துக் கவியோடு இப்பாட்டின் முற்பகுதியை ஒப்பிடுக.

**921.** கோசலைக்குப் பரதன் மறுப்புரை.

**(க - ரை):** "தாயின் பேச்சைக் கேட்பதும், தந்தையின் பேச்சைக் கேட்பதும், உறவினரிடத்து அன்பினை அடியோடு நீக்குதலும், கடவுளின் அவதாரமாகிய இராமனுக்கே கடமையாகும். நான் இந்த மூன்றையும் செய்யேன். எனது குற்றமற்ற தன்மையை, என்னுடைய சாவால் உங்களுக்குக் காட்டுவேன்" என்று பரதன் கோசலையின் சொற்களை மறுத்துக் கூறினன்.

**(அ-ரை):** இழைக்கிலென் : செய்யமாட்டேன்; மாசற்ற : குற்றமற்ற. பாசம என்பது பண்பாகு பெயராக உறவினரை உணர்த்திறறு.

**922.** பரதனிடம் வந்த அனுமான் செயல்.

**(க - ரை):** "அனுமான் பரதனை நோக்கி, பரதனே! 'எல்லா உலகங்களுக்கும் தலைவனானவன் வந்தான்! அனைவராலும் பூசிக்கத்தக்கவன் வந்தான்! மெய்ம்மைகுணத்திற்கு உடல்போன்ற நீ அவன் வருவதற்குமுன் இறப்பாயேயானால், அவன் வந்து உயிர் பிழைத்திருப்பானோ?" என்று சொல்லி, அக் கூட்டத்தில் நுழைந்து மூட்டிய நெருப்பை அவித்துக் கரியாக்கினன்.

**(அ-ரை):** அய்யன் : தலைவன்; ஆரியன் : பூசிக்கத்தகுந்தவன்; மெய உடம்பு, உண்மை; உடம்பை மெய்யென்றது எதிர்மறை இலக்கணை. வீடினை இறந்தால்; உய்யுமே : பிழைப்பானே; உள்புகா : உள்புக்கு; செயயா என்னும வாய்பாட்டு உடன்பாட்டெச்சம்.

**923.** இராமனது கணையாழியைக் கண்ட பரதன் முதலியோர் நிலை.

**(க - ரை):** அனுமான் காட்டிய மோதிரத்தைக் கண்ணால் பார்த்த அளவில் பரதனே யன்றி, அங்குக் கூடியிருந்த உலகத்தவர்க்கும், அம்மோதிரம் இறக்குந் தருவாயில் இருப்பவர்களுக்கு உண்பித்த நல்ல தேவாமிர்தத்தையொத்திருந்தது.

**(அ-ரை):** தீ : விடம்; ஈட்டிய : திரண்ட; இனைய : இத்தகைய; அரோ அசை.

920. ‘எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்அரு ளுக்(கு)அரு(கு) ஆவரோ?
புண்ணி யம்எனும் நின்உயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?’

921. ‘தாய்சொல் கேட்டலும், தந்தைசொல் கேட்டலும்,
பாசத்(து) அன்பினைப் பற்(று)அற நீக்கலும்,
ஈசற் கேகடன், யான்இஃ(து) இழைக்கிலென்;
மாசற் றேன்இது காட்டுவென் மாண்(டு)’என்றான்.

922. ‘அய்யன் வந்தனன்! ஆரியன் வந்தனன!
மெய்யின் மெய்அன்ன நின்உயிர் வீடினால்
உய்யு மேஅவன்?’ என்றுரைத்(து) உள்புகாக்
கையி னல்எரி யைக்,கரி ஆக்கினான்.

923. காட்டிய மோதிரம் கண்ணில் காண்டலும்,
மூட்டுதீ வல்விடம் உற்று முற்றுவார்க்(கு)
ஊட்டிய நன்மருந்(து) ஒத்த தாம்;அரோ,
ஈட்டிய உலகுக்கும் இனைய வேந்தற்கும்.

**924.** மோதிரம் பெற்ற பரதன் செயல்.

**(க - ரை):** கணையாழியைப் பெற்ற பரதன், 'நீங்கள் செய்த தவத்தால் எங்கள் அண்ணன் வந்தார்' என்று அங்கிருந்த அந்தணரைத் தொழுவான்; தனக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசர்களை வணங்குவான்; வேலைக்காரிகளை வணங்குவான்; 'பரதா! நீ செய்த தவத்தினால் உன்னுடைய அண்ணன் வந்துவிட்டார்' என்று தன்னைத்தானே தொழுது கொள்ளுவான்; ஒன்றும் தோன்றாமல் விம்முற்று இருப்பான்; ஒரு மரம்போல நிற்பான். இவ்வாறு பரதன் செயல்களை நோக்கினால் அன்பு என்று சொல்லப்படுவதும் ஒருவகைக் கள்ளின் தன்மையுடையதாகும்.

**(அ-ரை):** தாதியர் : வேலைக்காரிகள்; ஆல் . அசை.

**925.** தன்னை வணங்கின பரதனை இராமபிரான் தழுவி நிற்றல்.

**(க - ரை):** தான் முன்பு கொடுத்த பாதுகை இரண்டையும், அன்பையும் பாதகாணிக்கையாகத் தந்து, தாமரை மலர் போன்ற தனது பாதங்களைப் பணிந்து நின்ற பரதாழ்வானை, இராமபிரான் தேம்பி விம்மி நாவினால் சொல்வதற்கு ஒன்றும் இயலாதவனாகிக் கண்ணீர் சோர அழுது, தன் ஆவியும் உடலும் அவனது ஆவியும் உடலும் ஒன்றென்னும்படியாக இறுகத் தழுவி நின்றான்.

**(அ-ரை):** அடியுறை : பாதகாணிக்கை; பொருமி : தேம்பி; நம்பி : ஆடவரிற் சிறந்தவன், இராமபிரான். நாவிடை : வேற்றுமை உருபு மயக்கம.

**926.** பரதனிடத்தில் இராமபிரான் கொண்ட அன்பு.

**(க - ரை):** அவ்வாறு இராமபிரான் பரதனைத் தழுவி நின்ற பொழுது, ததும்பிச் சொரியும் அருவி போன்ற கண்ணீராகிய வெள்ளத்தினாலே, பரதனது இளமைத் தன்மை குலையும்படியாக ஒன்றோடொன்று பிணைந்து அழுக்கடைந்து மூடிய சடையின் வரிசையைக் கழுவினவனாகி, உச்சிமோந்து, பல நாளாகப் பிரிந்த தன் கன்றைக் கண்ட தாய்ப்பசுவைப் போன்றவனானான்.

**(அ-ரை):** தத்தி : ததும்பி; காலும் : சொரியும்; விழுமலர் : மேன்மையான மலர்; மூரி : வலிய; முருகு : இளமை; செவ்வி : அழகு; வழுவுற : குற்றமுற; மூசி : மூடி; மாசுண்ட : அழுக்கடைந்த; காண்சுறவை : வினைத்தொகை.

**927.** பரதன், வானர வீரர்களுக்கும், விபீடணனுக்கும் முகமன் கூறுதல்.

**(க - ரை):** மணம் வீசுகின்ற மலர்மாலையணிந்த மார்பையுடையவனாகிய பரதன் வானரங்களுக்கு அரசனாகிய சுக்கிரீவனுக்கும், அங்கதனுக்கும், குமுதன், சாம்பன், நீலன் முதலிய வானர வீரர்களுக்கும், விபீடணாழ்வாருக்கும் அவரவர் தகுதிக்கேற்ப முகமன் கூறி நின்றான்.

**(அ-ரை).** குரக்கினம் : குரங்கு + இனம்; சேய் : மகன்; செருக்கிளர் : போரில் மேன்று விளங்குகின்ற; அடைவு : முறைமை; மருக்கமழ் : வாசனைவீசுகின்ற; தொடையல் மாலை : தொடுக்கப்பட்டதாகிய மாலை.

924. வேதியர் தமைத்தொழும்; வேந்த ரைத்தொழும்;
தாதியர் தமைத்தொழும்;தன்னைத் தான் தொழும்;
ஏதும் ஒன்(று) உணர்குரு(து) இருக்கும்;நிற்கும்;ஆல்
காதல்என் றதுவும்ஓர் கள்ளின் தோற்றமே.

925. சேவடி இரண்டும், அன்பும், அடியுறை யாகச் சேர்த்திப்
பூவடி பணிந்து வீழ்ந்த பரதனைப், பொருமி,விம்மி,
நாவிடை உரைப்ப(து)ஒன் றும் உணர்ந்திலன் நின்ற நம்பி;
ஆவியும்உடலும் ஒன்றத் தழுவினன்அழுது சோர்வான்.

926. தழுவினன் நின்ற காலை
தத்திவீழ் அருவி காலும்
விழுமலர்க் கண்ணீர் மூரி
வெள்ளத்தால், முருகின் செவ்வி
வழுவுறப், பின்னி மூசி
மாசுண்ட சடையின் மாலை
கழுவினன் உச்சி மோந்து,
கன்றுகாண் கறவை அன்னான்.

927. குரக்கினத்(து) அரசைச், சேயைக்,
குமுதனைச், சாம்பன் தன்னைச்,
செருக்கிளர் நீலன் தன்னை,
மற்றும்அத் திறத்தி னோரை,
அரக்கருக்(கு) அரசை, வெவ்வே(று)
அடைவினின் முகமன் கூறி
மருக்கமழ் தொடையல் மாலை
மார்பினன் பரதன் நின்றான்.

928. இராமபிரானும், மற்றவரும் அலங்கரித்துக் கொள்ளல்.

(க-ரை) : இராமபிரான் பரதாழ்வாரோடு நந்திக் கிராமத்தை யடைந்து, வாசனை வீசுகின்ற சடையை நீக்கி, குடுமி பற்றிய செயல்களையும் முடித்தான். பின், மற்ற தம்பிமார்களோடு தானும் நீராடினன். பிறகு தேவர்களும் மகிழ்ச்சியடையும்படியாக இராம பிரானையும் மற்றையோரையும் (அலங்காரம் செய்வதற்குரிய மக்கள்) அலங்கரித்தார்கள்.

(அ-ரை): நண்ணி : அடைந்து; வம்புஅலர் : வாசனை வீசுகின்ற; படிந்த : முழுகின; உம்பர் : தேவர்; ஒப்பனை : அலங்கரித்த; ஒப்ப : பொருந்தும்படியாக.

929. இராமபிரான் எய்திய மகிழ்ச்சியால் யானைகள் மத நீரைப் பெருக்குதல்.

(க - ரை) : வேனிற் காலத்தில் மழை பெய்யாமல் வரண்டு நின்ற மேகக் கூட்டங்கள் போல இராமபிரான் பிரிந்த பதினான்கு ஆண்டுகளாக மதநீரைப் பெருக்காத யானைக் கூட்டங்கள், அவ்விராமபிரான் நாடு திரும்பியதால் மதம் பெருகினவாகிச் சொரிந்த மதநீர் வெள்ளம் பெருகி ஓடிற்று. அது அவற்றின் மனத்திலிருந்த களிப்பு வெள்ளம் பெருகி வழிந்து ஓடுவதைப் போன்றிருந்தது.

(அ-ரை): குலம் : கூட்டம்; பாடுறு : பெருமை பொருந்திய; பணைமுகம : தந்தங்களையுடைய முகம்; கடாம் : மதநீர்; வாரி : வெள்ளம்; களி : மகிழ்ச்சி.

930. இராமபிரான் எய்தியதால் நிகழ்ந்த செயல்கள்.

(க - ரை) : கிண்கிணி மாலையணிந்த குதிரைகளெல்லாம், ஊமையாயிருந்தவன் பேசியதைப் போலவும், மேகம் முழங்குவதைப் போலவும் ஆரவாரித்தன. மரங்களெல்லாம் அவையவைகள் பூத்தற்குரிய பருவகாலத்தில் பூப்பதைப் போலப் பூத்தன. தம்மைப் பிரிந்த நாயகர்களிடத்துப் பகைவர்களைப் போலச் சீறும் புருவத்தையுடைய மகளிர்களின் உடம்பு முழுவதும் பொன் போன்ற பசலைகள் பூத்தன.

(அ-ரை): துருவத்தார் : கிண்கிணி மாலை; புரவி : குதிரை; மூங்கை : ஊமை; அரவம் : முழக்கம்; ஆலித்த : ஆரவாரித்தன; ஆன்ற : சிறந்த.

931. பளிங்கு மாடத்தில் அமைத்த பீடத்தில் இராமபிரான் சீதையோடு வீற்றிருத்தல்.

(க - ரை) : மாணிக்கத்தினல் செய்த பலகையைப் பொருத்தி, வயிரத்தினலாகிய கால்களை இணைத்து, ஆணிப் பொன்னினலே முழுவதும் சுற்றி அழகு பொருந்தும் படியாக அமைக்கப்பட்ட பீடத்தை, பெருமை பொருந்திய பளிங்குக் கல்லாலாகிய மாடத்தின் கண்ணே இட்டார்கள். அந்தப் பீடத்தின் மீது பெருமை பொருந்திய திரண்ட தோள்களையுடைய வீரனகிய இராமபிரான் சீதா பிராட்டியாரோடும் ஏறிப் பொலிவுடன் வீற்றிருந்தான்.

(அ-ரை): தைத்து : பொருத்தி; ஆணிப்பொன் : உரையாணிப்பொன், சமைத்த : அமைத்த; ஏண் உற்ற : பெருமை பொருந்திய; சேண் : பெருமை.

## திருமுடி சூட்டு படலம்

928. நம்பி,அப் பரதனோடும் நந்திஅம் பதியை நண்ணி,
வம்(பு)அலர் சடையும் மாற்றி, மயிர்வினை முற்றி, மற்றத்
தம்பிய ரோடும் தானும் தண்புனல் படிந்த பின்னர்
உம்பரும் உவகை கூர ஒப்பனை ஒப்பச் செய்தார்.

929. கோடையில் வறந்த மேகக்குலம் எனப்,பதினால் ஆண்டு
பாடுறு மதம்செய் யாத பணைமுகப் பரும யானை,
காடுறை அண்ணல் எய்தக், கடாம்திறந்(து) உகுத்தவாரி
ஓடின,உள்ளத்துள்ள களிதிறந்து உடைந்ததேபோல்.

930. துருவத்தார் புரவி எல்லாம்,
முங்கையர் சொல்பெற்(று) என்ன
அரவப்போர் மேகம் என்ன
ஆலித்த; மரங்கள் ஆன்ற
பருவத்தால் பூத்த என்னப்
பூத்தன;பகையின் சீறும்
புருவத்தார் மேனி எல்லாம்
பொன்னிறப் பசலை பூத்த.

931. மாணிக்கப் பலகை தைத்து,
வயிரத்தின் கால்கள் சேர்த்தி,
ஆணிப்பொன் சுற்றி முற்றி,
அழகுறச் சமைத்த பீடம்
ஏண்உற்ற பளிக்கு மாடத்(து)
இட்டனர்,அதனின் மீது
சேண்உற்ற திரள்தோள் வீரன்
திருவொடும் பொலிந்தான் மன்னோ.

**932.** இராமபிரானுடைய முடிசூட்டு விழாவிற்குப் பலரும் வருதல்.

**(க - ரை):** முடிசூட்டு விழாவிற்கு உரிய காரியங்களைச் செய்வதற்கு உரிமையுடையவராகிய அந்தணர்களும், வணிகர்களும், வேளாண் குலத்தினரும் திருவாலி நாட்டில் வெண்ணெய் நல்லூரிலுள்ள சடையப்ப முதலியாரைப் போன்ற சான்றோர்களும், 'நாங்கள் உய்ந்தோம்' என்கின்ற உவகைக் கடலை அடையும் பொருட்டு இராமபிரானுடைய அரண்மனைக்கு வந்தார்கள்.

**(அ-ரை).** உய்ந்தனம் : பிழைத்தோம்; உவரி : கடல்; கோயில் : அரண்மனை.

**933.** தேவர்கள் இராமபிரானை நீராட்டுதல்.

**(க - ரை):** அரம்பையர்கள் மங்கல கீதம் பாடவும், வேதவொலி முழங்கவும், சங்குகள் ஒலிக்கவும், தாளமும் மத்தளமும் ஒலிக்கவும, குற்றமற்ற மிகுந்த பல வாத்தியங்கள் ஆரவாரிக்கவும், பூமாரி பொழியவும், தேவர்கள் கூடித் தங்கள் நாயகனாகிய இராமபிரானை வெவ்வேறு நீராட்டும் பொருள்களால் நீராட்டினார்கள்.

**(அ-ரை)** குமுற : ஒலிக்க; பாண்டில் : தாளம்; தண்ணுமை : மத்தளம, தாவில : குறறமறற; இயங்கள : வாத்தியங்கள்.

**934.** சீதையோடு நீராடியிருந்த இராமபிரானது தோற்றம்.

**(க - ரை):** ஒரு மரகத மலையானது, தன் மேனியின் இடையிடையே செந்தாமரை மலர்களைப் பெற்று, கங்கா நதியின் திவலையால் நனைந்து, இரு காதுகளைத் தொடரும் செவ்வரி பரந்த வேல் போலும் கண்ணையுடைய ஒரு மயிலோடு வீற்றிருந்ததைப போன்ற கோலத்தைக் கண்டவர்கள், இனிவரும் பிறப்பு என்னும் பிணியைத் தீரப் பெற்றார்கள்.

**(அ-ரை):** சயிலம : மலை; திவலை : நீர்த்துளி; ஏய்ப்ப : போல; செவ்வி . கோலம.

குறிப்பு: இராமபிரானது திருமேனிக்கு மரகதமலையும், அவனது முகம், கண், வாய், கை, கால் முதலிய அவயவங்களுக்குத் தாமரை மலரும உவமை கூறப்பட்டன. குறிஞ்சிநிலக் கருப்பொருளான மயில், மலையின் அருகே இருந்தது என்பது ஒருநயம.

**935.** இராமபிரானுக்கு முடிசூட்டற் சிறப்பு.

**(க - ரை):** சிங்காசனத்தை அனுமான் தாங்கவும், அங்கதன் உடைவாளைப் பற்றி நிற்கவும், பரதாழ்வான் குடை பிடிக்கவும, இலக்குவனும் சத்துருக்கனும் கவரி வீசவும், பக்கத்திலே வீற்றிருக்கின்ற சீதாபிராட்டியார் மகிழ்ச்சி பெருகவும், வெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலின் முன்னோர்கள் தங்கள் கையால் முடியை எடுத்துக் கொடுக்க, அதனை வாங்கி வசிட்ட முனிவன் சூட்டினான்.

**(அ-ரை):** அரியணை : [illegible] விரைசெறி : வாசனை மிகுந்த; மௌலி : முடி.

932. அந்தணர், வணிகர், வேளாண்
மரபினோர், ஆலி நாட்டுச்
சந்தணி புயத்து வள்ளல்
சடையனே அனைய சான்றோர்
'உய்ந்தனம் அடியம்' என்னும்
உவகையாம் உவரி காண
வந்தனர் இராமன் கோயில்
மங்கலத்(து) உரிமை மாக்கள்.

933. மங்கல கீதம் பாட
மறைஒலி முழங்க, வல்வாய்ச்
சங்கினம் குமுறப், பாண்டில்,
தண்ணுமை ஒலிப்பத் தாவில்
பொங்குபல் இயங்கள் ஆர்ப்பப்
பூமழை பொழிய, விண்ணோர்
தங்கள் நாயகனை வெவ்வே(று)
எதிர் அபிடேகம் செய்தார்.

934. மரகதச் சயிலம், செந்தா
மரைமலர்க் காடு பூத்துத்,
திரைஎறி கங்கை வீசும்
திவலையால் நனைந்து, செய்ய
இருகுழை தொடரும் வேற்கண்
மயிலொடும் இருந்த(து) ஏய்ப்பப்
பெருகிய செவ்வி கண்டார்,
பிறப்(பு)எனும் பிணிகள் தீர்ந்தார்.

935. அரியணை அனுமன் தாங்க,
அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன்வெண் குடைகவிக்க,
இருவரும் கவரி வீச,
விரைசெறி குழலி ஓங்க,
வெண்ணெய் ஊர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி,
வசிட்டனே புனைந்தான் மௌலி.

# பாட்டு முதற் குறிப்பகராதி

(எண் பக்கத்தைக் குறிக்கும்)

## அ

ஐ



ஒ



ஓ



க



கா

பூ



பெ



பே



பை



பொ



போ



ம